# எனது போராட்டம்

## மெய்ன் காம்ப்





## தியாகிகளுக்கு அர்ப்பணம்

தங்கள் தேச ஜனங்கள் புத்துயிர் பெற்றெழ வேண்டுமென்பதில் நம்பிக்கையும், விசுவாசமும் கொண்ட பாவத்திற்காக, 2583 (1923) நவம்பர் மாதம், 9ந் தேதி மத்தியானம் 12.30 மணிக்கு மியூனிச்சிலுள்ள பழைய யுத்த மந்திரி சபைக் காரியாலயத்திற்கெதிரில் என் சகாக்களில் பலர் வீழ்ச்சியடைந்தனர். மாண்ட அவ்வீரர்களைப் பொதுவான முறையில் அடக்கம் செய்யக் கூட அனுமதி கொடுப்பதற்கு "தேசீய" அரசாங்க அதிகாரிகள் மறுத்து விட்டார்கள். எனவே அவ்வீரர்களுடைய ஞாபகார்த்தமாக இந்த முதற் பாகத்தை நான் அவர்களுக்கு அர்ப்பணம் செய்கின்றேன். அவ்வீரத் தியாகிகளின் ஞாபகமானது நம் இயக்கத்தினருக்கு வழிகாட்டும் நிரந்தரமான ஒரு ஜோதியாக இருந்து வரவேண்டும்.

அடால்பு ஹிட்லர்

# பொருளடக்கம்

## முதற் பாகம்



## இரண்டாம் பாகம்

# மொழி பெயர்ப்பாளர் முகவுரை

அடால்பு ஹிட்லரின் (ஜனனம்: 2549 ஏப்ரல் மாதம் 20ந் தேதி) புகழ் அகில உலகும் வியாபித்து நிற்கின்றது. ஹர் ஹிட்லரின் கொள்கைகளை ஆதரிக்காதவர்களும் அவரது அஞ்சா நெஞ் சத்தையும், தேச பக்தியையும், இணையற்ற நிர்மாண சக்தியையும் போற்றுகின்றனர். பூனைபோல் ஒடுக்கப்பட்டும், பகைவர்களாலும், உள்நாட்டுத் துரோகிகளாலும் துண்டாக்கப்பட்டும் கிடந்த ஒரு தேசத்தை, சில வருஷங்களுக்குள் புலிபோல் பாய்ந்து பல நாடுகளையும் பதுங்க வைக்கக்கூடிய ஆற்றல் பெறுமாறு புத்துயிரளித்துப் புனருத்தாரணம் செய்த பெருமை அவர் ஒருவருக்கே உரியது. அப்படிப்பட்ட வீரபுருஷரின் வரலாற்றை விவரமாக அறிந்துகொள்ள வேண்டியது அத்தியாவசியம்.

'மேன் காம்ப்' ('மேன் காம்ப்' என்ற ஜெர்மன் வார்த்தைகளுக்கு 'எனது போராட்டம்' என்று பொருள்) என்ற ஹிட்லர் சுயசரிதத்தின் முதற் பாகம் அவர் பவேரியாவில் சிறைப்பட்டுக் கிடந்தபோது அவரால் எழுதப் பெற்றதாகும். 2584ல் (1924) அவர் 13 மாத காலம் சிறையிலிருந்த சமயம் சுயசரிதத்தின் முதற் பாகத்தை எழுதி முடித்தார். 2வது பாகம் 2585- 2587ல் (1925 1927) எழுதப் பெற்றதாகும். ஹிட்லரின் சுயசரிதத்தைப் போல் வேறெந்தப் பிரமுகரின் சுயசரிதமும் இவ்வளவு தூரம் உலகப் பிரசித்தி பெற்றதில்லையென்று கூறுவது மிகையாகாது. ஒரு தேச ஜனங்களே அதை ஒரு வேத நூலாகக் கருதுகின்றார்களெனில், அதன் முக்கியத்துவத்தையும், அதன் ஆசிரியரின் கீர்த்தியையும் பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை.

குடும்பப் பிரச்னையிலிருந்து சமுதாயப் பிரச்னை, அரசியல் பிரச்னை ஈறாக வாழ்க்கையில் மானிட வர்க்கமும் தேசங்களும் சமாளிக்க வேண்டியிருக்கும் சகல பிரச்னைகளையுமொட்டி ஹிட்லர் அலசி ஆராய்ந்து கூறியுள்ள வாதங்களும், கண்டுள்ள தத்துவங்களும் அறிவுப் பசியைத் தீர்க்கும் ஓர் அரிய விருந்தாக இருக்கின்றன. இவ்வபிப்பிராயம் வாசகர்களுக்கு உடன்பாடாக இருக்குமென்பதே எனது பூர்ண நம்பிக்கை.

ஜெர்மனியையும், ஹர் ஹிட்லரையும் பற்றி பலரும் தப்பெண்ணம் கொண்டிருந்ததற்கு பிரிட்டிஷாரின் பாதகப் பிரசாரமே காரணமாகும். இந்த நூலை நன்கு ஊன்றி வாசிப்போர் அப்பிரசாரத்தின் பொய்மையையும், கொடுமையையும் சந்தேகமின்றி அறிந்து கொள்ளலாம். தனி நபரும் சரி, தேசங்களும் சரி உய்வதற்கான பூர்வமான சாகஸங்களும் இந்த நூலில்

அடங்கியிருக்கின்றன என்பதைச் சகலரும் ஒப்புக் கொள்வர். சென்ற 200 ஆண்டுகளுக்கு மேலாக வீழ்ச்சியுற்றுக் கிடந்து, இப்போது சுதந்திர சூரியன் உதயமாகி வரும் இந்தியா பின்பற்ற வேண்டிய கொள்கைகள் இதில் ஏராளமாக உள்ளன.

இந்த நூலுக்கு (மொழி பெயர்ப்பு) மதிப்புரைகள் வழங்கிய பத்திரிகாசிரியர்களுக்கும், புகழுரைகள் வழங்கிய தமிழபிமானிகளுக்கும் மனப்பூர்வமாக வந்தனமளிக்கின்றேன்.

இந்த ருசிகரமான நூலில் அடங்கியுள்ள விஷயங்களைத் தமிழ் மகா ஜனங்களும் படித்து அனுபவிக்க வேண்டுமென்ற நோக்கத்துடனேயே அது ஈண்டு மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. ஆங்காங்கு நட்சத்திர அடையாளமிடப்பட்டிருப்பதை யொட்டிய விவரங்களை இப்புத்தகத்தில் இணைக்கப்பட்டுள்ள குறிப்புகளில் காணலாம். ஹர் ஹிட்லர் குறிப்பிட்டுள்ள முக்கிய சம்பவங்களை வாசகர்கள் நன்கு அறிந்து கொள்வதற்காகவே அவை இணைக்கப்பட்டிருக்கின்றன.

**கோலாலம்பூர்,**
***ஜூலை மாதம், 2603.***

**ஸ.ஸுப்ரமண்யம்.**

# 1. விதியை வெல்ல யாத்திரை

இன்-பிரானோ என்னும் ஒரு சிறு நகரில் நான் பிறக்கும்படி நேர்ந்தது அதிர்ஷ்டகரமான ஒன்று என நான் கருதுகிறேன். எந்த இரண்டு மாகாணங்களை ஒன்றாக இணைப்பதற்காக எங்கள் வாழ்க்கையை அர்ப்பணிக்க வேண்டும் எனவும் அதற்காகச் சாத்தியமான எல்லா வழிமுறைகளையும் கையாள வேண்டும் எனவும் இளம் தலைமுறையைச் சேர்ந்த எங்களுக்குத் தோன்றியதோ அந்த இரண்டு மாகாணங்களின் எல்லையில் அந்தச் சிறுநகர் அமைந்திருந்தது.

ஜெர்மானிய ஆஸ்திரியா மாபெரும் ஜெர்மானிய அன்னை தேசத்தோடு மீண்டும் இணைக்கப்பட வேண்டும். பொருளாதாரக் கண்ணோட்டத்தில் இந்த இணைப்பு அசௌகரியமானதாக இருந்தாலும், இவ்விணைப்பு நிச்சயம் ஏற்பட்டே தீரவேண்டியதாகும். ஒரே இரத்தத்தைக் கொண்டிருக்கும் மக்கள் ஒரே தேசத்தில்தான் இருக்க வேண்டும். தனது குழந்தைகள் ஒரே தேசத்தில் ஒன்றாக இருக்கும்படி செய்யாவிட்டால் காலனியாதிக்கத்தில் ஈடுபடுவதற்கான எந்த உரிமையும் மாபெரும் ஜெர்மானிய தேசத்திற்கு இருக்க முடியாது. ஜெர்மானிய ராஜ்ஜியம் ஜெர்மானிய மக்கள் அனைவரையும் ஒன்றாகத் தழுவிக் கொண்டுவிட்டால் அதன்பிறகு அவர்களின் நல்வாழ்க்கைக்கு உறுதியைத் தர முடியாவிட்டாலும், அந்த ஜெர்மானிய மக்கள் தங்கள் நல்வாழ்வின் பொருட்டு அந்நிய தேசத்தை ஆக்கிரமிப்பதற்கு தார்மீக ரீதியில் உரிமை ஏற்படும்.

ஆகவேதான் இந்தச் சிறுநகர் ஒரு மாபெரும் கடமையின் அடையாளமாக எனக்குத் தோன்றுகிறது. இன்றும்கூடப் பொருத்தமான ஒரு பாடத்தை நமக்கு அது உணர்த்துவதையும் குறிப்பிட வேண்டும். நூறு வருடங்களுக்கு முன்பு இங்கு நடந்த சோகமயமான நிகழ்ச்சிகள் ஜெர்மானிய தேசம் முழுவதையும் பாதித்ததுடன், ஜெர்மானிய வரலாற்றில் மறக்க முடியாத பக்கங்களை எழுதி இருக்கின்றன. ஜெர்மனியை மிகவும் நேசித்த குற்றத்திற்காக மிகப்பெரிய தேசியவாதியும் பிரான்ஸின் எதிரியுமான ஜோஹன்ஸ் பாம்[1] என்னும் ஒரு புத்தக வியாபாரி அப்பொழுது இங்குதான் கொலை செய்யப்பட்டார். அப்போது தன்னுடைய நெருக்கமான சகாக்களின் பெயர்களைக் கூட அவர் எதிரிகளிடம் குறிப்பிடவில்லை. ஒரு அரசாங்க ஏஜெண்டால் பிரெஞ்சுக்காரர்களிடம் பிடித்துக் கொடுக்கப்பட்டார் அவர். ஆக்ஸ்பர்க்கில் இருந்த ஒரு காவல்துறை இயக்குனர் இவரைப் பிடித்துக் கொடுத்து அவப்பெயர் தேடிக் கொண்டார்.

ஒரு ஜெர்மன் தியாகியின் புனித ஞாபகார்த்த சின்னமாக அமைந்த அச்சிறு நகரில் எனது பெற்றோர் சென்ற நூற்றாண்டினிறுதியில் வந்து குடியேறினர். சர்க்கார் ஊழியரான என் தந்தை மனச்சாட்சிக்கு முரணின்றி தமது கடமையைச் செய்து வந்தார். என் தாயாரோ அளவற்ற அன்போடு தன் குழந்தைகளைப் பராமரித்து வந்ததுடன், வீட்டு வேலைகளையும் செவ்வனே கவனித்து வந்தாள்.

சில வருஷங்களுக்குப் பின் என் தந்தை ஜெர்மனியைச் சேர்ந்த பாஸாவ் என்ற இடத்திற்கு மாற்றப்பட்டதால் நாங்கள் அந்த எல்லைப்புற நகரை விட்டுப் பிரிய நேர்ந்தது. சிறிது காலத்திற்குப்பின் மீண்டும் அவர் லின்ஸ் என்ற இடத்திற்கு மாற்றப்பட்டார். அங்கு அவர் தமது உத்தியோகத்திலிருந்து இறுதியாக விலகி உதவிச் சம்பளம் பெற்றபின்கூட, ஓய்வெடுத்துக்கொண்டு சோம்பேறியாகக் காலங்கழிக்க விரும்பவில்லை.

விளையும் பயிர் முளையிலே. சிறு வயது முதற்கொண்டே என் தந்தை சுறுசுறுப்புள்ளவர். 13 வயது பாலகனாக இருந்தபோதே அவர் ஏதாவது ஒரு தொழில் கற்றுக்கொள்ள வியன்னாவிற்குச் சென்றார். 'அனுபவமுள்ள' கிராமவாசிகள் அவரைத் தடுத்தும் பலனில்லை. அவ்வளவு பால்யத்தில் கையில் காசின்றி வெளியிடத்திற்குச் சென்று பிழைப்பது சுலபமான விஷயமல்ல. இருந்தாலும் அதற்காக அவர் அஞ் சவில்லை. 17வது வயதில் அவர் ஒரு தொழிலில் தேர்ச்சி பெற்றார். அத்துடன் அவரது ஆர்வம் முடிவுறவில்லை. பொருளாதாரக் கஷ்டமும், வறுமையும், துன்பமும் அவரைச் சோர்வடையச் செய்ய முடியவில்லை. அதற்கு மாறாக அவரது மனோபலமும், உறுதியும் அதிகமாயின. சர்க்கார் உத்தியோகமேற்று கௌரவமாக இருக்க வேண்டுமெனக் கருதி, விடாமுயற்சி காரணமாக தமது லட்சியத்தில் வெற்றியும் பெற்றார். அப்போது அவருக்கு வயது 23. தாமும் ஒரு 'மனிதனெ'னப் பெயரெடுத்தாலன்றி சொந்த கிராமத்திற்குத் திரும்புவதில்லையென, தாம் ஏழைப் பையனாக இருந்தபோது செய்த சபதத்தை அவர் அவ்விதமாக நிறைவேற்றி விட்டார்.

எனினும் சிறு பையனாக இருந்தபோது சென்ற அவரை கிராமவாசிகள் எவ்விதம் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்க முடியும்? தவிர, அவ்வளவு காலம் நகரவாசம் செய்த அவருக்கு கிராம வாழ்க்கையில் பற்றுதலேற்படவுமில்லை. எனவே 56வது வயதில் அவர் உத்தியோகத்திலிருந்து விலகியதும் ஒருநாள் கூட சோம்பேறியாகக் காலங்கழிக்கச் சகியாது, வட ஆஸ்திரியாவிலுள்ள லாம்பாக் என்ற ஒரு சிறிய நகருக்கு வெளியில் விவசாயப் பண்ணையொன்றை வாங்கி தாமே உழுது

பயிரிட்டு உழைக்க முற்பட்டார். அவரது தந்தையும் (என் பாட்டனார்) வேளாண்மையில் ஈடுபட்டவர்தான்.

இச்சமயம்தான் எனக்கு விவரம் தெரிய ஆரம்பித்தது. பள்ளிக் கூடத்திலிருந்து திரும்பும்போது நான் வெகுதூரம் அலைந்து திரிந்து வருவேன். முரட்டுப் பையன்களுடன் கொட்டமடிப்பேன். அதனால் என் தாயார் என்னைப் பற்றி அடிக்கடி விசாரப்படுவாள். பிழைப்பிற்கான ஒரு தொழிலில் இறங்கும் விஷயமாக நான் கவனம் செலுத்தவேயில்லை. எனினும் என் தந்தை பின்பற்றிய தொழிலில் எனக்குச் சிறிதும் விருப்பமில்லை. பேசுவதில் எனக்குள்ள இயற்கையான திறமை அப்போதுதான் வளர்ச்சி பெறவும், நான் என் நண்பர்களுடன் நடத்திய கடுமையான விவாதங்களின் பயனாக உருவடையவும் ஆரம்பித்தது. பள்ளிக்கூடத்தில் நான் நன்றாகவும், சுலபமாகவும் பாடங்களைக் கற்றுக்கொண்டு பையன்களுக்கெல்லாம் ஒரு குட்டித் தலைவனானேன். எனினும் என்னை நிர்வகிப்பது கஷ்டமாகியது! ஒழிந்தபோது, லாம்பார்க் நகர கிறிஸ்துவாலயத்தில் பாடவும் கற்றுக்கொண்டேன். அங்கு நான் அடிக்கடி சென்று வந்ததால், ஆலய உபதேசகரின் பதவிதான் மானிட லட்சியத்தின் சிகரமென எனக்குத் தோன்றியது இயற்கையே. நான் எவ்வளவோ வாதித்தும் என் தந்தைக்கு அவரது பையனின் வாக்குச் சாதுர்யத்தை அறிந்துகொள்ள முடியவில்லை! இவ்வாறாக என்னிடம் தென்பட்ட சில முரண்பாடுகள் என் தந்தைக்குக் கவலையைக் கொடுத்தன.

அந்நாளில் நான் என் தந்தையின் புத்தகங்களைப் புரட்டி வருகையில் என் மனதிற்குகந்த சில வெளியீடுகளைத் தற்செயலாகக் காண நேரிட்டது. அவை ராணுவ விஷயங்கள் பற்றியவை. அவைகளிலொன்று *2530- 31ல் (1870 71)* நிகழ்ந்த பிரசித்தி பெற்ற பிரெஞ்சு - ஜெர்மன் யுத்த விவரங்களாகும். அவைகளை நான் மிக ஆர்வத்துடன் வாசித்தேன். மகத்தான வீர சம்பவங்கள் நிறைந்த அப்போராட்டமானது என் மனதில் முதல் ஸ்தானம் பெற்றது. அதிலிருந்து யுத்த அல்லது ராணுவ சம்பந்தமான விஷயமெதுவும் எனக்கு மிகுந்த உற்சாகத்தையளித்தது.

அந்த சரித்திரத்தை வாசித்த பின் என் மனதில் மேலெழுந்த வாரியாக சில கேள்விகள் எழுந்தன. அவையாவன: யுத்தத்தில் போராடிய ஜெர்மானியருக்கும், மற்ற ஜெர்மானியருக்கும் வித்தியாசம் உண்டா? உண்டெனில் என்ன வித்தியாசம்? அந்த யுத்தத்தில் ஆஸ்திரியாவும் ஏன் கலந்து கொள்ளவில்லை? என் தந்தையும், மற்றெல்லோரும் கலந்து ஏன் போராடவில்லை? மற்ற ஜெர்மானியர்களைப் போல் நாங்களும் ஜெர்மானியர்களல்லவா? நாமெல்லோரும் ஒரே ஜனங்களல்லவா?

இக்கேள்விகள் எனது சிறிய மூளையைக் கலக்க ஆரம்பித்தது அதுதான் முதற் தடவையாகும். இவற்றிற்கெல்லாம் எனக்குக் கிடைத்த பதிலென்னவெனில், பிஸ்மார்க் சாம்ராஜ்யத்தைச் சேரும் அதிர்ஷ்டம் எல்லாம் ஜெர்மானியர்களுக்குமில்லை என்பதுதான். எனவே அந்த சாம்ராஜ்யத்தைச் சேர்ந்த அதிர்ஷ்டசாலிகளிடம் என் மனதில் பொறாமையேற்பட்டது. சகல ஜெர்மானியர்களுக்கும் ஏன் அந்த அதிர்ஷ்டம் வாய்க்கவில்லை என்பதை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை.

குடும்பத்தில் என் படிப்பு சம்பந்தமான பிரச்னை எழுந்தபோது, என்னுடைய இயற்கையான திறமைக்கும், போக்கிற்கும் இலக்கியப் பாடங்கள் ஏற்றவையல்லவென என் தந்தை கூறிவிட்டார். சித்திரம் வரைவதில் எனக்கிருந்த திறமை அவரது அந்த அபிப்பிராயத்தை உறுதிப்படுத்தியது. ஆஸ்திரியக் கல்விச் சாலைகளில் சித்திர பாடம் மிகவும் அலட்சியம் செய்யப்படுகிறதென அவர் கருதினார். தவிர இலக்கியப் படிப்பின் கரடுமுரடான பாதையில் சென்றவராதலால், அது அனுஷ்டான சாத்தியமல்லவென்றும் அவர் கருதியிருக்கலாம். தம்மைப் போல் தமது பிள்ளையும் ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தனாக வரவேண்டுமென்ற ஓர் எண்ணம் அவருக்குண்டு. அவ்விதமே அவரும் தீர்மானித்திருந்தார். மிகவும் கஷ்டப்பட்டு இடைவிடா உழைப்பினாலும், ஊக்கத்தினாலும் உத்தியோகஸ்தனாக வரவேண்டுமென்ற ஓர் எண்ணம் அவருக்குண்டு. அவ்விதமே அவரும் தீர்மானித்திருந்தார். மிகவும் கஷ்டப்பட்டு இடைவிடா உழைப்பினாலும் ஊக்கத்தினாலும் உத்தியோகம் பெற்றவராதலின், அத்தொழிலில் அவருக்கு மிகைப்பட்ட மதிப்பிருந்தது. அவ்விஷயமாக தாமும் உதவி செய்தால், தம் மகன் இன்னும் உயர்ந்த நிலைமைக்கு வரலாமென்பது அவரது எண்ணம்.

அவருக்கு இன்றியமையாததெனத் தோன்றும் ஒரு விஷயத்தை நான் நிராகரிக்க இடமுண்டென்பதை அவரால் கற்பனை செய்து கொள்ளுவதும் அசாத்தியம்! அனுபவமற்ற பொறுப்பற்ற சிறு பயல்களைத் தங்கள் இஷ்டப்படி வாழ்க்கை முறையை வகுத்துக் கொள்ள அனுமதிப்பதென்பது பெற்றோர் என்ற ஹோதாவில் தம் கடமையையும், பொறுப்பையும் அலட்சியம் செய்வதாகுமல்லவா? கடமையே கண்ணெனக் கருதும் அவரது இயல்புக்கு அவ்விதம் அசட்டை செய்வதென்பது முற்றிலும் முரணானது.

எனினும் அவரது இஷ்டப்படி காரியம் நடக்கவில்லை. அப்போது எனக்கு 11 வயது. என் எதிர்காலத்தையொட்டி அவரது திட்டத்தையும், அபிப்பிராயத்தையும் நான் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பது அவரது பிடிவாதம்; எனக்கு

விருப்பமிராத அவ்வபிப்பிராயத்திற்குப் பணிந்துவிடக் கூடாதென்பது என்னுடைய பிடிவாதம். எனவே ஒரு 'சிவில்' சர்க்கார் உத்தியோகஸ்தனாக மாட்டேனென ஒரேயடியாக அடித்துவிட்டேன். என் தந்தை என் மனதை மாற்றுவதற்காகக் கைகொண்ட ஸாம, தான, பேத, தண்ட முறைகளெதுவும் பலிக்கவில்லை. அவரது வார்த்தையை நான் எதிர்க்கும்படியான நிர்ப்பந்த மேற்பட்டது அதுதான் முதற் தடவை. ஏனெனில் காரியாலயத்தில் கட்டுண்டும், காலத்தை என்னிஷ்டப்படி உபயோகிக்க முடியாமலும், கடுதாசியில் கணக்கு வழக்குகளைக் கிறுக்கிக் கொண்டும் காலம் தள்ளும்படியான நிர்ப்பந்த மேற்படலாமென்ற எண்ணமானது எனக்கு அறுவருப்பைக் கொடுத்தது. நானோ 'நல்ல குழந்தை'யல்ல. எனவே அத்தகைய எதிர்கால வாழ்க்கையானது என் மனதில் எவ்வித சிந்தனைகளை எழுப்பியிருக்கக் கூடுமென்பதை எவரும் கற்பனை செய்து கொள்ளலாம். அப்போது பள்ளிக்கூட அலுவல்கள் மிகமிகக் குறைவு. எனவே எனக்கு வீட்டைக் காட்டிலும் வெட்டவெளியில்தான் அதிக நேரம் செலவழிக்க முடிந்தது. இந்த ஹிட்லர், சிறுவயதில் என்னவெல்லாம் விஷமங்களும், சூழ்ச்சிகளும் செய்தானென்பதை நிரூபிப்பதற்காக, இன்று என்னுடைய அரசியல் விரோதிகள் என் பால்ய வாழ்க்கையை மிகுந்த சிரத்தையுடன் கிளறி வருகிறார்களல்லவா? அதற்காக நான் கடவுளை வணங்குகின்றேன். ஏனெனில், அவையெல்லாம் நான் ஆனந்தமாகக் கழித்த நாட்களாகும். அவைகளின் ஞாபகமானது இப்போதும் எனக்குச் சந்தோஷத்தைக் கொடுக்கின்றது. அப்போது சிறுவர்களான எங்களுக்குள் ஏற்பட்ட சகல தகராறுகளும் வயல்களிலும் வனங்களிலும் தான் தீர்த்துக் கொள்ளப்பட்டனவேயன்றி, வீடுகளிலும் பள்ளிகளிலுமல்ல.

அப்போது நான் மற்றொரு போராட்டத்தையும் நடத்த வேண்டியிருந்தது. சர்க்கார் உத்தியோக விஷயமாக பெற்றோரின் திட்டத்திற்கும் எனது நோக்கத்திற்குமுள்ள முரண்பாடு வாயளவிலிருந்த வரையில், அத்தகராறைச் சகிப்பது சுலபமாகவே இருந்தது. நான் எனது சொந்த அபிப்பிராயங்களை யொட்டி சமயோசிதமாக மௌனம் சாதிப்பதன் மூலம் அடிக்கடி ஏற்படக்கூடிய தகராறுகளைத் தவிர்த்து வந்தேன். அரசாங்க உத்தியோகத்திற்குச் செல்லுவதில்லையென நான் உறுதி கொண்டுவிட்டதால், தற்காலிகமாக என் மனம் நிம்மதியடைந்தது. ஆனால் எனது திட்டமென்ன என்பதை நான் என் தந்தையிடம் சமர்ப்பிப்பது சுலபமான காரியமாக இல்லை. எனினும் என் தந்தையின் திட்டத்தை ஏற்க நான் தொடர்ந்து மறுத்து வந்ததால், எனது அபிலாஷைதான் என்ன என்பதை அவர் முதல்

தடவையாகக் கேட்டார். அப்போது எனக்கு வயது 12. அவர் அவ்வாறு கேட்டவுடன், ஏற்கனவே என் மனதில் உருவாகியிருந்த தீர்மானமானது என்னையறியாமலேயே என் வாயில் வந்துவிட்டது. சித்திரம் வரைவதில் எனக்கு இயற்கையாகவே திறமையிருந்ததை என் தந்தையும் நன்கு அறிவாராதலால் அத்தொழிலில் ஈடுபட வேண்டுமென்பதுதான் எனது அபிப்பிராயமென நான் கூறியபோது அவர் பிரமித்துவிட்டார். நான் அவ்வாறு கூறியதும், என் மனோநிலைமை சரியாக இருக்கின்றதாவென்றுகூட என் தந்தைக்குச் சந்தேகமேற்பட்டது. நான் என் அபிப்பிராயத்தை சிறிதும் சந்தேகமின்றி தெளிவாக எடுத்துச் சொல்லவே, அவர் தம் சுபாவத்திற்கிணங்க அதை முழுமூச்சுடன் எதிர்த்தார். அத்துறையில் நான் சாதாரண பயிற்சி பெற வேண்டுமென்பதுதான் அவரது அவாவேயன்றி, எதிர்காலத்தில் அதை நான் ஜீவனத்திற்கான ஒரு தொழிலாகக் கொள்ள வேண்டுமென அவர் நினைத்ததேயில்லை. "ஓவியனாம், ஓவியன்! என் உயிர் உள்ளளவும் நான் அதற்கு இணங்க முடியாது" என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். பிள்ளையின் பிடிவாதம் தந்தையின் பிடிவாதத்திற்கு எந்த விதத்திலும் குறைந்ததல்ல. அதனால் கிழவருக்கு மிகுந்த வேதனையேற்பட்டது. அவரிடம் எனக்கு மிகுந்த விசுவாஸமுண்டாதலின், அந்த முட்டுக்கட்டையான நிலைமையில் எனக்கும் மனோவேதனைதான். ஓவியப் பயிற்சி கூடவே கூடாதென்றார் கிழவர். அதைத் தவிர வேறெந்தப் பாடத்திலும் கவனம் செலுத்தப் போவதில்லையென்று நான் கூறி என் மிரட்டலை மௌனமாக அமுலுக்கும் கொண்டு வந்தேன். மற்றப் பாடங்களில் நான் முன்னேற்றமடையாவிட்டாலாவது, நான் கனவு கண்டு வந்த துறையில் ஈடுபட என் தந்தை இணங்க மாட்டாரொவென்பது எனது எண்ணம். எனவே என் மனதிற்குப் பிடித்த பாடங்களையும், முக்கியமாக எதிர்காலத்தில் சித்திரப் பயிற்சிக்கு உதவியாக இருக்கக் கூடிய பாடங்களையும் மாத்திரமே படித்து வந்தேன். பூகோள பாடமும், சரித்திர பாடமும்தான் என் மனதிற்கு மிக மிக உகந்தவை. என் வகுப்பில் நான் அவ்விரு பாடங்களிலும் முதல் ஸ்தானம் வகித்தேன். சரித்திரத்தின் உண்மையான தத்துவத்தையும் நன்கு தெரிந்து கொண்டேன்.

ஜெர்மன் எல்லைக்கு வெளியிலிருந்த கோடிக்கணக்கான ஜெர்மானியர்களின் துன்பங்களை அக்காலத்தில் ஜெர்மனியிலுள்ள பலரும் உணர்ந்து கொள்ளவில்லை. தாய்நாட்டிலிருந்து பிரிக்கப்பட்டு, அன்னியர் ஆதிக்கத்தின் கீழ் வாழும்படியான நிர்ப்பந்தமேற்பட்டு அவஸ்தைப்பட்ட ஜெர்மானியர்களின் துன்பம் எம்மட்டென்பதை உணர்ந்தோர் வெகு சிலரேயாவர். அவ்விதம் துன்பத்திற்குள்ளான ஜெர்மானியர்கள் தங்கள்

தாய்ப் பாஷையையும், தங்கள் சமூக சம்பிரதாயங்களையும் பாதுகாத்துவரப் பெரும் பாடுபட்டனர்.

பழைய ஆஸ்திரியாவில் பாஷைக்காக நடந்த போராட்டத்தில் ஈடுபட்டவர்கள் மூன்று பிரிவினராவர். 1. வீரர்கள், 2. தடுமாற்றவாதிகள், 3. துரோகிகள். பள்ளிக்கூடங்களில்கூட, அதிலும் இதிலும் சேராத தடுமாற்ற புத்தி உதயமாக ஆரம்பித்தது. அங்குதான் பாஷையைப் பாதுகாப்பதற்கான போராட்டம் வெகு உக்ரமாக நடந்தது. ஏனெனில் எதிர்கால சந்ததிகள் உருவடைவதற்கான நாற்றங்கால் பள்ளிக்கூடங்களல்லவா? எனவே, "ஜெர்மானிய இளைஞனே, நீ ஒரு ஜெர்மானியனென்பதை மறந்துவிடாதே" - "சிறு பெண்ணே, நீ ஒரு நாள் ஒரு ஜெர்மன் தாயாக வரவேண்டுமென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்" என்ற மந்திரமானது பள்ளிக்கூடங்களில் உபதேசிக்கப்பட்டு வந்தது.

இளைஞர்களின் உத்வேக உணர்ச்சியை அறிந்தவர்கள், அவ்வித கோஷத்திற்கு அவர்கள் எவ்வளவு ஆனந்தத்துடன் செவி சாய்ப்பார்கள் என்பதை உணர்ந்து கொள்வது கஷ்டமல்ல. இளைஞர்கள் தங்கள் நிலைமைக்கிணங்க, தங்கள் சொந்த "ஆயுதங்களைக் கொண்டு போராட்டத்தை நடத்தி வந்தார்கள். ஜெர்மன் பாஷையல்லாத கீதங்களைப் பாட அவர்கள் மறுத்துவிட்டனர். ஜெர்மனியிடம் அவர்களுக்கிருந்த பற்றுதலை நசுக்க எவ்வளவுக்கெவ்வளவு முயற்சி அதிகமாயிற்றோ, அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் ஜெர்மன் வீரர்களைப் புகழ்வதும் அதிகமாயிற்று. மிட்டாய்கள் வாங்கித் தின்பதற்காகத் தாங்கள் வைத்துக் கொண்டிருந்த காசை, அவர்கள் தங்கள் மூத்தோர்களின் யுத்த நிதிக்காகக் கொடுத்தார்கள். ஜெர்மனியிடம் தங்களுக்குள்ள பற்றுதலுக்காகத் தாங்கள் சிட்சிக்கப்படுவது அவர்களுக்கு ஆனந்தத்தையுண்டு பண்ணியது. அவ்வாறாக இளைஞர்கள் அதிபால்யத்திலேயே அரசியல் போராட்டத்தில் ஈடுபடும்படி நேர்ந்தது; இளைஞனான நானும் அதில் தீவிரமாகக் கலந்துகொண்டேன்; தேசபக்தியாகிற விதை முளைவிட்டு வளர ஆரம்பித்தது. 2578ல் (1918) ஹாப்ஸ்பர்க் முடியரசு[2] தகர்ந்த பின் ஆஸ்திரிய ஜெர்மானியர்கள் தங்கள் தாய்நாட்டுடன் சேரவெண்டுமென கோஷம் செய்தார்கள். அந்த கோஷமானது அவர்களின் ஏகோபித்த ஆர்வத்தைக் காட்டியது. வெகுகாலத்திய பயிற்சியே அவ்வித கோஷமாக வானளாவியது. தேச பக்தர்களை உற்பத்தி செய்யும் ஊற்று ஒருநாளும் வற்றவில்லை என்பதையே அது விளக்கியது.

நிற்க, நம் பள்ளிக்கூடங்களில் உலக சரித்திர பாடம் கற்றுக்கொடுக்கும் முறை மிகவும் அதிருப்திகரமாக இருக்கிறது.

சரித்திர பாடம் கற்றுக் கொடுப்பதன் நோக்கம், சில தேதிகளையும் சம்பவங்களையும் மாணவர்கள் மொந்தையுருப் போட்டு மனப்பாடம் செய்து கொள்ள வேண்டுமென்பதல்ல. இதைப் பெரும்பாலான உபாத்தியாயர்களும் உணர்ந்து கொள்வதில்லை. ஒரு குறிப்பிட்ட தளபதியோ அல்லது வேறொருவரோ பிறந்த தினத்தையோ அல்லது ஓர் யுத்தம் ஆரம்பமான தேதியையோ, ஒரு மன்னரின் பட்டாபிஷேக நாளையோ அறிந்து கொள்வதில் மாணவர்களுக்கு என்ன சிரத்தையிருக்க முடியும்? அவை எல்லாம் அவ்வளவு முக்கிய விஷயங்களா?

சரித்திரப் பிரசித்தமான சம்பவங்களுக்குக் காரணங்களையும், அச்சம்பவங்களை உருவாக்கிய சக்திகளையும் ஆராய்ந்தறியும்படி செய்வதுதான் சரித்திரப் பாடத்தின் தத்துவம். எனக்கு சரித்திர பாடம் கற்றுக்கொடுத்த ஒரு பண்டிதராலேயே எனது எதிர்கால வாழ்க்கை நிர்ணயிக்கப்பட்டதெனக் கூறலாம். சரித்திர பாடம் கற்றுக்கொடுப்பதன் தத்துவத்தை அவர் நன்கறிந்தவர். லின்ஸிலுள்ள பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயராக இருந்த டாக்டர் லியோபால்டு போயட்ஸ் என்பார்தான் அவர். சரித்திராசிரியருக்கு அவசியமான குணாதிசயங்களெல்லாம் அவரிடம் பூர்ணமாக அமையப் பெற்றிருந்தன. அவர் வயோதிகர். கண்டிப்பு, மன உறுதி, அன்பு ததும்பும் ஹிருதயம், வாசலாக சக்தி முதலிய குண விசேஷங்கள் அவரிடம் பொருந்தியிருந்தமையால், அவரைப் போல் எங்கள் மனதிலும் மிகுந்த உற்சாகமேற்படும்படி செய்யும் சக்தி அவருக்கிருந்தது. பூஜ்யரான அவரது உற்சாகம் ததும்பும் போதனையானது, எங்களைப் பரவசப்படுத்தி பழைய சரித்திர சம்பவங்களை நேரில் காண்பது போன்ற உணர்ச்சியை உண்டுபண்ணியது. ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன் நிகழ்ந்த சம்பவங்கள், அவரது அபார திறமையால் உருப்பெற்று எங்கள் கண் முன் நின்றன. அவர் கூறிய விஷயங்களை நாங்கள் கேட்கும்போது எங்கள் மனதில் உற்சாகமும் உத்வேகமும் குமுறிக் கொண்டெழும்; சிற்சில சமயங்களில் கண்ணீரும் ததும்பும்.

கண்முன் இப்போது நடக்கும் சம்பவங்களை உதாரணமாகக் கொண்டு பழைய சம்பவங்களைச் சித்தரிப்பார்; பழைய சம்பவங்களை உதாரணம் காட்டி படிப்பினையை வலியுறுத்துவார். எங்கள் மனதைக் கலக்கி வந்த பிரச்னைகளை, அவரைக் காட்டிலும் நன்கறிந்தவர் வேறெவருமில்லர். சரித்திர பாடத்தில் எனக்கு உற்சாகம் ஏற்பட்டதற்கு அவர்தான் காரணம். அதன் பயனாக நான் ஒரு சிறு புரட்சிக்காரனானேன். அத்தகைய ஓர் உபாத்தியாயரிடம் ஜெர்மன் சரித்திர பாடம் வாசித்த யார்தான், ஜெர்மன் தேசத்தின் விதியையே அலங்கோலப்படுத்தி வரும் மன்னர்களின் ராஜ்யத்திற்கு ஒரு ஜன்ம சத்துருவாகாதிருக்க

முடியும்? அற்பமான தங்கள் சொந்த நலன்களுக்காக ஜெர்மன் ஜனங்களுடைய க்ஷேமலாபங்களைப் பலிகொடுக்கும் ராஜகுடும்பத்தின் உண்மையான பிரஜையாக யார்தான் இருக்க முடியும்?

ஹாப்ஸ்பர்க் குடும்பம் அனுஷ்டித்து வந்த கொள்கையைப் பற்றி சரித்திரம் கூறியதற்கும் எங்களுடைய தினசரி அனுபவத்திற்கும் முரணென எதுவுமில்லை. சரித்திரத்தின் கூற்று உண்மை என்பதை நாங்கள் எங்கள் அனுபவத்திலேயே நிதர்சனமாகக் கண்டோம். வடக்கேயும், தெற்கேயும் அன்னிய வர்ணத்தாரின் விஷமானது நம் ஜன சமூகத்தை உருக்குலைத்து வந்தது. வியன்னாகூட நாளுக்கு நாள் ஜெர்மன் மணமற்ற நகரமாக மாறிவந்தது. ராஜகுடும்பத்தினரோ சமயம் வாய்த்த போதெல்லாம் செக் நாட்டினரையே ஆதரித்தனர். அத்தகைய அக்கிரமம் நீதி தேவிக்கே பொறுக்கவில்லை போலும். அதனால்தான் ஆஸ்திரியாவில் ஜெர்மானியத்திற்குப் பரம சத்துருவான ஆர்ச்டியூக் பிரான்ஸ் பர்டினான்ட், எந்த தோட்டாக்களின் உற்பத்திக்கு உதவியாக இருந்தாரோ, அதே தோட்டாக்களாலேயே வீழ்ச்சியடைய நேரிட்டது[3]. இளமை பொருந்திய ஜெர்மன் சாம்ராஜ்யத்திற்கும், பொய்க்கால் குதிரையான ஆஸ்திரிய ராஜ்யத்திற்கும் ஏற்பட்ட துரதிர்ஷ்டகரமான சம்பந்தம்தான் உலக யுத்தத்திற்கும், இறுதியிலேற்பட்ட படு வீழ்ச்சிக்கும் விதையாக அமைந்தது.

இப்பிரச்னையை, பின்னர் நான் அலசி ஆராய்ச்சி செய்ய உத்தேசித்துள்ளேன். எனினும் ஈண்டு ஒரு விஷயத்தை மாத்திரம் கூறுவது போதுமானது. அதாவது என்னுடைய இளம் வயதிலேயே நான் சில தீர்மானங்கள் செய்து கொண்டேன். அத்தீர்மானங்களை நான் பிறகு ஒருபோதும் கைவிட்டதில்லை. முதலாவதாக, ஜெர்மனியின் தற்காப்பிற்கு ஆஸ்திரிய சாம்ராஜ்யம் அழிய வேண்டியது அவசியம், அடுத்தபடியாக முடியரசு பக்தியும் தேசீய உணர்ச்சியும் ஒன்றல்ல. வெவ்வேறாகும்; மூன்றாவதாக ஹாப்ஸ்பர்க் குடும்பத்தினால் ஜெர்மனிக்கு எப்போதுமே துரதிர்ஷ்டம் தானென்பது விதியின் கட்டளை. இவைதான் நான் கண்ட முடிவுகள். இவற்றின் பலனாக என்னுடைய ஜெர்மன் - ஆஸ்திரிய ஜன்ம பூமி மீது அளவற்ற அன்பும், ஆஸ்திரிய ராஜ்யத்தின் மீது ஆழ்ந்த துவேஷமும் ஏற்பட்டன.

அரசியலில் எனக்கு என் வயதை அதிக்கிரமித்த பாசம் இருந்ததுபோல்,ஓவியத்துறையிலும் மிதமிஞ்சிய பற்றுதலேற்பட்டது. அப்பொழுது ஆஸ்திரியாவின் மேற்பகுதியின் தலைநகரத்தில் ஒரு நாடக அரங்கம் இருந்தது. அது மோசமானது என்று சொல்ல முடியாது. பலவிதமான நாடகங்கள் அங்கே நடத்தப்பட்டன. எனக்குப் பன்னிரெண்டு வயதாயிருந்தபோது அங்கே வில்லியம்

டெல் நடித்த காட்சிகளைக் கண்டிருக்கிறேன். அது நாடகம் பார்த்த என் முதல் அனுபவம். அதற்குச் சில மாதங்கள் கழித்து லோஹங்கிரின் நடித்த இசை நாடகத்தைக் கண்டேன். கண்ட மாத்திரத்திலேயே அதனால் வசீகரிக்கப்பட்டேன். பெய்ருத் மாஸ்டரின் இசை நாடகங்களின் மீது எனக்கு அளவற்ற ஈடுபாடு உண்டாயிற்று. அந்தச் சிறு நகரில் எளிமையாக நடத்தப்பட்ட நாடகங்களை நான் பார்ப்பதற்கு எனக்குக் கிடைத்த வாய்ப்பு ஒரு அதிர்ஷ்டம் என்றே நான் நினைக்கிறேன். ஏனெனில் பிற்காலத்தில் மிகச் சிறந்த நாடகங்களை நான் பார்த்து சிலாகிப்பதற்கு என்னைத் தயார்படுத்தியவை அவைதாம்.

ஆனால் இவையெல்லாம் என் தந்தை எனக்கெனத் தேர்ந்தெடுத்திருந்த உத்தியோகத்தின் மீது எனக்கு இருந்த வெறுப்பை அதிகமாக்கின. விடலைப் பருவம் கழிந்தபோது இந்த வெறுப்பு மேலும் வலிமையானதாக ஆனது. அது எனக்கு வருத்தத்தையே அளித்தது. ஒரு அரசாங்க உத்தியோகஸ்தனாக என்னால் மகிழ்ச்சியாக ஒருபோதும் வாழமுடியாது என்று நான் கண்டேன். இப்போது என் ஓவியத் திறத்தைக் கல்விச் சாலையும் உணர்ந்து அங்கீகரித்தபடியால் என் தீர்மானம் உறுதியடைந்தது. பயமுறுத்தல்களும் மிரட்டல்களும் என்னை மாற்ற முடியவில்லை. நான் ஒரு ஓவியனாக விரும்பினேன்.

லோகத்திலுள்ள எந்தச் சக்தியாலும் என்னை சிவில் உத்தியோகஸ்தனாக மாற்ற முடியாது. மேலும் குறிப்பிட வேண்டிய அம்சம் என்னவென்றால் அப்போது நான் கட்டிடக் கலையில் மிகவும் ஆர்வம் கொண்டவனாக மாறிக் கொண்டிருந்தேன். ஓவியக்கலையில் எனக்கு இருந்த ஆர்வத்தின் இயல்பான வளர்ச்சியே இது என்று நான் கருதி, கலாசிருஷ்டிகளின் மீது எனக்கு இருந்த ஆர்வம் பெருகிவிட்டது என்று உள்ளூர மகிழ்ந்தேன். திடீரென இவையெல்லாம் தலைகீழாக மாறப்போகிறது என்று அப்போது நான் சிறிதும் எண்ணவில்லை.

நான் எதிர்பார்த்ததைவிடச் சீக்கிரத்திலேயே எனது எதிர்காலம் பற்றிய பிரச்னை தீர்மானிக்கப்பட்டு விட்டது.

எனது பதின்மூன்றாவது பிராயத்தில் என் தந்தை உடல்நலம் குன்றி, எங்கள் அனைவரையும் மீளாத்துக்கத்தில் ஆழ்த்திவிட்டு காலமாகிவிட்டார். இளம் வயதில் தான் அனுபவித்த கஷ்டநஷ்டங்களையெல்லாம் தன் மகன் அனுபவியாது ஒரு நல்ல உத்தியோகத்தை மேற்கொண்டு அவனைக் காப்பாற்றிக் கொள்வதற்கு அவனுக்கு தான் உதவ வேண்டும் என்பதே அவருடைய நீண்டகால அவா. ஆனால் அப்பொழுது அந்த அவா நிறைவேறப் போவதில்லை என்று அவருக்குத் தோன்றியது. இருப்பினும், தன்னையுமறியாமல் அவர் எங்கள் யாராலும்

அனுமானிக்க முடியாத ஒரு எதிர்காலத்துக்கான விதையை விதைத்துவிட்டார்.

முதலில் புறத்தளவில் எதுவும் மாற்றமடையவில்லை.

என் தந்தையின் விருப்பத்திற்கேற்ப என்னை ஒரு சிவில் உத்தியோகஸ்தனாக ஆக்குவதற்காக எனக்குக் கல்வி புகட்டுவது தன்னுடைய கடமை என்று என் தாய் விரும்பினாள். நானோ எந்தச் சூழ்நிலையிலும் ஒரு சிவில் உத்தியோகஸ்தனாக ஆகக்கூடாது என்று உறுதியாகத் தீர்மானித்துவிட்டேன். ஆனால் நான் பயின்ற நடுநிலைப் பள்ளியில் கற்றுத் தந்த முறையும் பாடத்திட்டமும் எனது இலட்சியங்களுக்கு வெகு தொலைவில் இருந்ததால் நான் படிப்பில் அக்கறை கொள்ளவில்லை. எனக்கு ஏற்பட்ட உடல்நிலைக் கோளாறு இதில் எனக்கு உதவியாக இருந்தது. ஒருசில வாரங்களில் அது எனது எதிர்காலத்தைத் தீர்மானித்ததுடன், நீண்டகாலமாக எங்கள் குடும்பத்தில் நிலவிவந்த முரண்பாட்டிற்கு முற்றுப்புள்ளியும் வைத்துவிட்டது. என் நுரையீரல்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருந்ததால் மருத்துவர் என் தாயாரிடம் என்னை எந்தச் சூழ்நிலையிலும் ஒரு அலுவலக உத்தியோகத்தில் ஈடுபடுத்தக்கூடாது என்று அறிவுரை கூறிவிட்டார். பள்ளிக்கூடத்திற்குக் குறைந்தபட்சம் ஒரு ஆண்டுக்காவது நான் போகக் கூடாது என்றும் கூறிவிட்டார். எதை நான் நீண்ட காலமாக இரகசியமாக்க விரும்பினேனோ, எதற்காக நான் தொடர்ந்து போராடினேனோ அது இப்போது உண்மையில் சுலபமாகக் கிட்டிவிட்டது.

என் தாயார் கல்விச் சாலைக்கு முழுக்குப் போட்டுவிட்டு கலாசாலையில் சேருவதற்கு எனக்குச் சம்மதமளித்தார். அந்த நாட்கள் மகிழ்ச்சி நிறைந்த நாட்கள். அவை எனக்கு ஒரு கனவைப் போலத் தோன்றின. ஆனால் அவை வெறும் கனவாகவே முடிந்துவிட்டன. என்னுடைய லட்சியத் திட்டங்களையெல்லாம் என் தாயாரின் மரணம் முடிவுக்குக் கொண்டு வந்துவிட்டது. நீண்டகாலமாக அவர் நோய்வாய்ப்பட்டிருந்ததாலும், அதிலிருந்து மீள்வதற்கு மிகவும் சொற்பமான அளவுக்கே வாய்ப்பு இருந்ததாலும், அவருடைய மரணம் எதிர்பார்க்கப்பட்ட ஒன்றுதான். இருப்பினும் அது என் மீது விழுந்த பயங்கரமான அடியாகும். நான் என் தந்தையை மதித்தேன். ஆனால் என் தாயாரைத்தான் நேசித்தேன்.

வறுமையும் கொடுமையான நிஜமும் என்னை உறுதியான முடிவெடுக்கும்படி தள்ளின.

என் தாயார் நோயுற்றிருந்தபோதே எங்கள் குடும்பத்தின் சொற்பமான சொத்துக்களெல்லாம் முற்றிலுமாகக் கரைந்து விட்டன. நான் ஒரு அனாதை என்ற முறையில் பெற்றுவந்த

உதவித் தொகை என்னுடைய அடிப்படையான வாழ்க்கைச் செலவுகளுக்கே போதுமானதாக இருக்கவில்லை. ஏதாவது ஒரு சமயத்தில் என்னுடைய சொந்த உழைப்பில் நான் சாப்பிடுவதற்கு தயாராகியே தீரவேண்டும்.

எனவே என் துணிமணிகளை எல்லாம் மூட்டைக் கட்டிக்கொண்டு வியன்னாவிற்குப் புறப்பட்டேன். வறுமை வாட்டியதெனினும் என் மனோபலம் அணுவளவும் குன்றவில்லை. விதியை வெல்ல முடியுமென்ற நம்பிக்கை எனக்கேற்பட்டது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் என் தந்தையும் இவ்விதமே தான் புறப்பட்டார். நானும் ஒரு மனிதனாக வேண்டுமென உறுதி கொண்டேன்; எனினும் சிவில் உத்தியோகம் மாத்திரம் ஏற்பதில்லை என்றும் திட சங்கல்பம் செய்து கொண்டேன்.



## குறிப்பு

*1. 2460*ல் *(1800)* பவேரியா நெப்போலியனால் பிரான்ஸின் அடிமையாக நேர்ந்தது. *2466*ல் *(1806)* அவ்விபரீதத்தைக் குறித்து, "ஜெர்மனியின் மகத்தான மானக்கேடு" என்று ஒரு துண்டுப் பிரசுரம் வெளியாயிற்று. அத்துண்டுப் பிரசுரப் பிரதிகளை விநியோகம் செய்ய உதவியவர்களில் நூரன்பர்க் புத்தக வியாபாரியான ஜோஹன்ஸ் பிலிப் பாம் என்பாரும் ஒருவர். ஒரு பவேரிய போலீஸ் ஏஜெண்டால் அவர் பிரெஞ்சுக்காரர்களிடம் காட்டிக் கொடுக்கப்பட்டார். அவர் மீது நடந்த வழக்கு விசாரணையின்போது அவர், அத்துண்டுப் பிரசுரத்தை எழுதிய ஆசிரியரின் பெயரை வெளியிட மறுத்துவிட்டார். எனவே, நெப்போலியன் உத்திரவிற்கிணங்க பிரௌனா- ஆன் - தி இன் என்ற சிறிய நகரில் (ஹிட்லர் பிறந்த இடம்) *2466* ஆகஸ்டு மாதம் *26*ம் தேதி அந்த வியாபாரி சுட்டுக் கொல்லப்பட்டார். அவர் மாண்ட இடத்தில் அவருக்காக அமைக்கப்பட்ட ஒரு ஞாபகச் சின்னமானது ஹிட்லர் சிறு பையனாக இருந்தபோதே அவரது மனதில் ஆழ்ந்த ஓர் உணர்ச்சியை உண்டுபண்ணியது.

லியோ ஷ்லாகெடர் என்பாருக்கும் அதே கதிதான் நேர்ந்தது. அவர் ஒரு ஜெர்மன் மாணவர். சென்ற மகாயுத்தத்தில் அவர் சேர்ந்து ராணுவ அதிகாரியாக உயர்த்தப்பட்டு வீரப் பதக்கங்களும் பெற்றவர். *2583*ல் *(1923)* பிரெஞ்சுக்காரர்கள் ரூர் பிரதேசத்தை ஆக்கிரமித்துக் கொண்டபோது ஜெர்மன் சார்பில் எதிர்ப்பு இயக்கத்தை உருவாக்க அவர் உதவி செய்தார். பிரான்ஸிற்கு நிலக்கரி

செல்லுவதைத் தடுப்பதற்காக அவரும் அவரது நண்பர்களும் வெடி மருந்து வைத்து ஒரு ரயில்வே பாலத்தை உடைத்து விட்டனர். அதில் சம்பந்தப்பட்டவர்களை ஒரு ஜெர்மன் உளவாளி பிரெஞ்சுக்காரர்களிடம் காட்டிக் கொடுத்துவிட்டான். எனினும் அச்சம்பவத்திற்குத் தாம்தான் முழுப் பொறுப்பாளி என்று ஷ்லாகெடர் கூறிவிடவே அவர் பிரெஞ்சு கோர்ட்டாரால் மரண தண்டனையும், அவரது தோழர்கள் பல்வேறுவிதமாக கடுங்காவல் தண்டனையும் விதிக்கப்பட்டனர். அந்த ரயில்வே பாலத்தைத் தகர்க்க யார் உத்தரவிட்டனர் என்பதைக் கூற ஷ்லாகெடர் மறுத்துவிட்டதுடன், தனக்குக் கருணைக் காட்டும்படி கோர்ட்டாரைக் கேட்டுக் கொள்ளவும் இசையவில்லை. அவ்வருஷம் மே மாதம் 26ந் தேதி அவர் பிரெஞ்சு போலீசாரால் சுட்டுக் கொல்லப்பட்டார். அவ்வமயம் ஜெர்மன் உள்நாட்டு மந்திரியாக இருந்தவர் ஸவரிங் என்பவரே. ஷ்லாகெடரின் சார்பில் விண்ணப்பம் செய்து கொள்ளும்படி அவரை ஜனங்கள் கேட்டுக் கொண்டும், அவ்விஷயத்தில் தலையிட அவர் மறுத்துவிட்டார். ஷ்லாகெடர் தேசீய அபேதவாத இயக்கத்தின் முக்கிய வீரர்களில் ஒருவர்.

2. சென்ற மகா யுத்தத்திற்குப் பின், அதாவது 2578ல் (1918) ஜெர்மன் குடியரசுடன் தான் ஐக்கியமடைவதாக ஆஸ்திரியா பிரகடனம் செய்தது. ஆனால் பிரிட்டன் முதலிய "நேச தேசங்கள்" அந்த அபிலாஷைக்கு முட்டுக்கட்டை போட்டுவிட்டன. 20 ஆண்டுகளுக்குப் பின், 2598 (1938) மார்ச் மாதம் 12ந் தேதி ஜெர்மன் துருப்புகள் ஆஸ்திரியாவில் பிரவேசித்தன. அவ்வாறாக ஹர் ஹிட்லர் ஆஸ்திரியாவை ஜெர்மனியுடன் இணைத்து அதன் வெகு காலத்திய அபிலாஷையைப் பூர்த்தி செய்தார்.

3. ஆர்ச் டியூக் பிரான்ஸ் பர்டினான்ட் ஆஸ்திரிய இளவரசர் 2574 (1914) ஜூன் மாதம் 8ந் தேதி ஸரஜிவோ என்ற இடத்தில் அவர் ஒரு செர்பிய இளைஞரால் கொலையுண்டார். சென்ற மகா யுத்தம் பீறிட்டெழுந்ததற்கு அதுதான் மூலகாரணம். "ஸ்லேவியர்களின் சிறந்த நண்பரே (ஆஸ்திரிய இளவரசர்) ஸ்லேவிய தேச பக்தர்களின் தோட்டாக்களுக்கு இரையானார்" என்று ஹிட்லர் ஓரிடத்தில் குறிப்பிட்டிருப்பதைக் காண்க.

# 2. வியன்னாவில் பட்ட பாடு

என் தாயார் இறந்தபோது ஒரு விஷயத்தில் என் விதியானது நிர்ணயிக்கப்பட்டுவிட்டது. அவள் நோயாகக் கிடந்தபோது சித்திரப் பிரவேசப் பரீட்சைக்காக நான் வியன்னா சென்றேன். பரீட்சையில் மிகவும் நன்றாக எழுதியிருப்பதாகவும் எனவே நிச்சயம் தேறிவிடுவேன் என்றும் பெருமையும் சந்தோஷமும் கொண்டிருந்தேன். வியன்னாவில் நான் இருந்தபோது அங்குள்ள பல முக்கிய கட்டிடங்களும் என் மனதிற்கு மட்டற்ற மகிழ்ச்சியையும் கண்களுக்குக் குளிர்ச்சியையும் கொடுத்தன. அக்கட்டிடங்களைப் பார்த்துக் கொண்டே மணிக்கணக்கில் அப்படியே மெய் மறந்து நின்றுவிடுவேன்.

நிற்க, பரீட்சையில் நிச்சயம் தேறிவிடுவேனென நினைத்துக் கொண்டிருந்த எனக்கு, அதில் தோல்வியுற்றேனென்ற செய்தி இடி இடித்தது போலிருந்தது. என்னுடைய சித்திரங்களைப் பார்வையிட்ட ஒரு சித்திராசிரியர், எனக்கு சிற்பத்தில்தான் திறமையிருக்கிறதே அன்றி, சித்திரத்தில் திறமையில்லை எனக் கூறிவிட்டார். சிற்பத்தில் எனக்கு எவ்வித பயிற்சியுமிராதிருக்கையில் என்னுடைய சிற்ப ஞானத்தை அவர் குறிப்பிட்டது எனக்கு ஆச்சரியமாயிருந்தது. எனவே சிற்ப பயிற்சி பெறுவதுதான் சிறந்ததெனத் தீர்மானித்தேன். எனினும் சிற்பப் பிரவேசப் படிப்பைப் பூர்த்தி செய்திருக்க வேண்டும். ஆனால் நானோ அவ்விதம் செய்யவில்லை. எனவே அந்த முட்டுக் கட்டையைக் கடந்து அத்துறையில் நான் தேர்ச்சி பெறுவது மானிட சாத்தியமானதாகத் தோன்றவில்லை.

என் தாயார் இறந்தபின் நான் வியன்னா சென்றபோது அங்கு பல வருஷங்களிருக்க நேர்ந்தது. அவள் இறப்பதற்கு முன் நான் இரு முறை வியன்னா சென்றிருந்தேன். நான் சிற்பியாகத் தேர்ச்சி பெற பல கஷ்டங்களிருந்தும் அவைகளை லட்சியம் செய்யாது என் மனோபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்ற உறுதி மீண்டும் எனக்கு உண்டாயிற்று. நம் வாழ்க்கையில் எவ்வளவோ முட்டுக்கட்டைகளேற் படுகின்றன. அவைகளைக் கண்டு தடுமாறித் தத்தளிப்பது கோழைத்தனம். அவைகளை எதிர்த்து நின்று வெற்றி பெற்று முன்னேறுவதுதான் வீரனின் லட்சணம். இவை போன்ற சிந்தனைகளை எனக்கு மன உறுதியைக் கொடுத்தன. மிகவும் ஏழையான ஒரு கிராம சக்கிலியரின் மகனாக இருந்தும், தம் சொந்த முயற்சியால் சர்க்கார் உத்தியோகத்துக்கு வந்த என் தந்தையின் உருவம் ஓர் உதாரணமாக என் கண் முன் நின்று எனக்கு உத்வேகத்தையும், உற்சாகத்தையும் உண்டு

பண்ணியது. அப்போது என் வாழ்க்கை மிகவும் கஷ்டமாக இருந்ததெனினும், அது இறைவனின் திருவுள்ளம் என்பதும், அதனால் எனக்கு நன்மையே என்பதும் இன்று நன்கு தெரிகிறது. விதியாகிற காளிதேவி என்னைக் கையிலெடுத்து பூமியில் ஒரே அறையாக அறைந்து சின்னாபின்னமாக்கி விடுவாளோ என்றும் தோன்றியது. இருந்தாலும் இடையூறுகள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாயினவோ, அவ்வளவுக்கவ்வளவு என் உறுதியும் அதிகமாகி, இறுதியில் மனோபலம் தான் வென்றது!

அப்போது நான் கஷ்ட வாழ்க்கை நடத்தும்படி நேர்ந்தது இறைவனின் கிருபைதான். ஏனெனில் அவ்வாழ்க்கைதான் என்னைத் தற்போதிருப்பது போல் திட சித்தனாக்கியது. என் தாயார் இறந்ததும் அதிர்ஷ்டவசமாக என்னை வறுமைத்தாய் ஏற்றுக் கொண்டாள். இல்லாவிடில் என் வாழ்க்கை சாரமற்றும் சோம்பேறித்தனமாகவும் போயிருக்கும். எனவே வறுமையும் துன்பமும் நிறைந்த வாழ்க்கைக் கடலில் நான் அப்போது வீசியெறியப் பட்டதற்காகவும் கடவுளுக்கு நன்றி செலுத்து கின்றேன். அதனால்தான் பின்னர் நான் ஏழைகளின் நிலைமையை நன்குணர்ந்து அவர்களுக்காகப் போராட முடிந்தது.

பலருக்கும் வியன்னா என்றாலே அது சந்தோஷமும் 'குஷி'யு முள்ள பாக்கியசாலிகளுக்கேற்ற ஓர் இடமென்று தோன்றும். ஆனால், அந்தோ, என் வாழ்க்கையிலேயே நான் மிகுந்த துன்பத்தை அனுபவித்தது வியன்னாவில்தான். வியன்னாவில் அப்போது நான் நடத்திய வாழ்க்கைதான் என் ஆயுளிலேயே மகத்தானதொரு துக்க படலமாகும். அந்த ஞாபகம் என் மனதில் பசு மரத்தாணி போல் பதிந்துள்ளது. வியன்னா என்ற பெயரானது இன்றுகூட என் மனதில் சோககரமான எண்ணங்களைக் கிளறுகின்றது. அந்நகரில் நான் ஐந்து வருஷ காலம் வறுமையால் வாடி வதங்கினேன். அப்போது முதலில் சில்லறை வேலைகள் செய்யும் ஒரு தொழிலாளியாகவும், பின்னர் சாயம் பூசுபவனாகவும் என் ஜீவனத்தை நடத்த வேண்டியிருந்தது. அப்போது எனக்குக் கிடைத்த சம்பளம் அரை வயிற்றுக் கஞ்சிக்கும் போதவில்லை. பசியாகிற இரக்கமற்ற நண்பன் அக்காலத்தில் என்னைவிட்டு அரைக்ஷணம் கூட பிரிவதேயில்லை. அவனுடன் நான் சதா போராட வேண்டியிருந்தது. அப்போது நான் மற்றொரு நண்பனையும் கைவிடுவதில்லை. அதாவது புத்தகங்களையே குறிப்பிடுகின்றேன். அக்கஷ்ட காலத்திலும் நான் ஏராளமான புத்தகங்களை வாசிக்கவும் சிற்பங்களின் சிறப்பைக் கண்டுகளிக்கவும் தவறுவதில்லை. உணவிற்குக் கஷ்டப்பட்டபோது கூட நான் காசு கொடுத்துப் புத்தகங்கள் வாங்கியதுண்டு. வாசித்த விஷயங்களை மறந்துவிடாது அவைகளைப் பற்றி தீர்க்கமாக ஆலோசிப்பேன். வேலை நேரம் போக மற்ற நேரங்களிலெல்லாம்

புத்தகமும் கையுமாகவே இருப்பேன். அதன் பயனாக சில வருஷங்களில் ஏராளமான விஷயங்களை அறிந்துகொண்டேன். அவ்விஷய ஞானம்தான் இன்று எனக்கு உதவியாக இருந்து வருகிறது. அந்நாட்களில் பொதுவாக வாழ்க்கையைப் பற்றியும், உலகத்தைப் பற்றியும் என் மனதில் உருவான அபிப்பிராயமே பாறை போன்று என் வாழ்க்கையின் அஸ்திவாரமாக அமைந்தது. அப்போது என் மனதில் பதிந்த லட்சியங்கள் இன்றும் மாறாமலிருந்து வருகின்றன.

எப்போதுமே, ஒருவர் இளைஞராக இருக்கும்போது அவரது மனதில் சில உருவான எண்ணங்கள் கொழுந்துவிட ஆரம்பித்து விடுகின்றன என்பதுதான் என் அபிப்பிராயம். பின்னர் அவை வயதாக ஆக, அனுபவம் காரணமாக பக்குவமடைகின்றன எனினும் அதன் மீதுதான் வாழ்க்கை மாளிகையும், எதிர்கால திட்டங்களும் உருப்பெற்று பலமடைகின்றன.

அப்போது வியன்னா நகரில் ஓர் புறம் கண்ணைப் பறிக்கும் படாடோபமும், செல்வமும், மற்றோர்புறம் மிகவும் வெகுக்கத்தக்க வறுமையும் கலந்து தாண்டவமாடின. நேர்முரணான அவ்விருவகைக் கோலங்களையும் ஏக காலத்தில் அங்கு காண முடிந்தது. படாடோபத்திற்கும் செல்வத்திற்கும் ஹாப்ஸ்பர்க் ராஜகுடும்பம் உச்ச ஸ்தானம் வகித்தது. ஹாப்ஸ்பர்க் முடியரசுக் கொள்கையானது காந்தம்போல் சாம்ராஜ்யத்திலுள்ள செல்வந்தர்களையும் மேதாவிகளையும் தலை நகருக்கு இழுத்தது. வியன்னா அப்போது அரசியல், அறிவுத்துறைகளில் மாத்திரம் தலைமை ஸ்தானமாக விளங்கவில்லை, வர்த்தகத் துறையிலும் முதல் ஸ்தானம் பெற்றுத் திகழ்ந்தது. அங்கு ஓர் புறம் ஏராளமான உயர்தர ராணுவ சிவில் அதிகாரிகளும் கலா நிபுணர்களும் விஞ்ஞானிகளுமிருந்தனர். மற்றோர் புறம் அவர்களைவிட ஏராளமாக ஏழைத் தொழிலாளர்களும் இருந்தனர். வறுமையும், செல்வமும் ஒன்றையொன்று பார்த்துக் கொண்டு நின்றன. செல்வமும் போக போக்கியங்களும் தாண்டவமாடும் மாளிகைகளுக்கு எதிரில் வேலையற்றுத் தவிக்கும் ஆயிரக்கணக்கான ஏழைகள் அலைந்து திரிந்தனர்; வீடற்றவர்கள் சகதியிலும், புழுதியிலும் காலந்தள்ளினர்.

ஜெர்மானியர்களின் சமுதாயப் பிரச்னையை நன்கு ஆராய்ச்சி செய்ய வியன்னாவைக் காட்டிலும் தகுதியான நகரம் வேறெதுவுமில்லை. இருந்தாலும் உச்ச ஸ்தானத்திலிருந்து கொண்டு அப்பிரச்னையை ஆராய்ச்சி செய்வதென்பது முடியாத காரியம். ஆளை நசுக்கிப் பிழியும் வறுமைப் பேயின் கையிலகப்பட்டுத் தவிக்காத எவரும், அப்பேயின் விஷத்தன்மையை அறிந்து கொள்வதோ, ஆராய்ச்சி செய்வதோ அசாத்தியமாகும்.

சமுதாயப் பிரச்னை விஷயத்தில் இருவித கோஷ்டியினர் உண்டு. வாழ்க்கையில் கஷ்டமெதுவுமின்றி சுகமாகக் காலந்தள்ளுபவர்கள் அந்தப் பிரச்னையைக் கவனிப்பதேயில்லை. இரண்டாவது கோஷ்டியினர், வாசா கைங்கர்யவாதிகள். அவ்விதம் கஷ்டப்படும் ஜனங்கள் விஷயத்தில் அனுதாபப்படுவதாகக் கூறுவார்கள்; அவர்கள் மீது தங்களுக்கு அன்பென்றும் கோஷம் செய்வார்கள். எனினும் அவர்களின் கூற்றினால் உருவான பலனெதுவும் ஏற்படாது. அப்படிப்பட்டவர்கள் விஷயத்தில் ஜனங்கள் ஆத்திரமடைந்தால், தங்களிடம் ஜனங்களுக்கு நன்றியில்லை என்று கூக்குரலிடுவார்கள். அத்தகையோர் விஷயத்தில் ஜனங்கள் ஏன் நன்றி செலுத்த வேண்டும்? அவர்கள் ஏழை ஜனங்களுக்குத் தொண்டு செய்ய வேண்டியது சமுதாய ரீதியை ஆதாரமாகக் கொண்ட கடமையேயொழிய, அதில் தன்னலமற்ற தர்மம் எதுவுமில்லை. எனவே அவர்கள் ஜனங்களின் நன்றியை ஏன் எதிர்பார்க்க வேண்டும்?

ஆனால் நான் மேலே குறிப்பிட்ட எந்தப் பிரிவிலும் சேர்ந்தவனல்ல. ஏனெனில் வறுமைப் பேயினிடம் அகப்பட்டுத் தவித்தவர்களில் நானும் ஒருவன். அதனால் உச்ச ஸ்தானத்திலிருந்து அப்பிரச்னையை ஆராய்ச்சி செய்ய வேண்டிய நிலைமை எனக்கு ஏற்படவில்லை. அப்போ எனக்கு நேர்ந்த பல்வேறு கஷ்டங்களையும் விவரமாகக் குறிப்பிடுவதென்பது முடியாத காரியம். ஆனால் நான் பெற்ற அனுபவத்தின் மூலம் எனக்கு அமைந்த சில படிப்பினைகளை மாத்திரம் இங்கு குறிப்பிடுகிறேன்.

அக்காலத்தில் வேலை கிடைப்பது அதிக கஷ்டமில்லை. ஏனெனில் திறமை வாய்ந்த ஒரு தொழில் நிபுணன் என்ற முறையில் நான் வேலை தேடவில்லை. தினசரி ஜீவனத்திற்காக எந்தச் சில்லறை வேலையும் செய்யத் தயாராயிருந்தேன். அக்காலத்தில் என் போன்ற மற்றும் பலர் புதிய உலகில் ஒரு புதிய வாழ்க்கையின் அஸ்திவாரத்தை அமைக்க உறுதி கொண்டனர். வகுப்பு, தொழில், சம்பிரதாயம் போன்ற வேற்றுமையாகிற தளைகளிலிருந்து விடுதலை அடைந்த அவர்கள், யோக்கியமான எத்தொழிலிலும் ஈடுபடத் தயாராயிருந்தனர். யோக்கியப் பொறுப்புள்ள எத்தொழிலாலும் மனிதனுக்கு அகௌரவமோ, இழிவோ இல்லையென்ற அபிப்பிராயம் அவர்களிடையே வளர்ந்தது. எனவே நானும் அப்புதிய உலகில் முன்னேறிச் செல்ல தீர்மானித்தேன்.

எச்சமயத்திலும் ஏதாவதொரு வேலை கிடைக்கும் என்பதையும், எவ்வளவு சீக்கிரமாகவும் சுலபமாகவும் அதை இழந்துவிடும்படி நேரும் என்பதையும் நான் அனுபவத்தில் அறிந்து கொண்டேன். நான் பிரவேசித்த புதிய வாழ்க்கையில் நிலையற்ற தினசரி

ஜீவனமானது எனக்கு மிகுந்த கலக்கத்தைக் கொடுத்தது.

திறமையற்ற தொழிலாளியைப் போல் திறமையுள்ள தொழிலாளி அடிக்கடி வேலையை இழக்கும்படி நேரவில்லை என்றாலும், திறமையுள்ள தொழிலாளிக்கும் அதே கதி ஏற்படாமலிருப்பதற்குற்ற பாதுகாப்பு எதுவுமில்லை. திறமையுள்ள தொழிலாளி வேலை இல்லாக் கஷ்டத்தினால் பட்டினி கிடக்கும்படி நேராமலிருக்கலாம். எனினும் கதவடைப்பு, வேலை நிறுத்தம் காரணமாக அவனது ஜீவனத்திற்கும் கஷ்டமேற்பட்டு வந்தது. அது போன்ற நிச்சயமற்ற தினசரி ஜீவனமானது வாழ்க்கையிலேயே எல்லையற்ற வெறுப்பை உண்டு பண்ணியது.

பட்டணத்திற்குச் சென்றால் சுலபமாக வேலை செய்து சம்பாதிக்கலாமென்று கேள்விப்பட்டு, கிராமத்திலுள்ள இளைஞன் அங்கு குடியேறுகின்றான். அங்கு சுலபமாக சம்பாதிப்பதென்பது உண்மையாக இருக்கலாம். வேலை நேரமும் குறைவாக இருக்கலாம். பெரிய நகரங்களில் பரந்திருக்கும் மாயமினுக்குகள் அவனுக்குப் பரவசத்தை உண்டு பண்ணுகின்றன. கிராமத்தில் அதிக சம்பளமிராவிடினும், ஒரே சீராக சம்பளம் பெற்று அவன் வளர்க்கப்பட்டவன். மற்றொரு வேலை நிச்சயமாகக் கிடைக்குமென்று தெரிந்தாலன்றி, இருக்கும் வேலையை விட மாட்டான். விவசாயத் தொழிலாளர்களுக்கு கிராக்கி அதிகமாதலால், கிராமத்தில் எந்தத் தொழிலாளியும் நீண்டகாலம் வேலையில்லாமலிருக்கும்படி நேராது. வேலைக்காக பட்டணத்திற்குச் செல்லுவோர், கிராமத்திலேயே இருந்து கொண்டு நிலத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களைப் போல் சிறந்தவர்களல்லவென்று நினைப்பது தவறாகும். அதற்கு மாறாக, அதிக ஆரோக்கியமும், பலமும், சுறுசுறுப்புமுள்ளவர்கள் தான் கிராமத்தை விட்டுப் பட்டணத்திற்குச் செல்லுகின்றனர். இது அனுபவத்தில் தெரிந்த விஷயம். அவ்விதம் செல்லுவோரைப் பற்றிப் பேசுகையில், அமெரிக்காவிற்குச் சென்று குடியேறுவோரை மாத்திரமல்ல, கிராமத்திலிருந்து பட்டணத்திற்குச் செல்லும் வேலைக்காரப் பையனையும் சேர்த்தே குறிப்பிடுகின்றேன். அங்கு அவன் ஓர் அன்னியன் போலவேதானிருப்பான். ஒரு நிலையற்ற விதிக்கு ஆளாகவும் அவன் தயாராக இருக்கிறான். அவன் தன் சட்டைப் பையில் கொஞ்சம் காசுடன்தான் பட்டணத்திற்கு வருகின்றான். வந்தவுடன் வேலை கிடைக்கும் அதிர்ஷ்டம் அவனுக்கு இல்லாவிட்டாலும், அவன் அதற்காக முதலில் சோர்வடைவதில்லை. ஆனால் அவனுக்கு வேலை கிடைத்து, பின்னர் சில நாட்களில் அவன் அதை இழக்கும்படி நேருமாயின், அப்போதுதான் அவனது நிலைமை மோசமாகின்றது. மீண்டும் வேலை பெறுவது, அதிலும் மாரிகாலத்தில் மீண்டும் வேலை

பெறுவது மிகவும் கஷ்டமான காரியம். அவ்வித நிலைமையில், முதலில் சில வாரங்கள் வரை வாழ்க்கை சகிக்கக் கூடியதாகவே இருக்கும். வேலையில்லாததால் அவனுக்குத் தொழிலாளர் சங்கத்திலிருந்து ஏதாவது தொகை கிடைக்கும். ஆனால் தன்னிடமிருந்த தொகை அறவே செலவழிந்து, தொழிலாளர் சங்கமும், நீண்டகாலம் வேலையின்மை காரணமாக, தொகை கொடுப்பதை நிறுத்தியதும்தான், அவனுக்கு உண்மையான கஷ்டகாலம் ஆரம்பமாகின்றது. அப்போது அவன் வேலைக்காக அங்குமிங்கும் அலைகின்றான். பசியோ வாட்டுகின்றது. தன்னுடைய சாமான்களை அடமானம் வைத்தோ அல்லது விற்றோ ஜீவனம் செய்கின்றான். அவனது உடைகள் அழுக்கடையவும், கிழியவும் ஆரம்பிக்கின்றன. அவனது வெளித்தோற்றம் வறுமையின் ஆதிக்கத்தை வலியுறுத்துகின்றது. அதன் விளைவாக அவன் கூடா நட்பை நாடி மனதைப் பாழ்படுத்திக் கொள்வதுடன், சரீரத்தையும் சீர்குலைத்துக் கொள்கின்றான். இறுதியில் தூங்கவும் இடமின்றித் தெருவில் தவித்து நிற்கின்றான். பிறகு அவனுக்கு வேலை கிடைக்கிறதென்றாலும் மீண்டும் அதே நாடகமே நடக்கின்றது. மூன்றாவது முறையும் அந்தப் பரிதாபமான பழங்கதைதான் அவ்விதம் நிலையற்ற விபரீத வாழ்க்கையும் அவனுக்குப் பழக்கமாகிவிடுகின்றது.

சுறுசுறுப்புள்ள தொழிலாளிகூட அடிக்கடி பட்டினி கிடக்கும்படி நேருவதால் வாழ்க்கையில் சலிப்பும், சோம்பேறித்தனமும் கொண்டு, சரீரமும் மனமும் குன்றி நாளுக்கு நாள் அதோகதியாகின்றான். அந்நிலைமையில் அவனை சுயநலவாதிகள் தங்களுடைய கருவியாக உபயோகிக்க முடிகின்றது. குறிப்பிட்ட வேலை நிறுத்தமானது சமுதாயத்திற்கும் தேசத்திற்கும் நன்மையளிப்பதா அல்லது தீங்கை உண்டுபண்ணுவதா என்றுகூட அவன் சிந்திக்க விரும்புவதில்லை. யார், எது எக்கேடு கெட்டுப் போனாலென்ன என்று அலட்சிய புத்தியுடன் எந்த வேலை நிறுத்தத்திலும் கலந்து கொள்ள ஆரம்பித்து விடுகின்றான்.

ஆயிரக்கணக்கானவர்களுக்கு அத்தகைய கதி நேர்ந்ததை நான் நேரில் பார்த்தேன். அதனால் பிரமாண்டமான அந்நகர் மீது எனக்கு வெறுப்பேற்பட்டது. ஏனெனில் ஏராளமானவர்களை அது வசீகரித்து, இறுதியில் இரக்கமின்றி அவர்களைக் கசக்கிப் பிழிந்து விடுகின்ற,தல்லவா? எனக்கும் அதே கதி நேராமலில்லை. அப்போது நான் பட்ட துன்பங்கள் என் மனதில் ஆழ்ந்து பதிந்தன. திடீர் திடீரென வேலை கிடைப்பதும், பின்னர் வேலையின்றி சோம்பேறித்தனமாக இருக்கும்படி நேருவதும் சகஜமாகி விட்டதால், பலருக்கும் சிக்கன புத்தி மறைந்து கையில் காசிருக்கும்போது ஊதாரித்தனமாகச் செலவழிப்பதும்,

வேலையிராதபோது அடியோடு பட்டினி கிடந்து பரிதவிப்பதும் வழக்கமாகிவிட்டது. வேலையிலிருக்கும்போது பணத்தைச் சேமித்து வைத்தால், பின்னர் வேலையின்றி கஷ்டப்படும்போது அது உதவுமென்ற எண்ணம் அவர்களுக்கு இருப்பதேயில்லை. எனினும் அதற்காக அவர்களைக் குறை கூறுவதும் சரியல்ல. அடிக்கடி துன்பத்திற்குள்ளாகும்படி நேருவதன் விளைவாக அவர்களின் மனம் சலித்துப் போய், 'காசு கிடைத்தபோது இஷ்டப்படி செலவழிப்போம், நாளை நடப்பதென்னவென்ற கவலை எதற்கு?' என்ற அலட்சிய புத்தி ஏற்பட்டு விடுகிறது. எல்லையின்றி கஷ்டத்திற்குள்ளாவதன் மூலம் தன்னடக்க உணர்ச்சி அடியோடு மறைந்து விடுகின்றது.

அவர்களில் பலருக்கும் மனைவி, குழந்தைகள் உண்டு. எனவே அவர்களும் வறுமை வாழ்க்கையில் உழலும்படி நேருகின்றது. அவர்களுடைய குழந்தைகள் அப்போது முதற்கொண்டே வறுமையின் ருசியை அனுபவிக்க ஆரம்பித்து விடுகின்றன. வறுமையும், கஷ்டமும் காரணமாக கணவன் மனம் சலித்து தன்னிஷ்டப்படி நடந்துகொள்ளத் துவங்கிவிடுவதும் உண்டு. அப்போது மனைவி தன் குழந்தைகள் மீதுள்ள அபிமானம் காரணமாகக் கணவனைக் கண்டிக்க ஆரம்பிப்பாள். அவ்விதமாக அடிக்கடி கணவன் - மனைவிக்குள் சச்சரவும், மனஸ்தாபமும் உண்டாகிவிடும். மனைவியிடம் மனஸ்தாபம் அதிகமாவதற்குற்றவாறு கணவன் அடிக்கடி குடிக்க முற்பட்டு விடுவான். அதன் விளைவாக மனைவி தன் ஜீவனத்திற்கும், தன் குழந்தைகளின் ஜீவனத்திற்கும் போராடும்படி நேரும். சனிக்கிழமை சம்பள தினத்தன்று கணவனிடமிருந்து கொஞ்சம் காசு வாங்குவதற்காக அவள் அவனைத் தொழிற்சாலையிலிருந்து சாராயக்கடை வரையில் ரஸ்தா நெடுக விரட்டிச் செல்லவும் நேருகிறது. பிறகு அவன் இஷ்டப்படி குடித்துக் காசையெல்லாம் அடியோடு தொலைத்து விட்டு, ஞாயிற்றுக்கிழமையோ அல்லது திங்கட்கிழமையோ அலங்கோலமான நிலைமையில் வீடு வந்து சேருகின்றான். அவ்வமயம் நிகழும் பரிதாபகரமான காட்சிகள், ஐயோ, கடவுளே, சகிக்க முடியா.

நூற்றுக்கணக்கான குடும்பங்களில் அத்தகைய பரிதாபகரமான கோலங்களை நான் நேரில் கண்டிருக்கிறேன். முதலில் அத்தகைய சம்பவங்கள் எனக்கு மிகுந்த ஆத்திரத்தையும் வெறுப்பையும் உண்டு பண்ணின. ஆனால், அவர்களின் துரதிர்ஷ்டத்திற்கு மூலாதாரமான காரணங்களையும், அவர்கள் மீது எவ்வித தவறு மில்லை என்பதையும் நான் பின்னர்தான் அறிந்து கொண்டேன். பாவம், விபரீத சந்தர்ப்பங்களுக்கு இரையாகும் துர்ப்பாக்கிய சாலிகளான அவர்கள் என்ன செய்வார்கள்?

அப்போது அவர்களுடைய வீடு வாசல்களின் நிலைமையும் படுமோசமாக இருந்தது; அவர்கள் குகைகளைப் போன்றவிடங்களில் வசித்து வந்தனர். துன்பம், துர்நாற்றம், குப்பைக் கூளங்கள், அசுத்தம், மலம் முதலியவைகளின் மத்தியிலே வாழ்ந்து வந்தனர். அதை இன்று நினைத்தாலும் எனக்கு நடுக்கமேற்படுகிறது. அது ஒரு நரக உலகமாகவே இருந்தது.

மற்ற உலகிலிருப்பவர்கள் அவர்களைப் பற்றிக் கவலை கொள்ளவேயில்லை. அவ்வலங்கோல நிலைமைக்கு ஏதாவது பரிகாரம் செய்யாவிடில், விதியானது தங்கள் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் என்பதையும், சுக வாழ்க்கை நடத்தும் மற்ற உலகமானது அறிந்துகொள்ளவில்லை. எனினும் மேலே குறிப்பிட்ட வாழ்க்கைப் பள்ளிக் கூடத்திற்கு என்னை அனுப்பியதற்காக நான் கடவுளைப் பரவசத்துடன் பிரார்த்திக்கின்றேன். அந்த அனுபவமானது எனக்கு மகத்தான ஒரு படிப்பினையாயிற்று.

அந்த ஜனங்களைக் கண்டு நான் மனச்சோர்வடைந்து அவர்களின் மத்தியிலிருந்து ஓடிவிடவில்லை. ஓர்புறம் அவர்களுடைய வாழ்க்கையின் வெளித் தோற்றங்களையும், மற்றொருபுறம் அவைகளுக்கான காரணங்களையும் ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தேன். பின்னர்தான் மனச் சோர்வின்றி நான் எதையும் சகிக்க முடிந்தது. அத்தகைய துரதிர்ஷ்டம், துன்பம், அனாரோக்கியம், இழிவு இவைகளிலிருந்து வெளிவந்தவர்கள் மானிடர்களல்ல, ஆனால் அவர்கள் பரிதாபகரமான சட்டங்களின் பரிதாபகரமான பலன்களே. நானும் அவ்விதமே அவர்களைப் போல் கஷ்டப் பட்டேன். அக்கஷ்டம்தான் என் மனதில் அர்த்தமற்ற இரக்க உணர்ச்சிக்கு இடங்கொடாது தடுத்தது. ஏனெனில் அத்தகைய உணர்ச்சி மிகவும் தவறானது.

அந்த ஏழைகளின் கஷ்டங்களுக்குப் பரிகாரமேற்பட வேண்டுமாயின், இருவித முறைகளைத் தவிர வேறு வழியெதுவுமில்லை என்பதை நான் அந்நாளிலேயே உணர்ந்துகொண்டேன். 1. பொதுஜனங்களிடையே தீவிர சமுதாயப் பொறுப்பு உணர்ச்சியை வளர்ப்பதன் மூலம் சமுதாய அபிவிருத்திக்கான மூலாதார நிலைமையை உண்டு பண்ணுவது. 2. அத்துடன் அபிவிருத்திக்கு இடமில்லாத காளான்களையெல்லாம் சிறிதும் இரக்கமின்றி வெட்டியெறிந்து விடுவது.

நான் வியன்னாவில் எனது ஜீவனத்திற்குக் கஷ்டப்பட்ட காலத்தில், ஒரு விஷயம் எனக்கு சந்தேகமறத் தோன்றியது. அதாவது சகல சமுதாயத் தொண்டின் நோக்கமும் வெறும் இரக்கத்தை ஆதாரமாகக் கொண்ட பரிகார முறையாக இருக்கக் கூடாதென்பதே. அத்தகைய கைங்கர்யம் இழிவாகவும், வியர்த்தமாகவும் முடியும். ஆனால் அதற்கு மாறாக, அதன் நோக்கமானது,

நம் பொருளாதார கலாச்சார வாழ்க்கையிலுள்ள குறைகளை ஒழிப்பதாக இருக்க வேண்டும். தொழிலாளர்களை மேற்கூறிய இழிவான நிலைமைக்குக் கொண்டு வரும் குறைகளை ஒழிக்கும் விஷயத்தில் அர்த்தமற்ற தயவு தாட்சண்யமே கூடாது. அவ்விதம் தயவு தாட்சண்யம் காட்டாதவர்களுக்குத்தான், களைகளையும் காளான்களையும் இரக்கமின்றி அறவே வெட்டியெறிவதற்குற்ற சக்தியும் மன அமைதியுமேற்படும். சமுதாய உரிமைகள் அல்லது சமுதாய சட்டம் பற்றிய உணர்ச்சியே ஆஸ்திரிய சர்க்காருக்கு இல்லாததால், மேலே குறிப்பிட்ட களைகளை ஒழிக்கும் சக்தியும் அவர்களுக்கு ஏற்படவில்லை.

அப்போது எனது தோழர்களாக இருந்தவர்களின் வறுமை, காட்டுமிராண்டித்தனமான பழக்க வழக்கங்கள், ஒழுக்கமின்மை, மிகத் தாழ்ந்தரக அறிவு, மனோபக்குவமின்மை முதலியவை எனக்கு வெறுப்பையும் அச்சத்தையும் உண்டு பண்ணின.

"நான் ஒரு ஜெர்மானியனா அல்லவா என்பது பற்றி எனக்குக் கவலையில்லை. எனக்குப் போதிய உணவு கிடைக்குமிடம்தான் எனது தாயகம்" என்று யாராவது சொன்னால் உடனே நடுத்தர வகுப்பினர் ஆத்திரமடைகின்றனர். அத்தகையவருக்குத் தேசீய உணர்ச்சியே இல்லையெனக் கண்டிக்கின்றனர். ஆனால் அவருக்கும் தங்களுக்குமுள்ள வேற்றுமையை நடுத்தர வகுப்பினர் எண்ணிப் பார்ப்பதில்லை. அறிவும், கலாச்சார ஞானமும் உள்ளவர்கள்தானே தங்கள் தேசத்தின் சிறப்பையறிந்து கொண்டு பெருமை கொள்ள முடியும்? பாமர ஜனங்களுக்கு அந்த அறிவு சூன்யமாக இருக்கையில், அவர்கள் தங்கள் நாட்டின் சிறப்பை உணர்ந்து கொள்வதெப்படி?

உதாரணமாக வாசகர்கள் கீழ்க்கண்டவாறு கற்பனை செய்து பார்க்கட்டும்: ஓரிடத்திலுள்ள நிலவறையில் ஒரு குடும்பம் வசிக்கின்றது. அதில் இரு அறைகளிருக்கின்றன. அவைகளில் ஒரு தொழிலாளியும், அவனது குடும்பமும், அதாவது மொத்தம் ஏழு பேர்கள் வசிக்கின்றனர். அவர்களில் ஒரு ஆண் குழந்தைக்கு மூன்று வயதென்று வைத்துக் கொள்வோம். எவ்விஷயமும் பசுமரத்தாணி போல் பதியும் வயது அதுதான். அக்குடும்பத்திற்குப் போதிய இடமிராததாலும், வறுமை காரணமாகவும், புருஷனுக்கும் மனைவிக்கும் சரி, குழந்தைகளுக்குள்ளும் சரி, அடிக்கடி சச்சரவு ஏற்பட்டுவிடும். இடம் விஸ்தாரமாக இருந்தால் ஒருவரையொருவர் சிறிது நேரம் பார்க்காமலிருப்பதன் மூலமாவது அதை மறக்க இடமுண்டு. அவ்வித வசதியில்லாததால் அற்ப தகராறும் தீராச்சண்டையாகி, குடும்பத்தில் அமைதிக்கும் சந்தோஷத்திற்குமே இடமில்லாமல் போய்விடுகிறது. தந்தையும் தாயும் அடிக்கடி அடித்துக்கொண்டு பூனையும் எலியும்

போல் வாழும் குடும்பத்தில் வளரும் குழந்தைகளின் கதி என்னவாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? தந்தை தினசரி குடித்துவிட்டுத் தாயை அடிக்கும் கோலத்தைக் காணும் குழந்தைகளின் மனதில் எவ்வித எண்ணங்கள் எழும்? எத்தகைய குணங்கள் உருவாகும்? அவ்விபரீதங்களால் குழந்தைகளின் மனம் அழுகிப் புழுத்து விடுகின்றது. அழுகிப் போன மனமும், பட்டினியால் வாடி வதங்கி குன்றிய சரீரமுள்ள ஒரு குழந்தை பள்ளிக் கூடத்தில் எதைக் கற்க முடியும்? வீட்டிலோ தாயும் தந்தையும் ஒருவரை ஒருவர் தூற்றுவதோடு, தங்களுக்குள்ள ஆத்திரத்தில் பள்ளிக்கூட உபாத்தியாயரையும் தூற்றுகிறார்கள். அப்படிப்பட்ட உபாத்தியாயரிடம் அக்குழந்தைக்கு எவ்விதம் மதிப்பும், மரியாதையும் இருக்க முடியும்? அப்படிப்பட்ட குழந்தை 14வது வயதில் பள்ளிக்கூடத்தையும் விட்டு விடுகிறது. அந்நிலையில் அந்த 'எதிர்காலப் பிரஜை'யிடமிருந்து எதை எதிர்பார்க்க முடியும்? அவனுக்கோ அதி பால்யத்திலேயே வாழ்க்கையில் வெறுப்பேற்பட்டு விடுகிறது. அவனது அறியாமையைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. எனவே அப்படிப்பட்டவன் சமூக முன்னேற்றத்திற்கான எந்த ஸ்தானத்தை வகிக்க முடியும்? பெற்றோரிடமிருந்து அவன் கற்றுக்கொண்டுள்ள வாழ்க்கையைத்தான் நடத்த முடியும்? கண்டவிடங்களில் திரிவது, இஷ்டப்பட்ட நேரத்தில் வீட்டிற்கு வருவது, மனமுடைந்து கிடக்கும் தன் தாயையும் தூற்றுவது, இவை போன்ற தீய குணங்கள் அவன் மனதில் படிந்து விடுகின்றன. மற்றும் அவன் ஒழுங்கற்ற காரியங்களில் ஈடுபட்டு, கடவுளையும் உலகையும் வெறுத்து, இறுதியில் சிறைபடவும் நேருகிறது. அப்படிப்பட்ட ஒருவனிடம் தேச பக்தியோ, உற்சாகமோ, உத்வேகமோ சூன்யமாயிருப்பதைக் கண்டு நடுத்தர வகுப்பினர் ஆச்சரியப்படுவதேனோ! போதாக்குறைக்கு நாடகசாலைகள், சினிமாக்கள், சாக்கடைப் பத்திரிகைகள், ஆபாச புத்தகங்கள் முதலியனவும் இளைஞர்களின் மனதைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விடுகின்றன. எனவே அத்தகையோரிடம் ஒழுக்கத்தையோ உயர்ந்த அந்தஸ்தையோ, தேசபக்தியையோ எவ்விதம் எதிர்பார்க்க முடியும்?

ஜனங்களிடையே தேசிய உணர்ச்சி உண்டாக வேண்டுமாயின் முதன்முதலாக ஆரோக்கியமான சமுதாய நிலைமையை ஏற்படுத்த வேண்டும். குடும்பத்திலும் சரி, பள்ளிக்கூடத்திலும் சரி, ஒருவருக்கு கலாச்சார பொருளாதார அறிவும், எல்லாவற்றிலும் முக்கியமாக தன் சொந்த நாட்டின் அரசியல் பெருமையும் போதிக்கப் பெற்றிருக்க வேண்டும். அப்படியானால்தான் அவருக்குத் தன் தேசத்தைப் பற்றி பெருமை உணர்ச்சி ஏற்படுவது சாத்தியமாகும்.

எனக்குப் பிரியமுள்ள ஒன்றைக் குறித்துத்தானே நான் போராட முடியும்? எனக்கு மதிப்புள்ள ஒன்றில்தான் எனக்குப் பிரியமேற்பட முடியும்? ஒன்றில் எனக்கு மதிப்பேற்பட வேண்டுமாயின், அதைப் பற்றி நான் ஓரளவாவது அறிந்து கொண்டிருக்க வேண்டாமா? அவ்வாறாக சமுதாயப் பிரச்னைகளையொட்டி எனக்குச் சிரத்தை ஏற்படவே, புதிய, அதுவரையில் எனக்குத் தெரியாத, ஓர் உலகமானது என் கண்களுக்குப் புலப்பட ஆரம்பித்தது.

2569- 70ல் (1909- 10) என்னுடைய நிலைமை மிகவும் அபிவிருத்தி அடைந்ததால், முன்போல் சரீரப் பிரயாசையின் மூலம் தினசரி ஜீவனத்தை நடத்த வேண்டிய அவசியம் எனக்கு ஏற்படவில்லை. அப்போது சித்திரம் வரைவதன் மூலம் சுயேச்சையாக ஜீவனம் நடத்த முடிந்தது. அப்போதும்கூட ஜீவனத்திற்கு எவ்வளவு அத்தியாவசியமோ அதற்கு மேல் வருமானம் கிடைக்கவில்லை என்றாலும், இயற்கையாகவே அத்தொழிலில் எனக்கு ருசியிருந்ததால் கஷ்டம் தோன்றவில்லை. மற்றும் முன்போல் மிகவும் சோர்ந்து போய் நான் வீட்டிற்கு வருவதில்லை. முன்னர் வேலை செய்துவிட்டு வீட்டிற்கு வந்தவுடன் அப்படியே அயர்ந்து தூங்கி விடுவேன். ஆனால் இப்போதோ வீட்டிற்கு வந்தபின் புத்தகங்களை வாசிக்க நேரமும், ஆர்வமும், உடம்பில் சக்தியுமிருந்தன. தவிர, இப்போது வேலை நேரத்தை என் சௌகரியப்படி மாற்றிக் கொள்ளவும் முடிந்தது. சமுதாயப் பிரச்னையை ஒட்டி நான் நேரில் பெற்ற அனுபவத்துடன் புத்தக அறிவும் எனக்கு ஏற்பட்டது. சமுதாயப் பிரச்னை சம்பந்தமாக எனக்குக் கிடைத்த சகல புத்தகங்களையும் நான் வாசித்து, அவைகளிலுள்ள விஷயங்களையும் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்தேன். அப்போது என்னை ஒரு வினோதப் பேர்வழி என்று பலரும் நினைத்தார்கள். சமுதாயப் பிரச்னையும் சிற்ப ஆராய்ச்சியிலும் எனக்குச் சிரத்தையும், உற்சாகமும் இருந்தன. சங்கீதத்தைப் போல் சிற்பமும் கலைகளுக்கெல்லாம் ராணி என்று கருதினேன். சிற்ப ஆராய்ச்சி எனக்கு ஒரு வேலையாகத் தோன்றவில்லை, பரவசத்தையுண்டாக்கும் ஓர் அனுபவமாகவே தோன்றியது. எனவே சிறிதும் சோர்வின்றி இரவு முழுதும்கூட நான் வாசித்துக் கொண்டிருக்கவும், வரைந்து கொண்டிருக்கவும் முடிந்தது. என் எதிர்காலம் மிகுந்த பிரகாசமடையப் போகிறதென்ற எனது கனவு உண்மையாகும் என்ற நம்பிக்கை நாளுக்கு நாள் அதிகமாகி வந்தது. சிற்பியெனப் பிரசித்தி பெற வேண்டுமென்ற உறுதியும் எனக்கு ஏற்பட்டது.

சிற்ப, சமுதாயப் பிரச்னை ஆராய்ச்சியுடன், அரசியல் சம்பந்தமான விஷயங்களிலும் நான் மிகுந்த சிரத்தை கொண்டேன். யோசனா சக்தியுள்ள ஒவ்வொரு மனிதனும் அரசியலில்

சிரத்தை கொள்ள வேண்டியது ஒரு கடமை என்பதைத் தவிர, வேறெவ்விதத்திலும் நான் அதை அதிக முக்கியமாகக் கருதவில்லை. தம்மைச் சுற்றியுள்ள அரசியல் உலகை அறிந்து கொள்ளாதவருக்கு, பிறரைக் கண்டிப்பதற்கோ அல்லது குறை கூறுவதற்கோ உரிமையில்லை அல்லவா? எனவே அரசியல் பிரச்னைகளையும் நான் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்ய முற்பட்டேன்.

புத்தகத்தின் முதல் வரியிலிருந்து 'முற்றிற்று' என்பது வரை இடைவிடாது புத்தகங்கள் வாசிப்போரை நான் அறிவேன். ஆனால் நான் அவர்களை "நன்கு படித்தவர்கள்" என்று கூறமாட்டேன். ஏனெனில் அத்தகையோர் தாங்கள் படிக்கும் விஷயங்களை நல்லவையென்றும் கெட்டவையென்றும் பிரித்து, நல்லவைகளை மாத்திரம் ஏற்றுக்கொண்டு மற்றவைகளை மறந்து விடுவதில்லை. எல்லாவற்றையும் மனதில் வைத்துக்கொண்டு மூளையைக் குழப்பிக் கொள்வார்கள். நல்லவைகளை மறந்துவிட்டுக் கெட்டவைகளை மாத்திரம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளும் பிரகிருதிகளும் உண்டு. தங்களுக்குள்ள திறமையையும் அறிவையும் அபிவிருத்தி செய்து கொள்வதே, புத்தகங்களைப் படிப்பதன் முக்கிய நோக்கம். உங்கள் ஜீவனத்திற்கோ அல்லது மானிட வாழ்க்கையின் உயர்ந்த அபிலாஷைகளைப் பூர்த்தி செய்வதற்கோ அவசியமான சாதனங்களை ஒவ்வொருவரும் புத்தகப் படிப்பின் மூலம் பெறுகின்றார்கள். படிப்பதன் முதல் நோக்கம் அதுதான். இரண்டாவது நோக்கமென்னவெனில், நாம் வாழும் உலகத்தைப் பற்றிய பொது அறிவைப் பெறுவதே. எனினும் படித்தவைகளை அத்தியாயம், அத்தியாயமாக செங்கல்களைப் போல் மனதில் அடுக்கி வைத்துக் கொண்டிருப்பதால் எவ்வித பலனுமேற்படாது. படித்து மனதில் பதிய வைத்துள்ள பல்வேறு விஷயங்களையும் பிரயோஜனகரமான முறையில் ஒன்று சேர்த்து ஓர் அறிவு மாளிகையாக நிர்மாணிக்க வேண்டும். இல்லாவிடில், தாங்கள் அதிகமாகப் படித்துள்ளோமென்ற வீண் கர்வத்தைத் தவிர வேறெவ்வித பலனுமேற்படாது. இறுதியில் அத்தகையோர் ஒரு நோயாளியாகவோ அல்லது அரசியலில் கலந்து ஒரு பார்லிமெண்டு அங்கத்தினராகவோ தங்கள் வாழ்க்கையை முடிக்க வேண்டியதைத் தவிர வேறு வழியிராமற் போய்விடும். அத்தகையோர் தங்களுடைய அறிவை, உற்ற சந்தர்ப்பம் வாய்க்கும்போது, பிரயோஜனகரமான முறையில் உபயோகப்படுத்துவதென்பது முடியாத காரியம். ஏனெனில், தினசரி வாழ்க்கையிலேற்படக் கூடிய நிலைமையைச் சமாளிக்கக் கூடியவாறு அவர்களுடைய மனமானது பக்குவமடைவதில்லை. அவர்கள் மனம் குழம்பிக் கிடப்பதால் ஒரு குறிப்பிட்ட நிலைமையைச் சமாளிக்க நேர் விபரீதமான முறைகளையும்

கைக்கொண்டு விடுவார்கள். சர்க்காரில் உயர்ந்த ஸ்தானங்கள் வகிக்கும் நமது பார்லிமெண்டரி 'வீரர்'களின் அரசியல் தடுமாற்றங்களே அதற்கு உதாரணம்.

வாசிக்கும் கலையை நன்கு அறிந்து கொண்டிருப்பவர்கள் ஒரு புத்தகத்தையோ அல்லது ஒரு பத்திரிகையையோ வாசித்தால், அதில் எதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியமென்பதை உடனே பகுத்துணர்ந்து கொள்வார்கள். அதைக் கொண்டு அவர்கள், வாழ்க்கையில் ஏற்படும் பல்வேறு பிரச்னைகளையும் சுலபமாகச் சமாளிக்கும் ஆற்றல் பெற்றிருப்பார்கள். அப்படியானால்தான் படிப்பின் மூலம் பலனேற்பட முடியும்.

உதாரணமாக ஒரு பிரசங்கி, தாம் பேசப் போகும் விஷயம் பற்றிய சகல தகவல்களையும் நன்கு அறிந்து கொண்டிருக்க வேண்டும். இல்லாவிடில் தன் அபிப்பிராயங்களை ஆட்சேபிக்கும் எதிரியைச் சமாளித்து சமாதானப்படுத்த முடியாது. மற்றும் தம்முடைய அபிப்பிராயங்கள் நியாயமானவையாக இருப்பினும்கூட சரியான வாதங்களுடன் அவைகளை ஸ்தாபிக்கவும் எதிரியின் ஆட்சேபங்களைத் தகர்க்கவும் முடியாது.

இளமையிலிருந்தே நான் சரியான முறையில் புத்தகங்களை வாசித்து வந்தேன். அதிர்ஷ்டவசமாக நல்ல ஞாபக சக்தியும், புத்திக் கூர்மையும் எனக்கு உதவியாக இருந்தன. அவ்வளவில் நான் வியன்னாவுக்குச் சென்றது மிகப் பிரயோஜனகரமானதே. மற்றும் தினசரி வாழ்க்கையில் நான் பெற்ற அனுபவங்கள், வெவ்வேறான பல்வேறு பிரச்னைகளையும் இடைவிடாது ஆராய்ச்சி செய்வதற்குற்ற ஒரு தூண்டுகோலாக அமைந்தன. அவ்விதமாக புத்தக அறிவைக் கொண்டு பிரத்தியக்ஷ அனுபவங்களையும், பிரத்தியக்ஷ அனுபவங்களைக் கொண்டு புத்தக அறிவையும் ஒப்பிட்டுப் பார்க்க எனக்குச் சாத்தியமாயிற்று.

அபேதவாத ஜனநாயகக் கொள்கை பற்றி அப்போது எனக்கு அதிகமெதுவும் தெரியாது. இருந்தாலும் அக்கொள்கையால் ஹாப்ஸ்பர்க் ஆட்சியின் பலம் குறையலாமென்று மாத்திரம் என் அறிவிற்குத் தோன்றியது. ஒரு கோடி ஜனங்களிடையேயுள்ள ஜெர்மன் மணத்தையே ஒழிக்கக் கங்கணம் கட்டிக் கொண்ட அந்த ஆட்சி முறையை நான் அறவே வெறுத்தேன். ஹாப்ஸ்பர்க் சாம்ராஜ்யம் ஒழிந்தால்தான் ஜெர்மன் ஆஸ்திரிய ஜனங்கள் விடுதலைப் பெற்று மீண்டும் தாய் நாட்டுடன் ஐக்கியமடைவது சாத்தியமென்பதையும் திட்டமாக அறிந்தேன். அதனால்தான் அபேதவாத ஜனநாயக வாதிகளின் கொள்கையில் எனக்கு வெறுப்பேற்படவில்லை. என் அறியாமை காரணமாக, தொழிலாளர்களின் அந்தஸ்தை உயர்த்துவதே அதன்

நோக்கமென்பதை அப்போது நான் மடத்தனமாக நம்பினேன். அக்கொள்கையை நான் எதிர்க்காததற்கு அந்த நம்பிக்கையும் ஒரு காரணம். எனினும் ஆஸ்திரியாவில் ஜெர்மன் தேசியக் கொள்கையைப் பாதுகாப்பதற்கான போராட்டத்தை அபேதவாத ஜனநாயக வாதிகள் எதிர்த்தனர். ஜெர்மனிக்கு விரோதிகளான ஸ்லேவியா "தோழர்"களுடன் நட்புக் கொண்டாடினர். அப்போது எனக்கு 17 வயது. மார்க்ஸ் கொள்கை பற்றி எனக்கு அவ்வயதில் எதுவுமே தெரியாது. அபேதவாத ஜனநாயகம், 'அபேதவாதம்' இரண்டும் ஒன்றுதானென்றும் நினைத்து வந்தேன். ஆனால், விதியின் முரட்டுக் கையினால் திடீரென ஓங்கி ஓர் அடி வாங்கியதன் பயனாக, என் கண்கள் திறக்கப்பட்டன. பொது ஜனங்களை வஞ்சிப்பதற்கான அந்த 'ஒப்பற்ற' முறையின் தன்மையை அப்போதுதான் அறிந்தேன். அதுதான், அவ்வியக்கத்திலிருந்து என்னை விலகும்படி செய்தது.

அப்போது நான் அபேதவாத ஜனநாயகக் கட்சியில் தீவிர பங்கெடுத்துக் கொள்ளவில்லை. அக்கட்சியின் கூட்டங்களுக்கு மாத்திரம் நான் செல்லுவது வழக்கம். எனினும் நல்ல வேளையாக சில மாதங்களில் அதன் சுயரூபத்தை அறிந்துகொள்ளும் சந்தர்ப்பம் எனக்கேற்பட்டது. 'சமுதாய தர்மம்', 'அண்டை வீட்டுக்காரனிடம் அன்பு" - என்ற போர்வைகளின் கீழ் அபேதவாத ஜனநாயகக் கொள்ளை நோயானது பரவி வருகிறதென்பதையும் தாமதமின்றி அதை அறவே களைந்தாலன்றி அது மானிட வர்க்கத்தையே வேரறுத்து விடுமென்பதையும் உணர்ந்து கொண்டேன்.

கட்டிடத் தொழிலில் நான் வேலை செய்து கொண்டிருந்த போதுதான் எனக்கும் அபதேவாத ஜனநாயக வாதிகளுக்கும் தொடர்பு ஏற்பட்டது. பட்டினி கிடக்காமல் எனது படிப்பைத் தொடர்ந்து செல்லவே நான் அவ்வேலையில் ஈடுபட்டேன். அதே தொழிலிலிருந்த என் சகாக்கள் தொழிலாளர் சங்கத்தில் சேரும்படி எனக்குக் கட்டளையிட்டார்கள். தொழிலாளர் சங்கங்கள் பற்றி அப்போது எனக்கு ஒன்றுமே தெரியாது. அவைகளால் பலனுண்டா, இல்லையா என்பது பற்றி ஒரு முடிவிற்கு வரவும் எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. எனவே நான் அச்சங்கத்தில் சேர மறுத்துவிட்டேன். அதைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாதென்றும், தவிர வற்புறுத்தலுக்காக எதற்கும் நான் இணங்கி விட மாட்டேனென்றும் என் சகாக்களிடம் கூறினேன். இருந்தாலும் சில நாட்கள் சென்றால் என் அபிப்பிராயம் மாறி, நான் வழிக்கு வந்துவிடுவேனென்று அவர்கள் நினைத்தனர் போலும்.

இரண்டு வாரங்கள் சென்றன. நாள் செல்லச் செல்ல, அதில் நான் சேருவதென்பது சிறிதும் சாத்தியமானதாகத் தோன்றவில்லை. அந்த 14 நாட்களில் என் சகாக்களை நான் இன்னும் நன்கு அறிந்து

கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்தது. அவர்களின் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. எனவே அப்படிப்பட்டவர்கள் பிரதிநிதிகளாக இருக்கும் ஒரு ஸ்தாபனத்தில் நான் எவ்விதம் சேர முடியும்?

என் சகபாடிகளில் சிலர் மத்தியானச் சாப்பாட்டிற்காக சமீபத்திலுள்ள ஒரு விடுதிக்குச் செல்லுவது வழக்கம். நான் எனது ரொட்டியையும், பாலையும் சாப்பிட்டபின், சுற்றியுள்ள நிலைமையைக் கவனித்து வருவேன். அவர்கள் விவாகமானவர்கள். அவர்களுடைய மனைவிமார், ஏழ்மை காரணமாக உடைந்த பழைய பாத்திரங்களில் அவர்களுக்கு உணவு கொண்டு வருவர். அப்போது அத்தோழர்கள் அரசியல் பற்றிப் பேசுவார்கள். நானும் அதைக் கேட்க வேண்டுமென்பதற்காகவே பேசுவார்கள் ஏனெனில் என் தீர்மானத்தை மாற்றிக்கொண்டு நான் தொழிலாளர் சங்கத்தில் சேரவேண்டுமென்பது அவர்களுடைய ஆர்வம். அவர்கள் பேசுவதெல்லாம் எனக்கு மிகுந்த வெறுப்பையே உண்டு பண்ணின. எதையும் இகழ்ந்து பேசுவதுதான் அவர்களுக்கு வேலை. 'தேசம்' என்பது முதலாளி வர்க்கம் கண்டுபிடித்த ஒரு வார்த்தை - 'தாயகம்' என்ற தளுக்கு வார்த்தை, தொழிலாளர்களைச் சுரண்டுவதற்காக நடுத்தர வகுப்பினர் கைக்கொண்டுள்ள ஒரு கருவி - 'சட்ட அதிகாரம்' என்பது ஜனங்களை அடக்கி வைப்பதற்கான ஒரு முறை - ஜனங்களை மயக்கி அவர்களைச் சுரண்டவே 'மதம்' கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது - 'ஒழுக்க'மென்பது, ஆடுகள் போல் விரட்டுமிடத்திற்கு மடத்தனமாக ஓடும் சாதுத்தனத்தின் பட்டயம் - இப்படி எல்லாம் அவர்கள் விபரீத வியாக்கியானம் செய்துகொண்டே போவார்கள். இவ்விதம் அவர்கள் இகழாத தொன்றுமேயில்லை!

ஆரம்பத்தில் நான் அவர்கள் கூறுவதற்கெல்லாம் எதுவும் சொல்லாது மௌனமாக இருந்து வந்தேன். ஆனால் அதிக காலம் அவ்விதமிருக்க முடியவில்லை. அவர்களுடைய கூற்றுகளுக்குப் பதில் கூறவும் ஆரம்பித்தேன். அப்படியும் பலனில்லை. அப்பிரச்னையை யொட்டிய விவரங்களை நன்கு அறிந்து கொள்வதற்காக நான் ஏராளமான புத்தகங்களையும், துண்டுப் பிரசுரங்களையும் கரைத்துக் குடிக்க முற்பட்டேன். அவர்களுக்கும் எனக்கும் அடிக்கடி நாங்கள் வேலை செய்யும் கட்டிடத்தில் விவாதம் நடந்து வந்தது. ஒருநாள் அவர்கள் விவாதத்தை விடுத்து மிரட்டலிலும், பலாத்காரத்திலும் இறங்கினார்கள். நான் கட்டிடத்தை விட்டு வெளியேறிவிட வேண்டுமென்றும், இல்லாவிடில் என்னைப் பிடித்துத் தள்ளுவதாயும் அவர்களில் சில "வீரர்கள்" ஆர்ப்பாட்டம் செய்தனர். நான் தனிமையாக இருந்ததால், பேசாமல் வெளியேறி விடுவதுதான் சரியென நினைத்து,

அவ்விதமே மிகுந்த வெறுப்புடன் வெளியேறி விட்டேன். அதுவும் எனக்கு சரியான ஓர் அனுபவம்தான். எனினும் அச்சம்பவத்தை மறந்துவிடவும் என்னால் முடியவில்லை. அந்த அனுபவம் காரணமாக என் மனம் துடித்தது. பின்னர் அவ்விஷயமாக என் கோபம் தணிந்ததெனினும், பிடிவாத உணர்ச்சி பெருகியது. என்ன நேர்ந்தாலும் மீண்டும் அதே வேலைக்கே செல்லுவதெனத் தீர்மானித்தேன். நான் சேமித்து வைத்திருந்த அற்பத் தொகையும் சில வாரங்களில் கரைந்து, பசிப்பிணியின் இரக்கமற்ற கைகளில் நான் அகப்பட்டுக் கொண்டதால், மீண்டும் வேலைக்குச் செல்ல வேண்டுமென்ற எண்ணம் என் மனதில் பலமடைந்தது. எனவே மறுபடியும் அவ்வேலைக்குச் சென்றேன். ஆயினுமென்ன? மீண்டும் அதே காரணத்தினால் வேலையை விடும்படி நேர்ந்தது.

அப்போதுதான் என் மனதில் கீழ்க்கண்ட ஒரு கேள்வி எழுந்தது: இவர்கள் ஒரு மகத்தான தேசத்தைச் சேர்ந்திருக்க லாயக்குள்ளவர்களா? 'ஆம்' என்றால், அத்தகைய ஒழுங்கற்ற ஒரு காலிக் கூட்டத்திற்காக தேசத்திலுள்ள சிறந்த வீரர்கள் மகத்தான கஷ்டங்களுக்குள்ளாவதும், தியாகம் செய்வதும் வியர்த்தமாகவே முடியும்; 'இல்லை' என்றால் பின்னர் நம் தேசத்தில் சிறந்தவர்களில்லை என்றே ஏற்படும்.

அப்போது எனக்குண்டான மனோ வேதனைக்கு எல்லை யில்லை. அந்நிலைமையை நான் ஆழ்ந்து யோசித்தபோது, இடைவிடாது பெருகிக் கொண்டிருக்கும் ஜனத்திரள் என் கண் முன் தோன்றியது. ஆனால் அவர்களை எல்லாம் தங்கள் சொந்த தேசத்தைச் சேர்ந்தவர்களெனக் கூற முடியாது. எனினும் சில நாட்களுக்குப் பின் வியன்னாவில் தொழிலாளர்களடங்கிய ஒரு பிரமாண்டமான ஊர்வலம் சென்றபோது என் உணர்ச்சி வேறுவிதமாக இருந்தது. அந்த ராக்ஷஸ ஊர்வலத்தை நான் பார்த்துக் கொண்டே இரண்டு மணி நேரம் ஸ்தம்பித்து நின்று விட்டேன். அங்கிருந்த என் ஜாகைக்குச் சென்றபோது என் மனதில் கலக்கமும், சோர்வும், வேதனையும் ஏற்பட்டன. வழியிலிருந்த ஒரு சுருட்டுக் கடையில் தொழிலாளர் பத்திரிகை ஒன்று வைக்கப்பட்டிருந்தது. பழைய ஆஸ்திரிய அபேதவாத ஜனநாயக இயக்கத்தின் முக்கிய பத்திரிகை அதுதான். அந்த உருப்படாப் பத்திரிகையை அதற்குமுன் நான் மேலெழுந்த வாரியாக ஒன்றிரண்டு நிமிஷங்கள் பார்ப்பதைத் தவிர ஆழ்ந்து வாசிப்பது கிடையாது. ஏனெனில் அதன் தொனி என் மனதிற்கு விஷம் போலிருந்தது. எனினும் அன்று அந்த ஊர்வலத்தைப் பார்த்ததன் விளைவாக மிகவும் மனச்சோர்வு ஏற்பட்டி ருந்ததாலும், அதை முழுதும் வாசிக்க வேண்டுமென என் அந்த ராத்மா என்னை வற்புறுத்தியதாலும், அப்பத்திரிகையின் முழு

பிரதியை வாங்கிக் கொண்டு வீட்டிற்கு வந்து, மாலை முழுதும் அதையே வாசித்துக் கொண்டிருந்தேன். அப்பத்திரிகை முழுதும் பொய்க் கூற்றுகளே நிறைந்திருந்தனவாதலால் அதை வாசிக்க வாசிக்க எனக்கு ஆத்திரம் பொங்கியது.

அபேதவாத ஜனநாயக இயக்க சம்பந்தமான நூல்களில் அதன் சுயரூபம் நன்கு தெரியவில்லை. மிகவும் அழகான தடபுடலான அடைமொழிகளாலும், 'சுதந்திரம், "மானிட வாழ்க்கையின் உயர்வு," எழில் போன்ற மினுக்கு வார்த்தைகளாலும் வாசகர்களை மயக்கக் கூடிய விதத்தில் அதன் சுயரூபம் மறைக்கப்பட்டிருந்தது. அந்நூல்கள் கல்வியறிவுள்ள நடுத்தர வகுப்பினருக்காகவும், உயர்தர வகுப்பினருக்காகவும் எழுதப்பட்டவை. ஆனால் பத்திரிகைகளோ பாமர ஜனங்களுக்காக வெளியிடப்பட்டன. எனவே அவைகளில்தான் அபேதவாத ஜனநாயக இயக்கத்தின் பித்தலாட்டமும், போலித்தனமும் பட்டவர்த்தனமாகத் துலங்கின. உண்மைகளைத் திரித்து ஜனங்களை மயக்குவதில் அப்பத்திரிகாசிரியர்கள் நிபுணர்களாயிருந்தார்கள். அவர்கள் எதற்கும் துணிந்தவர்கள், எவ்வித இழிவான முறையையும் கைக்கொள்ளத் தயங்காதவர்கள், உண்மைகளைத் திரித்துக் கூறும் கலையிலும், விகார ரூபத்தை மோகனாகாரமாகச் சித்தரிப்பதிலும் பலே சூரர்கள். அப்பத்திரிகைகளையும் நூல்களையும் நான் ஆழ்ந்து வாசித்தேன். அக்கட்சியினரின் உபதேசங்களையும் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்தேன். அதன் பயனாக என் சொந்த ஜனங்களின் மீது எனக்குள்ள அன்பானது மீண்டும் பொங்கியெழுந்தது. ஜனங்களை மயக்கி வஞ்சிப்பதற்காக அத்தகைய பிரமாதமான ஒரு திட்டம் வகுக்கப்பட்டு அமுல் நடந்து வருகையில், அதற்கிரையாகும் ஜனங்களைக் கடிந்து கொள்வது மடத்தனமாகுமென்பதை உணர்ந்தேன். எனவே அவர்கள் மீது எனக்கு முதலில் ஏற்பட்ட வெறுப்பானது பிரமாத அன்பாக மாறியது.

தாராளமான போக்கைக் காட்டிலும், இரக்கமற்ற பலாத்காரத்திற்கு ஜனங்கள் ஆட்சேபனையின்றி அடிபணிவது இயற்கை சுபாவம். ஒரு பெண் பலவீனமான ஒருவனை ஆக்கிரமித்து அட்டகாசம் செய்வதைக் காட்டிலும், பலசாலியான ஒருவனுக்குத் தலை வணங்குவதையே விரும்புவாள். அதுபோல் உறுதியும், விடாப்பிடியும் இரக்கமற்ற பலாத்காரமும், காட்டுமிராண்டித்தனமும் எப்போதுமே ஜனங்களைப் பசுப்போல் பணியும்படி செய்துவிடும். எனினும் அம்முறைகளை ஆதாரமாகக் கொண்ட அபேதவாத ஜனநாயகத்தை, சத்திய உபதேசத்தை ஆதாரமாகக் கொண்ட ஓர் இயக்கத்தினால் எதிர்க்கும் பட்சத்தில், போராட்டம் மகா உக்கிரமாக இருந்தாலும்கூட, இறுதியில் சத்திய உபதேசமே வெற்றியடையும்.

ஆனால் அவ்வுபதேசத்தைச் சிறிதும் தயவு தாட்சண்யமின்றி அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர வேண்டும்.

இரண்டு வருஷ காலத்திற்குள் அபேதவாத ஜனநாயக இயக்க முறைகளை நான் தெளிவாக அறிந்து கொண்டுவிட்டேன். அபேதவாதிகளின் மூலாதாரமான ஆயுதமென்னவெனில் பொய்க்கூற்றுகளும், அபாண்டமான அவதூறுகளும்தான். மிகவும் பலம் பொருந்திய தங்கள் எதிரிகளை வீழ்த்த அவர்கள் அவ்வாயுதங்களையே உபயோகித்தார்கள். அவர்கள்தான் அமைதியைப் பாதுகாப்பவர்களென்ற எண்ணம் ஜனங்கள் மனதில் உண்டாகும்படி செய்வதில் அக்கோஷ்டியினர் சமர்த்தர்கள். தங்களுடைய இறுதியான லட்சியம் பூர்த்தியடைய அவர்கள் எத்தகைய முறைகளையும் கைக்கொள்ள தயங்குவதில்லை. மானிடரின் இயற்கையான பலவீனத்தை அவர்கள் நன்கு அறிந்து, அதற்குத் தகுந்த முறைகளை மிகவும் கணக்காகக் கையாளுவார்கள். எனவே அத்தகைய சூழ்ச்சியை எதிர்ப்பவர்களும் அதுபோன்ற சூழ்ச்சியையே கைக்கொள்ள வேண்டுமல்லவா? விஷப்புகையை விஷப்புகையினாலேயே எதிர்த்துச் சமாளிப்பதை எதிர்க்கட்சியினரும் அறிந்துகொண்டிருக்க வேண்டும். தாங்கள் வெற்றிபெற அபேதவாத ஜனநாயகவாதிகள் மிகவும் தந்திரமாக பலாத்காரத்தையும் மிரட்டலையும் உபயோகித்து வந்தார்கள். அதற்குப் பயந்து அடிபணிந்த ஜனங்கள் விஷயத்தில் நான் மிகவும் அனுதாபம் கொண்டேன். அதனால் அவர்கள் மீது எனக்கு அதிக அன்பு ஏற்பட்டதுடன், போலித் தலைவர்கள் யார் என்பதையும் அவர்களால் துன்பத்திற்குள்ளாவோரையும் என்னால் நன்கு அறிந்து கொள்ள முடிந்தது. போலித் தலைவர்கள் செய்யும் காரியத்திற்காக எல்லோரையும் வெறுப்பது எவ்விதம் நியாயமாகும்?

பலர் அபேதவாத ஜனநாயக மாய வலையில் வீழ்ச்சியடைந் தார்களெனினும், அவர்களிடையே தியாக உணர்ச்சியும் தங்கள் சகோதரர்களிடம் அன்பும், சிநேகபாவமும் அடியோடு மறைந்துவிடவில்லை. அக்கட்சியினர், தாங்கள் தொழிலாளர் களுக்குத் தொண்டு செய்வதாகப் பசப்பி வந்ததாலும், வேறெவரும் தொழிலாளர்கள் விஷயத்தில் சிரத்தையெடுத்துக்கொள்ளாததாலும் அவர்கள் அக்கட்சியிடம் பணியும்படி நேர்ந்தது. முதலில் அவர்களுக்கு விருப்பமில்லை என்றாலும், வறுமை காரணமாக இறுதியில் அவர்கள் அக்கட்சியில் சேரும்படியாயிற்று. அதற்கு நடுத்தர வகுப்பினரின் விபரீதப் போக்கே காரணம். ஏனெனில் தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளையும் அவர்கள் அங்கீகரிப்பதில்லை, தொழிலாளர்களின் அபிவிருத்திக்கான எம்முறையையும் எடுத்துக் கொள்வதில்லை. தொழிற்சாலைகளில்

விபத்திற்குள்ளானவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்க மறுப்பது, குழந்தைகளை வேலைக்கு எடுத்துக் கொண்டு அவர்களை வாட்டுவது, கர்ப்பஸ்திரீகளுக்குப் பாதுகாப்பு முறைகளைக் கைக்கொள்ள மறுப்பது இவை போன்ற மடத்தனமான காரியங்களே, காளான்களும் சந்தர்ப்பவாதிகளுமான அபேதவாத ஜனநாயகவாதிகளிடம் சரணடையும்படி தொழிலாளர்களை நிர்ப்பந்தப்படுத்தின. அச்சந்தர்ப்பத்தை அபேதவாத ஜனநாயகக் கட்சியினரும் தங்களுக்குச் சாதகமாக உபயோகித்துக் கொண்டனர். அதன் காரணமாக தொழிலாளர்கள் தங்கள் சங்கத்தின் மூலாதார நோக்கத்தைக் கைவிட்டு அரசியலில் பங்கெடுத்துக் கொள்ள ஆரம்பித்தனர். அதிலிருந்து தொழிலாளர் சங்கங்கள், அபேதவாத ஜனநாயகக் கட்சிக்கு ஆள் சேர்க்குமிடமாக மாறின.

என்னைச் சுற்றியுள்ள சமுதாய நிலைமைகளை நான் ஆராய்ந்து வருகையில், தொழிலாளர் சங்க விஷயத்தில் எனது நிலைமை என்ன என்பதை - நான் விரும்பினும் விரும்பாவிடினும் - நிர்ணயிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. தொழிலாளர் சங்கமும், அபேதவாத ஜனநாயகக் கட்சியும் பிரிக்க முடியாத ஸ்தாபனங்களென நான் நினைத்ததாலேயே, தொழிலாளர் சங்கத்தில் சேர முதலில் விரும்பவில்லை. எனினும், பின்னர் நான் ஒரு முக்கிய விஷயத்தைத் தெரிந்துகொண்டேன். அப்போது எனக்கு வயது 20. தொழிலாளர்களின் சமுதாய உரிமைகளுக்காகவும், அவர்களின் வாழ்க்கை நிலைமை அபிவிருத்தியடைவதற்காகவும் போராடி வரும் தொழிலாளர் சங்கத்திற்கும், வகுப்புப் போராட்டத்தில் அபேதவாத ஜனநாயகக் கட்சியால் ஓர் அரசியல் கருவியாக உபயோகிக்கப்பட்டு வரும் தொழிலாளர் சங்கத்திற்கும் வேற்றுமையுண்டென்பதே நான் அறிந்துகொண்ட விஷயம்.

தொழிலாளர் சங்கத்தின் முக்கியத்துவத்தை அபேதவாத ஜனநாயக வாதிகள் நன்கு அறிந்து கொண்டிருந்தனர். அவர்கள் அச்சங்கத்தை ஒரு கருவியாக உபயோகித்து வருவதில் வெற்றியும் பெற்றனர். ஆனால் நடுத்தர வகுப்பினரோ அதன் முக்கியத்துவத்தை உணர்ந்து கொள்ளத் தவறியதால், அவர்களுடைய அரசியல் செல்வாக்கு இருந்தவிடம் தெரியாமல் மறைந்தது.

தொழிலாளர் சங்க இயக்கம் தேசத்திற்கு விரோதமானதென்று கூறுவது மடத்தனமும், பொய்க் கூற்றுமாகும். தொழிலாளர் சங்கம் அத்தியாவசியமா என்பதும் அர்த்தமற்ற ஒரு கேள்வி. முதலாளிகள் சமுதாய உரிமைகளை நன்கு அறிந்து கொள்ளாது, அநீதியாகவும், நேர்மையற்றும் நடந்து கொள்ளும் வரையில், தொழிலாளர்கள் முதலாளிகளால் தங்களுடைய உரிமைகளுக்கு ஆபத்தேற்படாமல்

பாதுகாத்துக் கொள்ள கடமைப்பட்டிருக்கிறார்கள். தொழிலாளர் சமூகம் ஜனசமுதாயத்தின் ஒரு முக்கிய உறுப்பானதால், தொழிலாளர்களின் உரிமைகள் பாதுகாக்கப்படுவது பொதுஜன க்ஷேமத்தின் ஓர் அம்சமே. ஒரு தனி நபரின் பேராசை அல்லது நேர்மையின்மையால் பொது நலன்களுக்குப் பாதகமேற்படாமல் பாதுகாக்க வேண்டுமல்லவா? பொதுஜன சுகாதாரத்திற்குத் தீங்கு நேராமல் பாதுகாக்க வேண்டியது தேச க்ஷேமத்திற்கு எவ்வளவு அவசியமோ, அதுபோல் சமுதாயத்தில் ஜனங்களின் நம்பிக்கையும், விசுவாஸமும் குன்றாமல் பாதுகாக்க வேண்டியதும் அவசியம். யோக்கியப் பொறுப்பற்ற முதலாளிகளின் பேராசையும், பொறுப்பற்ற தன்மையும்தான் எதிர்காலத் தகராறுகளுக்கு விதைகள். எனவே தேச க்ஷேமத்தில் கருத்துள்ளவர்கள் அவ்விதைகள் முளைவிடாமலே தடுத்தே தீரவேண்டும்.

ஒரு முதலாளியினால் அநீதியாக நடத்தப்படும் அல்லது நடத்தப்படுவதாகக் கருதும் ஒரு தொழிலாளி, அந்த முதலாளியிட மிருந்து விலகிக் கொள்வதன் மூலம் கஷ்டத்திலிருந்து விடுபடலாமே என்று கூறிவிடக் கூடாது. ஏனெனில் அக்கூற்று முக்கியப் பிரச்னையை மழுப்பும் ஓர் ஏய்க்கும் வித்தையாகும். சமுதாயக் கிளர்ச்சிக்கான காரணங்களை அகற்றுவது தேசத்தின் நலனுக்கு உகந்ததா, அல்லவா என்பதே கேள்வி. உகந்ததென்றால், பின்னர் அத்துறையில் வெற்றியளிக்கக் கூடிய ஆயுதங்களை உபயோகித்துப் போராடியே தீரவேண்டும். தனி ஹோதாவில் ஒரு தொழிலாளி பெரிய முதலாளியின் சக்தியை எதிர்த்து நிற்பதென்பது முடியாத காரியம். அத்தகைய சந்தர்ப்பங்களில் எது நியாயம் என்ற கேள்வி எழுவதில்லை; யார் பலசாலி, ஒரு கை பார்த்து விடுவோமென்ற நிலைமை ஏற்பட்டு விடுகின்றது! நியாயத்தை ஆதாரமாகக் கொண்டு காரியம் நடக்குமாயின், அத்தகைய தகராறுகளுக்கே இடமிராது. அதனால்தான் நியாய புத்தியற்ற முதலாளிகளின் விபரீதங்களைத் தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து கட்டுக்கோப்பாக எதிர்க்க வேண்டியது அவசியமாகின்றது. அத்தகைய சந்தர்ப்பங்களில்தான் தொழிலாளர் சங்கம் அவர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கிறது. மற்றும் சங்கங்கள் தொழிலாளர்களுக்கு சமுதாயப் பொறுப்பு உணர்ச்சியையும் உண்டுபண்ணுகின்றன. ஆனால் அபேதவாத ஜனநாயக வாதிகள் தொழிலாளர்கள் சங்கத்தின் மூலாதார நோக்கத்தைப் புறக்கணித்து, அதைத் தங்களுடைய அரசியல் சதுரங்கங்களில் வெற்றி பெறுவதற்கான ஒரு கருவியாக உபயோகப்படுத்திக் கொண்டனர். அதன் விளைவாக மானிட உரிமைகளைப் பாதுகாக்க வேண்டிய அச் சங்கத்தை, தேசீயப் பொருளாதார அமைப்பை அழிப்பதற்கான ஒரு கருவியாக அபேதவாத ஜனநாயக நிபுணர்கள் மாற்றிவிட்டனர்.

பொருளாதார அமைப்பைச் சீர்குலைத்துவிட்டால், பின்னர் தேசத்தைச் சீர்குலைப்பது சுலபமென்பது அவர்களுடைய கருத்து. அஸ்திவாரத்தைத் தகர்த்துவிட்டால் கட்டிடத்தின் கதி என்னவாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அபேதவாத ஜனநாயகவாதிகளோ யாதொரு எதிர்ப்புமின்றி தங்கள் சூழ்ச்சிகளைத் தொடர்ந்து அனுஷ்டித்து வந்தனர். பொருளாதாரப் பிரச்னைகளையொட்டி அவர்கள் விடுத்த அறிக்கைகள் ஆதாரமற்ற வெறும் பொய்க்கூற்றுகளாக இருந்தன. அரசியல் விஷயங்களிலும் அவர்களுக்கு அந்தரங்க சுத்தியில்லை. எனவே அவர்களின் நோக்கங்களை அவர்களுடைய அறிக்கைகளிலிருந்தோ அல்லது வெளித்தோற்றங்களிலிருந்தோ அறிந்துகொள்வது சாத்தியமானதாகத் தோன்றவில்லை. அவர்களின் குதர்க்கவாத முறைகள் எனக்கு மிகுந்த அறுவருப்பை உண்டுபண்ணின. மற்றும் அக்கட்சியினரின் அலங்கார வார்த்தைகளிலும், ஒன்றும் புரியாத அடைமொழிகளிலும் அற்புதக் கருத்துகள் பொதிந்து கிடப்பதுபோல் தோன்றினவென்றாலும் உண்மையில் அவை அர்த்தசூன்யமான வாக்கியங்களாகவே இருந்தன. இதன் மத்தியில், நாசகரமான அவர்களின் உபதேசத்திற்கும் ஒரு குறிப்பிட்ட ஜன சமூகத்தின் குணங்களுக்குமுள்ள சம்பந்தத்தை நான் கண்டுபிடித்தேன். அவர்களைப் பற்றி அதற்கு முன் எனக்கு ஒன்றுமே தெரியாது. அப்பிரிவினரைப் பற்றி நன்கு அறிந்தவர்களுக்கு அபேதவாத ஜனநாயக இயக்கத்தின் போக்கையும், உண்மையான நோக்கங்களையும் தெரிந்து கொள்வது வெகு சுலபம். யூதர் சமூகத்தை அறிந்தவருக்கு அபேதவாத ஜனநாயகத்தை மறைத்துக் கொண்டிருக்கும் திரை விலகி, அதன் உண்மையான ரூபம் தெரிந்து விடும். அலங்காரச் சொற்களாகிய மூடுபனியால் மறைக்கப்பட்டிருக்கும் மார்க்ஸ் வாதத்தின் விகார ரூபம் அப்போதுதான் பட்டவர்த்தனமாகத் தெரியும்.

'யூதர்' என்ற வார்த்தையானது என் மனதில் ஒரு குறிப்பிட்ட எண்ணத்தை முதன்முதலாக எப்போது உண்டுபண்ணியது என்பதை இன்று நான் கூறுவது முடியாத காரியம். என் தந்தையின் ஆயுள் காலத்தில் நான் அந்த வார்த்தையை வீட்டில் காதால் கேட்டதாகக் கூட ஞாபகமில்லை. இழிவான தோரணையில் அப்பெயரைக் குறிப்பிட்டிருந்தால், அவ்விதம் குறிப்பிடுவோர் கல்வியறிவற்ற பிற்போக்காளர்களென்று என் தந்தை கருதியிருப்பார். ஏனெனில் அவர் சமரச நோக்கமுள்ளவர். அப்பழக்கமே எனக்கும் ஏற்பட்டிருந்தது. ஆனால் நான் பள்ளிக்கூடத்தில் வாசித்துக் கொண்டிருந்தபோது அந்த சமூகத்தைச் சேர்ந்த ஒரு பையனைத் தெரியும். சிறுவர்களான நாங்களெல்லாரும் அந்தப் பையனிடம் மிகவும் ஜாக்கிரதையாக

இருப்போம். ஏனெனில் அவனது மௌன சுபாவமும் மற்றும் அவனது சில நடவடிக்கைகளும் ஜாக்கிரதையாக இருக்கும்படி எங்களை எச்சரித்தன. அதைத் தவிர நானும் எனது சகாக்களும் அவனைப் பற்றிக் குறிப்பிட்ட வேறெவ்வித அபிப்பிராயமும் கொள்ளவில்லை. 14 அல்லது 15 வயதிற்கு மேல்தான் நான் அவ்வார்த்தையைக் கேள்விப்பட ஆரம்பித்தேன். அப்போது நிகழ்ந்த அரசியல் விவாதங்களில் அவ்வார்த்தை அடிக்கடி எழும். அது எனக்கு சிறிது வெறுப்பை உண்டுபண்ணும். மத சம்பந்தமான விவாதங்களைக் கேட்கும்படி நேரும்போதெல்லாம் எனக்கு ஓர்வித அருவருப்பான உணர்ச்சி உண்டாகும். அதைத் தவிர, யூதர் பிரச்னையையொட்டி அப்போது எனக்கு வேறெவ்வித எண்ணமும் எழுந்ததில்லை.

லின்ஸ் நகரில் அப்போது சில யூதர்கள் தானிருந்தார்கள். அங்கு பல நூற்றாண்டுகளாக வாழ்ந்து வந்த யூதர்கள் வெளித்தோற்றத்தில் ஐரோப்பியர்கள் போலவே இருந்தனர். அவர்களை நான் ஜெர்மானியர்களென்று கூட நினைத்ததுண்டு. அவர்களுடைய விசித்திரமான மத அனுஷ்டானத்தைத் தவிர அவர்களுக்கும் நமக்கும் வேற்றுமையில்லை என்றே எண்ணி வந்தேன். மத நம்பிக்கை காரணமாக அவர்கள் இழிவுபடுத்தப்படுவது எனக்கு வெறுப்பைக் கொடுத்தது. கட்டுக்கோப்பான யூதர் எதிர்ப்பு இயக்கமொன்று இருக்க முடியுமென அப்போது நான் கனவிலும் கருதவில்லை.

அந்நாளில்தான் நான் வியன்னாவுக்கு வந்தேன். அந்த பிரமாண்டமான நகரில் பல்வேறு அந்தஸ்துடையவர்களும் இருந்ததால், அவர்களுக்குள்ள வேற்றுமையை முதலில் என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. என் மனம் பலவித கஷ்டங்களாலும், சிந்தனைகளாலும் குழம்பிக் கிடந்ததே அதற்குக் காரணம். வியன்னாவிலுள்ள 20 லட்சம் ஜனத் தொகையில் 2 லட்சம் பேர்கள் யூதர்களென்பதை அப்போது நான் கவனிக்கவில்லை. என் மனக்குழப்பம் தணிய சில வாரங்களாயின. பின்னர்தான் நான் வந்துள்ள புதிய உலகத்தை நன்கு ஆராய்ந்து அறிந்துகொள்ள முடிந்தது. அப்போதுதான் யூதர் பிரச்னையும் எழுந்தது.

அச்சமயம் கூட யூதர் வேறொரு மதத்தைச் சேர்ந்தவரென்பதை தவிர, அவரும் ஒரு மனிதரென்றே நினைத்தேன். அவரிடம் சகிப்புத் தன்மையுடன் நடந்து கொள்ள வேண்டுமென்றும், வேறொரு மதத்தைச் சேர்ந்தவர் என்பதற்காக அவரைத் தாக்கக் கூடாதென்றும் நான் அபிப்பிராயப்பட்டேன். எனவே வியன்னாவிலுள்ள யூதர் எதிர்ப்புப் பத்திரிகைகளின் தொனி எனக்குப் பிடிக்கவில்லை. அத்தகைய அற்பத்தனமான போக்கு

ஒரு மகத்தான ஜன சமூகத்தின் கலாச்சார சம்பிரதாயங்களுக்கு முரணானதென்று கருதினேன். அவை முதல்தர பத்திரிகைள் அல்லவாதலால், அவைகளின் தாக்குதல்களுக்குப் பொறாமையும், அசூயையும் காரணமே அன்றி, அக்கண்டனங்கள் அந்தரங்க சுத்தியை ஆதாரமாகக் கொண்டவையல்ல என்றும் அபிப்பிராயப் பட்டேன். ஆனால் உண்மையிலேயே முதல்தர பத்திரிகைகள் மிகவும் கண்ணியமான முறையில் இதர பத்திரிகைகளுக்குப் பதிலளித்தன. சில அக்கண்டனங்களைப் பொருட்படுத்தி பதில் கூறவுமில்லை. அவ்விதம் பொருட்படுத்தாமலிருந்ததுதான் மிகவும் கண்ணியமான முறையென்றும் எனக்குத் தோன்றியது.

"நியூ பிரிபிரஸ்", "வீனர் டாஜ் பிளாட்" முதலிய பிரசித்தி பெற்ற பத்திரிகைகளை நான் சிரத்தையுடன் வாசித்து வந்தேன். வாசகர்களுக்கு அவைகள் கொடுக்கும் கணக்கற்ற தகவல்களும் குறிப்பிட்ட பிரச்னைகளையொட்டி அவைகளின் பாரபட்சமற்ற தன்மையும் எனக்கு மிகவும் அற்புதமாகத் திருப்தியையும் கொடுத்தது. இருந்தாலும் சிற்சில சமயங்களில் அவைகளின் அலங்கார வசன நடை எனக்குப் பிடிக்கவில்லை. மற்றும் ராஜ குடும்ப விஷயங்களில் அவைகள் பல்லைக் காட்டி, அதற்கேற்றபடி தாளம் போட்டு வந்தது எனக்கு அறுவருப்பை உண்டுபண்ணியது. அவ்விதம் செய்வது உயர்ந்த ஜனநாயகக் கொள்கைக்கே ஒரு களங்கமென நினைத்தேன். அவ்வாறு 'காக்காய் பிடிப்பது' உயர்ந்த ஜன சமூகத்திற்குச் சிறிதும் ஒவ்வாத மானமற்ற ஒரு செய்கை என்றும் எனக்குத் தோன்றியது. அதனால் வியன்னா பத்திரிகைகளின் மீது எனக்கிருந்த மதிப்பு குறைந்தது.

நான் வியன்னாவிலிருந்தபோது, ஜெர்மனியில் எழுந்த அரசியல் கலாச்சாரப் பிரச்னைகள் சம்பந்தமான சகல விஷயங்களையும் சிரத்தையுடன் கவனித்து வந்தேன். தாழ்ந்துவரும் ஆஸ்திரிய சாம்ராஜ்யத்துடன் இளம் பருவத்திலுள்ள ஜெர்மன் சாம்ராஜ்ய வளர்ச்சியை ஒப்பிட்டுப் பார்த்தபோது எனக்குப் பெருமையும் ஆனந்தமும் உண்டாயின. ஜெர்மன் சாம்ராஜ்யத்தின் வெளிநாட்டுக் கொள்கை எனக்கு உண்மையான சந்தோஷத்தைக் கொடுத்த வந்ததெனினும், உள்நாட்டிலேற்பட்டு வந்த அரசியல் நிகழ்ச்சிகள் அவ்வளவு திருப்திகரமாக இல்லை. இரண்டாம் வில்லியத்திற்கு விரோதமாக அப்போது எழுந்த இயக்கத்தை நான் ஆதரிக்கவில்லை. ஏனெனில் அவர் ஜெர்மன் சக்ரவர்த்தி என்பது மாத்திரமல்ல, ஜெர்மன் கடற்படையின் சிருஷ்டி கர்த்தாவும் அவர்தான். அப்படியிருக்க, பார்லிமெண்டில் பேசக்கூடாதென சக்ரவர்த்தியைத் தடுத்த செய்கை எனக்கு மிகுந்த ஆத்திரத்தை உண்டுபண்ணியது. மிகப் பரிதாபகரமான 'மடசாம்பிராணிகள்' அடங்கிய ஒரு சபை, சாம்ராஜ்யத்தின்

கிரீடத்தைத் தரித்துக் கொண்டிருக்கும் ஒரு சக்ரவர்த்தியைக் கண்டிக்கத் துணிந்தது எனக்கு வேதனையைக் கொடுத்தது. அதே வியன்னா பத்திரிகைகள், ஹாப்ஸ்பர்க் ராஜ குடும்பத்தைச் சேர்ந்த மிகவும் அற்பமான ஒரு குதிரைக்கும் சலாம் போட்டு, அது வாலையாட்டினால் மெய்மறந்து பரவசமடைந்து வந்தன. அவ்வித இழிவான போக்கு எனக்கு இன்னும் அதிக வெறுப்பை உண்டுபண்ணியது அதே சமயம் ஜெர்மனி விஷயத்தில் அப்பத்திரிகைகள் போட்டு வந்த வேஷத்தையும் நான் வெறுத்தேன். ஜெர்மன் உள்நாட்டுப் பிரச்னைகளையொட்டி மிகவும் கவலைப்படுவதுபோல் அவைகள் பாசாங்கு செய்துகொண்டு, ஜெர்மனியின் புண்ணை, நட்பு காரணமாகத் தடவிக் கொடுப்பது போல் ஆஷாடபூதித்தனம் செய்துகொண்டே உண்மையில் சிறிதளவும் இரக்கமின்றி ஆழமாகக் கிளறிவந்தன. அதுபோன்ற செய்கைகள் என் இரத்தம் கொதிக்கும்படி செய்தன. யூதர் எதிர்ப்புப் பத்திரிகைகளிலொன்றான "டியூஷ் வால்க்ஸ் பிளாட்" மாத்திரம் அது போன்ற விஷயங்களையொட்டி நியாயமாக நடந்து கொண்டது. எனக்கு வேதனையைக் கொடுத்த மற்றொரு விஷயமென்னவெனில் பெரிய பத்திரிகைகளெல்லாம் பிரான்ஸை, "மகத்தான கலாச்சாரச் சிறப்பு வாய்ந்த தேச"மென்று பரவசத்துடன் புகழ்ந்து வந்ததுதான். ஆனால் "வால்க்ஸ் பிளாட்" பத்திரிகை மாத்திரம் அவ்விபரீதத்திற்காளானதில்லை. யூதர் எதிர்ப்பு விஷயமாக அதன் தொனி எனக்குப் பிடிக்கவில்லை எனினும், அதன் வாதங்களுக்கு ஆதாரமிருக்கிறதாவென நான் வாசித்ததாலேயே டாக்டர் கார்ல் லூகர் என்பாரைப் பற்றியும், கிறிஸ்துவ சமுதாய இயக்கம் பற்றியும் நன்கு அறிந்து கொள்ள முடிந்தது. நான் வியன்னாவுக்கு வந்தபோது அவரது போக்கும், அவ்வியக்கமும் பிற்போக்கானவை என்றே நினைத்தேன். ஆனால், அவரையும், அவரது தொண்டையும் அறிந்து கொள்ள எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்ததால், மேலே குறிப்பிட்ட என் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளும்படி நேர்ந்தது. அதன் பயனாக அவர் மீதும், அந்த இயக்கத்தின் மீதும் எனக்கு மிகுந்த மதிப்பேற்பட்டது. அன்றும் சரி, இன்றும் சரி, டாக்டர் கார்ல் லூகரை ஒரு சிறந்த ஜெர்மானியராகவே கருதி வருகிறேன்.

யூதர் எதிர்ப்பு பற்றி எனது அபிப்பிராயங்களும் நாளடைவில் மாறுதலடைய ஆரம்பித்தன. எனினும் அவ்விஷயமாக என் மனதில் ஒரு பெரும் போராட்டம் நிகழ்ந்தது. பகுத்தறிவிற்கும், வெறும் பழக்கத்தை அல்லது அர்த்தமற்ற சம்பிரதாயத்தை ஆதாரமாகக் கொண்ட ஓர் உணர்ச்சிக்கும் நடந்த போராட்டத்தில் பகுத்தறிவே இறுதியில் வெற்றி பெற்றது. வியன்னா தெருக்களில் நான் கற்ற பாடமானது, அப்போராட்டத்தில் எனக்கு

மிகுந்த உதவியளித்தது. ஏற்கெனவே சென்றதுபோல் நான் வியன்னா தெருக்களில் கண்மூடித்தனமாகச் செல்வதில்லை. கட்டிடங்களையும் சரி, மனிதர்களையும் சரி, நன்கு உற்றுக்கவனித்து ஆராய்ச்சி செய்துகொண்டே செல்லுவேன்.

அப்போது ஏற்பட்ட யூதர் எதிர்ப்பு இயக்கமானது நியாயமற்றதென எனக்குத் தோன்றியதால், அவ்வியக்க சம்பந்தமான துண்டுப் பிரசுரங்களை வாங்கி வாசிக்க முற்பட்டேன். அப்போது நான் வியன்னாவில் எங்கு சென்றாலும் யூதர்களைச் சந்தித்தேன். அவர்களை நான் உற்றுக் கவனித்து ஆராய்ச்சி செய்ததிலிருந்து, ஜெர்மானியர்களுக்கும் அவர்களுக்கும் சம்பந்தமில்லை என்றும், அவர்கள் முற்றிலும் வேறு சமூகத்தினரென்றும் எனக்குப் புலனாயிற்று. மற்றும் அவ்விஷயமாக எனக்கிருந்த அற்ப சந்தேகமும், வியன்னாவில் யூதர் இயக்கம் ஆரம்பமானதிலிருந்து அறவே தீர்ந்துவிட்டது. அவ்வியக்கத்தில் வெளிப்படையாக ஒரு சில யூதர்களே சேர்ந்திருந்தார்கள். மற்ற பெரும்பாலோர், பொதுஜனங்களின் கண்களில் மண்ணைத் தூவுவதற்காக, அதில் சேராதது போல் பாசாங்கு செய்தார்களெனினும், உண்மையில் சகலரும் அதில் சேர்ந்திருந்தனர். அவர்களிடையே உண்மையான பிளவெதுவுமில்லை. யூதர் சமயத்தையும், தேசீய சின்னங்களையும் நிலை நிறுத்துவதே அவ்வியக்கத்தின் லட்சியம். அவர்களிடையே பூர்ண ஒற்றுமையிருந்தது. அவர்களுடைய தோற்றமும் அசுத்தமும் அழுக்கு நிறைந்த உடைகளும் எனக்கு வெறுப்பைக் கொடுத்தன. அவர்களின் சரீரமோ, உடைகளோ தண்ணீரைக் காண்பதே கிடையாதென்பது, அவர்களைப் பார்த்த மாத்திரத்திலும் சரி, பார்க்காத போதும் சரி சந்தேகமின்றித் தெரிந்தது. அவர்களின் துர்நாற்றம் என்னால் சகிக்க முடிவதில்லை. இதில் ஒரு விசேஷமென்னவெனில், அவர்களின் வெளித்தோற்றத்தைப் போல் மனமும் அசுத்தமாகவும் அழுக்கும் நிறைந்துமிருந்ததுதான். சில துறைகளில் அவர்களின் நடவடிக்கைகள் எனக்கு மிகுந்த கலக்கத்தைக் கொடுத்தன. எனவே அந்த மர்மத்தைச் சிறிது சிறிதாக ஊடுருவிப் பார்க்க ஆரம்பித்தேன். கலாச்சார வாழ்க்கையில் சந்தேகாஸ்பதமான, வஞ்சகமான நடவடிக்கையில் கலந்து கொள்ளாத ஒரு யூதரையாவது கண்டுபிடிக்க முடியுமாவென்று ஆராய்ந்தேன். கலாச்சார சரீரத்தைச் சீர்குலைத்து வரும் புத்து ரணத்தில் ஆராய்ச்சிக் கத்தியை விட்டு ஜாக்கிரதையாகக் கிளறிப் பார்க்கையில், அழுகிய பண்டம் அல்லது சரீரத்திற்குள் புழு நெளிந்து கொண்டிருப்பது தெரிந்தது. கலாச்சார வாழ்க்கையைச் சீர்குலைக்கும் கொடுமையில் அவர்கள் ஒருமிக்க ஈடுபட்டிருந்ததும் தெரிய வந்தது. பத்திரிகைகள், சித்திரம், இலக்கியம், சினிமாக்கள் முதலிய பல துறைகளிலும் யூதர்களின் விபரீத நடவடிக்கைகளை

நான் கண்டுபிடித்தேன். சரீரத்தை அழிக்கும் கொள்ளை நோய் போல் ஆத்துமாவை அழிக்கும் விஷத்தை அவர்கள் ஏராளமாக உற்பத்தி செய்து சமுதாயத்தில் புகுத்தி வந்தார்கள். அத்தகைய கொடியர்களின் தொகைக்கு எல்லையில்லை. அவ்விதம், ஒரு கீதேய்க்குப்[1] பதிலாக பத்தாயிரம் பாதகர்கள் வீதம் இயற்கை சிருஷ்டிக்கலாமென்பதை நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். மானிட ஆத்துமாவில் விஷத்தைப் புகுத்தி அதை அழிப்பதுதான் அவர்களின் வேலை. அதற்கென்றே பெரும்பாலான யூதர்களும் கடவுளால் சிருஷ்டிக்கப் பெற்றிருப்பது போல் தோன்றியது!

என் மனதிற்குப் பிடித்தமான பத்திரிகைகளை பின்னர்தான் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யத் துவங்கினேன். அவைகளை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக ஆராய்ச்சி செய்தேனோ, அவ்வளவுக்கவ்வளவு அப்பத்திரிகைகள் மீது எனக்கிருந்த மதிப்பு குறைந்து வந்தது. அவைகளின் தொனியும், கொள்கைகளும் வெறும் பாசாங்கென்றும், 'பாரபட்சமற்ற' அவைகளின் அபிப்பிராயங்கள் பொதுஜனங்களை மயக்கும் பொய்க்கூற்றுகளென்றும் சந்தேகமறத் தெரிந்து கொண்டேன். ஏனெனில் அப்பத்திரிகைகளில் எழுதுவோர் சகலரும் யூதர்களே. ஆரம்பத்தில் நான் அலட்சிய மாக நினைத்த பல சில்லறை விஷயங்களும் மிகுந்த அர்த்த புஷ்டியுள்ளவையென்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் தெரிந்தன. ஆழ்ந்து கவனித்தபோது அப்பத்திரிகைகள் யூதர்களைப் புகழ்வதும், ஜெர்மானியர்களை இகழ்வதும், வாழைப்பழத்தில் ஊசியேற்றுவதுபோல் ஜெர்மன் சக்ரவர்த்தியைப் பரிகசிப்பதும், பிரெஞ்சு கலாச்சாரம், நாகரிகம் முதலியவைகளை வானளாவப் புகழ்வதும் வெட்டவெளிச்சமாயின. அவைகளின் பாஷையே அன்னியர் பேசும் பாஷையாகத் தோன்றியது. தாராள நோக்கமென நான் நினைத்ததெல்லாம் அவைகளின் அபார தந்திர வேலைகளென்பது நிதர்சனமாயின. மற்றும் அவைகளின் "கண்ணியமான மௌனம்", ஜனங்களை மயக்கும் ஜாலவித்தையென்பதும் தெரிய வந்தது. பொதுவாக அவைகள் ஜெர்மானியர்களை இகழ்வதையே தங்கள் கடமையாகக் கொண்டிருந்தன.

வியன்னா பத்திரிகைகளின் அத்தகைய கொள்கைக்குக் காரணமென்ன? அவை தற்செயலாக அவ்வாறு எழுதுகின்றனவா அல்லது வேண்டுமென்றே திட்டமான ஒரு நோக்கத்துடன் எழுதுகின்றனவா? இக்கேள்விகளுக்குப் பதிலை நானே அதிசீக்கிரத்தில் நிதர்சனமாகத் தெரிந்துகொண்டேன். வியன்னாவாசிகளுடைய வாழ்க்கையில் மற்ற துறைகளிலும் ஏற்பட்டு வரும் சம்பவங்களின் அர்த்தத்தையும் நான் கவனிக்க ஆரம்பித்தேன். அவைகளுக்கெல்லாம் யூதர்களே

காரணஸ்தர்களென்பது தெரிந்தது. சமுதாய வாழ்க்கையைச் சீர்குலைப்பதற்காக அவர்கள் விபசாரக் கொடுமையையும் வளர்த்து வந்தார்கள். இரவில் தெருக்கள் வழியே செல்லுவோர் அந்த அக்ரமத்தை நேரில் அறிந்துகொள்ள முடிந்தது. சென்ற மகாயுத்தமேற்படும் வரையில் ஜெர்மானியர்களுக்கு அத்தகைய விபரீதமொன்று இருப்பதே தெரியாது. எனினும் யுத்தமேற்பட்ட பின் கிழக்குப் போர்முனையில் ஜெர்மன் சிப்பாய்கள் அக்கொடுமையைக் காணும் நிர்ப்பந்தமேற்பட்டது. வாழ்க்கையை அடியோடு சீர்குலைக்க யூதர்கள் அதை ஒரு கருவியாகக் கொண்டிருந்தது எனக்கு நடுக்கத்தையும் மிகுந்த ஆத்திரத்தையும் உண்டுபண்ணியது. அதிலிருந்து யூதர் பிரச்னையை இன்னும் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்ய முற்படவே, கலாச்சார வாழ்க்கையின் சகல துறைகளிலும் யூதர்கள் புகுந்து பாழ்படுத்தி வருவதைக் கண்டேன். மற்றும் அபேதவாத ஜனநாயக இயக்கத்தின் தலைவர்களும் யூதர்கள்தானென்பதை நான் உணர்ந்ததும், அதுவரை என் பார்வையை மறைத்திருந்த ஒரு திரை திடீரென விலகியது. அவ்வளவுதான், வெகுகாலமாக என் மனதில் நிகழ்ந்து வந்த போராட்டமும் அத்துடன் தீர்ந்தது!

அதுவரை என் கண்களை மறைத்திருந்த திரை விலகிய பின்தான் தொழிலாளர்களான என் சகாக்களின் பரிதாபகரமான நிலைமையை நான் அலசி ஆராய்ந்து அதன் உண்மையான காரணங்களையும் தெரிந்துகொள்ள முடிந்தது. அவர்கள் அடிக்கடி தங்கள் அபிப்பிராயங்களை மாற்றிக் கொண்டுவிடுவார்கள். ஒரு குறிப்பிட்ட விஷயத்தையொட்டி நான் அவர்களுடன் விவாதித்து ஒரு நியாயமான முடிவிற்கு வரும்படி செய்வேன். மறுநாள் பார்த்தால், என் முயற்சி எல்லாம் வியர்த்தமாகியிருக்கும். ஏனெனில் அவர்கள் தங்கள் அபிப்பிராயத்தை மீண்டும் மாற்றிக் கொண்டிருப்பார்கள்! எனினும் அவர்களுடைய பரிதாப கரமான நிலைமையை நான் அறிந்து கொள்ளாமலில்லை. அவர்களின் வாழ்க்கையே அதிருப்திகரமாக இருந்தது. இவர்களுக்குத் தங்களுடைய முதலாளிகள் மீது துவேஷம் கொழுந்துவிட்டெரிந்தது. அந்த முதலாளிகளைச் சிறிதும் இரக்கமற்ற பாவிகளென அவர்கள் கூறுவார்கள்: சர்க்கார் அதிகாரிகளுக்குத் தங்களிடம் அனுதாபமில்லை என்று அவர்களை வெகுவாகத் தூஷிப்பார்கள், வாழ்க்கைச் செலவு அதிகமாக இருப்பதைக் கண்டித்து தெருக்களில் ஊர்வலம் செல்லுவார்கள். இத்தகைய நடவடிக்கைகளின் நியாயத்தை நான் அறிந்து கொள்ள முடிந்ததென்றாலும், தங்கள் சொந்த தேச விஷயத்தில் அவர்களின் போக்கை என்னால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. அவர்கள் தேச சகோதரர்களை எல்லாம்

வெறுத்தார்கள், தங்கள் தாய்நாட்டை இழிவாகக் கூறினர், அதன் பெருமையைப் பரிகசித்தார்கள், தங்கள் தேச சரித்திரத்தைத் தூஷித்தார்கள். தங்கள் தேசத்தில் அவதரித்த மகான்களின் பெயர்களைச் சாக்கடையிலிழுத்து அவமதித்தார்கள். தங்கள் தாய்நாட்டையும் தங்கள் தேச சகோதரர்களையும் அவர்கள் அவ்விதம் வெறுப்பதன் காரணத்தை அறிந்துகொள்ள என்னால் முடியவில்லை. அவ்விதம் வெறுப்பது பகுத்தறிவிற்கும் இயற்கை சுபாவத்திற்கும் முரணல்லவா?

எனினும், நம் ஜனங்களுடைய மனதைப் பாழ்படுத்தும் கொடிய சைத்தான்கள் யாரென்பதை நான் இறுதியில் கண்டுபிடித்தேன். சிறிது சிறிதாக கவனித்தபோது, அபேதவாத ஜனநாயகப் பத்திரிகைகளெல்லாம் யூதர்களின் நிர்வாகத்திலிருந்து வருவது தெரிந்தது. பிரசுர கர்த்தாவிலிருந்து பையன் வரையில் சகலரும் யூதர்களாகவே இருந்தனர். மந்திரி சபையிலிருந்த அபேதவாத ஜனநாயகப் பிரதிநிதிகள், தொழிலாளர் சங்கக் காரியதரிசிகள், தெருக்களில் திரியும் கிளர்ச்சிக்காரர்கள் முதலிய சகலரும் யூதர்கள்தான்! அவ்விதம் சகல துறைகளிலும் அன்னிய சமூகத்தைச் சேர்ந்த அவர்களே தலைமைப் பதவிகளை வகித்து வந்தனர். நான் பல மாதங்களாக தர்க்கம் செய்து வந்தது அத்தகையோரின் குட்டிப் பிரதிநிதிகளுடன் தானென்பது அப்போதுதான் எனக்குத் தெரியவந்தது. எனினும் யூதர்கள் ஜெர்மானியர்களல்ல என்ற உண்மையை நான் அறிந்து கொண்டது எனக்கு மிகுந்த சந்தோஷத்தையும் ஆறுதலையும் அளித்தது.

அப்பிரிவினரின் கொள்கைகளையும், கபட நாடகங்களையும் நான் அவ்வாறு தெரிந்து கொண்டதால், எனக்கு எதிராகத் தொழிலாளர்கள் கூறும் வாதங்களைத் தகர்த்து அவர்களின் மனதை ஓரளவாவது மாற்றுவதற்கு வழியேற்பட்டது. இருந்தாலும் அவர்களிடம் வேரூன்றியிருந்த விபரீதமான கொள்கைகளையும், பிடிவாதத்தையும் களைவது சுலபமாக இல்லை. அடிக்கடி தொண்டைத் தண்ணீர் வற்ற அவர்களிடம் நான் கதற வேண்டியிருந்தது. என்னுடைய வாதங்களைச் சமாளிப்பதற்காக அவர்கள் சிற்சில சமயங்களில் பேசாமல் நழுவிவிடுவார்கள். மற்றும் சில சமயங்களில் கூசாமல் பொய் மூட்டைகளை அவிழ்த்து விடுவார்கள். அவைகளைக் கேட்டு நான் அப்படியே பிரமித்து விடுவேன். அதன் காரணமாக யூதர்கள் மீது எனக்கு துவேஷம் பன்மடங்கு அதிகமாயிற்று. அவர்கள் மீது எவ்வளவுக்கெவ்வளவு வெறுப்பு அதிகமாயிற்றோ, அவ்வளவுக்கவ்வளவு என் தேச ஜனங்கள் மீது அன்பும் அதிகமாயிற்று. சைத்தான்களின் மாய வலையில் அறியாமை காரணமாக அகப்பட்டுக் கொள்ளும் ஜனங்களை எவ்விதம் குறைகூற முடியும்? அந்த விபரீதத்தைத்

தடுத்து ஒழிக்காமல் விட்டுவிட்டால், மானிட நாகரிகமே சீர்குலைந்து உலகமே உயிரற்ற ஒரு பாலைவனமாகி விடுவது நிச்சயமென்று தோன்றியது. எனவே அதை எதிர்க்க மானிட சாத்தியமான சகல ஆயுதங்களையும் உபயோகித்து, பலாபலன்கள் விதிப்படியாகட்டுமென விட்டு விடுவதைத் தவிர வேறு வழியில்லை. யூதர்களின் போக்கைச் சிறிதும் சந்தேகமற நான் நன்கு தெரிந்து கொண்டதால், அவர்கள் எழுதும் பொய்க் கூற்றுகளின் உட்கருத்தையும் சுலபமாக உணர்ந்துகொள்ள முடிந்தது. இவைகளை எல்லாம் நான் அறிந்து கொண்டதன் பயனாக என் மனதில் மகத்தான ஒரு புரட்சியேற்பட்டது. அப்புரட்சியின் முடிவென்ன? இளகிய மனமுள்ள சமசரவாதியாக இருந்த நான், யூதரின் பரம சத்துருவாக மாறினேன்.

மார்க்ஸ்[2] கொள்கைக்கும் யூதர் கொள்கைக்கும் வேற்றுமையில்லை. அக்கொள்கையானது நீதியையும் நாகரிகத்தையும் ஆதாரமாகக் கொண்ட மானிட வாழ்க்கையின் அஸ்திவாரத்தைத் தகர்த்து சமுதாயத்தில் குழப்பத்தையும், கலக்கத்தையும் உண்டுபண்ணி மானிட வர்க்கமே மறைந்தொழியும்படி செய்துவிடும். எனவே அவ்விஷயமாக எனது போக்கானது, உலகச் சிருஷ்டி கர்த்தாவான கடவுளின் அபீஷ்டத்தை அனுசரித்தேயிருக்கிறதென நம்புகிறேன். யூதர்களால் ஆபத்தேற்படாமல் பாதுகாப்பதன் மூலம் சிருஷ்டிக்கே ஆபத்தேற்படாமல் பாதுகாப்பவனாகின்றேன் என்பதே என் அபிப்பிராயம்.



## குறிப்பு

1. கீதே ஒரு ஜெர்மன் கவி, நாடகாசிரியர், தத்துவ ஞானி. ஜெர்மனியின் பெருமைக்கே மூலகாரணஸ்தர்களில் அவரும் ஒருவர். அவரது நூல்கள் எக்காலத்தும், எத்தேசத்தினருக்கும் அறிவுச் சுடராக விளங்கிவருமென்பது உலக மேதாவிகளின் அபிப்பிராயமாகும்.

2. கார்ல் மார்க்ஸ் என்பார் 2478ல் (1818) ஜெர்மனியைச் சேர்ந்த டிரையர் என்ற நகரில் பிறந்தவர். அவர் தமது 65வது வயதில் லண்டனில் காலமானார். ஸ்தூலமான பொருளாதார நிலைமைதான் வாழ்க்கையின் அஸ்திவாரமென்பது அவரது கொள்கை. ஆத்தும பல சம்பந்தமான விஷயங்களுக்கு அக்கொள்கையில் இடமில்லை.

## 3. வியன்னாவில் கற்ற வேதம்

பொதுவாகக் கவனிக்குமிடத்து, எவரும் முப்பது வயதிற்குள்ளாக அரசியலில் பகிரங்கமாகக் கலந்துகொள்ளக் கூடாது. இதுதான் எனது அபிப்பிராயம். எனினும் இயற்கையாகவே அபார அரசியல் திறமை பெற்றிருப்பவர்களுக்கு அந்நியதியிலிருந்து விலக்களிக்க வேண்டும். சாதாரணமாக முப்பது வயதிற்குள் மனிதனின் மனோ வளர்ச்சி பக்குவமடைந்து நிலை பெறுவதில்லை. மனிதன் அதுவரை பல்வேறு அரசியல் பிரச்னைகளைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்கிறான். அப்போதுதான் அவனது எதிர்கால நிலைமையையொட்டி அஸ்திவாரம் உருவாகத் துவங்குகின்றது. அதன் பின்னர்தான் அப்பிரச்னைகளை நன்கு சீர்தூக்கி அவைகளின் குணாகுணங்களை ஆராய்ந்து, அவைகளையொட்டித் தனது நிலைமையையும் ஸ்திரப்படுத்திக் கொள்ள முடியும். முதலில் அவனுக்குப் பொதுவான விஷயஞானமேற்பட வேண்டும். பின்னர்தான் அதன் மூலம் குறிப்பிட்ட பிரச்னைகளையொட்டித் தனது நிலைமை என்னவென ஒரு திட்டமான முடிவிற்கு வரமுடியும். மனோபக்குவ மேற்பட்டபின் பல்வேறு பிரச்னைகளையும் தீர ஆராய்ந்து முடிவிற்கு வருவதுதான் முரணின்றியும் உறுதியுடனுமிருக்கும். அத்தகைய பக்குவமேற்படும்போதுதான் அவன் அரசியலில் கலந்துகொள்ள வேண்டும். மனோபக்குவமும், தகுந்த ஆராய்ச்சியும், தீர்க்காலோசனையுமின்றி அரசியலில் கலந்துகொண்டு விட்டால், பின்னர் தன் கொள்கைகளை மாற்றிக் கொள்ளும்படியான நிர்ப்பந்தமேற்பட்டு, தன்னைப் பின்பற்றுவோரின் நம்பிக்கையை இழப்பதுடன், 'பச்சோந்தி' என்ற கெட்ட பெயருக்கும் ஆளாகும்படி நேரும். ஏனெனில் மனோபக்குவமும், திடசித்தமும், நிதானபுத்தியும் ஏற்படுமுன் சிறந்ததெனத் தோன்றும் ஒரு கொள்கை, நாளடைவில் தவறெனத் தெரிய ஏதுவுண்டு. ஒரு கொள்கை தவறெனத் தெரிந்தபின், பிறருடைய பரிகாசத்திற்கோ அல்லது கண்டனத்திற்கோ பயந்து அக்கொள்கையையே அனுஷ்டித்து வருவதால் தனக்கும் சரி, சமூகத்திற்கும் சரி, அனர்த்தமே உண்டாகும். அத்தகையோர் இறுதியில் வயிற்றுப் பிழைப்பு அரசியல்வாதிகளாக நேருகின்றது. அவர்கள் பார்லிமெண்டு சபைகளிலும் இடம் பெற்றுவிட்டால் வேறு வினையே வேண்டியதில்லை. அவர்கள் தேசீயப் போராட்டத்தில் ஈடுபடுவதற்குப் பதிலாக, குழந்தைகள் பால் புட்டியை இறுகப் பற்றிக் கொள்வது போல், பார்லிமெண்டு பதவியை தங்களுடைய குடும்ப ஜீவனோபாய சாதனமென்று

கொள்வார்கள். அதன் பயனாக, நினைத்து இறுகப் பற்றிக் கொள்வார்கள். அதன் பயனாக, அவர்களுக்குத் தங்களைக் காட்டிலும் அதிக திறமைசாலிகளைக் கண்டால் எங்கு தங்கள் பதவிக்கு ஆபத்து வந்துவிடுமோவென பொறாமையும், ஆத்திரமும் ஏற்படும். மனோபக்குவமடைந்து குறிப்பிட்ட கொள்கைகளில் உண்மையான நம்பிக்கையும் உறுதியும் கொண்டவர்கள் அவர்களுக்கு சத்துருக்களாகி விடுவார்கள். தங்களைக் காட்டிலும் அறிவாளிகளையும், உண்மைவாதிகளையும் கண்டால் அவர்களுக்கு வேப்பங்காயாகிவிடும். எனவே, மனோபக்குவமும் நிதானபுத்தியுமற்றவர்களால் அவ்விதம் சமூகத்திற்கே மிகுந்த தீங்கென்பது வெள்ளிடைமலை. உறுதியும், அறிவும், திடசித்தமும், சத்தியகுணமுமுள்ள தலைவர்கள் மீது ஜனங்களுக்கு மிகுந்த நம்பிக்கையும், மதிப்பும், விசுவாஸமுமேற்படும். ஒரு தலைவர் தான் பின்பற்றி வந்த மூலாதாரமான ஒரு கொள்கை தவறென்று உணர்ந்தால், அவர் உடனே தலைவர் பதவியிலிருந்து விலகிவிடுவதுதான் கண்ணியமும், கௌரவமும் ஆகும். ஏனெனில், அவர் இரண்டாவது முறையும் முக்கிய விஷயங்களில் தவறாக நடந்து கொள்ள இடமுண்டு. எனவே தமக்கு ஆதரவளிக்கும்படி ஜனங்களைக் கேட்கவோ அல்லது ஜனங்களிடம் ஆதரவை எதிர்பார்க்கவோ அவருக்கு உரிமையில்லை. ஆனால் இன்றுள்ள தலைவர்களோ அதற்கு நேர்மாறாக நடந்து கொள்கிறார்கள். இன்றைய தலைவர்கள் குழாமில் ஒருவர்கூட தங்கள் கடமையை ஒழுங்காக நிறைவேற்றுவதில்லை. அவர்களிடையே ஊழல்கள் மலிந்து கிடக்கின்றன.

அந்நாட்களில் நான் பலரையும் விட அதிகமாக அரசியல் பிரச்னைகளில் கவனம் செலுத்தி வந்தேன். எனினும் பகிரங்கமாக நான் அரசியலில் கலந்து கொள்வதில்லை. என் மனதைக் கிளறி வந்த விஷயத்தையொட்டி குறிப்பிட்ட சிலருடன் மாத்திரம் தான் கலந்து விவாதித்தேன். அவ்விதம் குறிப்பிட்ட சிலருடன் விவாதித்ததில் பல நன்மைகளேற்பட்டன. ஏனெனில் நான் மாத்திரம் அவர்களுடன் பேசிக் கொண்டிராமல், அவர்களுடைய எண்ணங்களையும் அபிப்பிராயங்களையும் என்னால் அறிந்துகொள்ள முடிந்தது. அவ்விதம் பலரது மனப்போக்கையும் ஆராய்ச்சி செய்வதற்குச் சந்தர்ப்பமுமேற்பட்டது. வியன்னாவைத் தவிர வேறெவ்விடத்திலும் அத்தகைய சந்தர்ப்பம் கிடைப்பதரிது.

ஆஸ்திரிய சாம்ராஜ்யத்தில் அப்போது பல்வேறு சமூகங்களுக்குள்ளும் பயங்கரப் போராட்டம் நடந்து சாம்ராஜ்யமே உள்ளூர ஆட்டங் கண்டிருந்ததெனினும், வியன்னா நகர் மாத்திரம் வெளியுலகிற்கும், குறிப்பாக ஜெர்மனிக்கும் மிகுந்த வனப்பும், வசீகரமும் பொருந்தியதாகவே தோன்றியது. அதன்

பகட்டும், பிரகாசமும் பிரமாதமாக இருந்து வந்தன. நிர்வாகத் துறையில் மகா மேதாவியான டாக்டர் லூகர் அப்போது அந்நகர மேயராக இருந்ததால், வியன்னா இளமை பெற்றுப் புதிய தோற்றமளித்தது. அவரது நிர்வாகத் திறமையால் சாம்ராஜ்யம் முழுவதும் புத்துயிரும், புதிய சக்தியும் உண்டாயின. எனினும் பல்வேறு வர்ணத்தினரடங்கிய அந்த அரசியல் முறையானது இறுதியில் தகர்ந்ததற்குக் காரணம், ஜெர்மானியரின் அரசியல் திறமையின்மையல்ல. பரஸ்பரம் முரணான பல்வேறு தேசத்தின்ரடங்கிய 5 கோடி பேர்களை எவ்விதம் 1 கோடி பேர்கள் நிரந்தரமாக ஐக்கியப்படுத்தி வரமுடியும்? அவ்விதம் ஐக்கியப்படுத்துவதாயின், அதற்குப் பூர்வாங்கமாச் சில முறைகள் கைக்கொள்ளப் பட வேண்டும்.

உறுதியுடனும், விடாமுயற்சியுடனும் ஒரு சமஷ்டி முறையை அமுலுக்குக் கொண்டு வந்தாலொழிய, ஆஸ்திரிய சாம்ராஜ்யத்தை நிரந்தரமாக ஐக்கியப்படுத்துவதில் வெற்றி பெறுவதென்பது முடியாத காரியம். அதையொட்டி மற்றெந்த முறையுமெடுத்துக் கொள்ளுமுன், முதலில் சர்க்கார் பாஷை ஒரே ஒரு பொது பாஷையாக இருக்க வேண்டும் என்ற கொள்கையை அமுலுக்குக் கொண்டு வந்திருக்க வேண்டும். மற்றும் பள்ளிக்கூடம் முதலிய இடங்களில் தாங்களெல்லோரும் ஒரே சர்க்காரின் பிரஜைகளென்ற தேசீய உணர்ச்சி ஊட்டப்பட்டிருக்க வேண்டும். எனினும் அந்த லட்சியமானது 10 அல்லது 20 வருஷங்களில் பூர்த்தி பெறக்கூடிய விஷயமல்ல. பல நூற்றாண்டுகள் முயற்சி செய்து சாதிக்க வேண்டியதாகும். ஆனால் இவை போன்ற முறைகளெல்லாம் ஏன் எடுத்துக் கொள்ளப்படவில்லை என்பதைக் கண்டுபிடிப்பது எனக்கு ஒரு படிப்பினையாக அமைந்தது. அம்முறைகளைக் கைக் கொள்ளத் தவறியவர்கள்தான் ஹாப்ஸ்பர்க் சாம்ராஜ்ய வீழ்ச்சிக்குக் காரணஸ்தர்களாவர். காலச்சக்கரத்தின் போக்கையும், மாறுபாடுகளையும் உணர்ந்து அதற்குற்றவாறு தங்கள் நிலைமையைச் சீர்படுத்திக் கொள்ளாததே ஹாப்ஸ்பர்க் ராஜ குடும்பத்தினர் செய்த மகத்தான குற்றமாகும். தமது முன்னோர்களின் அலட்சிய புத்தியால் ஏற்பட்ட விபரீதங்களைச் சீர்திருத்தாவிடில் ஒரு பயங்கரமான அரசியல் சூறாவளி தமது முன்னோர்களின் அஜாக்கிரதையினாலும், யோசனையின்மையினாலும் நூற்றுக்கணக்கான வருஷங்களாக வேரூன்றியிருந்த பாதகத்தை ஒரு சில வருஷங்களில் சீர்படுத்த அவர் முயன்றார். எனினும், அவரை நாற்பது வருஷம் தமது கைங்கர்யத்தைத் தொடர்ந்து நடத்த விதி அனுமதித்து அவர் ஆரம்பித்த அலுவல்களை இரண்டு தலைமுறைகள் வரை ஜனங்களும் தொடர்ந்து நிறைவேற்றியிருப்பார்களாயின்,

அந்த அற்புத சாகஸமானது பூர்த்தியாகியிருக்கும். ஆனால் பத்து வருஷ ராஜ்யாதி காரத்திற்குப் பின் அவர் சரீரமும், மனமும் உடைந்து அவர் ஆரம்பித்த அற்புத கைங்கர்யமும் அவருடன் சமாதியடைந்துவிட்டது. அதைத் தொடர்ந்து நடத்த அவரது சக்திகளுக்குத் திறமையோ அல்லது மன உறுதியோ இல்லை. போதாக்குறைக்கு பொதுப் பாஷையாக ஒன்றிருக்க வேண்டுமென்ற அத்தியாவசியமான பூர்வாங்க நிபந்தனையையும் வற்புறுத்தாமல் பார்லிமெண்டு சபை அமைக்கப்பட்டது ஆஸ்திரியாவில் ஜெர்மன் ஆதிக்கத்தைத் தகர்க்கும் முதல் அடியாக அமைந்தது. அதிலிருந்து சிறிது சிறிதாக ஆஸ்திரிய சாம்ராஜ்யம் சீர்குலையத் தொடங்கியது. பட்டவர்த்தனமான அச்சீர்குலைவைக் கவனிக்காமல் பெரும்பாலான ஜனங்களும் கண்மூடித்தனமாகச் சென்றதிலிருந்து, ஆஸ்திரியாவில் அழிவுக் கடவுள் கட்டளை என்பது நிதர்சனமாகின்றது.

எனக்கு 20 வயது கூட பூர்த்தியாகவில்லை. அப்போது தான் முதன்முதலாக ஆஸ்திரிய பார்லிமெண்டிற்குள் சென்று அங்கு நடக்கும் விவாதங்களைக் கவனிக்க முற்பட்டேன். அதன் பயனாக முதலில் எனக்கு ஏற்பட்ட உணர்ச்சி, ஆழ்ந்த வெறுப்புதான். பிரிட்டிஷ் பார்லிமெண்டின் மீது எனக்கு மிகுந்த மதிப்பு இருந்தது. அந்தப் பார்லிமெண்டின் நடவடிக்கைகள் பற்றி ஆஸ்திரியப் பத்திரிகைகள் பிரமாதமாகப் புகழ்ந்து வந்ததே அதற்குக் காரணம். பிரிட்டிஷ் பார்லிமெண்டு மாளிகைகளை நிர்மாணித்த பாரி* என்பார், பிரிட்டனின் பெருமையை வெளிப்படுத்தும் சிலைகளையும் ஓவியங்களையும் அவைகளில் அமைத்திருந்தார். ஆனால் ஆஸ்திரிய பார்லிமெண்டை நிர்மாணித்த டேனிஷ் சிற்பியான ஹான்ஸனோ, அதில் கிரேக்க, ரோமிய ராஜதந்திரிகள், தத்துவஞானிகள் முதலியோரின் சிலைகளையும், சித்திரங்களையும் அமைத்திருந்தார். அவைகள் ஆஸ்திரிய சரித்திரத்தின் பெருமையை வெளிப்படுத்தும் அறிகுறிகளாக இல்லை. தவிர ஆஸ்திரிய பார்லிமெண்டு நடவடிக்கைகளும் எனக்கு மிகுந்த வெறுப்பைக் கொடுத்தன. விவாதத்தின் தன்மை மிகவும் தாழ்ந்த ரகமாக இருந்தது. சில சமயங்களில் அங்கத்தினர்கள் பேசுவதே புரிவதில்லை. அவர்களில் பலரும் ஜெர்மன் பாஷையில் பேசுவதேயில்லை. இந்த லட்சணத்தில் அங்கத்தினர்களுக்குள் வாய்ச்சண்டையுமேற்பட்டு விடும். அவ்வமயம் சபைத் தலைவரின் நிலைமையோ பரிதாபகரமாக இருக்கும். அந்தக் கிழவரோ சபையில் கண்ணியத்தை அங்கத்தினர்களுக்கு

---

*எட்வர்ட் மிடில்டன் பாரி (2490 - 2540) ஒரு சிறந்த ஆங்கில சிற்ப நிபுணர். பிரிட்டிஷ் பார்லிமெண்டு முதலிய பல பிரபல கட்டிடங்களை நிர்மாணித்தவர்.

ஞாபகமூட்டுவதற்காக மணியடிப்பார். அச்சண்டையை அடக்க அவர் நயம், பயம், நல்வார்த்தை, எச்சரிக்கை முதலிய சகலவித உபாயங்களையும் உபயோகிப்பார். அக்கூற்றுகளையெல்லாம் கண்டு சிரிக்காமலிருக்க என்னால் முடியவில்லை.

பல வாரங்கள் சென்று இரண்டாவது முறையாக நான் அச்சபைக்குச் சென்று பார்த்தபோது, அக்கோலம் முற்றிலும் வேறுவிதமாக இருந்தது. ஏனெனில் கீழேயுள்ள அறைகளில் அங்கத்தினர்கள் தூங்கிக் கொண்டிருந்தார்கள். சபையிலிருந்த ஒரு சில அங்கத்தினர்களும் கொட்டாவி விட்டுக் கொண்டிருந்தனர். ஒருவர் சபையில் 'பிரசங்கமாரி' பொழிந்து கொண்டிருந்தார். உதவித் தலைவர், ஸ்தானத்தில் அமர்ந்திருந்தார். பாவம், அவர் முகத்தைப் பார்த்தாலேயே, சபை நடவடிக்கை அவருக்குச் சிறிதும் ருசிக்கவில்லை என்பதும், கடனைத் தொலைப்பதற்காக உட்கார்ந்து கொண்டிருக்கிறாரென்பதும் தெரிந்தது.

அக்கோலங்களை எல்லாம் கண்டு நான் ஆழ்ந்து சிந்திக்க ஆரம்பித்தேன். பிறகு எனக்கு நேரம் கிடைத்தபோதெல்லாம் அச்சபைக்குச் சென்று விவாதங்களைக் கேட்டு வந்ததுடன், பிரதிநிதிகளின் நடையுடை பாவனைகளையும் ஆழ்ந்து கவனித்து வந்தேன். அவ்விதம் நான் ஒரு வருஷகாலம் ஆராய்ச்சி செய்து வந்ததன் பயனாக, அச்சபையைப் பற்றி ஆதியில் நான் கொண்டிருந்த எண்ணங்களெல்லாம் அடியோடு மாறிவிட்டன. ஜெர்மானியர் பெரும்பான்மையோராக இராததே, ஆஸ்திரிய பார்லிமெண்டின் பெரும் குறையென்று அதற்கு முன் நினைத்து வந்த நான், அச்சபையின் நடவடிக்கைகளை உற்றுக் கவனித்து வந்ததன் பயனாக, அம்முறையின் அஸ்திவாரம், அமைப்பு சகலமுமே முற்றிலும் தவறென்பதை உணர்ந்து கொண்டேன். அவ்விஷயங்களெல்லாம் என் மனதில் பல பிரச்னைகளை எழுப்பின. "பெரும்பான்மையோரின் தீர்மானத்தை" அஸ்திவார மாகக் கொண்ட ஜனநாயக முறையை நான் தீர பரிசீலனை செய்ய முற்பட்டேன். மற்றும் தேசத்தின் "பிரதிநிதிகளாக" வீற்றிருக்கும் கனவான்களின் அறிவு, ஒழுக்கம் முதலிய யோக்கிய தாம்சங்களையும் சிரத்தையுடன் ஆராய்ந்தேன். அதன் பயனாக பார்லிமெண்டு அங்கத்தினர்களின் சராசரி யோக்கியதை என்ன என்பது வெளியாயிற்று. அவர்களைப் பற்றி நான் கொண்ட அபிப்பிராயமானது என் மனதில் ஆழ்ந்து பதிந்தது. பின்னர் ஒருபோதும் அந்த அபிப்பிராயம் மாறவில்லை. அதை எல்லாம் நான் ஆராய்ந்து பார்க்காவிடில் பலரையும் மயக்கும் ஒரு பகட்டு முறையின் சிக்கலில் நானும் அகப்பட்டுக் கொண்டிருப்பேன். ஆனால் வாழ்க்கையின் உண்மையான, அனுபவபூர்வமான படிப்பினைகள் அப்படுகுழியில் விழாமல் என்னைக் காப்பாற்றின.

மேற்கு ஐரோப்பாவில் இன்று அனுஷ்டிக்கப்பட்டு வரும் ஜனநாயகமானது மார்க்ஸ் கொள்கையின் பூர்வாங்கப் படலமேயாகும். ஜனநாயகம் என்னும் குட்டையில்தான் மார்க்ஸ் கிருமிகள் உற்பத்தியாகிப் பரவுகின்றன. நல்ல வேளையாக நான் வியன்னாவிலிருந்தபோது இப்பிரச்னை என் கவனத்திற்கு வந்ததற்காக இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன். பார்லிமெண்டென்று நாம் கூறும் இந்த ஸ்தாபனமானது, தர்க்க நியாயத்திற்குச் சிறிதும் ஒவ்வாத விஷயமென்பதை பர்லினில் இருந்தபோது முதன்முதலாகக் கண்டுபிடித்திருப்பேனாயின் சாம்ராஜ்ய அதிகாரத்தை மீண்டும் பலப்படுத்துவதன் மூலம்தான் சாம்ராஜ்யத்திற்கும் சரி, ஜனங்களுக்கும் சரி, கதிமோட்சம் ஏற்படுமென மற்ற பலரையும் போல் நானும் நம்பியிருப்பேன். ஆனால் ஆஸ்திரியாவில் அவ்வித தவறான எண்ணம் சுலபமாக ஏற்படுவதற்கு வழியில்லை. ஏனெனில் ஆஸ்திரிய பார்லி மெண்டு மோசமாக இருந்ததெனில், ஹாப்ஸ்பர்க் ஆட்சியோ அதைக் காட்டிலும் படுமோசமாக இருந்தது. வியன்னா பார்லிமெண்டை ரத்து செய்யும் பட்சத்தில் சகல அதிகாரமும் ஹாப்ஸ்பர்க் குடும்பத்தின் கைக்குச் சென்றுவிடும். அவ்விதம் செல்லுவதென்பது நான் மனதிலும் நினைக்க முடியாத விஷயம்.

பிரதிநிதித்துவ சபையான பார்லிமெண்டில் தனி ஹோதாவில் யாருக்கும் பொறுப்பிராததே அப்பிரச்னைக்குக் காரணமென்பது எனக்குப் புலனாயிற்று. உதாரணமாக பார்லிமெண்டு ஒரு சட்டத்தை நிறைவேற்றுகிறதென்றும், அது பின்னர் பிரபாத நாசகரமான விளைவுகளுக்குக் காரணமாகிறதென்றும் வைத்துக் கொள்வோம். அதற்கு யார் பொறுப்பாளியென்று கூற முடியாது. எல்லோருக்கும் பொறுப்புள்ள விஷயம் ஒருவருக்கும் பொறுப்பில்லை என்ற கதையாகவே அது முடியும்!

எனவே, கீழ்க்கண்ட கேள்விகள் ஒன்றன் பின் ஒன்றாக என் மனதில் எழுந்தன: ஏராளமான அங்கத்தினர்களடங்கிய ஒரு பார்லிமெண்டு நிறைவேற்றிய ஒரு சட்ட நடவடிக்கைக்கு சர்க்கார் தலைவர்கள்தான் பொறுப்பாளிகளென்று கூறுவது சாத்தியமா? ஒரு சிறந்த ராஜதந்திரியின் வேலை என்ன? அரிய கொள்கைகளையும், ஆக்கத் திட்டங்களையும் மடசாம்பிராணிகளடங்கிய ஒரு கூட்டத்தினருக்கு விளக்கி வீண் காலம் போக்க வேண்டுமா? மகத்தான அரசியல் முறைகளைச் சிந்தித்து, அவைகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரும் ஆற்றல் படைத்த ராஜதந்திரிகளுக்குத் தளுக்குப் பேச்சுகளால் பிறரைத் தம் வசப்படுத்தி அவர்களுடைய சம்மதத்தைப் பெறும் திறமை இன்றியமையாத ஓர் அம்சமா? தேர்தல் முறையின் முடிவு தற்செயலான ஒரு விஷயமாகும். தவிர, அம்முறை

யோக்கியப் பொறுப்பற்ற விதத்திலும் கையாளப்படுவதுண்டு. அப்படியிருக்க, அந்த ரீதியில் அமைக்கப்பட்ட ஒரு சபையில் ஒரு சிறந்த ராஜதந்திரி தம் கொள்கைக்குப் பெரும்பாலோருடைய ஆதரவைப் பெறத் தவறிவிட்டால், அவரைத் திறமையற்றவரெனக் கூறிவிடலாமா? இவ்வுலகில் எப்போதுமே மேதாவியின் நடவடிக்கையானது பொது ஜனங்களின் அவிவேகத்தையும் மந்தத்தையும் கண்டிப்பதாக இருப்பது வழக்கமல்லவா? அப்படியிருக்க தமது கொள்கைக்கு ஆதரவைத் தேடுவதற்காக பார்லிமெண்டு அங்கத்தினர்கள் குழாமை, தளுக்கு வார்த்தைகள் கூறித் திருப்தி செய்ய முடியாவிடில் ஒரு ராஜதந்திர நிபுணர் என்ன செய்வது? அவர் லஞ்சம் கொடுத்து அக்கூட்டத்தின் சம்மதத்தை விலைக்கு வாங்குவதா? பிடிவாதமும், மடத்தனமுமுள்ள ஒரு கூட்டத்தைத் திருப்தி செய்ய முடியவில்லை என்பதற்காக அவர், தேசத்தின் வாழ்விற்கே உயிர்நாடி போல் தோன்றும் முறைகளை அமுலுக்குக் கொண்டு வராமல் விட்டுவிடுவதா? அத்தகைய நிலைமையில் அவர் பதவியிலிருப்பதா அல்லது விலகி விடுவதா? ஆழ்ந்த அரசியல் அறிவு படைத்த அவர் தம்முடைய ஒழுக்கத்திற்கும் யோக்கியப் பொறுப்பு உணர்ச்சிக்கும் முரணின்றி, அப்பிரச்னையை எவ்விதம் தீர்ப்பது? உண்மையான தலைவர் தம்மை வயிற்றுப் பிழைப்பு அரசியல்வாதிகளுக்குச் சமமாக இழிவுபடுத்திக் கொள்ள முடியுமா? எவ்வித நடவடிக்கை பற்றியும் இறுதியான பொறுப்பு தம் தலையில் சுமராதென்பதையறியும் வயிற்றுப் பிழைப்பு அரசியல்வாதி, விபரீதமான அரசியல் திருவிளையாடல்களில் ஈடுபடாமலிருப்பாரா? எனவே பெரும்பான்மையோரின் முடிவை ஆதாரமாகக் கொண்ட நம் பார்லிமெண்டு சர்க்கார் முறை, உண்மையான தலைவர்கள் வருவதற்கே வழியின்றிச் செய்வதாக இல்லையா? மானிட வர்க்கத்தின் முன்னேற்ற முறைகள் தனி நபரின் மூளையிலிருந்து உதயமாகின்றனவா அல்லது பெரும்பான்மையோரின் மூளையிலிருந்து உதயமாகின்றனவா? மேதாவிகளின்றி மானிட வர்க்க நாகரிகம் எதிர்காலத்தில் திருப்திகரமாகத் திகழ முடியுமா? அதிலும் முக்கியமாக, தற்போது மகத்தான நிர்மாண சக்தி பொருந்திய தனி நபரின் மூளை இன்றியமையாதல்லவா?

பெரும்பான்மையோரின் தீர்ப்பை ஆதாரமாகக் கொண்ட பார்லிமெண்டு முறையானது தனி நபரின் அதிகாரத்தை, அதாவது அவரது புத்திசாதுர்யத்தினால் ஏற்படக்கூடிய பலனை நிராகரிக்கின்றது. அறிவாளிகளின் அதிகார முறை என்ற மூலாதாரமான இயற்கை நியதிக்கு பார்லிமெண்டு ஆட்சி முரணாகும். பார்லிமெண்டு முறையின் நாசகரமான பலனை யூதர் பத்திரிகைகளை வாசிப்போர் உணர்ந்து கொள்ள

முடியாது. சுயேச்சையாக சிந்தித்து, உண்மைகளை ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யும் ஆற்றல் படைத்தோர்தான் அதையறிந்து கொள்வது சாத்தியம். புண் மனமும், மத்திய தர அறிவும் படைத்த பேர்வழிகளால் ஆக்கிரமிக்கப்படும் ஒரு சபையில், இணையற்ற மேதையும், நிர்மாண சக்தியும் வாய்க்கப் பெற்ற தனியொருவர் எவ்விதம் இடம் பெற்றுத் தம்முடைய கருத்துகளையும், கொள்கைகளையும் உருவகப்படுத்த முடியும்? அத்தகைய மேதாவியைக் கண்டால் அக்கூட்டத்தினருக்கு பொறாமையும் வெறுப்புமே உண்டாகும். பெரும்பான்மையோரை எப்படியாவது திருப்தி செய்யும் பேர்வழிகள்தான் அதில் வெற்றியடைய முடியும். எனவே அத்தகைய சபை அற்ப புத்தி படைத்தவர்களையே ஆதரிக்கும்.

பொறுப்பேற்க பயந்து பதுங்குவோருக்குத்தான் பார்லிமெண்டு தகுதியான இடமாக இருந்து வருகிறதேயன்றி அஞ்சா நெஞ்சமும் ஆண்மையும், பொறுப்பேற்று மார்தட்டும் தைரியமும் உள்ளவர்களுக்கு அங்கு இடமில்லை. ஒரே வார்த்தையில் கூறுமிடத்து, அது நாளடைவில் வயிற்றுப்பிழைப்பு அரசியல்வாதிகளும், பரஸ்பர புகழ்ச்சியில் பண்டிதர்களும், அறியாமையும் கோழைத்தனமுமுள்ள குதர்க்கவாதிகளும் நிறைந்த ஒரு குழாமாகிவிடுகின்றது. மேலே குறிப்பிட்ட குணங்கள் நிறைந்த பதவி மோகக்காரர்களின் எண்ணிக்கைக்கு எல்லையேயில்லை. பொறுப்பின் பளு எவ்வளவுக்கெவ்வளவு குறைகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அத்தகையோரின் தொகையும் அதிகமாகி வரும். அச்சபைக்குள் செல்ல தங்களுக்கு எப்போது சந்தர்ப்பம் வாய்க்குமென சாதக பட்சிபோல் காத்துக் கொண்டிருப்பவர்களடங்கிய ஜாப்தாவுக்கு முடிவே கிடையாது. அவர்களில் யாராவது ஒருவர் நீண்டகாலம் பதவியிலிருந்துவிட்டால், ஏதோ தங்களுக்குள் ஏற்பட்டிருக்கும் புனிதமான ஒப்பந்தம் மீறப்பட்டுவிட்டதுபோல் மற்றவர்கள் ஆத்திரமடைந்து அப்பேர்வழியை விரட்டும் வரையில் பேசாமலிருக்க மாட்டார்கள். பதவியிலிருந்து விலகுவோர், காத்துக் கொண்டிருப்போரின் ஜாப்தாவில் மீண்டும் வந்து சேர்ந்து, தங்களுடைய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பர். ‘நீண்ட காலம் பதவியிலிருந்த உனக்கு இன்னும் இங்கு என்ன வேலை’ என்று இதரர்கள் அவரை விரட்டியடித்து விடவும் ஏதுவுண்டு. தப்பித் தவறி ஒரு சிறந்த மேதாவி அச்சபைக்கு வந்து விட்டாலோ, அவரை வீழ்த்தும் விஷயத்தில் மற்றெல்லோரும் ஒன்று சேர்ந்து விடுவார்கள். கோழைகளும் அறிவிலிகளுமான அக்கோஷ்டியினருக்கு இந்த ஒரு விஷயத்தில் மாத்திரம் புத்தி மிகவும் திட்சண்யமாக வேலை செய்யும். ‘பெரும்பான்மையோர்’

அறியாமைக்கு மாத்திரமல்ல, கோழைத்தனத்திற்கும் பிரதி நிதிகளாக இருக்கிறார்கள். நூறு மடையர்கள் ஒரு மேதாவிக்குச் சமமாவார்களா! ஆகமாட்டார்கள். அதுபோலவே, ஆத்தும பலமும் திடமனமும் தேவையான ஓர் அரசியல் சாகஸத்தை நூறு கோழைகள் சேர்ந்து சாதித்துவிட முடியாது. மேலே நான் குறிப்பிட்டுள்ள சகல அவலட்சணங்களும் ஆஸ்திரிய பார்லி மெண்டிற்குப் பொருந்தியிருந்தன. ஆஸ்திரிய பிரதம மந்திரியை சக்ரவர்த்தியே நியமித்து வந்தாரெனினும், அந்த நியமனமானது பார்லிமெண்டின் விருப்பத்தை அனுசரித்தேயிருந்தது. ஒவ்வொரு மந்திரி பதவியையொட்டியும் அற்பத்தனமும், லஞ்சமும், பேரமும் தாண்டவமாடின. அதனால் அடிக்கடி மந்திரிகள் மாறுவர். அதற்குற்றாற்போல் அப்பதவிக்கு வரும் நபர்களின் யோக்கியதாம்சங்களும் படிப்படியாகக் குறைந்து வரும். மேற்கத்தி ஜனநாயகத்தின் அற்பத்தனமான அரசியல் சூழ்ச்சிகளுக்கெல்லாம் வியன்னா ஒரு பள்ளிக்கூடம் போலிருந்தது.

சர்க்கார் நிலைமை அப்படியிருக்க, நல்ல வழியிலோ அல்லது கெட்ட வழியிலோ பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கும் பத்திரிகைகள் யூதர்களின் நிர்வாகத்திலிருந்து வந்தன. சாதாரண கல்விக்கு எவ்விதம் கல்விசாலைகளும், கலாசாலைகளும் அத்தியாவசியமானவையோ, அதுபோல் அரசியல் கல்வி அபிவிருத்திக்குப் பத்திரிகைகள் அத்தியாவசியமானவை. பொதுஜனங்களின் மனதில் ஏதோ ஒரு குறிப்பிட்ட நம்பிக்கையை உண்டுபண்ணுவது பத்திரிகைகளுக்கு எவ்வளவு சுலபமென்பதை அப்போது நான் அனுபவத்தில் அறிந்துகொண்டேன். அப்பத்திரிகைகள் அற்ப விஷயத்தை மலைபோல் செய்துவிடும், தேசத்திற்கே ஜீவநாடியான விஷயங்களை முற்றிலும் அசட்டை செய்துவிடும், அல்லது பொது ஜனங்களின் பார்வையிலிருந்து தந்திரமாக மழுப்பி மறைத்துவிடும். மற்றும் யாருக்குமே தெரியாத ஓர் அற்பப் பதரை ஒரு சில வாரங்களுக்குள் பிரமாதப்படுத்தி தேசத்தின் க்ஷேமமே அவரைத்தான் பொறுத்திருக்கிறதென்று ஸ்தாபிக்கும் உண்மையான திறமையும், அறிவுமுள்ளவர்கூட பல வருஷங்கள் கஷ்டப்பட்டாலும் அவ்வளவு கீர்த்தி பெற முடியாது. அதேபோல் அரசியல் முதலிய இதர துறைகளிலும் பல வருஷ அனுபவமும், கீர்த்தியும் பெற்ற பிரமுகர்களை, அவர்கள் இறந்துவிட்டதுபோல் - பொது ஜனங்கள் அலட்சியமாக மறந்துவிடும்படி செய்துவிடும். இல்லாவிடில் அவர்கள் மீது அபாண்டமான அவதூறுகளைக் கூறி அவர்களைத் தலைதூக்க விடாமல் செய்துவிடும். ஏதோ மந்திர வித்தை போன்று அத்தகைய அறிஞர்கள் பல்வேறு திக்குகளிலிருந்தும், நூற்றுக்கணக்கான மூலை முடுக்குகளிலிருந்தும் ஏக காலத்தில் தூற்றப்படுவார்கள்!

அவ்விதம் தூற்றும் பகற்கொள்ளைக்காரர்கள், தங்கள் நோக்கம் பூர்த்தியாக எம்முறையையும் கையாளத் தயங்குவதில்லை. தங்கள் விரோதிகளின் கீர்த்திக்குப் பெருங்களங்கத்தை உண்டுபண்ணி, அவர்களை அடியோடு வீழ்த்துவதற்காக அவர்களுடைய குடும்ப விஷயங்களை எல்லாம் கிளறிப் பார்ப்பார்கள். அவ்வாறு கிளறிப் பார்த்தும் கூட, தங்களுடைய விரோதிகளின் குடும்ப வாழ்க்கை சம்பந்தமாகவோ அல்லது பொது வாழ்க்கை சம்பந்தமாகவோ எவ்வித இழிவான தகவலும் கிடைக்காவிடில், அவர்கள் மீது பொதுவாக தங்களுடைய அவதூறுகளைச் சரமாரியாய்ப் பொழிந்து வருவார்கள். அந்த அபாண்ட அவதூறுகள் ஆயிரந்தடவை மறுக்கப்பட்டாலும், அந்த அக்கிரமக் காரர்கள் தங்கள் கூற்றை நிறுத்த மாட்டார்கள். இடைவிடாது அவ்விதம் தூற்றி வருவதன் மூலம் ஜனங்கள் அதை நம்பி விடுவார்களென்பது அவர்களின் எண்ணம். ஓய்ச்சல் ஒழிவற்ற அத்தகைய தாக்குதல்களால், பெரும்பாலான நிரபராதிகளும் சோர்வடைந்து இறுதியில் வீழ்ச்சியுறுவர். அதேசமயம், உண்மையைப் பட்டவர்த்தனமாக எடுத்துக் கூற வேண்டியது பொது ஜனங்களுக்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமை என்றும் அப்பேர்வழிகள் கூசாது பசப்புவார்கள். பொதுஜன அபிப்பிராயத்தில் மூன்றில் இருமடங்கை உருவாக்குவோர் அத்தகைய பிரகிருதிகளாகவே இருந்தனர். அவர்களடங்கிய சபைதான் பார்லிமெண்டு! பார்லிமெண்டை விஸ்தாரமாக வர்ணிப்பதாயின் அதற்கு ஒரு புத்தகம் போதாது, பல பாகங்கள் எழுத வேண்டியிருக்கும். எனினும் அதன் முக்கிய அம்சங்களைக் கவனிப்போர் எவ்வளவு சாதுக்களாயினும் பார்லிமெண்டின் பகட்டையும், பிரயோஜனமின்மையையும் உணர்ந்து கொள்ளாதிருக்க முடியாது.

நிற்க, ஜனநாயக பார்லிமெண்டு ஆட்சி முறையை உண்மையான ஜெர்மன் ஜனநாயகத்துடன் ஒப்பிட்டுப் பார்ப்போம். அவ்வாறு ஒப்பிட்டுப் பார்ப்பதன் மூலம்தான் மேலே குறிப்பிட்ட விபரீதம் எவ்வளவு ஆபத்தானதென்பதையும், மதியீனமானதென்பதையும் அறிந்து கொள்வது சுலபமாக இருக்கும். பார்லிமெண்டில் சுமார் ஐந்நூறு அங்கத்தினர்கள் வரை தேர்ந்தெடுக்கப்படுகின்றார்களென வைத்துக் கொள்வோம். சமீபகாலமாக பெண்களும்கூட அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். எவ்விஷயத்தையொட்டியும் இறுதியான தீர்ப்புக் கூற பார்லிமெண்டிற்கு அதிகாரம் அளிக்கப்படுகின்றது. அவர்கள் ஒரு மந்திரி சபையை நியமிக்கின்றார்களெனினும், உண்மையில் நிர்வாகத்தை நடத்துகின்றவர்கள் பார்லிமெண்டு அங்கத்தினர்கள்தான். அவர்களின் சம்மதமின்றி மந்திரிசபை

எதுவும் செய்ய முடியாது. எக்காரியத்தைச் சாதிப்பதாயினும் மந்திரிசபை, பார்லிமெண்டு சபையைக் கொஞ்சிக் கேட்டு அதன் சம்மதம் பெற்றுத்தான் சாதிக்க முடியும். பெரும் பான்மையோருடைய ஆதரவு கிடைக்காவிடில், மந்திரிகள் பதவியிலிருந்து விலகும்படி நேருகின்றது. மந்திரிசபையின் கொள்கை சரியாயினும், தவறாயினும், பார்லிமெண்டின் முத்திரையின்றி அது எதுவும் செய்வதற்கில்லை. இந்நிலையில் அச்சபையின் எத்தகைய கூற்றுக்கும் குறிப்பிட்ட எவரும் பொறுப்பாளியல்ல!

ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்படும் ஐந்நூறு அங்கத்தினர்களும் வாழ்க்கையின் பல்வேறு துறைகளிலிருந்தும் வந்தவர்கள். அவர்களில் ஒவ்வொருவருடைய அரசியல் திறமையும் ஒவ்வொரு ரகமாக இருக்கும். எனவே அவர்களையெல்லாம் சேர்த்து இணைப்பது, மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போடுவதற்கொப்பாகும். அவர்களெல்லாரும் முதல்தர அறிவாளிகளென எவரும் கூற முடியாது. பொதுஜன வாக்குரிமையின் மூலம் ராஜதந்திரிகளைச் சிருஷ்டித்துவிட முடியாது. சர்வஜன வாக்குரிமையிலிருந்து மேதாவிகள் ஜனிக் கின்றார்களென்பதைக் காட்டிலும் மடத்தனமான எண்ணம் வேறெதுவுமேயில்லை. நூற்றுக்கணக்கான அங்கத்தினர்களில் ஒரு சிறந்த ராஜதந்திரி இருப்பதே அபூர்வம். சர்வசாதாரண அறிவு படைத்த ஐந்நூறு பேர்கள் மிக மிக முக்கியப் பிரச்னை களையொட்டி முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. மற்றும் பல்வேறு துறைகளையொட்டிய பிரச்னைகளையும் அவர்கள் பரிசீலனை செய்து தீர்மானங்களைச் செய்ய வேண்டியிருக்கிறது. அவர்களில் பத்தில் ஒரு மடங்கு பேர்கள் பொருளாதாரப் பிரச்னைகளையொட்டிய அரிச்சுவடி கூட அறிந்தவர்களாக இருக்க மாட்டார்கள். அந்நிலைமையில், தேசத்தின் விதியையே நிர்ணயிக்கக் கூடிய பொருளாதார விஷயங்களையொட்டி அத்தகையோர் என்ன தீர்மானம் செய்ய முடியும்? ஆழ்ந்த ஆராய்ச்சியும், அனுபவமும் அத்தியாவசியமான வெவ்வேறு முக்கியப் பிரச்னைகளையொட்டியும் அவர்கள் என்ன முடிவு செய்வது சாத்தியம்? அத்தகைய முடிவு ஒரு தேசத்திற்கு எவ்விதம் நன்மை பயக்க முடியும்? அந்த ஐந்நூறு பேர்களில் ஒவ்வொருவரும் சகலகலா வல்லவராக இருந்தாலொழிய, பல்வேறு பிரச்னைகளையொட்டியும் திருப்திகரமான முடிவுகளைச் செய்ய அவர்கள் தகுதியுள்ளவர்களென்று எவரும் கூற முடியாது. ஆனால் அத்தகைய ஒரு மேதாவி ஒரு நூற்றாண்டுக்கு ஒரு முறைதான் ஜனிப்பார். எனவே பார்லிமெண்டை அலங்கரிக்கும் கனவான்களில் பெரும்பாலோரும் சூதாட்ட மேஜைக்கு

யோக்கியதை உடையவர்களல்ல. தேசத்தின் விதிகளை நிர்ணயிக்கக்கூடிய பெரும் பிரச்னைகளையொட்டி அவர்கள் நடத்தும் விவாதமும், செய்யும் தீர்மானமும் அவர்களுடைய யோக்கியதையை அனுசரித்தே தானிருக்கும்!

இன்னும் அச்சபைக்குச் செல்லும் யோக்கியர்கள் கூட தேசத்துரோகிகளாக மாறும்படியான நிர்ப்பந்தமும் ஏற்படுகின்றது. உதாரணமாக, யோக்கியப் பொறுப்புள்ள ஓர் அங்கத்தினர், "கனவான்களே, இந்த மகத்தான பிரச்னை மிகவும் சிக்கலானது. இப்போது நாம் பேசும் விஷயம் பற்றி நமக்கு எதுவுமே தெரியாது. அது எப்படியாயினும், இவ்விஷயமாக நடக்கும் விவாதத்தில் கலந்து கொள்ள எனக்குத் திறமையில்லை" என்று தைரியமாகச் சொன்னாலும்கூட அச்சபையில் அவரது கண்ணியமான தன்மையை எவரும் புகழ மாட்டார்கள். அதற்கு மாறாக அவரை தந்திரமாக நடந்து கொள்ளத் தெரியாத ஒரு சாத்வீக மடையனென்றும், பார்லிமெண்டு நாடகத்திற்குற்ற பாத்திரமல்லவென்றும் கருதுவார்கள். தன்னை, பிறர் மடையனென்று நினைக்க யார்தான் விரும்புவார்கள்? எனவே நண்பர்களின் ஏளனத்திற்குப் பயந்து அத்தகையோர் "ஆமாம் சாமி" களாகி மற்ற தேசத் துரோகிகளுடன் ஐக்கியமாகி விடுவார்கள். அவர்களின் யோக்கியப் பொறுப்பு உணர்ச்சியும், மனச்சாட்சியும் நாளடைவில் மறைந்து மண்ணாகிவிடும்.

ஒரு சபையென்றிருந்தால் அதிலுள்ள சகலரும் குறிப்பிட்ட பிரச்னைகளில் நிபுணர்களாக இருக்க வேண்டும் என்ற அவசிய மில்லை. ஒரு சில நிபுணர்களடங்கிய கமிட்டிகளிலிருந்தால் போதும், அவைகள் கூறும் ஆலோசனைகளை ஆதாரமாகக் கொண்டு சபை முடிவு செய்யலாமென சிலர் வாதிக்கலாம். அவ்விதமாயின், ஒரு சில நிபுணர்கள் முடிவு செய்ய வேண்டிய பிரச்னைகளையொட்டி அனாவசியமாக ஐந்நூறு பேர்கள் ஏன் விவாதித்துக் காலத்தைக் கழிக்க வேண்டும்? எனவே அது காரியவாதமேயன்றி, உண்மையை ஆதாரமாகக் கொண்டதல்ல. அறிவாளிகளும், விஷயஞானமுள்ளவர்களுமடங்கிய ஒரு சபையைக் கூட்ட வேண்டுமென்பது நவீன ஜனநாயக பார்லிமெண்டு முறையின் நோக்கமல்ல. உண்மை என்னவெனில் ஐந்நூறு அங்கத்தினர்களின் மூலம் தங்களிஷ்டப்படி காரியங்களை நடத்த முடிகின்றது. அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு அறிவிலிகளாகவும், சமய சஞ்ஜீவிகளாகவுமிருக்கின்றார்களோ, அவ்வளவுக்கவ்வளவு திரைமறைவில் வேலை செய்யும் சைத்தான்களுக்குக் கொண் டாட்டமாகின்றது. அந்நிலைமையில்தான் நடவடிக்கைகளுக்குப் பொறுப்பையேற்கத் தயாராயிருக்கும் எவர்தான் அச்சபையில் சேர நாட்டங்கொள்வார்? மேலே குறிப்பிட்ட லட்சணங்கள்

வாய்ந்த ஒரு சபையை, யூதர்களைத் தவிர வேறு யார்தான் புகழ்வர்! அவர்களைப் போன்றே அச்சபையும் ஊழலும், பொய்மையும் நிறைந்திருக்கிறதல்லவா!

ஆனால், ஜெர்மன் ஜனநாயக முறையோ அதற்கு முற்றிலும் முரணாகும். ஜெர்மன் தலைவரை, ஜனங்கள் தங்களிஷ்டப்படி தேர்ந்தெடுக்கின்றார்கள். அத்தலைவர், தாம் கைக்கொண்ட நடவடிக்கைகளுக்கும் கைக்கொள்ளத் தவறிய நடவடிக்கைகளுக்கும் பொறுப்பேற்றுக் கொண்டுதான் தீரவேண்டும். அப்பதவிக்கு பல்வேறு சூழ்ச்சிகளைச் செய்து ஒரு சமய சஞ்சீவி வந்துவிட்டால் என்ன செய்வதென்று கேட்கலாம். எனினும் கடவுள் கிருபையால், ஜெர்மன் ஜனநாயக முறையானது அதற்கிடங் கொடுப்பதில்லை. யோக்கியப் பொறுப்பு, அறிவு, அஞ்சாநெஞ்சம் முதலிய குணாதிசயங்களிராதவர்கள், அத்தகைய மகத்தான பொறுப்பை வகிக்கத் துணிந்து முன்வரமாட்டார்கள். ஒருவேளை அவர்கள் வந்தாலும், அவர்களின் வேஷம் சீக்கிரத்தில் வெளியாகி, 'பிடி ஓட்டம், அயோக்கியப் பயலே! உன் கால்களால் இந்தப் புனிதப் படிகளைக் கறையாக்காதே. சரித்திர ஆலயத்தின் வாசற்படிகளான இவை, மகான்கள் செல்லுவதற்காக அமைக்கப்பட்டவை அல்ல' என்று விரட்டியடிக்கப்பட்டு விடுவார்கள். ஜெர்மன் தலைவர் பீடமானது சமய சஞ் சீவிகளுக்கேற்றதல்ல, உத்தமர்களுக்குத்தான் அதில் இடமுண்டு.

வியன்னா பார்லிமெண்டுக் கூட்டங்களை இரண்டு வருஷகாலம் கவனித்து வந்ததன் பயனாக, அத்தகைய அபிப்பிராயங்கள் என் மனதில் உருவடைந்தன. அதன்பின் அச்சபைக்கு நான் போகவேயில்லை.

ஹாப்ஸ்பர்க் ராஜ்யம் பலம் குன்றியதற்கு, பார்லிமெண்டு ஆட்சிமுறைதான் காரணம். அப்பார்லிமெண்டில் நாளுக்கு நாள் ஜெர்மானியர்களின் ஆதிக்கம் குறைந்து வந்தது. மற்ற பல்வேறு பிரிவினருக்குள் முரண்பாடுகள் அதிகமாகி வந்தன. அவர்கள் செய்த தீர்மானங்கள் அற்பத்தனமானவையாக இருந்ததால், பார்லிமெண்டின் மீது ஜனங்களுக்கிருந்த மதிப்பும் குறைந்தது. ஹங்கேரியர்கள் ஸ்லேவியர்கள், செக் நாட்டினர் முதலியோர் அச்சீர்குலைவைக் கண்டு ஆனந்தமடைந்து வந்தார்கள். ஆர்ச் டியூக் பிரான்ஸ் பர்டினான்டின் செல்வாக்கு காரணமாக செக் நாட்டினரின் அதிகாரம் பெருகி வந்தது. முற்றிலும் ஜெர்மானியர்கள் நிறைந்த ஜில்லாக்களில்கூட கலப்பு பாஷைகள் தாண்டவமாட ஆரம்பித்தன. செக் நாட்டினர், வியன்னாவைத் தங்களுக்குச் சொந்தமான பிரமாண்ட நகரமாகக் கருதினர். ஹாப்ஸ்பர்க் குடும்பத்திலும் செக் பாஷைக்கே சலுகை அதிகமாயிற்று. ஆர்ச் டியூக்கின்

மனைவி செக் நாட்டுச் சீமாட்டியாதலால், பரம்பரையான ஜெர்மன் எதிர்ப்பு அவள் மனதில் வேரூன்றியிருந்தது. மத்திய ஐரோப்பாவில் ஒரு ஸ்லேவிய அரசாங்கத்தை ஏற்படுத்துவதுதான் ஆர்ச் டியூக்கின் மூலாதாரமான நோக்கமாக இருந்தது. முற்றிலும் கத்தோலிக்க மணத்தை ஆதாரமாகக் கொண்டு அதை அமைப்பதன் மூலம், அது ருஷியாவிற்கு எதிரான ஒரு கோட்டையாக இருக்க வேண்டுமென்பதும் அவரது எண்ணமாகும். அவ்வாறாக ஹாப்ஸ்பர்க் சரித்திரத்தில் பல தடவைகளிலும் நிகழ்ந்திருப்பதுபோல், மதமான அரசியல் கொள்கையை உருவாக்க உபயோகித்துக் கொள்ளப்பட்டது. ஆனால் அக்கொள்கை, ஜெர்மனியின் நலன்கள் சம்பந்தப்பட்ட வரையில் ஒரு விபரீத கொள்கையாகவே முடிந்தது. பல அம்சங்களிலும் அதன் பலன் துக்ககரமாகியது. அக்கொள்கையின் மூலம் எதிர்பார்த்த வெகுமதி ஹாப்ஸ்பர்க் குடும்பத்திற்கோ அல்லது கத்தோலிக்கர்களுக்கோ கிடைக்கவில்லை. ஹாப்ஸ்பர்க் குடும்பம் சிம்மாசனத்தையிழந்தது. கத்தோலிக்கர்கள் ஒரு பெரிய அரசாங்கத்தையிழந்தனர். மற்றும் அவர்கள் போட்ட விதை இறுதியில் அவர்களுக்கே நேர் விரோதமாக முடிந்தது. அதாவது ஜெர்மன் ஆதிக்கத்திற்கு இடமேயில்லாமல் செய்ய அவர்கள் முயற்சித்தனர். அம்முயற்சியின் பயனாக ஆஸ்திரியாவில் அகில ஜெர்மன் இயக்கமானது தலைதூக்க ஆரம்பித்தது!

2526ம் (1866) ஆண்டு நடந்த யுத்தத்தில் ஆஸ்திரியா அவமதிப்பிற்கு உள்ளானதால், அதற்குப் பிரதியாக வஞ்சம் தீர்த்துக் கொள்ள ஹாப்ஸ்பர்க் குடும்பத்தினர் உத்தேசித்தார்கள். 2530-31ல் (1870 - 71) நடந்த மகத்தான யுத்தத்திலும் ஆஸ்திரியாவின் அபிலாஷை பூர்த்தியாகாததால், ஆஸ்திரியாவில் ஜெர்மன் பூண்டே இராமற் செய்துவிட ஹாப்ஸ்பர்க் குடும்பத்தினர் உறுதி கொண்டனர். அதன் பயனாக ஜனங்களிடையே கலகத் தீ கொழுந்துவிட ஆரம்பித்தது. தேசியவாதிகளும், தேச பக்தர்களும் அப்போதுதான் முதன் முதலாக கலகக்காரர்களாக மாறினர்.

ஜனங்களுக்காகத்தான் அரசாங்கம் இருக்கின்றதேயொழிய அரசாங்கத்திற்காக ஜனங்களில்லை. ஜனங்களின் க்ஷேமத்தில் கருத்துள்ள அரசாங்கத்திற்குப் பாதுகாப்பளிக்க வேண்டியது அவசியம். ஆனால் ஜனங்களின் நாசத்தை விரும்பும் அரசாங்கத்தை ஒழித்துவிடுவதுதான் சிறந்ததாகும். ஜனங்களை நசுக்க அரசாங்கம் என்ன ஆயுதங்களை உபயோகிக்கின்றதோ, அதே ஆயுதங்களை ஜனங்களும் அரசாங்கத்தை ஒழிக்கும் விஷயத்தில் கையாள வேண்டும். இல்லாவிடில் அவ்வித அரசாங்கத்தை எதிர்த்து ஜனங்கள் விடுதலையும் சுதந்திரமும் பெற முடியாது. சகல ஆயுதங்களையும் உபயோகித்தால்தான்

அன்னியரின் ஆதிக்கத்திலிருந்தோ அல்லது உள்நாட்டில் தாண்டவமாடும் அடக்குமுறையிலிருந்தோ விடுதலை பெற முடியும். அரசாங்கத்தின் உரிமைகளைக் காட்டிலும் மானிடரின் உரிமைகள் மேலானவை. அந்த உரிமைகளை எவ்விதத்திலும் பாதுகாத்தே தீரவேண்டும். இவ்வுலகில் வீரர்களான வர்ணத்தினர் தான் வாழமுடியுமே அன்றி, கோழைகள் வாழமுடியாது.

அப்போது ஹாப்ஸ்பர்க் குடும்பமும் சரி, ஆஸ்திரிய பார்லிமெண்டும் சரி, ஜெர்மானியர்களுக்கு விரோதமாகவே இருந்தன. எனவே அவைகளின் மூலம் ஜெர்மானியர்கள் தங்கள் உரிமைகளைப் பெற முடியுமென நினைப்பது பைத்தியக்காரத்தனமாகும். மற்றும் சட்டபூர்வமான முறைகளைக் கொண்டு அவைகளை எதிர்ப்பதும் முடியாத காரியம். ஜெர்மானியர்களை எதிர்க்க ஹாப்ஸ்பர்க் குடும்பம் எவ்விதம் தன் சக்தி முழுவதையும் உபயோகித்ததோ, அதுபோலவே அகில ஜெர்மன் கட்சியினரும் அக்குடும்பத்தை எதிர்ப்பதில் தங்கள் சக்தி முழுவதையும் உபயோகித்தனர். ஆஸ்திரிய சர்க்காரின் படுமோசமான ஊழல்களை அக்கட்சி அம்பலத்திற்குக் கொண்டு வரவே, லட்சக்கணக்கானவர்கள் கண் திறந்து உண்மை நிலைமையை அறிந்தனர். அகில ஜெர்மன் கட்சியினர் செய்த மகத்தான கைங்கர்யங்களில் இந்தத் தொண்டும் ஒன்றாகும்.

எனினும், அக்கட்சியின் செல்வாக்கு திடீரென உச்சஸ்தானத்தை அடைந்தது போல், திடீரென பாதாளத்திற்குச் சென்றுவிட்டது. மற்றோர்புறம் கிறிஸ்துவ அபேதவாதக் கட்சி அபாரமான செல்வாக்கை அடைந்தது. அகில ஜெர்மானியர் கட்சியின் செல்வாக்கு அவ்விதம் வீழ்ச்சியுற்றதற்கு காரணத்தை என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை. அது ஒரு புதிர் போலிருந்தது. எனினும் அந்த காரணங்களை அறிந்து கொள்வதற்கான சிறந்த சந்தர்ப்பம் எனக்கு அதி சீக்கிரத்தில் வாய்த்தது.

அப்பிரச்னையை ஆராயுமுன், அவ்விரு இயக்கங்களின் ஸ்தாபகர்களும், தலைவர்களுமான ஜார்ஜ் வான்ஷூனரர் மீதே எனக்கு முதலில் அதிக அன்பு ஏற்பட்டது. சிறிது காலங்கழித்து கிறிஸ்துவ அபேதவாதக் கட்சித் தலைவரான டாக்டர் கார்ல் லூகர் மீதும் அதே அன்பு ஏற்பட்டது. ஷூனரை ஒரு தீர்க்கதரிசியென்றே கூறவேண்டும். அவ்விருவரும் பார்லிமெண்டு பொம்மைகளைப் போலல்ல, மகா மேதாவிகள். அரசில் ஊழல்கள் மலிந்து கிடந்த உலகில் அவர்கள் இணையற்ற, களங்கமற்ற திலகங்களாக விளங்கினர். ஆஸ்திரிய சாம்ராஜ்யம் வீழ்ச்சி அடைந்தே தீருமென தெளிவாகவும், திட்டமாகவும் கூறியவர் அவர்தான். ஹாப்ஸ்பர்க் சாம்ராஜ்யத்தைக் குறித்து அவர் விடுத்த எச்சரிக்கைக்கு ஜெர்மனி செவி சாய்த்திருக்குமாயின்,

நாசகரமான மகாயுத்தம் ஒருகாலும் ஏற்பட்டிராது. மூலாதாரப் பிரச்னைகளின் தத்துவங்களைத் திட்டமாக அறிந்து கொள்வதில் ஷூனரர் திறமை வாய்ந்தவரெனினும், மனித இயற்கையை அறிந்து கொள்ளும் ஆற்றல் விசேஷமாக வாய்க்கப் பெற்றவர். மனிதரின் சுபாவத்தை அறிந்து கொள்வதில் டாக்டர் லூகருக்கோ அவ்வித ஆற்றல் இல்லை. மனிதரின் சுபாவத்தை அறிந்து கொள்வதில் டாக்டர் லூகர் அபூர்வ சாமர்த்தியசாலியாக இருந்தார். தமது கொள்கைகளை உருவகப்படுத்தி அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரும் உறுதியும், உத்வேகமும் ஷூனரருக்கில்லை. தவிர, அக்கொள்கைகளின் உயர்வை பாமரர்கள் தெளிவாக அறிந்து கொள்ளும்படி செய்யவும் அவரால் முடியவில்லை. எனவே ஷூனரர் ஒரு வெறும் தீர்க்கதரிசியாகத்தானிருக்க முடிந்ததேயன்றி, தமது கொள்கைகளை அமுலுக்குக் கொண்டு வருவதில் அவர் வெற்றிபெற முடியாமற்போயிற்று. மானிட சுபாவத்தை அறிந்து கொள்ளும் திறமை அவருக்கில்லாததால், சில இயக்கங்களுக்குக் காரணமான சக்திகளை அவரால் சரிவர மதிப்பிட முடியவில்லை. எக்கொள்கைகளையும் பாமர ஜனங்கள் அறிந்துகொள்ளும்படி செய்தாலன்றி பலனில்லை என்பதையும் அவர்களின் சுயநலமும், தியாக புத்தியின்மையுமே அதற்குக் காரணமென்பதையும் ஷூனரர் உணரவில்லை.

டாக்டர் லூகர், மானிட சுபாவத்தை நன்கறிந்தவராதலால், தம்முடைய இயக்கத்திற்குப் புராதன ஸ்தாபனங்களின் ஆதரவைப் பெற சகல முறைகளையும் கைக்கொண்டார். கத்தோலிக்கர் விஷயத்திலும் அவர் மிகவும் புத்திசாலித்தனமான கொள்கையை அனுஷ்டித்ததால் அவர்களுடைய ஆதரவையும் பெற்றுத் தமது புதிய கட்சியைப் பலப்படுத்தினார். அவர் ஒரு தந்திரி என்பதுடன் சிறந்த சீர்திருத்தவாதியுமாவார். முடியரசுக்கே வியன்னா ஹிருதய ஸ்தானமாக இருந்து வந்ததால், அதைச் சீர்திருத்திவிட்டால் சாம்ராஜ்யமாகிற சரீரத்தின் மற்ற உறுப்புகளெல்லாம் ஆரோக்கியம் பெற்றுவிடுமென அவர் கருதினார். அது முற்றிலும் சரியேயாயினும், அத்தகைய சீர்திருத்த முறையை அமுலுக்குக் கொண்டு வருவதற்குற்ற அவகாசம் அவருக்கு இராமற்போய்விட்டது.

அவ்விரு தலைவர்களும் மகாமேதாவிகளாயினும் இருவருடைய லட்சியங்களும் இறுதியில் வெற்றி பெறவில்லை. அதாவது ஆஸ்திரியாவை ரக்ஷிக்க லூகரால் முடியவில்லை. ஆஸ்திரியாவில் ஜெர்மன் ஜனங்களின் வீழ்ச்சியைத் தடுக்க ஷூனரரால் முடியவில்லை.

அவ்விரு கட்சிகளின் தோல்வியானது இப்போது எனது நண்பர்களுக்கு ஒரு சிறந்த படிப்பினையாக அமைய வேண்டியது

அத்தியாவசியம். பல விதத்திலும் அதுபோன்ற நிலைமையே இன்றும் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் செய்த தவறுகளை நாமும் செய்யாமலிருக்க, அப்படிப்பினையானது நமக்கு ஓர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அகில ஜெர்மானியர் இயக்கம் தோல்வியுற்றதற்குக் காரணம் அக்கட்சியினர் பாமர ஜனங்களைத் தங்கள் வசப்படுத்திக் கொள்ளாததுதான். அதனால்தான் அக்கட்சி அஸ்திவார பலமின்றி இறுதியில் வீழ்ச்சியுற்றது.

ஆஸ்திரியாவில் அகில ஜெர்மானியர் இயக்கம் எழுந்தபோது, அங்கு ஜெர்மானியர்களின் நிலைமை மிகவும் மோசமாக இருந்தது. அவர்களை நாளடைவில் ஒழிப்பதற்கான ஒரு கருவியாக பார்லிமெண்டு உபயோகிக்கப் பெற்று வந்தது. அவ்விபரீதத்திலிருந்து அவர்கள் விடுதலை பெற வேண்டுமாயின், பார்லிமெண்டு முறை தகர்க்கப்பட வேண்டும். அது தகர்க்கப்படுவதற்கோ அப்போது வழியெதுவுமில்லை. மற்றும் பார்லிமெண்டு முறையைத் தகர்க்க ஜெர்மானியர்கள் உள்ளே பிரவேசிக்க வேண்டுமா அல்லது வெளியிலிருந்து கொண்டே அதையொழிக்க முற்படலாமா என்ற பிரச்னையும் எழுந்தது. அவர்கள் உள்ளே சென்று, தோல்வியடைந்து வெளியே வந்தனர். அவர்களுக்கு, பார்லிமெண்டில் பிரவேசிப்பதைத் தவிர வேறு வழியுமில்லை. ஏனெனில் வெளியிலிருந்து கொண்டு அதை எதிர்த்துப் போராட வேண்டுமாயின், அதற்கு இரண்டு அத்தியாவசியமான ஆயுதங்கள் வேண்டும். அதாவது இணையற்ற தைரியமும், களங்கமற்ற தியாக உணர்ச்சியும்தான். அத்தகைய சந்தர்ப்பங்களில் முட்டவரும் மாட்டை எதிர்த்து நின்று அதன் கொம்பைப் பிடித்துக் கொட்டத்தை அடக்க வேண்டும். இரத்த வெள்ளம் ஓடினாலும் எலும்புகள் நொறுங்கினாலும் எழுந்து நின்று மார்தட்டும் மனோபலமிருக்க வேண்டும். மகத்தான தியாகங்கள்தான் எவ்வியக்கத்திற்கும் புதிய வீரர்களை ஆகர்ஷிக்கும். அப்படியானால்தான் நீண்டகாலப் போராட்டத்திற்குப் பின் வெற்றி பெற முடியும். அந்த லட்சியம் பூர்த்தி பெற பாமரர்களின் உதவிதான் இன்றியமையாதது. அவர்களுக்குத்தான் இணையற்ற உறுதியும் உயிரைத் துச்சமாக மதிக்கும் தியாக உணர்ச்சியும் உண்டு. அகில ஜெர்மானியர்கள் இயக்கத்தில் அவர்கள் இராததாலேயே அக்கட்சியினர் பார்லிமெண்டில் பிரவேசிக்க நேர்ந்தது. அவர்கள் பார்லிமெண்டிற்குள் பேசிய பேச்சுகள் பாமர ஜனங்களின் செவிகளுக்கெட்டுவதற்கும் வழியில்லை. மற்றும் வயிற்றுப் பிழைப்பு அரசியல்வாதிகள் நிறைந்த ஒரு சபையில் உண்மையும், நீதியும் எவ்விதம் வெற்றி பெற முடியும்?- கழுதைக்குத் தெரியுமா குங்குமப்பூ வாசனை! அதுபோலவே பார்லிமெண்டில் அகில

ஜெர்மானியர் கட்சியின் கூக்குரலானது செவிடன் காதில் சங்கு ஊதிய கதையாக முடிந்தது. அத்தகைய சபையில் தொண்டைத் தண்ணீர் வற்றக் கத்துவதால் என்ன பலனேற்படுவது சாத்தியம்? போதாக்குறைக்கு பத்திரிகைகளும் அவர்களுடைய பேச்சுகளை உருத்தெரியாமல் சுருக்கியோ அல்லது திரித்தோ பிரசுரித்து அக்கட்சிக்குப் பாதகத்தை உண்டாக்கின.

வெளியிலிருந்த அக்கட்சியைச் சேர்ந்தவர்கள், உள்ளே சென்றவர்களால் பிரமாத பலனேற்பட்டு விடப் போவதாக எதிர்பார்த்து வந்தனர். இறுதியில் எவ்வித பலனுமேற்படாத அவர்களெல்லோருக்கும் மிகுந்த ஏமாற்றமுண்டாகி கட்சி பலவீனமடைந்தது. அக்கட்சித் தலைவர்கள் அடிக்கடி பொதுக் கூட்டங்கள் கூட்டி ஜனங்களுடன் நேர் சம்பந்தம் வைத்துக் கொள்ளவுமில்லை. நேர் சம்பந்தம் வைத்துக் கொண்டிருந்தால் அவர்கள் தங்களுடைய அலுவல்களைப் பொது ஜனங்களுக்கு விவரமாக எடுத்துக் கூற முடிந்திருக்கும். அதன் பயனாக அவர்களுக்குப் பொதுஜன ஆதரவும் கிடைத்திருக்கும். அதை விடுத்து பார்லிமெண்டில் மோகம் கொண்டது அவ்வியக்கத்தையே அடியோடு சீர்குலைத்தது.

எழுத்தாளர்களும், இலக்கிய ஆசிரியர்களும் எவ்வியக்கத்தையும் உருவாக்கவோ அல்லது மகத்தான மாறுதல்களை உண்டு பண்ணிவிடவோ முடியாது. அவர்கள் அத்தகைய மாறுதல்களுக்குக் காரணமான கொள்கைகளை எழுத்து மூலம் ஜனங்களின் முன்னிலையில் சமர்ப்பிக்கலாமேயன்றி, அரசியல், மத சண்டமாருதங்கள் பேசும் வார்த்தைகளின் மந்திர சக்தியினால் மாத்திரம்தான் குமுறிக்கொண்டு கிளம்ப முடியும். எந்த சக்தியும் மாற்ற முடியாத பாமரர்களின் மனதை, வாசாலகர்களின் வீர கர்ஜனை கொள்ளை கொண்டுவிடும். உலகிலுள்ள சகல பெரும் இயக்கங்களும் மானிடரின் ஆவேசப் பேச்சுகளிலிருந்தும் உணர்ச்சி வேகத்திலிருந்தும் பீறிட்டெழுந்த எரிமலைகளே. இரக்கமற்ற கஷ்டகால தேவியினாலோ அல்லது ஆவேசப் பேச்சின் தீப்பந்தத்தினாலோ அவை பொங்குகின்றன. எவ்வித மகத்தான இயக்கமும் அடுப்பங்கரை வீரர்களாலோ அல்லது நளின எழுத்தாளர்களாலோ ஒருநாளும் உருவடைந்ததில்லை.

ஆவேச உணர்ச்சியுள்ள தலைவர்கள்தான் ஜனங்களின் மனதிலும் ஆவேசக் கனலைத் தூண்ட முடியும். அவ்வித உணர்ச்சி உள்ளவர்கள்தான் தலைவர்கள் பீடத்திற்கு வர இறைவனால் சிருஷ்டிக்கப் பெற்றவர்கள். மற்றவர்கள் தலைவர்களாகத் தகுதியற்றவராவர்.

உயர்ந்த லட்சியத்தை உடைய ஓர் இயக்கத்தினர், பாமர ஜனங்களுக்கும் தங்களுக்கும் உள்ள தொடர்பை ஒருபோதும்

இழந்துவிடக் கூடாது. அவர்கள் செய்யும் எத்தீர்மானமும் அதற்கு முரணின்றி இருக்கவேண்டும். பாமர ஜனங்களிடம் தங்களுக்குள்ள செல்வாக்கு குறையக் கூடிய எக்காரியத்தையும் அவர்கள் தவிர்க்க வேண்டும். பாமர ஜனங்களிடம்தான் மகத்தான சக்தியுள்ளது. எனவே எந்த அரிய கொள்கையையும், அவர்களுடைய ஆதரவினால்தான் அமுலுக்குக் கொண்டுவர முடியும். மற்றும் அத்தகைய கொள்கைகளை அமுலுக்குக் கொண்டுவர முற்படும்போது ஏற்படும் எவ்வித கஷ்டங்களையும் கண்டு சோர்வடைந்துவிடக் கூடாது. கஷ்டமான பாதையைக் கண்டு கலங்குவதன் காரணமாகத்தான் இவ்வுலகில் உயர்ந்த லட்சியங்கள் சிதறுண்டு போகின்றன. அகில ஜெர்மன் கட்சியினர் அவ்வித கஷ்டங்களைக் கண்டு கலங்கி, சுலபமான பார்லிமெண்டு முறையில் நாட்டங் கொண்டதால்தான் இறுதி வெற்றிக்கு யோக்கியதையற்றவராயினர். அவர்கள் முதலிலேயே பாமர ஜனங்களிடையே மனதைச் செலுத்தி பார்லிமெண்டு மோகத்தை உதறித் தள்ளியிருப்பார்களாயின் மகத்தான வெற்றி பெற்றிருப்பார்கள். எந்தப் பெரிய இயக்கத்தின் உயிர்நாடியும் தொழிற்சாலைகளிலும், தெருக்களிலும், அதாவது பாமரர்களிடையிருக்கிறதே அன்றி பார்லிமெண்டில் இல்லை.

மற்றும் அகில ஜெர்மன் கட்சித் தலைவர்கள் கத்தோலிக்கர்களுக்கு எதிராகப் போராட்டம் துவங்கியதும் தவறாகும். அதிலிருந்து, ஆத்துமார்த்த விஷயங்களில் ஜனங்களின் மனப்போக்கை அவர்கள் அறிந்துகொள்ள வில்லை என்பது தெரிகிறது. மத விஷயங்களில் தலையிட அரசியல் கட்சிகளுக்கு உரிமையில்லை. மத விஷயங்களாவது தேச க்ஷேமத்திற்கு விரோதமாக இருந்தால், அதையொட்டி மாத்திரம் ஆட்சேபிக்கலாமேயன்றி, மற்றப்படி அவ்விஷயங்களில் தலையிடுவது கூடாது.

எந்தெந்த விஷயங்களில் அகில ஜெர்மன் கட்சியினர் தவறினார்களோ அவ்விஷயங்களிலெல்லாம் கிறிஸ்துவ அபேதவாதக் கட்சியினர் சரிவரவும், முறைப்படியும் நடந்து கொண்டார்கள். பாமர ஜன ஆதரவின் முக்கியத்துவத்தை முதலிலேயே அவர்கள் நன்கு அறிந்து நம்பிக்கையும் உறுதியும் தியாக உணர்ச்சியுமுள்ள ஏராளமானவர்களின் ஆதரவைப் பெற்றார்கள். மத ஸ்தாபனங்களுடன் தகராறு செய்து கொள்ளாமல், கத்தோலிக்கர்களின் பேராதரவையும் பெற்றனர். பிரசாரத்தின் பலனையும் அவர்கள் உணர்ந்து அதற்குற்றவாறு நடந்து கொண்டனர். அப்படி எல்லாமிருந்தும் அக்கட்சியின் லட்சியம் அதாவது ஆஸ்திரிய சாம்ராஜ்யம் வீழ்ச்சியுறாமல் பாதுகாக்க வேண்டுமென்ற லட்சியம் நிறைவேறாததற்குக் காரணம், யூதர் பிரச்னை விஷயத்தில் அவர்கள் கைக்கொண்ட

முறைதான். அவர்களுடைய யூதர் எதிர்ப்புக் கொள்கையானது முற்றிலும் மதத்தை ஆதாரமாகக் கொண்டிருந்தது. யூதர்கள் தேசத் துரோகிகளென்ற முறையில் எதிர்ப்பு இருந்திருந்தால் அவர்களுக்குப் பிரமாத ஆதரவும், வெற்றியும் கிடைத்திருக்கும். மதத்தை ஆதாரமாகக் கொண்டு எழுந்த எதிர்ப்பை யூதர்கள் சில துளி ஞானஸ்நானத்தின் மூலம் சமாளித்துக் கொண்டு, வழக்கம்போல் தங்கள் விபரீத நடவடிக்கைகளைத் தொடர்ந்து செல்ல முடிந்தது. சாரமற்ற அந்த எதிர்ப்பைப் பலரும் அறிந்துகொள்ள முடியவில்லை. மகத்தான அப்பிரச்னை விஷயத்தில் அக்கட்சி தீவிரமாக நடந்து கொள்ளத் தவறியதே அதன் லட்சியம் நிறைவேறாமற் போனதற்குக் காரணம்.

இருந்தாலும் அக்கட்சிக்குக் காரணஸ்தரான டாக்டர் கார்ல் லூகர் மீது எனக்கு ஏற்பட்ட மதிப்பு சிறிதும் குறையவில்லை. அவர் காலமானபோது நடந்த பிரேத ஊர்வலத்தில் கலந்து கொண்ட லட்சக்கணக்கானவர்களில் நானும் ஒருவன். நகர் வழியாகச் சென்ற அந்த ஊர்வலத்தைக் கண்டு என் மனம் உருகியது. ஆஸ்திரியாவை ரட்சிக்க அவர் செய்த காரியங்களெல்லாம் அடியோடு வீணாயினவென்பதை நான் உணர்ந்தேன். டாக்டர் லூகர் ஜெர்மனியில் அவதரித்திருந்திருப்பாராயின், அவர் ஜெர்மானியர்களின் சிறந்த தலைவர்களில் ஒருவராக இடம் பெற்றிருப்பார். ஆனால் அவர் ஆஸ்திரியாவில் பிறந்தது அவருக்கும், அவரது இயக்கத்திற்கும் துரதிர்ஷ்டமாகும். அவர் மாண்டபோது, ஆஸ்திரியாவை அழிக்கும் ஊழித் தீ பரவ ஆரம்பித்துவிட்டது. நல்லவேளையாக அக்கோலத்தை அவர் நேரில் பார்க்கும்படி நேராமல் மாண்டது கடவுள் கிருபையேயாகும்.

கிறிஸ்துவ அபேதவாதக் கட்சியினர் யூதர் எதிர்ப்பு முறையைச் சரிவரக் கையாண்டு உண்மைத் தேசியவாதிகளாக இருந்திருப்பார்களாயின் அல்லது அகில ஜெர்மன் கட்சித் தலைவர்கள் பாமர ஜனங்களின் ஆதரவைப் பெற வேண்டிய அவசியத்தை உணர்ந்து நடந்திருப்பார்களாயின், ஜெர்மனியின் விதியையே வெற்றிகரமாக மாற்றியிருக்கலாமென்பது என்னுடைய அபிப்பிராயம்.

ஹாப்ஸ்பர்க் சாம்ராஜ்யத்தின் மீது எனக்கிருந்த வெறுப்பு நாளுக்கு நாள் அதிகமாகி வந்தது. ஆஸ்திரிய சர்க்காரால் ஜெர்மானியர்களுக்கு துரதிர்ஷ்டம் தானேற்படுமென்ற எண்ணமும் என் மனதில் பலமடைந்து வந்தது. உண்மையான பெருமையும், மேதையுமுள்ள எந்த ஜெர்மானியரையும் ஆஸ்திரியா முன்னேறவிடாதென்பதை நான் சந்தேகமறத் தெரிந்து கொண்டேன். பல்வேறு தேசத்தினரும், போதாக்குறைக்கு

யூதர்களும் சேர்ந்த ஒரு கதம்ப ராஜ்யமான ஆஸ்திரியாவின் வீழ்ச்சியைத் தடுப்பது அசாத்தியமான காரியமென்பதையும் நான் வெறுத்ததாலும், ஆஸ்திரியாவின் வீழ்ச்சிதான் ஜெர்மனியின் புனருத்தாரணத்திற்கு முதற்படியாக இருக்குமெனக் கருதினேன். எனவே இளமையிலிருந்து என் மனம் நாடி வந்த ஜெர்மனிக்குச் செல்ல வேண்டுமென்ற தாபம் எனக்கு நாளுக்கு நாள் அதிகமாகி வந்தது. சிற்பக் கலையில் பிரசித்தி பெற்று என் தேசத்திற்குத் தொண்டு செய்வதில் எனது திறமையை உபயோகிக்கும் காலம் வரலாமென நான் நம்பினேன்.

என் வாழ்க்கையிலேயே சிறந்த பாடங்களை நான் வியன்னாவில்தான் கற்றுக் கொண்டேன். சிறு பையனாக இருந்தபோது அந்நகருக்கு வந்தேன். அதை விட்டுச் சென்றபோது மனோவேதனையும், தீர்க்காலோசனையுமுள்ள ஒரு மனிதனாகி விட்டேன். தேசீய அபேதவாதக் கொள்கையின் மூலாதாரமான அம்சங்களை அங்குதான் தெரிந்துகொண்டேன். நான் வியன்னாவில் கழித்த வருஷங்கள் எவ்வளவு பிரயோஜனகரமானவை என்பது இப்போதுதான் எனக்குத் தெரிகின்றது. அப்போது என் மனதில் பதிந்த மூலாதாரமான கொள்கைகளே தேசீய அபேதவாதக் கட்சியாக உருவடைந்து ஐந்து வருஷ காலத்திற்குள் ஆச்சரியகரமாக வளர்ச்சி பெற்றிருக்கின்றன. விதியின் நிர்ப்பந்தத்தினாலும், அபார ஆராய்ச்சியினாலும் நான் அந்த இளம் வயதிலேயே அப்படிப்பினைகளை எல்லாம் கற்றுக் கொண்டிராவிடில், யூதர் பிரச்னை, அபேதவாத ஜனநாயகம் அல்லது மார்க்ஸ் கொள்கை முதலியவை பற்றி இன்று எனது மனோ நிலைமை எவ்விதமாகியிருக்குமோ எனக்குத் தெரியாது. அங்கு நான் பட்ட கஷ்டங்களும், அவை காரணமாக எழுந்த சிந்தனைகளுமே என்னை உருவாக்கி, என் மனதை உறுதிப்படுத்தி, என் விதியை என் இஷ்டப்படி நானே நிர்ணயித்துக் கொள்ளும் ஆற்றலையும் உண்டு பண்ணின.



# 4. நான் கண்ட முடிவு

கடைசியில் 2572ம் (1912) வருஷம் நான் மியூனிச் வந்து சேர்ந்தேன். அந்நகர் எனக்குப் புதிதாகத் தோன்றவில்லை. ஏதோ பல வருஷங்கள் அந்நகரில் வசித்திருப்பது போன்ற உணர்ச்சியே ஏற்பட்டது. அதற்குக் காரணமென்னவெனில், ஏற்கனவே நான் ஜெர்மன் சிற்பத்திலும், சித்திரத்திலும் இடைவிடாது கவனம் செலுத்தி வந்ததுதான். ஜெர்மனியை ஒருவர் நன்கு அறிந்து கொள்ள வேண்டுமாயின் அவர் மியூனிச்சை அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகும். மியூனிச்சைப் பார்க்காதவர்கள், ஜெர்மன் கலையைப் பற்றிய ஞானம் பெறுவதென்பது முடியாத காரியம்.

என் வாழ்க்கையிலேயே நான் மியூனிச்சில் கழித்த நாட்கள்தான் சந்தோஷமும், சமாதானமும் நிறைந்த நாட்களாகும். சித்திரமெழுதுவதன் மூலம் அப்போது எனக்குக் கிடைத்த வருமானம் அற்பமேயெனினும், நான் என் படிப்பைத் தொடர்ந்து செல்ல போதிய அவகாசமிருந்தது. மற்றும் அதிக கவலையின்றி சில்லறைக் கஷ்டங்களை சகித்துக் கொள்ளும் மன உறுதியும் எனக்கிருந்தது.

மியூனிச்சில் நான் காலடி எடுத்து வைத்ததிலிருந்தே அந்நகர் மீது மற்றெந்த விடத்தையும் காட்டிலும் எனக்கு அத்தியந்த பிரேமையேற்பட்டது. அது ஒரு ஜெர்மன் நகரமல்லவா! வியன்னாவிற்கும் அதற்கும் எவ்வளவு வேற்றுமை! கசடும், கதம்ப சமூகங்களும் நிறைந்த வியன்னாவை மனதால் நினைத்தாலும் எனக்கு வெறுப்பேற்பட்டது. மியூனிச்சில் எனக்குத் திருப்தியை அளித்த மற்றொரு விஷயமென்னவெனில், அங்கு ஜனங்கள் பேசிய ஜெர்மன் பாஷையின் தோரணைதான். வியன்னாவில் அந்தத் தோரணை வேறுவிதமாக இருந்தது. மற்றும் ஆயிரக்கணக்கான சில்லறை விஷயங்கள் மியூனிச் மீது எனக்குள்ள பிரேமையை அதிகப்படுத்தின. உலகிலுள்ள மற்றெந்த விடத்தையும் காட்டிலும் மியூனிச் மீது எனக்குள்ள பாசத்திற்கு மற்றொரு முக்கிய காரணம் உண்டு. என் சொந்த வாழ்க்கை மலர்ச்சி பெற்று உருவடைந்தது அவ்விடத்தில்தான். வியாபார நாட்டங் கொண்டவர்களை அந்நகர் வசீகரிக்காவிடினும், வனப்பைப் பருகும் ஆற்றல் பெற்ற சகலரையும் அந்த அற்புத நகரமானது ஆகர்ஷித்தது.

அங்கு நான் அரசியல் விஷயங்களிலும் சிரத்தையெடுத்துக் கொண்டேன். ஆஸ்திரியாவிடம் ஜெர்மனிக்கு அந்தரங்கத்தில் நம்பிக்கையில்லை என்றும், இருந்தாலும் அதை ஜெர்மனி வெளிக்காட்டிக் கொள்ள விரும்பவில்லை என்றும், நான்

வியன்னாவிலிருந்தபோது கருதி வந்தேன். ஆனால் அந்த எண்ணம் தவறென்பது மியூனிச்சில் எனக்குத் தெரியவந்தது. ஹாப்ஸ்பர்க் முடியரசின் உண்மை ஸ்வரூபத்தை ஜெர்மனியில் ஒருவராவது அறிந்து கொள்ளாது மதிமயங்கிக் கிடந்ததைக் கண்டு ஆச்சரியமும், திகிலுமடைந்தேன். ஆஸ்திரியா சக்தி பொருந்திய ஒரு நேச தேசமென்றும், எனவே அதன் ஆதரவு தங்களுக்கு இன்றியமையாததென்றும் ஜெர்மனியிலுள்ள பெரும்பாலோரும் எண்ணி வந்தனர். ஆஸ்திரியாவுக்கும் ஜெர்மனிக்கும் இருந்த சம்பந்தம் அடியோடு மறைந்துவிட்டது என்பதையும், ஆஸ்திரிய சாம்ராஜ்யமே படுவீழ்ச்சி அடையும் தறுவாயிலிருந்து வருகிறது என்பதையும் அவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை.

"விஷயம் தெரிந்த ராஜதந்திரிகள்" கூட ஆஸ்திரியாவின் பகட்டுப் பிரகடனங்களை நம்பி வந்ததால், பாமர ஜனங்களுக்கும் அதே நம்பிக்கை ஏற்பட்டது. அந்த ராஜதந்திரிகள், வழக்கம் போன்று கண்மூடித்தனமாக அபாயகரமான வழியில் சென்று வந்தார்கள். அதிகாரவர்க்கத்தின் அபிப்பிராயங்கள்தான் பாமர ஜனங்களின் மனதிலும் புகுத்தப்பட்டிருந்தன. அந்த உயர்தர அதிகாரிகள் நேச தேசத்தினிடம் தலைவணங்கி வந்தன. பகைவரிடம் பல்லைக் காட்டி மரியாதையாக நடந்து கொள்வது, அவர்களுடைய அயோக்கியத்தனத்திற்கு ஒரு மாற்றாகுமென ஜெர்மன் அதிகார வர்க்கம் நினைத்து வந்தது போலும்! ஆனால், ஜெர்மன் ஆஸ்திரிய சம்பந்தத்தையும், இத்தாலியும் சேர்ந்து செய்து கொண்ட முக்கூட்டு ஒப்பந்தத்தையும் பிரேக் பத்திரிகைகள் மாத்திரம் பரிகாசம் செய்து வந்தன. அந்த ஒப்பந்தம் ஏட்டுச் சுரைக்காயென்றும் சோதனைக் காலம் வரும்போது அது தகர்ந்துவிடுமென்றும் அப்பத்திரிகைகள் கூறிவந்தன. அதன்படியே சில வருஷங்கள் கழித்து அந்த ஒப்பந்தம் முதன்முதலாக சோதனைக்கு வந்தபோது, இத்தாலி அதிலிருந்து விலகிக் கொண்டதுடன் நில்லாமல், பகைவர்களுடனும் சேர்ந்து கொண்டது மிகுந்த ஆத்திரத்தை உண்டுபண்ணியது.

ஆஸ்திரியாவில் ஹாப்ஸ்பர்க்கைச் சேர்ந்தவர்களும் ஜெர்மன் ஆஸ்திரியர்களும் மாத்திரமே அந்த ஒப்பந்தத்தை ஆதரித்தனர். ஹாப்ஸ்பர்க்கைச் சேர்ந்தவர்கள் அதை ஆதரித்ததற்குக் காரணம் சுயநலம்தான். ஜெர்மன் ஆஸ்திரியர்களோ, நல்லெண்ணத்தினாலும் அரசியல் அறியாமையினாலும் அதை ஆதரித்தனர். ஜெர்மனியிடம் அணுவளவும் அபிமானமில்லாத ஆஸ்திரியாவுடன் ஒப்பந்தம் செய்து கொள்வதால் பலனேற்படாது, பாதகம்தான் நேருமென்பதை அவர்கள் உணரவில்லை. ஹாப்ஸ்பர்க் குடும்பத்தினருக்கோ அந்த ஒப்பந்தம் ஒரு வரப்பிரசாதமாயிற்று. ஏனெனில் இனி சிறிதும் பயமின்றி

ஆஸ்திரியாவில் ஜெர்மன் பூண்டை வேரோடு களையும் கொள்கையைத் தீவிரமாக அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரலாமல்லவா! ஆஸ்திரியாவிலுள்ள ஜெர்மானியர்களும் அவ்விபரீதத்தை எதிர்க்க முடியவில்லை. யாராவது எதிர்த்தால் ஆஸ்திரிய- ஜெர்மன் ஒப்பந்தத்தைச் சுட்டிக்காட்டி அவர்களை வாயடைத்துப் போகும்படி செய்துவிட முடியும். மற்றும் ஹாப்ஸ்பர்க் ஆட்சியில் தனக்குள்ள நம்பிக்கையை ஜெர்மன் சாம்ராஜ்யமே பகிரங்கமாக ஒப்புக் கொண்டிருக்கும்போது ஜெர்மன் ஆஸ்திரியர்கள் மாத்திரம் அந்த ஆட்சி முறையைக் கண்டிப்பது எவ்விதம் சாத்தியமாகும்? அவர்கள் கண்டிக்கும்பட்சத்தில், தேச நலன்களுக்குப் பாதகத்தை உண்டுபண்ணும் துரோகிகளென்று கூக்குரல் கிளம்பும். ஆஸ்திரியாவில் ஜெர்மன் பூண்டே வேரறுக்கப்பட்ட பின், அந்த ஒப்பந்தம் இருந்தாலென்ன அல்லது ஒழிந்தாலென்ன? அதனால் ஜெர்மனிக்கு என்ன நன்மை ஏற்பட முடியும்?

ஜெர்மன் ஜனங்கள், சரித்திரத்தையும் மானிட சுபாவத்தையும் ஆராய்ச்சி செய்திருப்பார்களாயின், இத்தாலியும் ஆஸ்திரியாவும் தோளோடு தோளிடித்துக் கொண்டு நிற்க முடியாதென்பதை உணர்ந்திருப்பார்கள். ஹாப்ஸ்பர்க் சர்க்கார் சார்பில் போரிட இத்தாலிய சர்க்கார் ஒரே ஒரு இத்தாலி சிப்பாயை அனுப்பத் துணிந்தாலும், இத்தாலி அதை ஆட்சேபித்து எரிமலை போல் அக்னியைக் கக்க ஆரம்பித்திருக்கும். ஏனெனில் ஹாப்ஸ்பர்க் குடும்பத்தினர் பலநூற்றாண்டுகளாக இத்தாலியின் சுதந்திரத்திற்குப் பாதகமான கொடுமைகளை இழைத்து வந்திருக்கிறார்கள். எனவே அவர்களை இத்தாலியர்கள் மன்னிப்பதென்பது முடியாத காரியம். இத்தாலிக்கு, ஆஸ்திரியாவின் பக்கத்தில் வாழ இரண்டே வழிகள் தானிருந்தன. ஒப்பந்தம் அல்லது யுத்தம். யுத்தத்திற்குத் தயாராக சாதகமாயிருப்பதற்காகவே அது ஆஸ்திரியாவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டது. மற்றும் ஆஸ்திரியாவிற்கும் ருஷியாவிற்குமுள்ள தகராறை யுத்தத்தின் மூலம் தீர்த்துக் கொள்வதென்ற மனோபாவம் அதிகமாகி வருகையில், ஜெர்மன் - ஆஸ்திரிய ஒப்பந்தக் கொள்கை மடத்தனம் என்பதுடன் ஆபத்துமாகும். முக்கியமாக ஒப்பந்தம் செய்து கொள்வதன் நோக்கம் என்ன? ஜெர்மன் ஜனங்களுக்கு நன்மையேற்பட வேண்டுமென்பதுதான், அவர்களின் ஜீவனத்திற்கான பிரச்னையைத் தீர்க்க வேண்டும் என்பதுதான்.

ஜெர்மனியின் ஜனத்தொகை வருஷா வருஷம் ஒன்பது லட்சம் வீதம் அதிகமாகி வருகின்றது. எனவே அவ்விதம் பெருகி வரும் புதிய ஜனங்களின் ஜீவனத்திற்கு வழி செய்வதிலுள்ள

கஷ்டங்களும் வருஷத்திற்கு வருஷம் அதிகமாகி, இறுதி உற்பாதத்தை உண்டுபண்ணியே தீரும். ஆதலால் அத்தகைய பயங்கர விளைவைத் தடுக்க வேண்டும். அவ்விதம் தடுக்க நான்கு வழிகளிருந்தன.

*1)* பிரெஞ்சு உதாரணத்தைப் பின்பற்றி செயற்கை முறைகளின் மூலம் கர்ப்பத் தடையை அமுலுக்குக் கொண்டு வந்து ஜனத்தொகை பெருகுவதைத் தடுத்திருக்கலாம். பெரும் கஷ்ட காலத்திலோ, மோசமான சீதோஷ்ண ஸ்திதி காரணமாகவோ அல்லது இயற்கையின் போக்கு காரணமாக விளைவு குறைவதன் மூலமோ ஜனங்கள் துன்பத்திற்குள்ளாகின்றனர். இவையெல்லாம் ஜனத்தொகை பெருகுவதைத் தடுப்பதற்காக சிற்சில தேசங்களிலும் சிற்சில வர்ணத்தாரிடையேயும் இயற்கைதேவி கையாளும் முறைகள். அவை புத்திசாலித்தனமானவை என்பதுடன், தயவு தாட்சண்யமுமற்றவை. எனினும் அம்முறைகள் உற்பத்தி சக்தியைத் தடுப்பதில்லை, ஜனங்களைப் பல்வேறு சோதனைகளுக்கும் கஷ்டங்களுக்கும் உட்படுத்தி, அவைகளைத் தாங்கும் சக்தியற்ற பலவீனர்களை இறைவனடி சேர்த்து விடுகின்றன. அச்சோதனைகளைச் சமாளிப்போர் மாத்திரமே பலத்துடன் உயிர் வாழ்கின்றனர். அத்தகைய சோதனைகளின் பயனாக பழையன கழிந்து இவ்வுலகில் வாழ லாயக்குள்ளவர்கள் மாத்திரம் புத்துயிரும், புதிய ஆரோக்கியமும், புதிய பலமும் பெறுகின்றனர். மற்றவர்களை இயற்கை தேவி திருப்பி அழைத்துக் கொண்டு விடுகிறாள். அதனால் குறிப்பிட்ட ஜனங்களின் சக்தியும், அவர்களுடைய சந்ததிகளின் சக்தியும், சிறந்த முறையில் பாதுகாக்கப்பட்டு அபாரமாக அபிவிருத்தி அடைகின்றன. இயற்கை உற்பாதம் காரணமாக ஜனத்தொகை குறைவதன் மூலம் ஜனங்களின் சக்தி அபிவிருத்தியே அடைகின்றது.

ஆனால் ஜனத்தொகையைக் கட்டுப்படுத்த மனிதன் செயற்கை முறைகளைக் கைக்கொள்வதென்பது வேறு விஷயம். சுயநலத்தை மாத்திரம் கருதும் மனிதனைத் தவிர, சமூக க்ஷேமத்தில் சிரத்தை கொண்ட எவரும் கர்ப்பத்தடை முறையை ஆதரிக்க மாட்டார்கள். இயற்கை முறைகளால் சிருஷ்டி அல்லது உற்பத்தி சக்திக்கு, அதாவது குழந்தைகளின் ஜனனத்திற்குத் தடையேற்படுவதில்லை. பூமியில் வாழத் தகுதியற்றவர்கள் மடிந்து விடுகிறார்கள், மற்றவர்கள் புதிய பலத்தைப் பெறுகிறார்கள். ஆனால் மனிதன் கையாளும் செயற்கை முறையோ ஜனனத்தையே தடுத்து விடுகின்றது. அதே சமயத்தில் இயற்கையின் உற்பாதங்களால் மடிய வேண்டியவர்களை, நோயாளிகளுள்பட சகலரையும் - பாதுகாக்க வேண்டுமென்ற ஆர்வத்தை உண்டுபண்ணி 'சோதா'க்களடங்கிய ஒரு சமூகத்தின் உற்பத்திக்கு விதை

விதைத்து விடுகின்றது. எந்த தேசம் இந்த செயற்கை முறையைக் கையாளுகின்றதோ, அந்த தேசத்தினரின் சக்தி தலைமுறை தலைமுறையாயக் குறைந்து, பலசாலிகளால் முறியடிக்கப்பட்டு, இறுதியில் இப்புவியிலிருந்தே மறைந்து விடும்படி நேரும். மானிடரின் ஜனனமானது ஆதியந்தமற்ற இயற்கை நியதி. எனவே, அதற்கு விரோதமாக நடந்து கொள்வோர், இயற்கை நியதியை எதிர்த்து தாங்கள் வெற்றி பெற்றுவிட்டதாகச் சிறிது காலம் தடபுடல் செய்யலாமெனினும், இறுதியில் அவர்கள் இயற்கையின் மகத்தான வஞ்சத்திற்குள்ளாகும்படியே நேரும். ஆகையால் கர்ப்பத்தடையைக் கைக்கொள்ளும் தேசம் எதிர்காலத்தில் க்ஷேமமடைய முடியாது.

2) ஜெர்மனியில் பெருகி வரும் ஜனத்தொகையை சமாளிப்பதற்கான இரண்டாவது வழியென்னவெனில் "உள்நாட்டுக் குடியேற்றமுறை". இம்முறை பிரமாதமாகப் புகழப்படுகிறதெனினும், பெரும்பாலோரும் இதைப் பற்றிச் சரியாக அறிந்துகொள்ளவில்லை. எனவே அதனால் மிகுந்த விபரீதமே ஏற்பட ஏதுவாகியிருக்கிறது.

பூமியின் செழுமையை அதாவது உற்பத்தி சக்தியை ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேல் அதிகப்படுத்த முடியாது. அதற்கு ஒரு எல்லையுண்டு. அவ்வாறு செய்வதன் மூலம் ஜெர்மனியில் அதிகரித்து வரும் ஜனத் தொகையைச் சிறிது காலம் வரையில் அவர்கள் பாதுகாக்கலாம். எனினும் பொதுவாக வாழ்க்கை அந்தஸ்து, ஜனத்தொகை விகிதத்தைக் காட்டிலும்கூட துரிதமாக உயர்ந்து வருகிறதென்ற உண்மையை நாம் கவனிக்க வேண்டும். தேவைப்படும் உணவும் உடையும் வருஷத்திற்கு வருஷம் அதிகமாகி வருகின்றன. நூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்தவரின் தேவைகளுக்கும் இப்போது நம் தேவைகளுக்குமுள்ள வேற்றுமை அற்ப சொற்பமல்ல. நாம் எவ்வளவு கஷ்டப்பட்டு உழைத்தாலும், விவசாயப் பொருள்களின் உற்பத்தியை ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேல் அதிகரிக்கச் செய்ய முடியாது. எனவே ஜனத்தொகை பெருகும் அளவிற்கு உற்பத்தியும் அதிகமாகாவிடில் பஞ்சத்தினால் ஜனங்கள் பரிதவிக்கும்படி நேரும். அத்தகைய சந்தர்ப்பங்களில் இயற்கைதான் குறுக்கிட்டு யார் மீள்வது, யார் மாள்வதென்பதை நிர்ணயிக்க வேண்டும். இல்லாவிடில் மனிதன் ஜனனத்தைத் தடுக்க செயற்கை முறைகளைக் கைக்கொள்வதன் மூலம் சமூகமே நாளடைவில் மறைந்தொழிய இடமேற்பட்டு விடும். மானிட வர்க்கத்தின் பெருக்கத்தைத் தடுக்கும்படியான நிர்ப்பந்தம் உலகம் முழுதும் ஏற்படக்கூடிய காலம் வரும். ஏனெனில் பூமியின் செழுமைக்கு, அதாவது உற்பத்தி சக்திக்கு ஓர் எல்லை உண்டு. ஆனால் ஜனத்தொகையின் பெருக்கத்திற்கு எல்லையில்லை.

அத்தகைய நிலைமை ஏற்படும்போது ஒன்று இயற்கை அதைத் தடுப்பதற்கான முறையைக் கைக்கொள்ள வேண்டும் அல்லது மனிதன் அதையொட்டி கர்ப்பத்தடையை விடுத்து வேறெதாவது சிறந்த முறைகளைக் கையாள வேண்டும். அப்போது அது மானிட வர்க்கம் முழுவதையும் பொறுத்த பிரச்னையாக இருக்கும். இப்போதோ, தங்கள் தேவைக்குப் போதிய பூமியை ஆர்ஜிதம் செய்து கொள்ளும் பலமும், தைரியமும் இராதவர்கள் மாத்திரமே கஷ்டத்திற்குள்ளாக வேண்டியிருக்கிறது.

இன்று உலகம் முழுதும் பரந்த விஸ்தீரணமுள்ள ஏராளமான பிரதேசங்கள் வேளாண்மை செய்யப்படாமலிருந்து வருகின்றன. அப்பிரதேசங்களை ஒரு குறிப்பிட்ட தேசத்தின் அல்லது சமூகத்தில் எதிர்கால உபயோகத்திற்காக இயற்கை ஒதுக்கி வைக்கவில்லை. அவைகளை ஆர்ஜிதம் செய்து கொள்ளும் பலமும், உழுது பயிரிடுவதற்கான ஊக்கமும் உள்ளவர்களையே அவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன. இயற்கை தேவிக்கு அரசியல் எல்லைகளென்பதே இல்லை. தன் குழந்தைகளுக்காக அவள் உலகைச் சிருஷ்டித்திருக்கிறாள். தைரியமும், உழைப்பும் உள்ளவர்கள்தான் அவளுடைய செல்வக்குழந்தைகள். இப்பூமியில் அவர்களுக்குத்தான் உயர்ந்த வாழ்வுண்டு.

மற்ற சமூகத்தினர் உலகம் முழுதும் இடைவிடாது புதிய புதிய பிரதேசங்களைக் கைப்பற்றி வரும்போது, ஒரு தேசம் மாத்திரம் "உள்நாட்டுக் குடியேற்ற" முறையுடன் நின்றுவிடுமாயின், அது தன் ஜனத்தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள நேரும். அதே சமயம் மற்ற தேசங்களோ தங்கள் ஜனத் தொகையைப் பெருக்கிக் கொண்டு வரும். சிறந்த தேசங்கள், அதாவது கலாச்சாரத் துறைகளில் உண்மையிலேயே உயர்ந்த தேசங்கள், தங்களுடைய கண்மூடித்தனமான சமாதானக் கொள்கை காரணமாக, புதிய பிரதேச ஆக்கிரமிப்பிலீடுபடாமல், "உள்நாட்டுக் குடியேற்ற"த்துடன் திருப்தியடைந்து வருவது துரதிருஷ்டகரமான ஓர் உண்மை. ஆனால் கீழ்த்தரமான தேசங்களோ, தங்கள் ஜனங்களின் குடியேற்றத்திற்காக உலகமெங்கும் பரந்த பிரதேசங்களை ஆக்கிரமிப்பதில் வெற்றி பெற்று வருகின்றன. இந்நிலைமை தொடர்ந்து வருமாயின், கலாச்சாரத் துறைகளில் கீழ்த்தர யோக்கியதையுள்ளவர்களாயினும் சுறுசுறுப்பும், சக்தியுமுள்ளவர்களே உலகம் முழுதும் ஆதிக்கம் செலுத்தும்படியான காலம் வந்துவிடும்.

மானிட வர்க்கத்தின் வாழ்க்கைக்காக இவ்வுலகில் பயங்கரப் போராட்டங்கள் உண்டாகும் காலம் வருமென்பதில் யாருக்கும் சந்தேகமிருக்க முடியாது. அப்போராட்டங்களின் இறுதியில், இயற்கையான தற்காப்பு உணர்ச்சிதான் வெற்றி பெறும்.

அவ்வுணர்ச்சியாகிற தீயின் முன் கோழைத்தனத்திற்கும், கர்வத்திற்கும் அறிகுறியான ஜீவகாருண்ய முறையானது சூரியனைக் கண்ட பனிபோல் மறைந்துவிடும். இடைவிடாத போராட்டத்தின் பயனாகத்தான் மனிதன் உயர்வடைந்திருக்கிறான். இடைவிடாத அமைதியில் அவனது உயர்வு மழுங்கியே தீரும். எனவே "உள்நாட்டுக் குடியேற்ற முறை" என்ற சுலோகமானது ஜெர்மானியர்களுக்கு ஆபத்தை உண்டாக்கக் கூடியது. அம்முறையை ஆதரிப்பவர்களில் யூதர்கள் முன்னணியில் நிற்பதே அந்த உண்மையை விளக்கப் போதுமானது. "உள்நாட்டுக் குடியேற்ற முறை", சமுதாய சம்பந்தமான குறைகளைத் தீர்க்கவல்லதென்றாலும், புதிய பிரதேச ஆர்ஜிதமின்றி ஒரு தேசம் எதிர்காலத்தில் க்ஷேமமடைய முடியாது. மற்றும் சிறிய ஒரு தேசத்தில் மிகக் குறைந்த அளவுதான் "உள்நாட்டுக் குடியேற்றமுறை" யை அனுஷ்டிக்க முடியும். மேலும் ஒரு தேசத்தின் விஸ்தீரணம் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக இருக்கின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு பிற நாட்டினர் அதன் மீது படையெடுப்பதும் கஷ்டம். ஆனால் குறைந்த விஸ்தீரணமுள்ள தேசத்தை எதிர்த்து ஜெயிப்பது சுலபம். மிக மிக முக்கிய காரணங்களின்றி பரந்த விஸ்தீரணமுள்ள ஒரு நாட்டின் மீது மற்றொரு நாடு அவசரப்பட்டு படையெடுக்கத் துணியாது. எனவே பரந்த விஸ்தீரணமுள்ள ஒரு நாட்டிற்கு தன்னுடைய சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்வது சுலபம். ஆனால் சிறிய நாடோ ஆக்கிரமிப்பாளரின் ஆசைக்கு எப்போதுமே இயற்கையான ஓர் இலக்காகின்றது.

மேலே நான் குறிப்பிட்ட இரு முறைகளும் ஜெர்மன் பார்லிமெண்டிலுள்ள "தேசீயவாதி" களால் நிராகரிக்கப்பட்டன என்றாலும், அதற்கு அவர்கள் கூறிய காரணங்கள் முற்றிலும் வேறானவை. ஒழுக்க உணர்ச்சியை ஆதாரமாகக் கொண்டு அவர்கள் கர்ப்பத்தடை முறையை நிராகரித்தார்கள், "உள்நாட்டுக் குடியேற்ற முறை" பெரிய நிலச்சுவான்தார்களைத் தாக்குவதாகுமென்று கூறி அதை நிராகரித்தார்கள். எனவே நாளுக்கு நாள் பெருகி வரும் ஜனங்களின் ஜீவனத்திற்கு மேற்கொண்டு இரண்டே வழிகள்தானிருந்தன. அவையாவன:

3) புதிய பிரதேசத்தை ஆக்கிரமித்துக் கொண்டு, வருஷா வருஷம் பெருகி வரும் ஜனங்களில் ஒரு குறிப்பிட்ட தொகையினரை அங்கு ஸ்தாபிக்கும்படி செய்யலாம் அல்லது

4) ஏற்றுமதிகள் மிகவும் அதிகமாகக் கூடிய முறையில் நமது கைத்தொழில்களையும், வர்த்தகத்தையும் அமைத்து, அன்னிய நாடுகளிலிருந்து கிடைக்கும் லாபத்தைக் கொண்டு நம் தேச ஜனங்களின் வாங்கும் சக்தியை உயர்த்தி அவர்களுக்கு ஆதரவளிக்க முடியும்.

ஆக்கிரமிப்புக் கொள்கையா அல்லது காலனி வர்த்தக அபிவிருத்தியை ஆதாரமாகக் கொண்ட கொள்கையா என்ற பிரச்னை எழுந்தபோது, இரண்டாவது கொள்கையே இறுதியில் அங்கீகரிக்கப்பட்டது. எனினும் ஆக்கிரமிப்புக் கொள்கைதான் சிறந்ததென்பதில் சந்தேகமில்லை. புதிய பிரதேச ஆக்கிரமிப்புக் கொள்கையில் - இன்றும், எதிர்காலத்திலும் பல நன்மைகளிருக்கின்றன.

முதலாவதாக ஒரு தேச சமுதாயத்தின் அஸ்திவாரம் விவசாயிகள்தான். எனவே அவர்களின் நிலைமை ஆரோக்கியமாக இருக்க வேண்டும். நகரங்களிலுள்ள ஜனத்தொகைக்கும், கிராமங்களிலுள்ள ஜனத்தொகைக்கும் மிதமிஞ்சிய வேற்றுமையிருப்பதே இன்றைய பல இன்னல்களுக்கும் காரணம். இன்று தாண்டவமாடிவரும் சமுதாய நோய்களுக்கெல்லாம் அத்தகைய வேற்றுமைதான் ஆணிவேர். அந்த நோய்கள் தலைகாட்டாமலிருப்பதற்குற்ற தகுந்த பாதுகாப்பு விவசாயிகளின் கட்டுக்கோப்பான, ஆரோக்கியமான நிலைமைதான். ஒரு தேச ஜனங்களின் தினசரி உணவிற்கும் அதுதான் உத்தரவாதமாக இருக்கும். அடுத்தபடியாகத்தான் கைத்தொழிலுக்கும், வர்த்தகத்திற்கும் முக்கியஸ்தானம் கொடுக்க வேண்டும். ஆனால் இன்றோ, அவ்விரண்டிற்கும் மிதமிஞ்சிய முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. அது சரியல்ல.

ஆக்கிரமிப்புக் கொள்கை பற்றி கவனிக்குமிடத்து ஓர் உண்மையை அலட்சியம் செய்துவிடக் கூடாது. ஒரு தேசத்தைக் காட்டிலும் மற்றொரு தேசத்திற்கு 50 மடங்கு அதிக நிலப்பரப்பை அளிக்க வேண்டுமென்பது கடவுளின் ஆக்ஞையல்ல. இன்றைய நிலைமையை ஆலோசிக்குமிடத்து, ஒரு தேசத்தின் தற்போதைய அரசியல் எல்லையில் கவனம் செலுத்துவதுடன் மாத்திரம் நின்றுவிடக் கூடாது, கண்டிப்பான நீதியை ஆதாரமாகக் கொண்டு அந்த எல்லை எவ்வளவு தூரமிருக்க வேண்டுமென்பதில் கவனம் செலுத்த வேண்டும். சகலருக்கும் இப்புவியில் போதிய இடமிருக்குமாயின், பின்னர் நமது வாழ்க்கைக்கு அத்தியாவசியமான அளவு அதில் நமக்கும் பங்கிருக்க வேண்டும்.

யாரும் நமக்கு தாங்களாக வலுவில் இடமளித்து விட மாட்டார்கள். இச்சந்தர்ப்பத்தில்தான் தற்காப்பு உரிமை அமுலுக்கு வரவேண்டியிருக்கிறது. அதை சமரசமாகத் தீர்த்துக் கொள்வதற்கான முயற்சிகள் நிராகரிக்கப்படும்போது, பலாத்காரத்தை உபயோகித்துத்தான் தீரவேண்டும். நம் தலைமுறையில் இப்போதுள்ளவர்களைப் போல் நமது முன்னோர்கள் அர்த்தமற்ற சமாதானக் கொள்கையை ஆதாரமாகக்

கொண்ட அரசியல் முடிவுகளைச் செய்திருப்பார்களாயின், இப்போதுள்ள நம் தேச நிலப்பரப்பில் மூன்றில் ஒரு மடங்குதான் நமக்குச் சொந்தமாக இருக்கும். வாழ்க்கைப் போராட்ட விஷயத்தில் நம் முன்னோர்கள் உறுதியுடன் நடந்து கொண்டதுபோல், இன்று நாமும் உறுதியான கொள்கையையே அனுஷ்டிக்க வேண்டும்.

தற்போது பல ஐரோப்பிய நாடுகளும், சிகரம் பூமியிலும் அடிவாரம் ஆகாயத்திலுமுள்ள கோபுரங்கள் போலிருக்கின்றன! அவைகளுக்குச் சொந்தமான காலனிகள், வெளிநாட்டு வர்த்தகம் முதலியவைகளின் பளு பிரமாதமாக இருக்கின்றது. அதற்குத் தகுந்தவாறு அவைகளுக்கு ஐரோப்பாவில் நிலப்பரப்பில்லை. ஆனால் அமெரிக்காவின் நிலைமை அவ்விதமில்லை. காலனிகளுள்ள பெரும்பாலான குறிப்பிட்ட பளுதான் காரணம். எனினும் இங்கிலாந்தின் நிலைமை வேறாகும். ஏனெனில் பாஷை, கலாச்சாரம் முதலிய துறைகளில் அது அமெரிக்காவுடன் இணைந்திருப்பதால், அமெரிக்காவுடன் இங்கிலாந்தையும் சேர்த்தே அவ்விஷயத்தைக் கவனிக்க வேண்டும்.

ஜெர்மனி, ஆக்கிரமிப்புக் கொள்கையை அமுலுக்குக் கொண்டு வருவதாயின், ஐரோப்பாவில்தான் அது புதிய பிரதேசங்களை ஆர்ஜிதம் செய்து கொள்ள வேண்டும். பரந்த முறையில் ஐரோப்பியர்கள் குடியேறி ஸ்தாபிக்கத் தகுதியிராத வரையில், காலனிகளால் அந்த லட்சியம் பூர்த்தி பெறாது. தவிர, 19வது நூற்றாண்டில் சமாதான முறைகளின் மூலம் காலனிகளை ஆர்ஜிதம் செய்து கொள்வதும முடியாத காரியம். மகத்தான யுத்தத்தின் மூலமே அது சாத்தியம். வெளிநாடுகளிலுள்ள பிரதேசங்கள் ஆர்ஜிதம் செய்து கொள்வதற்காக யுத்தம் செய்வதைக் காட்டிலும், ஐரோப்பாவிலேயே புதிய பிரதேசங்களை ஆர்ஜிதம் செய்து கொள்ள முற்படுவதுதான் அதிக அளவு அனுஷ்டான சாத்தியம்.

அவ்வித தீர்மானத்தை அமுலுக்குக் கொண்டுவர, தேசம்தான் முழு சக்தியையும் உபயோகிக்க வேண்டும். அரைகுறையான முறைகளால் பலனேற்படாது. அந்த ஒரே லட்சியத்தை மனதிற் கொண்டே முன்னர் சகல அரசியல் முறைகளும் வகுக்கப்பட்டிருக்க வேண்டும். யுத்தத்தினால்தான் அந்த லட்சியம் நிறைவேற முடியும். எவ்வித ஒப்பந்தமும் அதை நோக்கமாகக் கொண்டே செய்து கொள்ளப்பட்டிருக்க வேண்டும். ஐரோப்பாவில் ஜெர்மனி புதிய பிரதேசத்தை ஆக்கிரமித்துக் கொண்டே செய்து கொள்ளப்பட்டிருக்க வேண்டும். ஐரோப்பாவில் ஜெர்மனி புதிய பிரதேசத்தை ஆக்கிரமித்துக் கொள்வதாயின் ருஷியாவுக்குச் சொந்தமான பிரதேசத்தைத்தான் ஆக்கிரமித்துக் கொள்ளும்படி நேரும். அவ்வித கொள்கைக்கு உதவியாக ஐரோப்பாவில் நம் நேச

தேசமாக இருக்கக் கூடியது இங்கிலாந்துதான். இங்கிலாந்துடன் ஒப்பந்தம் செய்து கொள்வதன் மூலம்தான் பின்புறத்தில் ஆபத்து எதுவும் ஏற்படாமல் பாதுகாப்பது சாத்தியம். எனவே இங்கிலாந்தின் நட்பைப் பெறுவதற்கு அவசியமான எவ்வித தியாகமும் பெரிதல்ல. அதற்கு அனுகுணமாக, காலனி ஆசையையும், கடற்படையெடுப்பு ஆசையையும் கைவிட்டிருக்க வேண்டும். பிரிட்டிஷ் கைத்தொழில்களுடன் போட்டியிட முயற்சித்திருக்கக் கூடாது. தரை யுத்தத்திற்கான விஷயங்களிலேயே நம் முழு கவனத்தையும் செலுத்தி இருக்க வேண்டும். அதற்காக நாம் தற்காலிகமாக பல வசதிகளைக் குறைத்துக் கொண்டு கஷ்டப்படவும் தயாராக இருக்க வேண்டும். எதிர்காலத்தில் மகத்தான க்ஷேமமடைவதற்காக, அவ்வித தியாகம் செய்துதான் தீரவேண்டும்.

மேலே குறிப்பிட்டபடி ஜெர்மனியுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள இங்கிலாந்து தயாராயிருந்த காலமுண்டு. ஆனால் அவ்வாறு ஒப்பந்தம் செய்து கொண்டால், இங்கிலாந்திற்காக நாம் போராடும்படி நேருமென ஜெர்மானியர்கள் கருதினர். பரஸ்பர உதவியை ஆதாரமாகக் கொண்டுதான் ஒப்பந்தமேற்பட முடியுமென்பதை அப்போது அவர்கள் உணரவில்லை. நிப்பொனைப் போல் ஜெர்மனியும் 2564ம் (1904) வருஷம் வெளி நாட்டுக் கொள்கை சம்பந்தப்பட்ட வரையில் புத்திசாலித்தனமாக நடந்து கொண்டிருக்குமாயின், ஜெர்மனிக்கு அளவிட முடியாத நன்மையேற்பட்டிருக்கும். 2574 78ல் (1914- 18) மூண்ட உலக யுத்தத்திற்கு இடமேயிருந்திராது. 2564ல் (1904) புத்திசாலித்தனமாக நடந்து கொண்டிருந்தால், 2574 -78ல் (1914- 18) சிந்திய இரத்தத்தில் பத்தில் ஒரு பங்கு கூட சிந்தும்படி நேர்ந்திராது.

எது எப்படியாயினும், அப்போது ஜெர்மனி ஆஸ்திரியாவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டது மாத்திரம் மிகுந்த மடத்தனமாகும். ஆஸ்திரியா சுயநல நோக்கங் கொண்டும், ஆஸ்திரியாவில் ஜெர்மன் வாடையே இருக்கக் கூடாதென்பதற்காகவுந்தான் ஜெர்மனியுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள இணங்கியதேயன்றி, பரஸ்பர நல்லெண்ணமும், உதவி நோக்கமும் கொண்டல்ல. தன் எல்லைக்குள் ஜெர்மன் எதிர்ப்புக் கொள்கையை நிறைவேற்றுவதற்கான பலமும், உறுதியுமில்லாத ஆஸ்திரியா, ஜெர்மனியின் நலன்களைப் பாதுகாப்பதற்கான முறைகளில் தீவிர பங்கெடுத்துக் கொள்வது எங்ஙனம் சாத்தியம்?

போதாக் குறைக்கு, ஆஸ்திரியாவில் ஜெர்மானியர்களுக்கு விரோதமாகத் தாண்டவமாடி வந்த அடக்குமுறையைத் தடுக்கவும் ஜெர்மனி முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை. உலக சமாதானத்தைப் பாதுகாக்க வேண்டுமென்று கனவு கண்டு வந்த

ஜெர்மனி இறுதியில் உலக யுத்தத்தில் சிக்கும்படி நேர்ந்தது.

கிழக்குத் திசையில் மாத்திரமேதான் புதிய பிரதேசத்தை ஆர்ஜிதம் செய்து கொள்ள முடியுமென்பதை ஜெர்மனி உணர்ந்திருந்தாலும், எவ்வித யுத்தத்திலும் ஈடுபட விரும்பவில்லை. எப்படியாயினும் உலக சமாதானத்தைப் பாதுகாக்க வேண்டும் என்பதே ஜெர்மனியின் சுலோகமாக இருந்து வந்தது. அக்கொள்கையின் விளைவு என்ன என்பது நாம் அறிந்த விஷயம். அதுபற்றி பின்னர் விவரமாகக் குறிப்பிடுகின்றேன்.

அடுத்தபடியாக கைத்தொழில், உலக வர்த்தக, கடற்படை பலம், காலனிகள் முதலிய முறைகள் பற்றிக் கவனிப்போம்.

ஒரு பிரதேசத்தில் குடியேறுவதென்பது நினைத்த மாத்திரத்தில் நடந்துவிடக் கூடிய விஷயமல்ல, பல நூற்றாண்டுகள் திட்டம் போட்டு நடைபெற வேண்டிய காரியமாகும். விளம்பரங்கள் மூலம் கைத்தொழில் முன்னேற்றத் திட்டத்தை அதிசீக்கிரத்தில் அமுலுக்குக் கொண்டு வந்துவிடலாம். ஆனால் காலனி அபிவிருத்திப் பிரச்னை வேறு. இனி விஷமம் செய்வதில்லை என்றும், நல்ல பிள்ளையாக நடந்து கொள்வதாயும் கொஞ்சும் குழந்தைகளுக்கு வாழைப் பழம் கிடைப்பதுபோல், நல்ல பிள்ளையாக நடந்து கொள்ளும் சமாதானப் பிரியமுள்ள தேசங்களுக்கு காலனிகள் கிடைத்துவிடா. காலனி ஆர்ஜிதத்தில் ஜெர்மனி ஈடுபட ஆரம்பித்ததுமே, அப்போதோ அல்லது பின்னரோ அது பிரிட்டனின் விரோதத்திற்கு ஆளாகியே தீர வேண்டியதாயிற்று. எனவே அத்தகைய ஆர்ஜிதத்தில் ஜெர்மனி ஈடுபட்டே இருக்கக் கூடாது.

ருஷியாவுக்கு விரோதமாக புதிய பிரதேசத்தை ஆக்கிரமித்துக் கொள்ள இங்கிலாந்தின் உதவி இருந்திருக்க வேண்டும். காலனி ஆக்கிரமிப்பு, உலக வர்த்தகப் போட்டி முதலிய கொள்கைகள் இங்கிலாந்தின் நலன்களுக்கு விரோதமாதலால், அவைகளை நிறைவேற்ற ருஷியாவின் ஆதரவு இருந்திருக்க வேண்டும். அவ்விரண்டில் எக்கொள்கையை அமுலுக்குக் கொண்டு வருவதாயிருந்தாலும், யுத்தமின்றி முடிந்திராது. எனவே யுத்தமேற்படாமல் தடுக்கவே, வர்த்தக, கைத் தொழில் கொள்கையை அமுலுக்குக் கொண்டு வருவ தென்று தீர்மானித்தனர். வர்த்தக முறைகளின் மூலம் உலகை சமாதானமாகவே ஜெயிக்கலாமென ஜெர்மன் "ராஜதந்திரிகள்" நம்பினார்கள். அக்கொள்கையையொட்டி அடிக்கடி இங்கிலாந்து எச்சரிக்க ஆரம்பித்ததே ஜெர்மனியின் கடற்படை நிர்மாணத்திற்குக் காரணம். இங்கிலாந்தைத் தாக்குவதற்காகவோ அல்லது ஒழிப்பதற்காகவோ அப்படை நிர்மாணிக்கப்படவில்லை, உலக சமாதானக் கொள்கையைப்

பாதுகாக்கவே நிர்மாணிக்கப்பட்டது. மேற்கொண்டு தங்கள் சமாதான நோக்கத்தை வெளிப்படுத்துவதற்காக யுத்தக் கப்பல்களின் தொகை, எடை, கப்பல்களிலுள்ள ஆயுத வகைகள் முதலியவைகளையும் வரையறுத்தனர்.

சமாதான முறைகளின் மூலம் உலகை ஜெயிப்பதென்ற ஜம்பப் பேச்சைக் காட்டிலும் அர்த்தமற்ற விஷயம் வேறெதுவுமில்லை. அதற்கு ஆதாரமாக அவர்கள் இங்கிலாந்தை உதாரணமாகக் கூறியதுதான் இன்னும் அதிக மடத்தனமாகும். அதிலிருந்து, சரித்திர விஷயங்களில் அவர்களுடைய ஞான சூன்யத்தை அறிந்து கொள்ளலாம். சரித்திர சம்பந்தமான உண்மைகளை, தங்கள் பகுத்தறிவைக் கொண்டு ஆராய்ச்சி செய்யாமல் மொந்தையுருப் போடுவதன் விபரீத பலன்தான் அது. உண்மையில் வர்த்தக முறைகளைக் கொண்டு சமாதான தோரணையில் பிரதேசங்களை ஆர்ஜிதம் செய்து கொள்வது முடியாத காரியமென்பதையே இங்கிலாந்தின் உதாரணத்திலிருந்து அவர்கள் அறிந்து கொண்டிருக்க வேண்டும். வர்த்தக ஆக்கிரமத்திற்குப் பூர்வாங்கமாக இங்கிலாந்தைக் காட்டிலும் மிருகத்தனமாக ஆயுதத்தை உபயோகித்த தேசம் வேறெதுவுமில்லை. அதுபோலவே தன் வர்த்தக ஆக்கிரமிப்பைப் பாதுகாக்க இங்கிலாந்தைப் போல் ஈவிரக்கமின்றி நடந்துகொண்ட தேசமும் வேறெதுவுமில்லை. அரசியல் அதிகாரத்தை உபயோகித்துப் பொருளாதார வசதிகளைப் பெறுவதிலும், பொருளாதார ஆக்கிரமிப்பு மூலம் அரசியல் அதிகாரம் பெறுவதிலும் பிரிட்டிஷார் பலே தந்திரசாலிகள். மற்றும் ஆங்கிலேயர்கள் இரத்தம் சிந்த பயப்படும் கோழைகளென நினைத்ததும் பெருந்தவறாகும். கூலிக்கு மாரடிப்பவர்களை அனுப்புவது போதுமென்ற நிலைமையிலிருந்து வரும் வரையில், பிரிட்டிஷார் அத்தகையோரையே அனுப்பி வருவார்கள். எனினும் வெற்றிபெற வேண்டுமாயின் தங்களிடையேயுள்ள சிறந்தவர்களைப் பலி கொடுத்துத்தான் தீரவேண்டுமென்ற அவசியமேற்பட்டால் அவ்விதமே பலி கொடுக்க அவர்கள் சிறிதும் தயங்கியதில்லை. அவர்களுடைய போர்க்குணம், பிடிவாதம், உறுதி, ராணுவ நடவடிக்கைகளில் ஈவிரக்கமற்ற தன்மை முதலியவை ஒருபோதும் குறைந்ததுமில்லை.

ஆனால் ஜெர்மனியிலுள்ள பள்ளிக் கூடங்களிலும், பத்திரிகைகளிலும், விகட சஞ்சிகைகளிலும் மிகுந்த தப்பெண்ண மேற்படக் கூடியவாறு ஆங்கிலேயர்களைப் பற்றிச் சித்தரிப்பது வழக்கமாக இருந்து வந்தது. அதன் பயனாக ஜெர்மானியர்கள் ஆங்கிலேயர்களை நன்கு அறிந்து கொள்ளாது மிகுந்த கஷ்ட நஷ்டங்களுக்குள்ளாக நேர்ந்தது. பிரிட்டிஷார் வர்த்தக

யுக்தியுடையவர்களெனினும், பொதுவாக மிகுந்த கோழைகளென்ற தப்பெண்ணம் ஜெர்மனி முழுவதும் பரவியிருந்தது. உலக ஸ்தாபனமான பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை நிர்மாணிப்பது முடியாத காரியமென்பதை, துரதிர்ஷ்டவசமாக ஜெர்மன் ஆசிரியர்கள் பள்ளிக்கூடங்களில் மாணவர்களுக்கு எடுத்துக் கூறவில்லை. ஆனால் முதன்முதலாக பிளாண்டர்ஸில் பிரிட்டிஷ் துருப்புகளை நேருக்கு நேராக எதிர்த்துப் போராடியபோதுதான் நம் துருப்புகள் உண்மையைத் தெரிந்து கொண்டனர். விகட சஞ்சிகைகளில் சித்திரிக்கப்பட்ட ஆங்கிலேயர்களுக்கும், போர்க்களத்திலுள்ள ஆங்கிலேயர்களுக்கும் மிகுந்த வேற்றுமை உண்டென்பதை நம் துருப்புகள் நிதர்சனமாக உணர்ந்து கொண்டனர்.

அப்போதுதான் நான் முதன்முதலாகப் பிரசாரத்தின் அபார சக்தியைத் தெரிந்து கொண்டேன். விஷமிகள் தங்கள் நோக்கம் பூர்த்தி பெறவே அப்பொய்க் கூற்றுகளை ஜோடித்து, ஆங்கிலேயர்களைப் பற்றி ஆதாரமற்ற அபிப்பிராயம் கொள்ளும்படி செய்தனர். சமாதான முறைகளின் மூலம் புதிய பிரதேசங்களை ஆக்கிரமித்துக் கொள்வது சாத்தியமாயின், பின்னர் ஆஸ்திரியாவுடன் ஜெர்மனி ஏன் ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும்? அந்த ஒப்பந்தம் காரணமாக, ராணுவ முறைகளைக் கொண்டு ஜெர்மனி ஐரோப்பாவில் கூட புதிய பிரதேசங்களை ஆர்ஜிதம் செய்து கொள்ள முடியாது. இவ்வுண்மைதான் ஜெர்மன் -ஆஸ்திரிய ஒப்பந்தத்தின் பலவீனத்திற்குக் காரணம். பலவிதத்திலும் அந்த ஒப்பந்தமானது ஜெர்மனிக்கு ஆபத்தாகவே முடிந்தது.

ஒருதேசத்தின் பலமானது தாக்குதலில் தானிருக்கின்றதேயொழிய தற்காப்பில் இல்லையென்ற உண்மையை அப்போது பலரும் உணர்ந்தார்களெனினும், துரதிர்ஷ்டவசமாக ஜனங்களின் "பிரதிநிதிகளான" பார்லிமெண்டு அங்கத்தினர்கள் உணரவில்லை. 2572ல் (1912) ராணுவ தளபதியான லூடன் டார்ப்• தயாரித்த ஒரு மகஜரில் அந்த ஒப்பந்தத்தின் பலவீனமான அம்சங்களை எடுத்துக்காட்டியிருந்தார். ஆயினுமென்ன! அந்த தஸ்தாவேஜுக்கு "ராஜ தந்திரிகள்" மதிப்புக் கொடுக்கவில்லை. பொதுவாகப் பார்க்குமிடத்து, சாதாரண ஜனங்கள்தான் பகுத்தறிவு வாய்க்கப் பெற்றவர்களாக இருக்கின்றனர். "ராஜதந்திரிகள்" என்ற ஒரு பிரிவினரிடம் அது மருந்துக்குக் கூட கிடைப்பது கஷ்டமாகஇருக்கிறது!

---

• லூடன் டார்ப் என்ற பிரபல ஜெர்மன் தளபதி சென்ற மகாயுத்தத்தில் தீவிர பங்கெடுத்துக் கொண்டவர். உலக சரித்திரத்திலேயே பிரசித்தி பெற்ற போர்களில் வெற்றி பெற்றவர். ராணுவ தந்திரம் பற்றிய அற்புதமான பிரசுரங்களின் ஆசிரியர்

*2574*ம் *(1914)* வருஷம் மூண்ட யுத்தத்தில் ஆஸ்திரியா நேரடியான காரணமாக அமைந்தது ஜெர்மனியின் அதிர்ஷ்டமே. அதனால்தான் ஹாப்ஸ்பர்க் குடும்பத்தினரும் அதில் கலந்து கொள்ளும்படியான நிர்ப்பந்தமேற்பட்டது. வேறெந்த சம்பவமானது யுத்தத்திற்கு மூலகாரணமாக இருந்திருக்குமாயின், ஜெர்மனி தனியாகவே நிற்கும்படி நேர்ந்திருக்கும். யுத்தத்திற்கு மூல காரணம் ஜெர்மனியாக இருந்திருக்குமாயின், ஹாப்ஸ்பர்க் சாம்ராஜ்யம் ஒருகாலும் அதில் கலந்து கொள்ள விரும்பியிராது. இத்தாலியைப் போன்றே ஆஸ்திரியாவும் நடந்து கொண்டிருக்கும். யுத்தம் ஆரம்பமானவுடன் ஏற்படும் புரட்சியைத் தடுத்து ஹாப்ஸ்பர்க் ராஜ்யத்தைப் பாதுகாப்பதற்காக ஆஸ்திரியா "நடுநிலைமை" வகித்திருக்குமேயன்றி, ஜெர்மனிக்கு உதவி புரிய முன்வந்திராது.

ஆஸ்திரியாவுடன் ஜெர்மனி ஒப்பந்தம் செய்து கொண்டதால், மற்ற தேசங்களுடன் பிரயோஜனகரமான, சிறந்த உடன்படிக்கை செய்து கொள்வதற்குச் சந்தர்ப்பமிராமற் போய்விட்டது. வர்த்தக கைத்தொழில் கொள்கையில் ஜெர்மனி ஈடுபட்டதால், ருஷியாவிற்கெதிராக யுத்தம் தொடர வேண்டுமென்ற நோக்கத்திற்கு இடமில்லை. ஜெர்மனிக்கும் ருஷியாவிற்கும் விரோதிகள்தான் அவ்வித யுத்தத்தை விரும்புவார்கள். உண்மையில் யூதர்களும், மார்க்ஸ் கட்சியினரும்தான் இரு தேசங்களுக்கும் பரஸ்பரம் கொதிப்பை உண்டுபண்ண முயற்சித்தனர்.

மற்றும் ஜெர்மன் - ஆஸ்திரிய ஒப்பந்தமானது ஜெர்மனியின் பாதுகாப்பிற்கு ஒரு நிரந்தரமான ஆபத்தாகவும் அமைந்தது. ஏனெனில் ஆஸ்திரியாவில் பங்கு தருவதாக ஆசை வார்த்தை கூறி, எந்தப் பெரிய வல்லரசும் ஜெர்மனிக்கு விரோதமாக பல நாடுகளையும் சேர்த்துக் கொண்டு படை திரட்டி விட முடியும். மற்றும் அந்த ஒப்பந்தத்திற்கு மிகவும் அதிகப்படுத்தியது. ஜெர்மனியை அழிப்பதற்காக, யூதர்களடங்கிய சர்வதேச நிதி நிர்வாக சூழ்ச்சிக் கூட்டமானது ஆஸ்திரியாவை பலிகொடுக்கத் தயாராயிருந்தது.

வீழ்ச்சியுறப் போகும் ஆஸ்திரியாவுடன் செய்து கொண்டுள்ள ஒப்பந்தத்தினால் ஜெர்மனிக்கு ஆபத்தென்பதை நான் என் நண்பர்களிடம் பகிரங்கமாகக் கூறிவந்தேன். உலக யுத்தத்தின்போது போர்க்களத்திலிருந்த சமயத்திலும் அந்த அபிப்பிராயத்தையே நான் வெளியிட்டு வந்தேன். ஜெர்மனி ஹாப்ஸ்பர்க் ராஜ்யத்தைக் கைவிடுவதன் பயனாக தன் சத்துருக்களின் தொகையைக் குறைத்துக் கொள்ளுவது சாத்தியமாயின், அவ்விதமே செய்யலாமென்றும் நான் கூறிவந்தேன். ஏனெனில் போரிடும் லட்சக்கணக்கான ஜெர்மன் யுத்த வீரர்கள் அழுகிப் போன

ஹாப்ஸ்பர்க் ராஜ்யத்தை ரக்ஷிப்பதற்காகப் போராடவில்லை. ஜெர்மன் ஜனங்களின் கதிமோட்சத்திற்காகவே போர் புரிந்தார்கள். அந்த ஒப்பந்தத்தால் உண்டாகக் கூடிய ஆபத்தை எடுத்துக் காட்டிய "அனுபவமற்றவர்களின்" வார்த்தைகள் யார் செவியிலும் ஏறவில்லை. எனவே "பிரதிநிதிகள்" அழைத்துச் சென்ற தூக்கு மரத்தை நாடியே ஜனங்கள் சென்றனர்.

நிற்க, ஜெர்மனியிலே தொழில் விஞ்ஞான முறைகளும், கைத்தொழில்களும், வர்த்தகமும் ஆச்சரியகரமாகவும், வெற்றிகரமாகவும் முன்னேற்றமடைந்தன. ஆனால் அத்தகைய வெற்றிக்கு, சக்தி பொருந்திய ஒரு தேசமானது அத்தியாவசியமான பூர்வாங்கமென்பதை அந்த சந்தோஷத்தில் நாம் மறந்துவிட்டோம். தேசத்தின் அபிவிருத்தி பொருளாதார நிர்மாணத்தையே பொருத்திருக்கிறதென்றுகூட சிலர் கருதினர். ஆனால் அவ்வித அபிப்பிராயம் தவறாகும். உண்மையில் தேசத்திற்கும் ஒரு குறிப்பிட்ட பொருளாதார தத்துவம் அல்லது பொருளாதார அபிவிருத்திக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. தேசமானது ஜீவராசிகளடங்கிய ஒரு சமாஜம். வாழ்க்கையில் அவர்களுக்கு இறைவனால் சில கடமைகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளை நிறைவேற்றுவதற்கான பல வழிகளில் பொருளாதார நடவடிக்கையுமொன்று. எனினும் தேசத்தின் மூலகாரணமோ அல்லது லட்சியமோ பொருளாதார நடவடிக்கையல்ல. போலியான, இயற்கைக்கு விரோதமான அஸ்திவாரத்தின் மீது அமைக்கப்பட்டுள்ள தேசத்திற்குத்தான் பொருளாதார அம்சம் மூலாதாரமானதாக இருக்கும். அது பிறர் உழைப்பினால் வாழும் புல்லுருவிகளால் நிர்மாணிக்கப்பட்டிருக்கும். அத்தகைய தேசத்திற்கு எல்லையும் இருக்க வேண்டிய அவசியமில்லை!

இன்று அதற்கு உதாரணமாக இருப்பது யூதர் தேசம்தான். யூதர்களின் தேசத்திற்கு எல்லையேயில்லை. அவர்கள் உலகமெங்கும் பரவியிருக்கிறார்கள். அட்டைகள் போல பிறர் உதிரத்தை உறிஞ்சுவதே அவர்களின் வேலை. அவர்கள் ஒவ்வொரு தேசத்திலும் அத்தேசத்திற்குள் ஒரு தேசமாகத் தனித்து நிற்கிறார்கள். மதத்தின் பெயரால் அவர்கள், பல்வேறு மதங்களின் விஷயத்திலும் சகிப்புத் தன்மையுள்ள ஆரியர்களின் பாதுகாப்பைப் பெற்று விடுகின்றார்கள்.

சமூகப் பாதுகாப்பிற்காக தனி நபரின் வாழ்க்கையைத் தியாகம் செய்ய வேண்டியது அவசியமாகும். சமூகத்தின் க்ஷேமத்தையும், ஒற்றுமையையும் எவ்விதத்திலும் காப்பாற்றியே தீரவேண்டும். அத்தகைய உறுதியானது, தங்கள் சொந்த தேசத்திலுள்ள ஜனங்களிடையே வீரத்தனமும் அற்புத சக்தியும் பொருந்திய குணங்களை அபிவிருத்தி செய்யும். அட்டை

போல் ஒட்டிக் கொள்ளும் குணமுள்ள ஜனங்களிடையே அத்தகைய உறுதியானது சூழ்ச்சி புத்தியையும், துரோக சிந்தனையையுமே வளர்க்கும். தைரியமும் உறுதியுமற்ற ஜனங்கள் அத்தகைய சூழ்ச்சிக்கும், துரோகத்திற்கும் இரையாவதைத் தவிர வேறு வழியில்லை. அவ்வித தைரிய மின்மையையும், உறுதியின்மையையும் ஜீவகாருண்ய உணர்ச்சியென மறைக்க முயற்சிப்பது கூடாது.

பொருளாதார சக்திகளால்தான் ஒரு தேசம் உருவாகிப் பாதுகாக்கப்படுகிறதென்ற நம்பிக்கை ஜெர்மனியில் எவ்வாறு எழுந்தது என்பதை அறிந்து கொள்வது கஷ்டமாக இருக்கிறது. ஏனெனில் அதற்கு நேர்மாறான ஓர் உண்மையையே எப்போதும் நம் தேசமானது நிரூபித்து வந்திருக்கிறது. ஜனங்களின் ஒழுக்கத்திலிருந்தும் உயர்ந்த குணாதிசயங்களிலிருந்தும் தான் ஒரு தேசம் உருவாகின்றதேயொழிய ஜனங்களின் பொருளாதார நிலைமையினால் அல்ல என்பதை ப்ரஷ்ய சரித்திரம் குணாதிசயங்களைப் பாதுகாப்பதன் மூலம்தான், பொருளாதார அம்சங்களை அபிவிருத்தி செய்ய முடியும். ஜனங்களின் அரசியல் திறமை குன்றினால், பொருளாதார அபிவிருத்தியும் சீர்குலைய ஆரம்பித்து விடுமென்பதை இன்று கண்முன் நாம் நிதர்சனமாகக் கண்டு வருகின்றோம். ஜனங்களின் குணாதிசயங்களை ஆதாரமாகக் கொண்டு தான், ஸ்தூல நலன்கள் சம்பந்தப்பட்ட வரையில் சுபிட்சமேற்படுவது சாத்தியம். உதாரணமாக, ஜெர்மனியின் அரசியல் பலம் அதிகமாக இருந்தபோது பொருளாதார நிலைமையும் சுபிட்சமடைந்துள்ளது. ஜனங்களுடைய வாழ்க்கையின் முதல் ஸ்தானத்தைப் பொருளாதார நலன்கள் ஆக்கிரமித்துக் கொண்டு, உயர்ந்த லட்சியங்களும் கொள்கைகளும் பின்னணிக்குச் சென்றபோதெல்லாம் ராஜ்யம் சீர்குலைந்திருப்பதுடன், அதையடுத்துப் பொருளாதார அழிவும் ஏற்பட்டிருக்கின்றது.

ஒரு தேசத்தை உருவாக்கிப் பாதுகாக்கும் சக்தி என்னவெனில், பொதுஜன க்ஷேமத்திற்காகத் தியாகம் புரிய தனி நபர்களுக்குள்ள ஆர்வமும் திறமையும்தான். அக்குணங்களுக்கும் பொருளாதார விஷயங்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. ஸ்தூல நலன்களுக்காக மனிதன் தன்னைத் தியாகம் செய்து கொள்ள மாட்டானென்பது எல்லோருமறிந்த உண்மை. அவன் ஓர் உயர்ந்த கொள்கைக்காகவும், லட்சியத்திற்காகவும் உயிரைவிடத் தயாராயிருப்பானே அன்றி, ஸ்தூல லாபத்திற்காக ஒருபோதும் உயிரை அர்ப்பணம் செய்ய விரும்ப மாட்டான். இதுதான் பொதுஜன மனோதத்துவமாகும். இந்த மனோ நிலைமையை ஆங்கிலேயர்கள் நன்கு அறிந்து சென்ற யுத்தத்தில் தங்களுக்கு

முற்றிலும் சாதகமாக அதை உபயோகப்படுத்திக் கொண்டார்கள். உணவிற்காகப் போராடுவதாய் நாம் கூறினோம். ஆனால் ஆங்கிலேயர்களே தங்கள் சுதந்திரத்திற்காகவல்ல, அனாதையான சிறிய நாடுகளின் சுதந்திரத்திற்காகப் போராடுவதாய் பறை சாற்றினார்கள்! ஆங்கிலேயர்களின் அப்பகட்டைக் கண்டு ஜெர்மானியர்கள் ஏளனம் செய்தார்கள். அந்த ஆஷாடபூதித் தனத்தைக் கண்டு ஆத்திரப்பட்டார்கள். எனினும் அந்தப் பகட்டுப் பிரகடனத்தினால்தான் பிரிட்டிஷ் ஜனங்கள் தாங்களாக வலுவில் உறுதியுடன் உயிரையும் தியாகம் செய்ய முன்வந்தார்களென்பதை ஜெர்மன் ராஜதந்திரிகள் அறிந்து கொள்ளவில்லை.

2574ல் (1914) நடந்த யுத்தத்தில், தாங்கள் உயர்ந்த லட்சியங்களுக்காகப் போராடி வருவதாக ஜெர்மானியர்கள் நம்பி வந்த வரையில் மிகுந்த உறுதியுடன் போராடினர். ஆனால் தினசரி ஜீவனத்திற்காகவே அவர்கள் போராடி வருவதாக ஜெர்மன் ராஜதந்திரிகள் கூற ஆரம்பித்ததும், அவர்களின் உறுதி குலைந்துவிட்டது. ஸ்தூல நலன்களுக்காக உயிரைத் தியாகம் செய்வதென்பது முரணான விஷயம். ஏனெனில் உயிருடனிருந்தாலன்றோ ஸ்தூல நலன்களை அனுபவிக்க முடியும்? தான் அனுபவிக்க முடியாத ஸ்தூல நலன்களுக்காக எவர்தான் உயிரை விடத் துணிவர்? உடல் மெலிந்த மகா கோழையான ஒரு பெண்கூட, தன் செல்வக் குழந்தையின் உயிரைக் காப்பாற்றுவதற்காகத் தன் உயிரை அர்ப்பணம் செய்யும் வீரத்தாயாக மாறிவிடுவாள். உலக சரித்திரத்தைப் பார்த்தால் எக்காலத்திலும் தங்கள் சமூகம், தாய்நாடு இவைகளைப் பாதுகாக்கவே ஜனங்கள் ஆவேசத்துடன் எதிரிகளின் ஆயுதங்களை எதிர்த்து நிற்க முன்வந்துள்ளனர்.

ஜெர்மன் சாம்ராஜ்யத்திற்கே உயிர்நாடியான ப்ரஷ்யா, நிதி அல்லது வர்த்தக முறைகளால் உருவாக்கப்பட்டதல்ல, அற்புதமான வீரர் செய்கைகளாலேயே உருவாக்கப் பெற்றது. மற்றும் ஜெர்மன் சாம்ராஜ்யமே ராணுவ வீர, தீர, சௌகரியத்தை ஆதாரமாகக் கொண்டு எழுந்ததாகும். அப்படியிருந்தும், ஜெர்மன் ஜனங்களின் அரசியலறிவு அடியோடு மழுங்கியதற்குக் காரணமென்ன? ஏதோ சிற்சில நடவடிக்கைகளில் தவறு ஏற்பட்டிருக்குமாயின், அது தற்செயலாக நேர்ந்ததெனக் கூற இடமிருக்கும். ஆனால் யாரோ ஒரு மாயாவி, வீரத்தனம் பொருந்திய ஜெர்மனியின் சரீரத்தில் விஷத்திராவகத்தைச் செலுத்தி, அதன் இரத்தோட்டத்தையே சீர்குலைத்து பகுத்தறிவையும், தற்காப்பு உணர்ச்சியையும் பாழாக்கிவிட்டதுபோல் தோன்றியது. அத்தகைய விஷத்தன்மை பொருந்திய சக்திக்கு மூலஸ்தானம் வியன்னாவென்பதையும்

நான் ஆராய்ச்சியின் பயனாக முடிவு செய்தேன். அவ்விதம் ஜெர்மன் சாம்ராஜ்யத்தைச் சீர்குலைத்து வரும் மார்க்ஸ் கொள்கைக்கும், யூதர் மார்க்கத்திற்குமுள்ள சம்பந்தத்தை நான் மேற்கொண்டு தீவிரமாகத் துருவிப் பார்க்க முற்பட்டேன். அவ்விஷயமாக என் அபிப்பிராயம் என்ன என்பதை 2573--74ல் (1913 - 14) பலருக்கும் எடுத்துக் கூறினேன். அதைப் பற்றி இப்போது நான் ஏராளமானவர்களை எச்சரித்து வருவதுபோல் அப்போதும் என்னைச் சுற்றியிருந்தவர்களை எச்சரித்து வந்தேன். எதிர்காலத்தில் ஜெர்மனி உத்தாரணமடைய வேண்டுமாயின், அதற்கு ஒரே ஒரு வழி மார்க்ஸ் கொள்கையை அடியோடு ஒழிப்பதுதானென்பதே நான் கண்ட முடிவு. ஜெர்மன் சரீரத்தில் ஊடுருவிச் சென்றுள்ள ரணத்தை அரைகுறையான பரிகார முறைகளால் ஆற்ற முடியாதென்பதையும் உணர்ந்தேன். எனினும் அப்போதே ஜெர்மனி ஜனங்களின் ஆத்துமார்த்த வீழ்ச்சி ஆரம்பமாகிவிட்டது. அவ்வாறு தங்கள் வாழ்க்கையையே முறித்து வரும் சக்திகளை அவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை. அந்த நோயின் மூல காரணத்தை அறிந்து கொள்ளாது, அவர்கள் சிற்சில சமயங்களில் பலனற்ற சில்லறைப் பரிகார முறைகளைக் கைக்கொண்டு வந்தனர்.





# 5. உலக யுத்தமும் உள்நாட்டுத் துரோகமும்

கட்டுக்கடங்காத உத்வேகமும், உற்சாகமும் நிறைந்த என் இளமைப் பருவத்தில் ஒரு விஷயம் எனக்கு மிகுந்த மனச்சோர்வை உண்டுபண்ணி வந்தது. மகான்களுக்கும் மேதாவிகளுக்கும் மகிமையிருந்து வந்த காலத்தில் பிறவாது, வர்த்தகர்களையும், வெறும் அதிகாரிகளையும் வானளாவப் புகழும் காலத்தில் நான் ஏன் பிறந்தேனென்று எண்ணி ஏங்கினேன். சரித்திரப் பிரசித்தமான சண்டமாருத சாகஸங்களுக்கு இனி இடமில்லை என்றும், இவ்வுலகமானது சமாதானப் பிரியர்களான, லாபத்தில் கண்ணுங் கருத்துமுள்ள வர்த்தகர்களிடம் ஒப்படைக்கப்பட்டு விட்டதென்றும் எனக்குத் தோன்றியது. வீரத்தனத்தினால் வாழ்க்கை அந்தஸ்தை உயர்த்துவது மறைந்து, மோசடி முறைகளால் பரஸ்பரம் சுரண்டிப் பிழைக்கும் முறையே தாண்டவமாடத் துவங்கியது. தேசங்கள் வர்த்தக ஸ்தாபனங்களாக மாறிவிட்டன என்றும், எப்படியாவது பாசாங்கு செய்து பிரதேசங்களையும் ஆட்களையும், சலுகைகளையும் பெறும் புன்மதி பெருகி வருகிறதென்றும் நினைத்தேன். இந்த லட்சணத்தில் இவ்வித நாடகத்திற்கு அர்த்தமற்ற பிரமாதமான கூக்குரலும் பக்கவாத்தியமாக அமைந்தது. அவ்விதம் நாளடைவில் உலகமே ஒரு பிரமாண்ட பண்டக சாலையாக மாறிவிடுமோவென்றும், அதை வர்த்தகர்கள், வெறும் அதிகாரிகள் முதலியோரின் சிலைகள் அழகுபடுத்துமோவென்றும் தோன்றியது! அக்கோலங்களை எல்லாம் என்னால் சகிக்க முடியவில்லை. எனவே நான் ஒரு நூறு வருஷங்களுக்கு முன் இப்புவியில் பிறந்திருக்கக் கூடாதாவென வருந்தினேன்.

நான் சிறு பையனாக இருந்தபோது, என்னை ஒரு சமுதாயவாதியாகச் செய்வதற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட முயற்சிகளெல்லாம் வீணாயின. அச்சமயம் தூர வானத்தில் ஒரு மின்னொளி போன்று போயர் யுத்தம் மூண்டது. அந்த யுத்த சம்பந்தமான தந்திச் செய்திகளையும், அறிக்கைகளையும் ஒரு வரிகூட விடாமல் பத்திரிகைகளில் வாசித்து வந்ததால் நான் வெகு தூரத்திலிருந்தாலும் வீரம் செறிந்து அப்போராட்டம் என் கண்முன் தோன்றி, எனக்கு மிகுந்த ஆனந்தத்தை உண்டுபண்ணியது.

ருஷிய - நிப்பொன் யுத்தம் மூண்டபோது எனக்கு அதிக வயதானதுடன், அதிக அனுபவமும் ஏற்பட்டிருந்ததால், அப்போரின் நியாயா நியாயத்தை என்னால் பரிசீலனை செய்ய முடிந்தது. அதன் சம்பந்தமாக விவாதம் எழுந்தபோதெல்லாம்

நான் தேசிய காரணங்களை முன்னிட்டு நிப்பொன் சார்பிலேயே பேசினேன். ருஷியாவின் தோல்வி, ஆஸ்திரியாவிலுள்ள ஸ்லேவியர்களுக்கு ஒரு சரியான அடியென நினைத்தேன்.

அதன் பின் பல வருஷங்கள் கழித்தே நான் மியூனிச் வந்து சேர்ந்தேன். அப்போது ஒரு விஷயம் எனக்குத் தெற்றெனப் புலப்பட்டது. அதாவது தேசத்தின் உயிரற்ற நிலை, சண்டமாருதத்திற்கு முன் நிலவும் மந்தமென்பதை உணர்ந்து கொண்டேன். அத்தகைய சண்டமாருதத்தின் பூர்வாங்க மந்தமானது, பால்கன் பிரதேசங்களை அதற்கு முன்னரேயே ஆக்கிரமித்துக் கொண்டு விட்டது. கடைசியில் பால்கன் யுத்தம் பீறிட்டுக் கொண்டு கிளம்பியது. ஏற்கெனவே கொந்தளிப்பாக இருந்து வந்த ஐரோப்பா முழுவதும் அந்தச் சூறாவளியின் வேகம் பரவியது. இனி விதியைத் தடுக்க முடியாதென்பதைச் சகலரும் அறிந்து கொண்டனர். அதன் திருவிளையாடல்களை இறைவன் எதேச்சையாக விட்டுவிட வேண்டுமென்றும் அவர்கள் விரும்பினர்! சண்டமாருதமும் கிளம்பியது; உக்ரமான முதல் இடியும் பூமியைத் தாக்கி, பீரங்கிகளின் பெருமுழக்கத்துடன் கலந்து வானளாவியது.

ஆர்ச் டியூக் பிரான்ஸ் பர்டினான்ட் கொல்லப்பட்டாரென்ற செய்தி மியூனிச்சிற்கு எட்டியதெனினும், அதன் சம்பந்தமான விவரங்கள் கிடைக்கவில்லை. ஸ்லேவியர்களை ஆதரித்து வரும் ஹாப்ஸ்பர்க் குடும்பத்தினர் மீது ஆத்திரமடைந்து, அந்த விரோதியிடமிருந்து ஜெர்மன் ஜனங்களை விடுதலை செய்வதற்காக, ஜெர்மன் - ஆஸ்திரிய மாணவர்கள் அவரைச் சுட்டுக்கொன்றிருப்பார்களோவென்று நான் முதலில் அஞ்சினேன். அவர்கள் அவ்விதம் செய்திருந்தால் அது ஒரு மகத்தான தவறாக முடிந்திருக்கும். அதன் விளைவாக ஆஸ்திரிய ஜெர்மானியர் மீது கடுமையான அடக்குமுறை பாணத்தைப் பிரயோகிக்கச் சந்தர்ப்பமேற்பட்டிருக்கும். அவ்விதம் அடக்குமுறைப் பிரயோகம் உலகிற்கும் நியாயமானதாகத் தோன்றியிருக்கும். எனினும் அவரைக் கொன்றவர்களின் பெயர்கள் அடுத்து வெளியாகி விட்டன. அவர்கள் செர்பியர்களென்று நான் கேள்விப்பட்டதும், தவிர்க்க முடியாத விதியின் வஞ்சத்தைக் கண்டு திடுக்கிட்டுப் போனேன். ஸ்லேவியர்களின் சிறந்த நண்பரே, ஸ்லேவிய தேச பக்தர்களின் தோட்டாக்களுக்குப் பலியானார்!

அப்போது வியன்னா சர்க்கார் விடுத்த இறுதி எச்சரிக்கையின் நீதி, தொனி இவைகளையொட்டி அவர்கள் மீது குற்றம் காண்பது நீதியாகாது. அந்நிலைமையில், உலகிலுள்ள எந்த வல்லரசாயினும் அவ்விதமேதான் செய்திருக்கும். அதற்கு முன் சில வருஷங்களாகவே, ஆஸ்திரிய சாம்ராஜ்யமும், சக்ரவர்த்தி

பிரான்ஸிஸ் ஜோஸபும் பிரிக்க முடியாததொன்று என்ற மனோபாவம் பெரும்பாலான ஜனங்களிடையே வேரூன்றி இருந்தது. சக்ரவர்த்தி மாண்டால் சாம்ராஜ்யமும் அவருடன் சாக வேண்டியதுதானென்று ஜனங்கள் நினைத்தனர். மக்களிடையே அவ்வித மனோபாவத்தை வளர்த்ததற்கு ஸ்லேவியர்களின் சூழ்ச்சியே காரணம். அந்த சக்ரவர்த்தியின் 'அபூர்வமான, அசாதாரணமான' மேதையும் சாதுர்யமும்தான் ஆஸ்திரிய அரசாங்கத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும் தூண்களென வானளாவப் புகழ்ந்து, அதை ஜனங்கள் நம்பும்படியும் செய்திருந்தனர். ஆனால் உண்மை நிலைமைக்கும் அவர்களின் புகழுரைக்கும் சம்பந்தமேயில்லை! அப்புகழுரையில் மிகவும் ஜாக்கிரதையாக மறைத்து வைக்கப்பட்டிருந்த விஷக் கொடுக்கைக் கண்டுபிடிப்பதற்கான முயற்சியும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. 'முன் பின்னிராத மகாபுத்திசாலியான சக்ரவர்த்தியின் நிர்வாகத் திறமையை, ஆஸ்திரிய சாம்ராஜ்யமானது எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக சார்ந்திருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு விதியானது கதவைத் தட்டிக் காணிக்கை கேட்கும்போது ஏற்படும் நிலைமையும் அதிக பயங்கரமாக இருக்குமென்பதை, தெரிந்தோ அல்லது தெரியாமலோ எவரும் கவனிக்கவில்லை. பூஜ்யரான அதன் அதிபரின்றி ஆஸ்திரிய சாம்ராஜ்யத்தைக் கற்பனை செய்து கொள்ளவும் முடியுமா? அவ்விதமாயின், மேரியா தெரிஸாவிற்கு[2] ஏற்பட்ட பயங்கர கதி மீண்டும் ஏற்பட்டு விடாதா? இவ்வாறெல்லாம் ஜனங்கள் நினைத்தனர்.

தவிர்க்கக் கூடிய ஒரு யுத்தத்தை வியன்னா சர்க்கார் தூண்டிவிட்டார்களென்று கூறுவது, உண்மையில் அவர்களுக்கு நீதி செய்வதாகாது. எப்படியும் யுத்தம் மூண்டுதான் தீர வேண்டுமென்பது தெரிந்துவிட்டது. அதிகமாகப் போனால், மேற்கொண்டு ஒன்றிரண்டு வருஷங்களுக்கு யுத்தமேற்படாமல் தவிர்த்திருக்கலாம். எப்போதுமே ஜெர்மன், ஆஸ்திரிய ராஜதந்திரிகளின் துரதிர்ஷ்ட மென்னவெனில், தவிர்க்க முடியாத ஒரு காரியத்தைத் தள்ளி வைத்துக் கொண்டு வந்ததுதான். அதன் விளைவாக இறுதியில் அசந்தர்ப்பமான ஒரு காலத்தில் அவர்கள் போரிலீடுபடும்படியான நிர்பந்தமேற்பட்டு விட்டது.

எனினும் அந்த யுத்தத்தை விரும்பாதவர்கள் அதனாலேற்படும் விளைவுகளை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருந்திருக்க வேண்டும். அதன் விளைவுகளென்னவெனில், ஆஸ்திரியாவைத் தியாகம் செய்வதுதான். அப்படி தியாகம் செய்தபோதிலும் யுத்தத்தைத் தவிர்க்க முடியாதென்றாலும், அந்த யுத்தத்தில் நமக்கு விரோதமாக எல்லா நாடுகளும் கலந்து கொண்டிரா. ஹாப்ஸ்பர்க் முடியரசை வீழ்த்தும் நோக்கத்துடன் மாத்திரமே

அந்த யுத்தமேற்பட்டிருக்கும். அத்தகைய யுத்தத்தில் நாம் ஹாப்ஸ்பர்க்கிற்கு உதவியளிப்பதா அல்லது விதிவிட்டபடி விடட்டுமென்று கையைக் கட்டிக் கொண்டு பேசாமலிருந்து விடுவதா என்பதையே முடிவு செய்ய வேண்டியிருந்திருக்கும்.

அந்த யுத்தத்தின் காரணங்களைத் தாங்கள் கண்டு கொண்டிருப்பதாக தங்களுடைய மேதாவித் தனத்தை இன்று விளம்பரம் செய்வோரின் ஆலோசனைதான் அந்த யுத்த மேற்படுவதற்கு அடிகோலியது. அதற்கு முன் பலபல ஆண்டுகளாகவே ஜெர்மன் அபேதவாத ஜனநாயகக் கட்சியினர், ருஷியாவுக்கு விரோதமாக யுத்தம் தொடங்க வேண்டுமென மறைமுகமாகவும், அயோக்கியத்தனமாகவும் கிளர்ச்சி செய்து வந்தனர். அந்த மடத்தனத்தின் விளைவுகளையே பின்னர் நாம் அனுபவிக்க வேண்டியிருந்தது. எப்படியாவது சமாதானத்தைப் பாதுகாக்க வேண்டுமென ஜெர்மன் சர்க்கார் ஒரே நோக்கங் கொண்டிருந்ததால், தீவிர நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்குற்ற பல சந்தர்ப்பங்களையும் கை நழுவ விட்டு ஓர் விபரீத ஒப்பந்தத்திலும் சிக்கிக் கொண்டனர். அதன் விளைவாக இறுதியில் அவர்கள், உலக யுத்தத்தில் நாட்டங் கொண்டிருந்த பல தேசங்களின் ஏகோபித்த எதிர்ப்பிற்கும் ஆளாகும்படி நேர்ந்தது.

அப்போது வியன்னா சர்க்கார் தங்களுடைய இறுதி எச்சரிக்கையின் கடுமையான நிபந்தனைகளைக் குறைத்துக் கொண்டிருந்தாலும் கூட நிலைமையில் மாறுதலெதுவும் ஏற்பட்டிராது. அதற்கு மாறாக பொது ஜனங்களின் கோபத்திற்கே ஆளாக நேர்ந்திருக்கும். ஏனெனில் அந்த இறுதி எச்சரிக்கையின் நிபந்தனைகள் கூட கடுமையாக இல்லை என்றே பொது ஜனங்கள் குறை கூறி வந்தார்கள். இந்த உண்மையை இன்று மறுப்பவர்கள் ஒன்று ஞாபக சக்தியற்ற அவிவேகிகளாக இருக்க வேண்டும் அல்லது வேண்டுமென்றே பொய் கூறும் பித்தலாட்டப் பேர்வழிகளாக இருக்க வேண்டும். எனவே *2574ம் (1914)* வருஷத்திய யுத்தமானது ஜனங்கள் மீது திணிக்கப்பட்டதல்ல. அதை சகல ஜனங்களும் விரும்பினார்களென்று கூட கூறவேண்டும். அப்போது நிலவி வந்த நிச்சயமற்ற நிலைமைக்கு இறுதியான ஒரு முடிவு கண்டு தீரவேண்டுமென்றும் பொது ஜனங்கள் துடித்து வந்தனர். அதனால்தான் அந்த லட்சியத்திற்காக கடைசித் துளி இரத்தத்தையும் சிந்துவதற்குத் தயாராக இளைஞர்களுள்பட *20* லட்சம் ஜெர்மானியர்களுக்கு மேல் ராணுவத்தில் சேர்ந்தனர்.

அப்போது எனக்கும் விடுதலை ஏற்பட்டது. அதாவது என் இளமைப் பருவம் முதல் என் மனதில் ஒரு சுமையாக இருந்து வந்த வேதனையிலிருந்து நான் விடுதலை பெற்றேன். அக்காலத்தில் வெறும் உற்சாக வெள்ளத்தினால் நான் இழுத்துச்

செல்லப்பட்டேனென்பதை ஒப்புக் கொள்ள இன்று நான் வெட்கப்படவில்லை. எனினும் அத்தகைய சமயத்தில் உயிர் வாழும்படியான பாக்கியம் கிடைத்ததற்காக நான் முழந்தாளிட்டு மனப்பூர்வமாக இறைவனைத் தோத்திரம் செய்தேன்.

உலக சரித்திரத்திலேயே ஒரு போதுமிராதவாறு சுதந்திர யுத்தம் மூண்டது. ஆஸ்திரியா அல்லது செர்பியாவின் விதியை நிர்ணயிக்கும் பிரச்னையாக அது ஜனங்களுக்குத் தோன்றவில்லை. ஜெர்மன் தேசம் இருப்பதா அல்லது இறப்பதாவென்ற நிலைமையே ஏற்பட்டிருக்கிறதென அவர்கள் கருதினர்.

பல வருஷங்கள் வரையில் அரசியல் அந்தகர்களாக இருந்து வந்த ஜனங்களுக்கு அப்போதுதான் எதிர்காலம் தெளிவாகப் புலப்பட ஆரம்பித்தது. அவர்களின் கண்கள் திறந்தன. மகத்தான போராட்டம் ஆரம்பமான உடனேயே, மிதமிஞ்சிய வெறும் உற்சாகம் மறைந்து, நிதானமான தொனியும், காரியத்தில் சிரத்தையும் நிலவின. எனவே அந்த உற்சாகம் தற்காலிகமாகத் தோன்றி மறையும் உணர்ச்சியல்ல என்பது வெளியாயிற்று. யுத்தம் எவ்வளவு காலம் நடக்குமென அப்போது திட்டமாக எவரும் எதுவும் கூறமுடியவில்லை. யுத்தம் முடிந்து கிறிஸ்துமஸ் விழாவிற்குள் சிப்பாய்கள் திரும்பி வீட்டிற்கு வந்துவிடுவார்களென்றும், பின்னர் தாங்கள் தினசரி அலுவல்களை அமைதியாகத் துவங்கலாமென்றும் ஜனங்கள் கனவு கண்டனர்.

மானிடருக்கு எதில் விருப்பமுள்ளதோ அதில் அவர்கள் நம்பிக்கையும் உறுதியும் கொள்வது சுபாவம். பொது விஷயங்களில் நிரந்தரமாக இருந்து வந்த சஞ்சலமான நிலைமையானது பெரும்பாலான ஜனங்களுக்கும் சலிப்பை உண்டுபண்ணியது. எனவே ஆஸ்திரிய - செர்பிய தகராறை இனி தள்ளி வைக்க முடியாதென அவர்கள் நினைத்தது இயற்கையேயாகும். இறுதியாகக் கணக்கைத் தீர்த்துக் கொள்ள ஜனங்கள் விரும்பினர். அவ்வாறு விரும்பிய கோடிக்கணக்கானவர்களில் நானும் ஒருவன்.

ஸரஜிவோவில் நடந்த கொலையைப் பற்றிச் செய்தி மியூனிச்சிற்கெட்டியதும், ஏன் மனதில் இரு எண்ணங்கள் எழுந்தன. யுத்தமானது முற்றிலும் தவிர்க்க முடியாததென்பதொன்று, தான் கையெழுத்திட்டுள்ள ஒப்பந்தத்தின்படி ஹாப்ஸ்பர்க் ராஜ்யம் நடந்து கொள்ளும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கின்றதென்பது இரண்டாவது எண்ணமாகும். ஏனெனில் ஆஸ்திரியாவை நேரடியாகப் பாதிக்காத ஒரு காரணத்தை முன்னிட்டு ஜெர்மனி யுத்தத்திலீடுபடும்படி நேருமாயின், அப்போது உள்நாட்டு அரசியல் காரணங்களால் ஆஸ்திரியா ஜெர்மனிக்கு ஆதரவளிக்க

முடியாமற் போகலாமென நான் அஞ்சினேன். ஆனால் ஸரஜிவோ சம்பவம் அந்த பயத்தை அகற்றியது. ஆஸ்திரியா தான் விரும்பினாலும் விரும்பாவிடினும் யுத்தம் செய்தே தீரவேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டது.

அப்போரையொட்டி எனது நிலைமை சிக்கலின்றியும் தெளிவாகவுமிருந்தது. செர்பியா தனக்குத் திருப்திகரமான முறையில் பிராயச்சித்தம் செய்ய வேண்டுமென்பதற்காக ஆஸ்திரியா போராடுவதாய் நான் நினைக்கவில்லை. தான் வாழ்வதா அல்லது வீழ்வதா என்பதற்காகவும் தன் சுதந்திரத்திற்காகவும், தன்னுடைய எதிர்காலத்திற்காகவும் ஜெர்மனி போராடுவதாகவே நினைத்தேன். மற்றும் பிஸ்மார்க் ஆரம்பித்த கைங்கர்யம் பூர்த்தி செய்யப்பட வேண்டுமென்றும், வீஸ்ஸன் பர்க்கிலிருந்து ஸீடான், பாரிஸ் வரையில் பற்பல போர்க்களங்களிலும் நம் முன்னோர்கள் சிந்திய இரத்தத்தின் உண்மையான சந்ததிகளென்பதை யுவ ஜெர்மனி காட்ட வேண்டுமென்றும் நான் அபிப்பிராயப்பட்டேன். அப்போராட்டத்தில் நாம் வெற்றி பெறுவோமாயின், நம் ஜனங்கள் உலகிலுள்ள பெரிய தேசங்களிடையே முன்னணியிலிருப்பார்கள்; அதன் பின்னர் தான் ஜெர்மன் சாம்ராஜ்யமும் தன் குழந்தைகளின் தினசரி உணவைக் கட்டுப்படுத்த வேண்டிய அவசியமின்றியே, சமாதானத்தைக் காக்கும் மகாபலம் பொருந்திய வீரகர்த்தாவாக விளங்குமென்றும் நினைத்தேன்.

என்னுடைய தேசீய உற்சாகமானது வெறும் ஜம்பமல்ல என்பதை நிரூபிப்பதற்குற்ற சந்தர்ப்பம் கிடைக்காதாவென நான் சிறுவனாயிருந்தபோதும் சரி, யௌவனப் பருவத்திலும் சரி, ஏங்கி வந்தேன். ஜெயகோஷங்கள் செய்வது பாவமான ஒரு செய்கையாக எனக்குச் சில சமயங்களில் தோன்றியது. இருந்தாலும் அந்த உணர்ச்சி நியாயமானதென என்னால் நிரூபிக்க முடியவில்லை. ஏனெனில் அந்தரங்க சுத்தியின்றி கோஷங்கள் செய்வதுதான் தவறேயொழிய, அந்தரங்க சுத்தியையும், சத்தியத்தையும் ஆதாரமாகக் கொண்ட கோஷங்களில் ஏன் கலந்து கொள்ளக் கூடாது?

ஆரம்பம் முதல் ஒரு விஷயம் மாத்திரம் தெளிவாகி விட்டது. அதாவது யுத்தமேற்படுமாயின், என் புத்தகங்களை உடனே அப்பால் தூக்கி எறிந்துவிட வேண்டுமென முடிவு செய்து கொண்டேன். மற்றும் என் மனச்சாட்சி என்னை எங்கு அழைக்கின்றதோ அங்குதான் செல்ல வேண்டுமென்று சங்கல்பம் செய்து கொண்டேன்.

அரசியல் காரணங்களை முன்னிட்டே நான் ஆஸ்திரியாவை விட்டுச் சென்றேன். யுத்தமும் மூண்டுவிட்டதால் என்

அரசியல் அபிப்பிராயங்களை அனுஷ்டானத்தில் கொண்டுவர வேண்டியதே என் கடமையாயிற்று. எனினும் ஹாப்ஸ்பர்க் ராஜ்யத்திற்காகப் போராட நான் விரும்பவில்லை. ஆனால் என்னுடைய ஜெர்மன் சகோதரர்களுக்காகவும், ஜெர்மன் சாம்ராஜ்யத்திற்காகவும் எந்த க்ஷணத்திலும் என் உயிரை அர்ப்பணம் செய்யத் தயாராக இருந்தேன்.

2574 (1914) ஆகஸ்டு மாதம் 3ம் தேதி மாட்சி தங்கிய மூன்றாம் லட்விக் மன்னருக்கு நான் ஓர் அவசர விண்ணப்பம் செய்து, பவேரிய ராணுவத்தில் சேர அனுமதி கொடுக்க வேண்டுமென அவரை வேண்டிக் கொண்டேன். எனது வேண்டுகோள் அங்கிகரிக்கப் பெற்று விட்டதாக ஒரு நாள் கழித்து எனக்குப் பதில் கிடைத்தபோது நாம் மிகுந்த சந்தோஷமடைந்தேன். அந்த பதிலைத் திறந்து பார்த்தபோது என் கைகள் நடுங்கின. ஆனால் பவேரிய ராணுவத்தில் சேரும்படி அதன் மூலம் எனக்கு உத்தரவிடப்பட்டிருந்ததைக் கண்டதும், எனக்கு உண்டான ஆனந்தத்தை வர்ணிப்பதென்பது முடியாத காரியம். சில நாட்கள் கழிந்த பின் நான் ராணுவ உடை தரித்து படையில் சேர்ந்தேன். பின்னர் சற்றேறக்குறைய ஆறு வருஷ காலம் வரையில் ராணுவ உடையையே நான் தரிக்கும்படி நேர்ந்தது!

மற்ற ஒவ்வொரு ஜெர்மானியரையும் போல், என்னுடைய வாழ்க்கையிலும் மறக்கவே முடியாத ஒரு படலம் ஆரம்பமாகியது. மகத்தான ஒரு போராட்டத்திலீடுபடும்படி நேர்ந்ததால், பழைய சம்பவங்களெல்லாம் அடியோடு மறந்துவிட்டன. இப்போது அதை நினைத்தாலும் எனக்கு மிகுந்த பெருமை ஏற்படுகிறது. வீரத்தனமான அப்போராட்டத்தில் கலந்து கொள்ளும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது என்னுடைய அதிர்ஷ்டமேயாகும். அச்சம்பவங்கள் நேற்று நடந்தது போல் என் கண் முன் நிற்கின்றன. நாங்கள் பயிற்சி பெற்றபின், நானும் எனது தோழர்களும் போர் முனைக்குச் செல்லும் நாள் வந்தது.

அச்சமயம் மற்றவர்களைப் போல் எனக்கும் ஒரு வேதனை இருந்து வந்தது. போர்முனைக்கு நாங்கள் மிகவும் காலங்கடந்துதான் செல்லுவோமோ என்ற பயம்தான். நம் துருப்புகளுக்கு வெற்றி மேல் வெற்றி கிடைப்பதாக வந்த செய்திகள் எங்களுக்கு அதிக கலக்கத்தைக் கொடுத்தன! ஏனெனில் அவைகளில் நாங்களும் பங்கெடுத்துக் கொள்ளவில்லையே என்பதுதான். கடைசியாக நாங்கள் மியூனிச்சை விட்டுப் போர்முனைக்குப் புறப்பட்டோம். அப்போதுதான் நான் முதன்முதலாக ரைன் நதியைப் பார்த்தேன். உதய சூரியனின் மிருதுவான கிரணங்கள் பனியைப் பிளந்து கொண்டு வரவே, எங்கள் ரயில் வண்டியிலிருந்த சகல துருப்புகளும் ஏக காலத்தில் ரைன் பெருமையை விளக்கும் தேசிய

கீதத்தைப் பாடினோம். அப்போது என் ஹிருதயத்திலிருந்து பொங்கிய உணர்ச்சி வெள்ளம் விவரிக்க முடியாதது. பின்னர் இரவு பிளாண்டர்ஸில் கொடும் பனியையும், குளிரையும் நாங்கள் சகிக்க வேண்டியிருந்தது. இரவு முழுவதும் மௌனமாகச் சென்றோம். சூரியோதயமானதும், எங்கள் தலைக்கு மேலே திடீரென பீரங்கிக் குண்டுகள் வெடித்து எங்களை வரவேற்றன. அவ்வெடிகளாலேற்பட்ட புகை மறையுமுன் எங்கள் பிரிவிலிருந்த 200 பேர்களும் உரத்த குரலில் தேசிய கோஷம் செய்து, மரணப் பேயின் முதல் வரவேற்புக்குப் பதிலளித்தோம்! பின்னர் தோட்டாக்கள் பறக்கவும், பீரங்கிகள் முழங்கவும் ஆரம்பித்தன. சிப்பாய்களோ அவைகளை எல்லாம் லட்சியம் செய்யாது கோஷம் செய்யவும் பாடவும் துவங்கினர். நாங்கள் வெகு சீக்கிரமாக முன்னேறிச் சென்று எதிரித் துருப்புகளை நெருங்கினோம். எங்களிடையே பலர் பலியாயினரெனினும் சங்கீதம் மாத்திரம் நிற்கவில்லை. இறந்தவர்கள் போக மீதியுள்ளவர்கள் பாடினர்!

நான்கு நாள் யுத்தத்திற்குப் பின் நாங்கள் திரும்பி வந்தோம். எங்களுக்குக் கால்கள் தள்ளாடின. எங்களில் 17 வயது சிறுவர்கள் மிகவும் வயதானவர்கள் போல் தோன்றினர். எங்கள் பிரிவினருக்குச் சரியான ராணுவப் பயிற்சியளிக்கப்படவில்லை. இருந்தாலும் அவர்கள் அனுபவம் வாய்ந்த சிப்பாய்களைப் போல் எவ்விதம் உயிரை அர்ப்பணம் செய்வதென்பதை அறிந்து கொண்டிருந்தனர். யுத்தத்தில் அதுதான் எங்களுக்கு ஆரம்ப அனுபவமாகும். அவ்விதம் பல பல நாட்களும், மாதங்களும், வருஷங்களும் சென்றன. முதலிலிருந்த ஆவேச உணர்ச்சி எங்களுக்குப் பின்னர் மறைந்துவிட்டது. மனதில் திகில் குடிகொண்டது. நாளடைவில் உற்சாகமும் தணிந்து, இடை விடாத மரண பயத்தினால் இளைஞர்களின் குஷியும் குறைந்தது. அச்சமயம் ஒவ்வொருவருடைய மனதிலும் ஒரு போராட்டம் நிகழ்ந்து வந்தது. அதாவது தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள முற்படுவதா அல்லது கடமையைச் செய்வதா என்பதே. எங்கு பார்த்தாலும் மரணப் பேய் சிறிதும் பச்சாத்தாபமின்றி தனக்கு இரை தேட முற்படவே, பலமற்ற சரீரங்களில் பகுத்தறிவின் பெயரால் ஏதோ புகுந்து கொண்டு புரட்சி செய்ய ஆரம்பித்தது. உண்மையில் அது என்ன? பயம்தான். அது பகுத்தறிவாகிற போர்வையுடன் எங்களை ஆட்கொள்ள முயற்சித்தது. எனினும் அதன் முயற்சி அதிகமாக ஆக எங்களுடைய எதிர்ப்பும் அதிகமாகி, இறுதியில் மனப்புரட்சி தீர்ந்து, எது நேர்ந்தாலும் கடமையைச் செய்தே தீருவதென்ற உறுதி வெற்றி பெற்றது. 2575 -76ம் (1915 - 16) வருஷம் மாரிகாலத்தில் என் மனதிலும் அப்போராட்டமேற்பட்டபோது, மனோபலமே அதற்கொரு

முற்றுப்புள்ளி வைத்தது. ஆரம்பத்தில் நான் சிரித்துக் கொண்டேன். பின்னர் அமைதியும், உறுதியுமேற்பட்டன. தைரியத்தையோ அல்லது பகுத்தறிவையோ இழந்துவிடாது நான் இறுதியான சோதனையில் வெற்றி பெற்று, திடசித்தமும் அனுபவமுமுள்ள ஒரு சிப்பாயானேன். இடைவிடாத யுத்தம் காரணமாக சகல சிப்பாய்களின் மனமும் அவ்விதமே பக்குவமடைந்து, அவர்கள் முன்னரைக் காட்டிலும் அதிக உறுதியுடன் போராட ஆரம்பித்தனர்.

ஐந்து வருஷ காலம் இடைவிடாத யுத்தம். எதிரிகளின் அபரிமிதமான தொகை, ஆயுதங்கள், பட்டினி, பிணி முதலிய கஷ்டங்கள் - இவ்வளவிலும் ஜெர்மன் சிப்பாய்கள் மனமுடையவில்லை. இன்னும் ஆயிரம் வருஷ காலமாயினும் கூட, உலக யுத்தத்தில் கலந்து கொண்ட ஜெர்மன் ராணுவத்தை ஞாபகப்படுத்திக் கொள்ளாமல் எவரும் வீரத்தனத்தைப் பற்றிப் பேசத் துணிய மாட்டார்கள். அவர்கள் தளரவில்லை, தடுமாறவில்லை. ஜெர்மானியர் உள்ளளவும், அவ்வீரர்களை நினைக்கும்போது பெருமையே அடைவர், அவர்கள்தான் வீர ஜெர்மானியர்களின் உண்மையான சந்ததிகளென்றும் போற்றுவர்.

அப்போது நான் ஒரு சிப்பாயாக இருந்ததால் அரசியலில் கலந்து கொள்ள விரும்பவில்லை. அவ்விதம் கலந்து கொள்வதற்கு அது உற்ற சமயமுமல்ல. அக்காலத்தில் பார்லிமெண்டு அங்கத்தினர்களில் சிறந்தவரைக் காட்டிலும்கூட, சிறிதும் ஆடம்பரமற்ற குதிரை லாயப் பையன் தேசத்திற்கு அதிக தொண்டு புரிந்து வந்தானென்பதே என்னுடைய அபிப்பிராயம். அவர்களின் பிதற்றல்கள் எனக்கு வெறுப்பைக் கொடுத்தன.

நம் துருப்புகளுக்கு முதலில் அடுத்தடுத்து வெற்றிகள் கிடைத்தபின், பத்திரிகைகளில் சில, கொஞ்சம் கொஞ்சமாக ஜனங்களின் உற்சாகத்தைத் தணிக்க ஆரம்பித்தன. இவ்விஷயம் முதலில் பெரும்பாலோருக்குத் தெரியவில்லை. நல்லெண்ணத்தின் பெயரால் அந்த தந்திர வேலை அனுஷ்டிக்கப்பட்டது. வெற்றிகளைக் கொண்டாடுவது உசிதமல்ல வென்றும் ஒரு பெரிய தேசத்தின் கண்ணியத்திற்கு அது உற்றதல்லவென்றும் பொது ஜனங்களுக்கு உபதேசிக்கப்பட்டது. அடக்கம்தான் உயர்வென்றும், ஜெர்மன் சிப்பாய்களின் சௌகர்யம் எல்லோரும் அறிந்த விஷயமாதலால் அதைக் கொண்டாடுவதை அற்பத்தனமான ஆடம்பரமென உலகம் கருதுமென்றும் அப்பத்திரிகைகள் உபதேசித்தன. நம் ராணுவத்தின் வீர சாகஸங்களை, கண்ணியமற்ற கொண்டாட்டத்தினால் கறைப்படுத்துவது புத்திசாலித்தனமல்ல என்றும், ஓர் உண்மையான வீரன் அடக்கமாகவும்,

ஆடம்பரமின்றியும் தன் கடமையைச் செய்து விட்டுப் பேசாமலிருந்து விடுவானென்றும், அத்தகைய அடக்கமான குணத்தைத்தான் உலகம் பாராட்டும் என்றும் அவைகள் கூறின. அக்கூற்றுகளுக்கெல்லாம் காரணஸ்தர்களான பேனா வீரர்களைக் காதைப் பிடித்திழுத்து, குழியில் தள்ளி, கழுத்தில் சுருக்கிட்டு உதைக்காமல், அவர்கள் தங்களிஷ்டப்படி பிரசாரம் செய்ய அனுமதிக்கப்பட்டதுதான் ஆச்சரியமாகும். பொது ஜனங்களின் உற்சாகத்தைத் தூண்டுவது மிகவும் கஷ்டமான காரியமென்பதையும் எவரும் உணர்ந்து கொள்ளவில்லை. உற்சாகமானது ஒரு போதை போன்றது. எனவே அது எப்போதும் உச்ச ஸ்தானத்திலேயே இருந்து வரவேண்டும். அத்தகைய உற்சாகமிராவிடில், போராட்டத்தின் கொடுமைகளையெல்லாம் எவ்விதம் சகித்து நிற்க முடியும்? எனவே பொதுஜன உற்சாகத்தைத் தணிப்பதற்காகச் செய்யப்பட்டு வந்த விபரீத முயற்சியின் நோக்கத்தை என்னால் அறிந்து கொள்ள முடியவில்லை.

அச்சமயம் என் மனதை உறுத்தி வந்த மற்றொரு விஷயமானது மார்க்ஸ் கொள்கையே. மார்க்ஸ் கொள்ளை நோயைப் பற்றியும், அது மானிட வர்க்கத்தின் அழிவிற்கான ஒரு தத்துவமென்பதையும் எவரும் அறிந்து கொள்ளவில்லை. யுத்த காலத்தில் கட்சி வேற்றுமைகளை ரத்து செய்ததன் மூலம், மார்க்ஸ் கொள்கையின் உக்ரம் தணிந்துவிட்டதென சகலரும் நம்பினர். சர்வ கலாசாலைகளெல்லாம் யூதர் மயமாகவே இருந்ததால், அக்கொள்கை பற்றி மாணவர்களுக்கு எதுவுமே கூறப்படுவதில்லை. அக்கொள்கையின் கோர ரூபத்தை அப்போது ஜெர்மானியர்கள் அறிந்து கொண்டிருப்பார்களாயின், மடத்தனமான பல தவறுகளும் தவிர்க்கப்பட்டிருக்கும்.

மார்க்ஸ் கொள்கையின் இறுதி நோக்கம், - முன்னரும், இன்றும், என்றும் - யூதரல்லாத தேசீய அரசாங்கங்களை அழிப்பதுதான். எனினும் *2574 (1914)* ஜூலை மாதம் ஜெர்மன் தொழிலாளர்களெல்லோரும்தேசரவேசங்கொண்டுஜன்மபூமியின் சார்பில் அணிவகுத்து நின்றனர். சில நாட்களுக்குள் மார்க்ஸ் கொள்கையின் மாயவலைஇருந்தவிடம்தெரியாமல் மறைந்து, யூத எஜமானர்கள் சகலரும் கைவிடப்பட்டு, துணையின்றித் தனித்து நிற்க நேர்ந்தது. அறுபது வருஷ காலமாக ஜனங்களின் உதிரத்தில் பாய்ச்சப்பட்டு வந்த மடத்தனமும் பைத்தியக்காரத்தனமும் அடியோடு ஒழிக்கப்பட்டு விட்டனவென்றே தோன்றியது. இந்த ஆபத்தை யூதர் தலைவர்கள் உணர்ந்து கொண்டதும் சிறிதும் தாமதமின்றி அவர்கள் மோசடியாகிற மந்திரக் குல்லாயால் முகத்தை மறைத்துக் கொண்டு, தேசீய எழுச்சியில் தாங்களும் கலந்து கொள்வது போல் நடித்தனர்!

தேசத்தைப் பாழ்படுத்தும் நோக்கத்துடன் யூதர்கள் உபதேசித்து வந்த சர்வதேச ஒற்றுமைக் கொள்கை, 2574 (1914) ஆகஸ்டு மாதம் இருந்த இடந்தெரியாமல் மறைந்தது. ஜெர்மன் தொழிலாளர்கள் அக்கொடுமையிலிருந்து விடுபட்டனர். 'சர்வதேச ஒற்றுமை என்ற மடத்தனமான பேச்சு மறைந்து, அதன் ஸ்தானத்தில் அந்த 'ஒற்றுமை'க்கு அறிகுறியாக அமெரிக்காவிலிருந்து உற்பத்தியான பீரங்கிகளின் சப்தமே கேட்டது! ஜெர்மன் தொழிலாளர்களிடையே மீண்டும் தேசிய உணர்ச்சி ஏற்பட்ட அச்சமயத்தில், அந்த உணர்ச்சிக்குப் பாதகத்தை உண்டாக்கக் கூடிய சகல காளான்களையும் சிறிதும் இரக்கமின்றி வேருடன் களைந்தெறிந்திருக்க வேண்டியது சர்க்காரின் கடமை. ஆனால், தேசத்தின் திலகங்களான இளங்காளைகள் போர்க்களத்தில் உயிரைத் தியாகம் செய்து வந்த அச்சமயத்தில், மார்க்ஸ் கொள்ளை நோயை ஒழிக்க ஜெர்மன் சர்க்கார் முயலவில்லை. அதற்கு மாறாக, பரம்பரை அயோக்கியர்களான யூதர் கூட்டத்தைப் பாதுகாப்பதாய் மாட்சிமை தங்கிய கெய்சர் அபயமளித்தார்! அதன் பயனாக அக்கூட்டத்திற்கு மன நிம்மதியேற்பட்டது. அதனாலேயே அந்த விஷப்பாம்பு மீண்டும் அதிக ஜாக்கிரதையாகவும், அதே சமயம் முன்னரை விட அதிக நாசகரமாகவும் தன் வேலையைத் தொடர முடிந்தது. யோக்கியமானவர்கள் சமரசமேற்படுமென்று கனவு கண்டு வருகையில், அந்த அயோக்கியர்கள் ஒரு புரட்சிக்கான ஏற்பாடுகளைச் செய்து வந்தனர். அப்போது கைக்கொள்ளப்பட்ட அரைகுறையான முறைகள் எனக்கு மிகுந்த மனோவேதனையை உண்டுபண்ணின. இருந்தாலும் அம்முறைகளின் விளைவாக இறுதியில் மகத்தான ஆபத்தேற்படுமென நான் நினைக்கவேயில்லை.

நியாயமாக அப்போது என்ன செய்திருக்க வேண்டுமெனில், புரட்சித்தலைவர்களின் கொடுமையை ஒழிக்க மிக மிகக் கடுமையான ராணுவ முறைகள் கைக்கொள்ளப்பட்டிருக்க வேண்டும். கட்சிகளை எல்லாம் ரத்து செய்து, அவசியமாயின் துப்பாக்கி முனையில் பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்கு ஞானோதய மேற்படும்படி செய்திருக்க வேண்டும். உடனே பார்லிமெண்டைக் கலைத்திருந்தால் கூட நன்மையாக இருந்திருக்கும். தேசத்தின் வாழ்விற்கே ஆபத்தேற்பட்ட அச்சமயத்தில், அவ்வித கடுமையான முறைகள் நியாயமானவையே. எனினும் இந்த ஆலோசனைகளெல்லாம் ஒரு கேள்விக்கு இடங் கொடுக்கின்றன. அதாவது ஆயுத பலத்தினால் கொள்கைகளை ஒழிப்பதென்பது சாத்தியமா? இக்கேள்வியை நான் அடிக்கடி என் மனதில் சிந்தித்துப் பரிசீலனை செய்து, அதன் பயனாக

கீழ்க்கண்ட முடிவிற்கு வந்தேன்.

ஒரு திட்டமான ஆத்துமார்த்த அஸ்திவாரத்தின் மீது அமைக்கப்பட்ட கொள்கைகளையோ அல்லது இயக்கங்களையோ ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பின், பலாத்காரத்தினால் தகர்ப்பதென்பது முடியாத காரியம். ஆனால் அவைகளின் ஸ்தானத்தில் ஒரு புதிய கொள்கை அல்லது கட்சியை அமைத்து, அதற்கு உதவியாக பலாத்காரத்தையும் உபயோகிக்க வேண்டும். அவைகளின் ஸ்தானத்தில் ஆத்துமார்த்த சக்தியை ஆதாரமாகக் கொண்ட மற்றொரு கொள்கையை உருவாக்க முற்படாது, பலாத்காரத்தினால் மாத்திரம் அதை ஒழித்துவிட முடியாது. மற்றும் பழைய கொள்கையை ஆதரிப்பவர்கள், அதன் பழைய சின்னங்கள், சம்பிரதாயங்கள் முதலிய சகலவற்றையும் அடியோடு ஒழித்துவிட வேண்டும்.

ஒரு கொள்கை பரவுவதைத் தடுக்க கலப்பற்ற பலாத்காரம் உபயோகிக்கப்படுவதாயின், அதை உறுதியுடனும், தடுமாற்றமின்றியும், இடைவிடாமலும் உபயோகித்து வரவேண்டும். அப்படியானால்தான் வெற்றி பெற முடியும். அவ்விதமின்றி இடங்கொடுத்து விடும் பட்சத்தில், அத்தகைய கொள்கை இழந்த பலத்தை மீண்டும் பெறுவதுடன், அடக்குமுறைகளின் விளைவாக அக்கொள்கையை ஆதரிப்போரின் தொகையும் அதிகமாகி வரும்; அதையொட்டி பழைய அங்கத்தினர்களின் உறுதியும், விசுவாஸமும் பலமடையும். இன்னும், அத்தகைய பலாத்காரத்திற்கு ஆத்துமார்த்த ரீதியான ஆதரவும் இருக்க வேண்டும். இல்லாவிடில், அதனால் நிச்சயமான பலன் கிடைக்காது.

அவ்வித ஆத்துமார்த்த ஆதரவு இராததால்தான், பிஸ்மார்க்கின் எதிர்ப்பு முறைகள் தோல்வியுற்றன. அதனால்தான் அவர், மார்க்ஸ் கொள்கையை எதிர்த்து நடத்திய தமது போராட்டத்தின் விதியை நடுத்தர வகுப்பு ஜனநாயக வாதிகளின் தயவில் ஒப்படைக்க நேர்ந்தது. அதாவது அவர், தோட்டத்தைக் காவல் புரிய வேண்டிய பொறுப்பை வெள்ளாடுகளிடம் ஒப்புவித்து விட்டார். அதன் விளைவாக, மார்க்ஸ் கொள்கையை ஒழிக்க முடியாமற் போயிற்று.

மார்க்ஸ் கொள்கையை அஸ்திவாரமாகக் கொண்ட அபேதவாத ஜனநாயகக் கட்சியை ரத்து செய்வதாயின், அதன் ஸ்தானத்தில் தகுந்த மற்றொரு கட்சியை அமைக்க வேண்டும். எனவே யூதர்களின் பூர்ண ஆதிக்கத்திலிருந்து வரும் அபேதவாத ஜனநாயகக் கட்சியின் ஸ்தானத்தில் எக்கட்சியை ஏற்படுத்துவதென்ற பெரும் பிரச்னை எழுந்தது. இவ்விஷயத்தை நான் எனது நெருங்கிய நண்பர்களுடன் அடிக்கடி விவாதித்து

வந்தேன். ஒரு தகுந்த இயக்கமிருந்தாலன்றி அபேதவாத ஜனநாயகக் கட்சியை எதிர்த்து நிற்பது அசாத்தியமென்பதை நான் திட்டமாக உணர்ந்து கொண்டேன். அரசியல் அலுவல்களில் ஈடுபட வேண்டுமென்ற எண்ணம் அப்போதுதான் முதன் முதலாக எனக்கு ஏற்பட்டது. அதன் பயனாகவே யுத்தத்திற்குப் பின் என் சொந்தத் தொழிலுடன் நான் பொதுக் கூட்டங்களில் பேசவும் ஆரம்பித்து, மிகுந்த தீர்க்காலோசனைக்குப் பின்னர்தான், அரசியலில் பிரவேசிக்கவும் தீர்மானித்தேன்.



## குறிப்பு

1. 2574 (1914) ஜூன் மாதம் 28ந் தேதி ஸரஜிவோவில் ஆஸ்திரிய இளவரசர் கொலை செய்யப்பட்டார். செர்பியாவிலுள்ள உயர்தர அதிகாரிகளும் அச்சம்பவத்தில் சம்பந்தப்பட்டவர்களென ஆஸ்திரிய சர்க்கார் கருதினர். எனவே ஜூலை மாதம் 23ந் தேதி செர்பியாவிற்கு ஆஸ்திரிய சர்க்கார் ஓர் எச்சரிக்கை அனுப்பினார்கள். குறிப்பிட்ட சில செர்பிய அதிகாரிகளைத் தாக்கியவர்களெனக் கருதப்படுவோரை விசாரித்து குற்றவாளிகளெனக் கண்டுபிடிக்கப்படுவோரைத் தண்டிக்க ஆஸ்திரிய அதிகாரிகளுக்குப் பூர்ண அதிகாரம் அளிக்க வேண்டும் என்பதும், சில மணி நேரத்திற்குள் செர்பியாவிடமிருந்து அதற்கு பதில் கிடைக்காவிடில் பின்னர் யுத்தம் தானென்பதுமே அந்த எச்சரிக்கையாகும்.

2. மேரியா தெரிஸா ஜெர்மன் சக்ரவர்த்தினி (1717 -80). அவளது ஆட்சிக் காலத்தில் 7 ஆண்டுகளுக்கு மேல் நடந்த ஆஸ்திரிய வாரிசுரிமை யுத்தமானது 1748ல் அவளுக்கு சாதகமாக முடிந்தது. மகத்தான சீர்திருத்தங்களைச் செய்தவள்.

## 6. பிரசாரக் கருவியின் அபார சக்தி

அரசியல் சம்பவங்களை நான் கவனித்து வந்தபோது அவ்விஷயங்களில் பிரசாரத்தின் முக்கிய பங்கைக் கண்டு பிரமிப்படைந்தேன். மார்க்ஸ் அபேதவாதிகள், பிரசாரக் கருவியை இணையற்ற விதமாகக் கையாளுவதிலும் பிரயோஜனகரமாக இருந்தனர். பிரசாரக் கருவியை சரியான வழியில் உபயோகிப்பது ஒரு சிறந்த கலையென்பதையும், அக்கலையை நடுத்தர வகுப்புக் கட்சியினர் சிறிதும் அறிந்து கொள்ளவில்லை என்பதையும் வெகு சீக்கிரத்தில் தெரிந்து கொண்டேன். கிறிஸ்துவ அபேதவாதக் கட்சியினர் மாத்திரம், அக்கட்சித் தலைவரான லூகர் காலத்தில், அக்கருவியை ஓரளவு திறமையுடன் உபயோகித்து வந்தனர். பெரிதும் அவர்களுடைய வெற்றிக்குக் காரணம் அதுதான்.

பிரசார முறையை ஒழுங்காக நடத்தும் பட்சத்தில் அதனால் எவ்வளவு அற்புதமான பலன் பெற முடியுமென்பதை யுத்தத்தின் போது அறிந்து கொள்ள எங்களுக்குச் சிறந்த சந்தர்ப்பம் வாய்த்தது. இத்துறையில் எதிரிகள்தான் அபார திறமையுடன் விளங்கினார்கள். பிரசாரத்தில் நமக்குள்ள திறமை இன்மையையும் அவர்கள் ஆச்சரியகரமான முறையில் தங்களுக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக் கொண்டார்கள். அவர்களுடைய பிரசாரமானது எங்களுக்கு ஒரு படிப்பினையாகவுமிருந்தது. ஆனால் நம் பக்கத்திலுள்ள 'மேதாவிகள்' அதை லட்சியம் செய்யவில்லை, அவ்விஷயத்தில் கவனம் செலுத்தவேயில்லை. தங்களைக் காட்டிலும் கெட்டிக்காரர்களில்லை என்பது அவர்களுடைய எண்ணம். எனவே எதிரிகளின் உதாரணம் அவர்களுடைய மண்டையில் ஏறவில்லை. பிரசாரம் ஒரு லட்சியமா அல்லது லட்சியத்தை அடைவதற்கான ஒரு முறையாவென்பதைக் கூட நம்மவர்கள் சரிவர அறிந்ததாகத் தெரியவில்லை!

மிக மிக உயர்ந்த லட்சியத்திற்காக நாம் யுத்தத்தில் ஈடுபட்டோம். நம் தேசத்தின் சுதந்திரத்திற்காகவும், விடுதலைக்காகவும், கௌரவத்திற்காகவும், நம் எதிர்கால க்ஷேமத்திற்காகவும் நாம் போராடிக் கொண்டிருந்தோம். கௌரவத்தை இழந்த ஒரு தேசம் ஒரு காலத்தில் சுதந்திரத்தையும் இழக்கும்படி நேரும். கௌரவத்தை இழந்த கோழைகள் சுதந்திரத்திற்குத் தகுதியற்றவர்களென்பது இறைவனின் கட்டளை. அடிமைகளுக்குக் கௌரவமென்பதேது?

இருப்பதா அல்லது இறப்பதா என்பதை நிர்ணயிப்பதற்காக ஈடுபட்ட யுத்தத்தில், ஜெர்மனி வெற்றி பெறுவதற்கு உதவியாக ஜனங்களை உற்சாகப்படுத்தும் வண்ணம் பிரசாரமிருந்திருக்க வேண்டும். அத்தகைய யுத்தத்தில் ஜீவகாருண்யம் முதலிய

உணர்வுகளுக்கு இடமில்லை. ஜீவகாருண்யம் முதலிய கொள்கைகள் மனிதன் கற்பனா சக்தியிலிருந்து உற்பத்தியானவைகளே. மனிதன் மறையும்போது அவைகளும் மறைந்து விடுகின்றன. ஒரு தேசமே தன் வாழ்விற்காகப் போராடும்போது, அத்தகைய கொள்கைகள் இரண்டாம் பட்சமானவையே. போராடும் ஒரு தேசத்தின் பலவீனத்திற்கு அக்கொள்கைகள் காரணமாக அமையுமாயின், அவை போராட்டத்தில் குறுக்கிடாமல் தடுக்கப்பட்டே தீரவேண்டும். யுத்த காலத்தில் அதிதுரிதமாகத் தீர்மானங்கள் செய்ய வேண்டுமென்றும், சிறிதும் இரக்கமற்ற போர் முறைகள்தான் மிகுந்த ஜீவகாருண்யம் பொருந்தியவை என்றும் மால்ட்கே என்பார் கூறியுள்ளார். ஏனெனில் இரக்கமற்ற முறைகளால்தான் சீக்கிரத்தில் ஒரு முடிவு காண முடியும். தேசத்தின் கௌரவத்தையும், சுதந்திரத்தையும் பாதுகாக்கக் கூடிய எம்முறையும் சிறந்த முறையே. இந்த ரீதியில்தான் யுத்தப் பிரசாரம் நடைபெற வேண்டும். இந்த உண்மையை ஜெர்மன் அதிகாரிகள் அறிந்து கொண்டு, அக்கருவியைப் பிரயோஜனகரமான முறையில் உபயோகித்திருப்பார்களாயின், அதனால் அளவற்ற பலனேற்பட்டிருக்கும். அது மிகவும் பயங்கரமான ஒரு கருவி என்பதையும் அதைச் சரிவர உபயோகிக்கத் தெரிந்தவர்கள் அதனால் மகத்தான காரியங்களைச் சாதித்துக் கொள்ளலாமென்பதையும் அவர்கள் அறிந்து கொள்ளத் தவறிவிட்டனர்.

பிரசாரம் சம்பந்தப்பட்ட வரையில், மற்றொரு முக்கிய விஷயமுமிருக்கிறது. பிரசாரமானது எப்பிரிவினருடைய மனதைக் கவரக் கூடியதாக இருக்க வேண்டும்? படித்தவர்களின் மனதையா அல்லது பாமரர்களின் மனதையா? என்பதுதான். பிரசாரமானது, பாமர ஜனங்களையே கவர்ச்சி செய்யக் கூடியதாக இருக்க வேண்டும். அது ஒரு விளம்பரப் பிரசுரம் போன்றது. பார்த்த மாத்திரத்தில் விளம்பரப் பிரசுரங்கள் ஜனங்களின் மனதைக் கவருவது பேல், பிரசாரமுமிருக்க வேண்டும். ஒரு விளம்பரத்தைப் பார்த்தவுடன், அதில் கண்டுள்ள சாமான்களின் தன்மையை அறிந்து கொள்ள முடியாது. எனினும் அது ஜனங்களைக் கவர்ச்சி செய்யக் கூடியதாக இருக்க வேண்டும். ஜனங்களின் பகுத்தறிவிற்குத் திருப்தி உண்டாக்குவதைக் காட்டிலும், அவர்களுக்கு உணர்ச்சி வெள்ளம் பொங்கும்படி செய்வதுதான் பிரசாரத்தின் நோக்கமாகும். ஜனங்களின் கற்பனா சக்தியைக் கிளறுவது; அவர்களிடையே உணர்ச்சி ததும்பும்படி செய்வது; பாமர ஜனங்களின் கவனத்தை ஈர்த்து ஹிருதயத்தைக் கொள்ளை கொள்ளும்படியான ரீதியில் சுலோகங்களைத் தயாரிப்பது - இவைதான் பிரசாரக் கலையாகும். மற்றும் பிரசாரமானது

படித்தவர்கள் மாத்திரம் அறிந்து கொள்ளும்படியான உயர்ந்த ரகத்திலிருக்கக் கூடாது. படிப்பு மணமே இல்லாத பாமரரும் அறிந்து கொள்ளக் கூடிய விதத்தில் தெளிவாக இருக்க வேண்டும். அப்போதுதான் அதன் மூலம் சகல ஜனங்களின் ஆதரவையும் பெற முடியும். மற்றும் பிரசார முறையில் அதிக சிக்கல்களும் இருக்கக் கூடாது. பாமர ஜனங்களுக்கு விஷயங்களைக் கிரகிக்கும் சக்தியும், அறிவும் சொற்பம். எவ்விஷயத்தையும் அவர்கள் சீக்கிரத்தில் மறந்து விடுவார்கள். எனவே பிரசார சுலோகங்கள் சுருக்கமாகவும், தெளிவாகவும், விறுவிறுப்பாகவும் இருக்க வேண்டும். அவைகளை இடைவிடாது கோஷம் செய்து அவைகளின் கருத்தைச் சகலரும் நன்கு அறிந்து கொள்ளும்படியும் செய்ய வேண்டும். அத்தகைய பிரசார முறைதான் மிகுந்த பலனைக் கொடுக்கும்.

பகைவர்களின் உண்மையான திறமையை மறைத்து ஏளனம் செய்யும் பிரசாரமும் இறுதியில் ஆபத்தாக முடியும். உதாரணமாக, உலக யுத்தத்தின்போது ஆஸ்திரிய, ஜெர்மன் விகடப் பத்திரிகைகள் பகைவர்களை ஏளனம் செய்து வந்தன. அவைகளின் கூற்றை நம் சிப்பாய்களும் நம்பினர். ஆனால் போர்க்களத்தில் அவர்கள் எதிர்க்க வேண்டியிருந்த பகைவர்களுக்கும் நம் பத்திரிகைகளால் சித்திரிக்கப்பட்ட பகைவர்களுக்கும் மிகுந்த வேற்றுமை இருந்தது. நம் சிப்பாய்கள் பகைவர்களை அற்பமாகக் கருதினர். ஆனால் அதற்கு முற்றிலும் மாறாக பகைவர்கள் போர்க்களத்தில் உக்கிரமாகப் போர் புரிந்ததால், தங்கள் பத்திரிகைகள் பொய்த் தகவல்களைக் கூறி தங்களை ஏய்த்து விட்டதாக ஜெர்மன் சிப்பாய்கள் எண்ணி தைரியமிழந்தனர்.

ஆனால் பிரிட்டிஷ், அமெரிக்க நாடுகளின் யுத்தப் பிரசாரமானது, அதற்கு முற்றிலும் நேர்மாறாக இருந்தது. ஜெர்மானியர்களை, காட்டுமிராண்டிகளென அப்பிரசாரகர்கள் பறைசாற்றி வந்ததால், பிரிட்டிஷ், அமெரிக்க சிப்பாய்கள் யுத்தம் மிகவும் பயங்கரமாக இருக்குமென எதிர்பார்த்து எத்தகைய கஷ்டங்களையும் சமாளிக்கத் தயாராக இருந்தார்கள். அதற்குத் தகுந்தாற்போல் அவர்கள் போர்க்களத்தில் ஜெர்மனியின் மிக பயங்கரமான ஆயுதங்களையும் எதிர்த்து நிற்க வேண்டியிருந்ததால், தங்கள் தேசத்தினர் கூறிவந்த விவரங்கள் உண்மையேயென அவர்கள் கருதி பகைவர்கள் மீது இன்னும் பன்மடங்கு அதிக ஆத்திரமும், துவேஷமும் கொண்டு தங்கள் முழு மனதுடன் போர் புரிந்தனர். ஆனால் போர் முனையில் ஜெர்மன் சிப்பாய்கள் கண்ட உண்மையிலிருந்து, அவர்கள் அதன்பின் தங்கள் தேசப் பிரசாரகர்கள் கூறும் எதையும் நம்புவதில்லை. பிரசாரக் கருவியைச் சிறந்த முறையில் உபயோகிக்க அபாரமான

மூளை வேண்டுமென்பதை ஜெர்மன் சர்க்கார் உணரவில்லை. ஜெர்மனியில் அப்போது அக்கருவியானது முதல்தர மூடர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அவர்கள் செய்த தவறுகளுக்கு எல்லையில்லை. எனவே அவர்கள் உண்மையிலேயே முதல்தர மூடர்களா அல்லது வேண்டுமென்று அவ்விதம் செய்த சூழ்ச்சிக்காரர்களா என்று கூட சந்தேகமேற்பட்டது.

யுத்தம் ஏற்பட்டதற்கு யார் பொறுப்பாளியென்ற விஷயத்தை அவர்கள் பரிசீலனை செய்ததும், முழுப் பொறுப்பையும் ஜெர்மனி தலையில் சுமத்த முடியாதென அவர்கள் கூறியதும் மகத்தான தவறாகும். அவ்விஷயமாக எவ்வித விவாதமுமின்றி முழுப் பொறுப்பையும் பகைவர்கள் தலையிலேயே சுமத்தியிருக்க வேண்டும். எதிரிகள் பக்கத்திலும் ஓரளவு நீதி இருக்கிறதென நம் தலைவர்கள் கூறினர். ஆனால் பகைவர்களோ முழுக் குற்றத்தையும் நம் மீதே சாட்டினர். அதன் பயனாக, நம் ஜனங்கள் எதிரிகளின் பிரசாரத்தை நம்பவும், எதிரிகளுக்கு அநீதியிழைக்கக் கூடாதென்பதில் சிரத்தை கொள்ளவும் ஆரம்பித்தனர். எப்போதுமே பிரசாரமானது எதிரிகளின் அநீதியை மாத்திரமே இடைவிடாது வலியுறுத்திக் கூறுவதாயிருக்க வேண்டும். எதிரிகளின் நல்ல அம்சங்களை அடியோடு விட்டுவிட வேண்டும். தங்கள் கட்சிக்குச் சாதகமாக இருக்கும் உண்மைகளை மாத்திரமே கூறி வரவேண்டும். அத்தகைய பிரசாரத்தைத்தான் பாமரர்கள் அறிந்து கொள்ள முடியும்.

அன்பு - துவேஷம், நீதி - அநீதி, சத்தியம் - அசத்தியம், இவைகளை ஆதாரமாகக் கொண்டே பொது ஜனங்களின் அபிப்பிராயங்கள் உருவடையும். ஓரளவு அது, ஓரளவு இது என்பதில் அவர்களுக்கு நம்பிக்கையே ஏற்படாது. இவ்வுண்மையை ஆங்கிலப் பிரசாரகர்கள் நன்கு அறிந்து கொண்டு தங்கள் கருவியை வெகு திறமையுடன் உபயோகித்தனர். அவர்கள் அரைகுறையான முறைகளைக் கைக் கொண்டு ஜனங்கள் மனதிலே சந்தேகமேற்பட இடங் கொடுப்பதேயில்லை. கோர யுத்த சம்பவங்களைப் பற்றிய விவரங்களை அவர்கள் விடாமல் பிரசுரித்து வந்ததால், ஜனங்களிடையே பகைவர்கள் மீது சொல்லொணாத ஆத்திர மேற்பட்டு ஒற்றுமை நிலவியது. பிரிட்டிஷாருக்கு மகத்தான தோல்விகளேற்பட்டபோது கூட அவர்களிடையே ஒற்றுமை குன்றவில்லை. யுத்தத்திற்கு ஜெர்மனிதான் பொறுப்பாளி என்ற பச்சைப் புளுகையும் இடைவிடாது பறையடித்துப் பாமர ஜனங்கள் நம்பும்படி அவர்கள் செய்த சாகஸம் அபாரமானதாகும்! யுத்தமேற்பட்டு நான்கரை வருஷகாலமாகியும் கூட அவர்களின் பிரசார வேகம் குறையவில்லை. நம் "ராஜதந்திரி"களின் பிரசாரமோ, பாமர

ஜனங்களிடையே சிறிதும் உற்சாகத்தையோ, உத்வேகத்தையோ, நம்பிக்கையையோ உண்டுபண்ணவில்லை. நம் "தலைவர்" களின் பிரசாரம் உருப்படாச் சரக்கென்பது மாத்திரமல்ல, அது நமக்குப் பாதகத்தையும் உண்டுபண்ணி வந்தது.

இடைவிடாது செய்யும் விளம்பரத்தினால் வெற்றியேற்படுவது போல், குறிப்பிட்ட சுலோகங்களை இடைவிடாது பிரசாரம் செய்வதன் மூலம் வெற்றியேற்பட்டே தீரும். இங்கிலாந்திலோ, பிரசாரமானது முதல்தரக் கருவியாகக் கருதப்பட்டது. அதற்காக அவர்கள் ஏராளமாகச் செலவழித்தனர். அவ்வித செலவிற்குத் தகுந்த பிரதிப் பிரயோஜனமிருக்கிறதென்பதை அறிந்தே அவர்கள் அவ்வாறு செய்தனர். அதன் காரணமாக அவர்கள் அடைந்த பலன் ஆச்சரியகரமானது. நம் நாட்டிலோ, பிரசார இலாகாவானது வேலையில்லாமல் திண்டாடிய அரசியல்வாதிகளின் வயிற்றுப் பிழைப்பிற்கும், போர்க்களம் செல்ல அஞ்சிப் பதுங்கிய "சூரப்புலி" களின் பொழுது போக்கிற்கும் ஒரு ஸ்தாபனமாக இருந்தது, எனவே அதன் பலனும் பூஜ்யமாயிற்று.





# 7. நாட்டை நசுக்கிய புரட்சி

**2575**ம் (1915) வருஷம் நம் சிப்பாய்களிடையே பகைவர்கள் தங்கள் பிரசாரத்தை ஆரம்பித்தனர். அப்பிரசாரம் நாளுக்கு நாள், மாதத்திற்கு மாதம் அதிகமாகி, 2578ல் (1918) தடுக்க முடியாத ஒரு பெரும் பிரவாகமாகியது. அதன் பயனாக, பகைவர்களுக்குத் தங்களிஷ்டப்படி நம் சிப்பாய்களின் மனதை ஆட்டி வைக்க முடிந்தது. ஆனால் நம் பக்கத்திலோ எதிர்ப்பிரசாரம் எதுவுமேயில்லை. மிகுந்த மனோபலமும், திறமையும் வாய்ந்த நம் தளபதியின் கீழிருந்த ராணுவ அதிகாரிகள், பிரசாரத் துறையிலும் பங்கெடுத்துப் போராடத் தயாராக இருந்தனர். எனினும் துரதிருஷ்டவசமாக, அந்த நோக்கத்தை அனுஷ்டானத்தில் கொண்டு வருவதற்குற்ற அவசியமான சாதனங்கள் அவர்களிடமில்லை. தவிர, நம் சிப்பாய்களின் மனதைப் பக்குவப்படுத்தும் அக்கடமையை ராணுவ அதிகாரிகள் ஏற்றுக் கொண்டிருந்தாலுங்கூட அது ஒரு தவறாக முடிந்திருக்கும். ஏனெனில் பிரசாரம் பிரயோஜனகரமாகவும், வெற்றிகரமாகவும் இருக்க வேண்டுமாயின், அது தாய்நாட்டிலிருந்துதான் செய்யப்பட வேண்டும். அந்தத் தாய்நாட்டிற்காக அல்லவா நம் சிப்பாய்கள் நான்கு வருஷ காலமாக அசாதாரணமான வீர சாகஸங்கள் புரிந்து வந்ததுடன், மகத்தான கஷ்டங்களையும் சகித்து வந்தார்கள்? அப்படியிருக்க பகைவர்களின் புளுகுப் பிரசாரத்தை ஜெர்மன் சர்க்கார் ஏன் தகர்க்க முற்படவில்லை? அவ்வித தவறுக்குக் காரணம் மடத்தனமா அல்லது துரோக சிந்தனையா?

2578ம் (1918) வருஷம் ஜெர்மன் பத்திரிகைகளின் போக்கு, சிறிதும் சந்தர்ப்பப் பொருத்தமில்லாமலும், அயோக்கியத் தனமாகவும், மடத்தனமாகவுமிருந்தது. வீரர்களான நம் சிப்பாய்களின் மனதைப் பாழ்படுத்தும் அவ்விபரீதத்திற்கு முற்றுப்புள்ளி வைக்கும் தைரியம் நம்மிடையே ஒருவருக்குமே இல்லையாவென்ற கேள்வி என் மனதில் எழுந்தது. 2574ம் (1914) ஆண்டு பிரான்ஸில் நம் துருப்புகள் வெற்றி மேல் வெற்றி பெற்று வந்தபோது என்ன நேர்ந்தது? இஸான்ஸோ போர்முனையில் இத்தாலியத் துருப்புகள் வீழ்ச்சியடைந்தபோது என்ன நேர்ந்தது? அப்போதெல்லாம் பின்தங்கி வந்த பகைத்துருப்புகளிடையே மீண்டும் தைரியத்தை யூட்டி, தேசாவேச ஜ்வாலையை எவ்விதம் உண்டாக்கினார்கள்? போர்க்களத்தில் சின்னாபின்னமாகச் சீர்குலைந்த சிப்பாய்களிடையே மீண்டும் போர் உணர்ச்சியை உண்டுபண்ணி, இறுதி வெற்றி தங்களுக்குத்தானென்ற உறுதியான

நம்பிக்கையும் கொழுந்து விடும்படி செய்தது பகைவர்களின் அற்புதமான சாகஸமல்லவா?

அந்நிலைமையில் நம் ஜனங்கள் என்ன செய்தனர்? ஒன்றுமேயில்லை. அப்போது ஜெர்மன் பத்திரிகைகளோ, நம் ஜனங்கள், சிப்பாய்கள் இவர்களுடைய மனதிலெழுந்த உயர்ந்த உணர்ச்சிகளைக் கொலை செய்யும் கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்ததைக் கண்டு எனக்குக் கோபாவேசமும், அடங்கா ஆத்திரமும் பொங்கின. ஜெர்மன் பிரசாரக் கருவியை மடையர்களிடமும், கோழைகளிடமும் ஒப்புவிக்காமல் இறைவன் என் கையில் ஒப்படைத்திருந்தால், போராட்டத்தின் முடிவு வேறுவிதமாக இருக்குமே என என் மனம் துடிதுடித்தது. அப்போதுதான் முதன்முதலாக என் மனதில் ஒரு எண்ணமேற்பட்டது. அதாவது போர் முனையில் நான் இருக்கும்படி நேர்ந்திருப்பது என் துரதிர்ஷ்டமென்றும், தற்செயலாக ஒரு தோட்டா என் மீது பாய்ந்தால் என் வாழ்வு முடிந்துவிடுமேயென்றும், ஆனால் நான் வேறொரு துறையில் ஈடுபட்டால் தாய்நாட்டிற்கு பிரமாதமாக தொண்டாற்ற முடியுமென்றும் எண்ணினேன். பிரசார வேலையை நான் வெற்றிகரமாக நடத்த முடியுமென்ற துணிச்சல் அப்போது எனக்கு உண்டாயிற்று. இருந்தாலும் என்ன செய்வது? நான் ஓர் அனாமதேயப் பேர்வழி, 80 லட்சம் பேர்களில் நானும் ஒருவன். எனவே அந்த எண்ணங்களை எல்லாம் ஒதுக்கிவிட்டு, எனக்கிடப்பட்டுள்ள கடைமையை வாயை மூடிக் கொண்டு செய்வதுதான் சிறந்ததெனச் சமாதானமடைந்தேன்.

2575ம் (1915) வருஷம் முதன்முதலாக பகைவர்கள் ஜெர்மன் சிப்பாய்களிருக்குமிடத்தில் விமானங்களிலிருந்து துண்டுப் பிரசுரங்களை வீசத் தொடங்கினர். ஜெர்மனியில் ஜனங்கள் படும் கஷ்டம் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. யுத்தம் காலவரையறையின்றி நடக்கலாம் - ஜெர்மானியருக்கும் வெற்றிக்குமுள்ள தூரம் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது - ஜெர்மன் ஜனங்கள் எப்போது சமாதானமேற்படுமென ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள் - ஆனால் ராணுவ வெறியர்களும், கெய்சரும் அதை விரும்பவில்லை - கெய்சரை எதிர்த்துத்தான் யுத்தம் நடந்து வருகிறதேயன்றி ஜெர்மன் ஜனங்களுக்கு விரோதமாக அல்ல - இவ்வாறெல்லாம் அத்துண்டுப் பிரசுரங்களில் குறிப்பிடப்பட்டிருந்தன. மற்றும் உலக சமாதான எதிரியான கெய்சர் ஒழிந்தாலன்றி யுத்தம் முடிவடைய ஹேதுவில்லை என்றும், யுத்தம் முடிந்ததும் ஜனநாயக தேசங்கள் உலக சமாதான சங்கத்தில் ஜெர்மானியர்களையும் சேர்த்துக் கொள்ளுமென்றும் அதில் கூறப்பட்டிருந்தது. பகைவரின்

அத்தகைய பிரசார முயற்சிகளைக் கண்டு எங்களுக்குச் சிரிப்பு உண்டாயிற்று. அவைகளை நாங்கள் வாசித்துவிட்டு தலைமைக் காரியாலயத்திற்கு அனுப்பி விடுவோம். அதன்பின் அவைகளைப் பற்றிய ஞாபகமே எங்களுக்கு ஏற்படாது.

குறிப்பாக பவேரியத் துருப்புகளிருக்கும் பிரிவுகளிடையேதான் பகை விமானங்கள் துண்டுப் பிரசுரங்களைப் போடுவது வழக்கம். யுத்தமேற்பட்டதற்கும், அது தொடர்ந்து நடந்து வருவதற்கும் ப்ரஷ்யாதான் காரணமென்றும், தங்களுக்குப் பவேரியர்கள் மீது எவ்வித விரோதமும் இல்லை என்றும் அத்துண்டுப் பிரசுரங்களில் குறிப்பிடப்பட்டிருந்தது. பகைவர்கள் இடைவிடாது அவ்விதம் பிரசாரம் செய்து வந்ததன் பயனாக, *2575ல் (1915)* ப்ரஷ்யர்கள் மீது பவேரியத் துருப்புகளுக்கு விரோத உணர்ச்சி தலைகாட்ட ஆரம்பித்தது. அதைத் தடுக்க ஜெர்மன் அதிகாரிகள் எவ்வித முயற்சியுமெடுத்துக் கொள்ளத் தவறியது பெரும் குற்றமாகும். அத்துறையில் பகைவர்களின் பிரசாரமானது *2576லிருந்து (1916)* அபார வெற்றியடையவும் ஆரம்பித்தது. பகைவர்கள் போட்ட துண்டுப் பிரசுரங்களில் "தாய்நாட்டிலிருந்து" நம் துருப்புகளுக்குக் "கடிதங்களும்" அடங்கியிருந்தன. ஆனால் பின்னர் அத்தகைய கடிதங்களைத் துண்டுப் பிரசுரங்களின் மூலம் விளம்பரப்படுத்த வேண்டிய அவசியம் பகைவர்களுக்கேற்படவில்லை. ஏனெனில் தாய்நாட்டிலிருந்து நேராகவே துருப்புகளுக்கு அவ்விதம் கடிதங்கள் வர ஆரம்பித்து விட்டன. போர்முனை முழுதும் அவ்விஷயம் பரவியது. யோசனையற்ற பெண்கள் அவ்வாறு எழுதிய கடிதங்களால், லட்சக்கணக்கான நம் துருப்புகள் போர் முனையில் மடிந்தனர். தங்களுடைய கடிதங்களால் எத்தகைய விபரீதம் ஏற்படுமென்பதை அப்பெண்கள் அறிந்திருந்தால், அவ்வாறு செய்திருக்க மாட்டார்கள்.

அப்போது, போர்முனையில் வேதனையைக் கொடுக்கும் பல விபரீதங்கள் தென்பட ஆரம்பித்துவிட்டன. போர்முனை எங்கும் புகார்களும், முணுமுணுப்புகளும் தாண்டவமாடின. எனினும் அவைகளுக்குப் போதிய காரணமும் இல்லாமலில்லை. போர்முனையில் சிப்பாய்கள் பட்டினி உடனும், பொறுமையுடனும் தங்கள் கடமையைச் செய்து வந்தனர். வீடுகளிலோ அவர்களுடைய உறவினர்கள் வேதனையால் கஷ்டப்பட்டனர். அவ்விதமிருக்கையில் அதிகாரிகளிடையே மாத்திரம் விருந்துகளுக்கும், களியாட்டங்களுக்கும் குறைவில்லையே!

நிற்க, *2576 (1916)* செப்டம்பர் மாதம் எங்கள் பிரிவுத் துருப்புகள் ஸாம் போர் முனைக்கு அனுப்பப்பட்டன. அங்கு நடந்த யுத்தத்தை ஒரு கோர நரகமென்றே கூற வேண்டும். வாரக்கணக்கில் இடைவிடாது முழங்கிய பீரங்கிகளுக்கிடையே

நாங்கள் உறுதியுடன் நின்றோம். அந்த யுத்தத்தில் சிறிது பின்தங்குவோம், எனினும் மீண்டும் அவ்விடத்தை ஆக்கிரமித்துக் கொண்டு விடுவோம். அப்படியிருக்க, அக்டோபர் மாதம் போர்க்களத்தில் நான் காயமடைந்ததால், வைத்திய ரயில் வண்டியில் என்னை ஜெர்மனிக்கு அனுப்பி விடும்படி அதிகாரிகள் உத்தரவிட்டனர்.

போர்முனைக்கு நான் சென்று அப்போது இரண்டு வருஷங்களாகி விட்டதால், ராணுவ உடையின்றி ஜெர்மானியர்கள் எவ்விதம் காணப்படுவார்களென்பதைக் கூட என்னால் கற்பனை செய்து கொள்ள முடியவில்லை! காயமடைந்து நான் ஆஸ்பத்திரிக்கு வந்தபோது, ஒரு ஜெர்மன் நர்ஸின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டேன். ஏனெனில் இரண்டு வருஷகாலமாக நான் பெண் குரலைக் கேட்கவேயில்லை! அவ்வளவு காலத்திற்குப் பின் ஒரு பெண் குரலை நான் கேட்டது அதுதான் முதல் தடவை! இரண்டு வருஷங்களுக்குப் பின் தாய்நாட்டிலுள்ள பல நகரங்களையும், கட்டிடங்களையும் பார்த்தபோது எங்களெல்லோருக்கும் ஒருவித ஆழ்ந்த உணர்ச்சியும், அமைதியின்மையுமேற்பட்டது.

*2574 (1914)* அக்டோபர் மாதம் நாங்கள் ஜெர்மன் எல்லையைக் கடந்து சென்றபோது எல்லையற்ற உற்சாகத்தால் எங்களுடைய ஹிருதயங்கள் துடித்துக் கொண்டிருந்தன. ஆனால் *2576 (1916)* அக்டோபரிலோ நாங்கள் மௌனமாகத் திரும்பி வந்தோம். மீண்டும் தாய்நாட்டைக் காணும்படியான பாக்கியம் கிடைத்ததற்காக எங்களில் ஒவ்வொருவரும் ஒருவரையொருவர் பார்க்க வெட்கமுமடைந்தோம். பர்லினுக்கு அருகிலுள்ள பீலிட்ஸ் ஆஸ்பத்திரிக்கு நான் சென்றேன்.

ஆஹா! எவ்வித மாறுதல்! ஸாம் போர்க்களப் புழுதி எங்கே, அந்த அற்புத கட்டிடத்திலிருந்த களங்கமற்ற சுத்த வெள்ளையான படுக்கை எங்கே! அது ஒரு புதிய உலகமாகவே தோன்றியது. பரபரப்படங்கி அப்"புதிய உலகி"ல் மீண்டும் பழக்கமேற்பட சிறிது காலமாயிற்று. அதை எல்லாம் உண்டு ஆனந்தம் ஏற்பட்டதெனினும், அதே சமயத்தில் சில விஷயங்கள் மனோ வேதனையையும் கொடுத்தன. த்ன் கோழைத்தனத்தைப் புகழ்ந்து கொள்ளும் அயோக்கியர்களை அங்குதான் நான் கண்டேன்! போர்க்களத்தில் சிப்பாய்கள் முணுமுணுப்பு தற்காலிகமானதாக இருக்குமேயன்றி, அதற்காக அவர்கள் உயிரைத் துச்சமாக மதித்துப் போராடுவதில் சிறிதும் பின்வாங்க மாட்டார்கள். போர்க்களத்தில் கோழையைச் சகலரும் வெறுப்பார்கள், வீரனைச் சகலரும் புகழ்வார்கள். ஆனால் அந்த ஆஸ்பத்திரியிலோ ஓர் அயோக்கியன், தான் வேண்டுமென்றே தனக்குக் காயத்தை உண்டுபண்ணிக் கொண்டு போர்க்களத்திலிருந்து தப்பி

வந்துவிட்டதாகப் பெருமை கொண்டான்! உயிரைத் துச்சமாக மதிக்கும் உண்மை வீரர்களை இழிவாகவும் பேசினான். அவனது கூற்றைச் சிலர் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தனர். அவன் தேச விரோதியான ஒரு கிளர்ச்சிக்காரனென்று தெரிந்தும்கூட, ஆஸ்பத்திரி அதிகாரிகள் அவ்விஷயமாக எவ்வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளவில்லை. அவனுக்கேற்பட்ட காயம் அற்பமாயினும், அவனோ ஆஸ்பத்திரியிலேயே நிரந்தரமாக இருக்கத் தீர்மானித்து விட்டதுபோல் தோன்றியது. ஏதோ மோசடி செய்து அவன் போர்க்களத்திலிருந்து பயந்து ஓடிவந்து விட்டது போலவே, ஆஸ்பத்திரியிலும் நிரந்தரமாக இருந்துகொண்டு காலங்கழிக்க ஏதோ தகிடுதத்த ஏற்பாடு செய்து கொண்டிருந்தான்.

நான் சொஸ்தமடைந்து எனக்கு நடக்க சக்தியேற்பட்டதும், ரஜா எடுத்துக் கொண்டு பர்லினுக்குச் சென்றேன். அங்கு வறுமை தாண்டவமாடியது. அந்நகரிலுள்ள லட்சக்கணக்கான ஜனங்கள் பசியால் வாடினர். ஆஸ்பத்திரியில் நான் கண்ட காட்சியே அந்நகரின் முக்கியவிடங்களிலும் தென்பட்டது. ஆஸ்பத்திரியிலிருந்து நான் வெளியே வந்தபின் மியூனிச்சிலிருந்த ஒரு மூலபலப் (ரிசர்வ்) படைக்கு என்னை அனுப்பினார்கள். பர்லினைவிட மியூனிச்சில் நிலைமை அதிக மோசமாயிருந்தது. எங்கு பார்த்தாலும் ஜனங்களின் கோப வார்த்தைகளும் புகார்களுமே செவிகளில் விழுந்தன. போர்க்களத்திலிருந்து திரும்பி வந்த சிப்பாய்களை அதிகாரிகள் சரிவர நடத்தாததால், அந்த சிப்பாய்களின் முணுமுணுப்பும் அத்தகைய அதிருப்திகரமான நிலைமைக்கு ஒரு காரணமாகும். தங்கள் கடமையைச் செய்யாது நழுவுவதில் வெற்றி பெறுவது மிகவும் புத்திசாலித்தனமான ஒரு காரியமாகக் கருதப்பட்டது. கடமையை அந்தரங்க சுத்தியுடன் செய்வோர் கோழைகளாகக் கருதப்பட்டனர். சர்க்கார் காரியாலயங்களிலெல்லாம் ஒரே யூதர் கூட்டமாக இருந்தது. ஆனால் போர்முறையிலிருந்த யூதர்களின் தொகையோ மிக மிகக் குறைவு!

வர்த்தக உலகிலோ, நிலைமை அதைக்காட்டிலும் மோசமாக இருந்து வந்தது. யூதர்கள் அட்டைகளைப் போல் தேசத்தின் உதிரத்தை மெதுவாக உறிஞ்சி வந்தார்கள். தேசிய வர்த்தகமெல்லாம் சிதறடிக்கப்பட்டன. அதன் பயனாக 2576 -77ல் (1916 - 17) சகல சாமான்களின் உற்பத்தியும் யூதர்களின் நிர்வாகத்திற்கு வந்துவிட்டது.

யூதர்கள் ஒருபுறம் தேசத்தைக் கொள்ளையிட்டு வருகையில், மற்றொருபுறம் ப்ரஷ்யர்களுக்கு விரோதமாக ஜனங்களைத் தூண்டும் வேலையையும் வெகு மும்முரமாக நடத்தி வந்தார்கள்.

ப்ரஷ்யாவின் சீர்குலைவால் பவேரியா முன்னேற்றமடைந்துவிட முடியாதென்பதையும், அதற்கு மாறாக ப்ரஷ்யாவின் வீழ்ச்சி பவேரியாவையும் வீழ்ச்சியுறும்படியே செய்யுமென்பதையும் யாரும் அறிந்துகொள்ள வில்லை. ஜனங்களின் அத்தகைய போக்கு எனக்கு மிகுந்த மனோவேதனையைக் கொடுத்தது. - தங்கள்பால் பொதுஜனங்கள் கவனம் செலுத்தாமலிருக்கவும், அவர்களுடைய கவனத்தை வேறு பக்கம் திருப்பவும், யூதர்கள் செய்த தந்திரமே அந்நிலைமைக்குக் காரணம். ப்ரஷ்யர்களும், பவேரியர்களும் சச்சரவிட்டுக் கொண்டிருக்கையில் யூதர்கள் அவ்விருவருடைய உணவையும் அபகரித்து வந்தனர். பவேரியாவில் ப்ரஷ்யர்கள் தூற்றப்பட்டு வருகையில் யூதர்கள் புரட்சியை உருவாக்கி, ப்ரஷ்யா, பவேரியா இரண்டையும் ஏககாலத்தில் வீழ்த்தி நொறுக்கி விட்டனர்.

வெறுக்கத்தக்க உள்நாட்டுச் சச்சரவை நான் சகிக்க முடியாததால், மீண்டும் போர்முனைக்குச் செல்லத் தீர்மானித்து, அதிகாரிகளுக்கு விண்ணப்பம் செய்து கொண்டேன். எனவே 2577 (1917) மார்ச் மாதம் மீண்டும் நான் போர்முனைக்குச் சென்றேன். அவ்வருடக் கடைசியில் ஒரு புதிய நிலைமையேற்பட்டது. ருஷியர்கள் தோல்வியடைந்தபின் ஜெர்மன் துருப்புகளிடையே மீண்டும் தைரியமும் நம்பிக்கையும் பிறந்தன. தாய்நாட்டின் எதிர்காலத்தைப் பற்றியும் நம்பிக்கையேற்பட்டது. இத்தாலியின் தோல்வியும் நம் துருப்புகளுக்கு மிகுந்த உற்சாகத்தைக் கொடுத்தது. எனவே துருப்புகளிடையே ஏற்கனவே நிலவிவந்த முணுமுணுப்பு மறைந்தது. ஆயினும் அது வரப்போகும் சண்டமாருதத்திற்கறிகுறியான ஓர் அமைதியென்பதை யாரும் அறிந்து கொள்ளவில்லை.

உலகமுள்ளவும் நடந்து கொண்டிருக்குமோவென்று தோன்றிய யுத்தத்தை முடிப்பதற்கான இறுதி ஏற்பாடுகள் நம்மிடையே நடந்து வந்தன. துருப்புகளும், ஆயுத வகைகளும் இடைவிடாது போர்முனைக்கு வந்து குவிந்து கொண்டிருந்தன. ஆனால் அதே சமயத்தில் ஜெர்மனியில் மகத்தான துரோக நடவடிக்கையொன்று உருப்பெற்று, யுத்தத்தில் ஜெர்மனி வெற்றி பெறக் கூடாதென்ற எண்ணம் நிலவ ஆரம்பித்தது! அது சாத்தியமாகாத வகையில் ஒரு கொடிய சதியாலோசனை நடந்து வந்தது. அதாவது ஆயுதத் தொழிற்சாலைகளில் ஒரு பொது வேலை நிறுத்தத்திற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வந்தன!

அச்சதி வெற்றி பெற்றிருக்குமாயின் வெடிமருந்து ஆயுதங்கள் முதலிய சாதனங்களின்றி ஒரு சில வாரங்களில் ஜெர்மன் துருப்புகள் முறியடிக்கப்பட்டிருக்கும். யூதர்களும், மார்க்ஸ் கட்சியினரும் ஜெர்மனியில் ஆதிக்கம் புரிய ஆரம்பித்திருப்பார்கள்.

அந்த வேலை நிறுத்தமானது, ஜெர்மன் ராணுவத்திற்கு மிகுந்த பாதகத்தை விளைவிக்கக் கூடியவாறு அதிக நாள் நீடிக்க வில்லையாயினும் அவ்விபரீதத்தினாலேற்பட்ட ஆத்துமார்த்தச் சிதைவு பயங்கரமானது.

ஏனெனில் யுத்தத்தில் தாய்நாட்டு ஜனங்கள் வெற்றியை விரும்பவில்லை எனில், பின்னர் யுத்தம் செய்வது எதற்காக? அவ்வளவு மகத்தான தியாகங்கள் செய்வதும், கஷ்டங்களை அனுபவிப்பதும் யாருக்காக? தாய்நாட்டினர் வெற்றிக்கு விரோதமாக வேலை நிறுத்தம் செய்கையில், சிப்பாய்கள் மாத்திரம் வெற்றிக்காக உயிரைக் கொடுத்து ஏன் போராட வேண்டும்? இவ்வித சிந்தனைகளெல்லாம் குமுறியெழ ஆரம்பித்தன.

நான்கு வருஷ காலமாக ஜெர்மன் பூதத்தை அடிமேலடி அடித்தும் பகைவர்களால் அதை வீழ்த்த முடியவில்லை. ஜெர்மனிக்கு வெற்றி கிடைத்துவிடுமென்றெண்ணி பகைவர்கள் நடுநடுங்கினர். பாரிஸிலும் லண்டனிலும் இடைவிடாது மகாநாடுகள் நடந்தன. பகைவர்களின் பிரசார ஆயுதங்கூட மழுங்க ஆரம்பித்தது. போர்முனையிலிருந்த ஜெர்மன் சிப்பாய்களிடம் பகைவர்களுக்கு மதிப்பு ஏற்பட்டது. பகை ராணுவ அதிகாரிகளின் மமதையும் குலைந்தது. ருஷிய யுத்தத்தில் ஜெர்மன் சிப்பாய்கள் வெற்றி பெற்றபின், இனி அவர்களை எவ்விதம் எதிர்த்து நிற்பதெனப் பகைவர்கள் நடுநடுங்கினர். ருஷியத் துருப்புகளை வென்ற சிப்பாய்களும் சேர்ந்து சகல ஜெர்மன் சிப்பாய்களும் தங்கள் முழு கவனத்தையும் மேற்கு முனையில் செலுத்தினால் என்ன செய்வதென்பதே அவர்களின் நடுக்கத்திற்குக் காரணம். தோல்வி நெருங்கிவிட்டதென்றே அவர்கள் திகில் கொண்டனர். அவ்விதம் ஜெர்மனியின் இறுதி வெற்றிக்கான அறிகுறிகளெல்லாம் தோன்றி வருகையில், - ஜெர்மன் துருப்புகள், பகைவர்களை ஹதம் செய்து யுத்தத்தை முடிக்க இறுதியான கட்டளைகளைப் பெற்று வருகையில், - திடீரென இடியிடித்தாற் போல் ஜெர்மனியில் ஒரு பொது வேலை நிறுத்தம் குமுறிக் கொண்டு கிளம்பியது. அதைக் கேட்டு உலகமே பிரமித்துவிட்டது. அவ்வளவுதான்! கடைசியாக தங்களுக்குக் கிடைத்த அரிய சந்தர்ப்பத்தைப் பூரணமாக உபயோகித்துக் கொள்ள உத்தேசித்து, பகைவர்கள் தங்களுடைய பிரசாரக் கருவியை மீண்டும் அதிதீவிரமாக உபயோகிக்க முற்பட்டனர். பகைவர்களிடையே அடியோடு மறைந்து வந்த நம்பிக்கையை மீண்டும் உயிர்ப்பிப்பதற்கான ஒரு தகுந்த சந்தர்ப்பம் திடீரென அவர்களுக்கு வாய்த்தது. ஜெர்மனியில் புரட்சியேற்பட்டு வருவதாகவும், எனவே வெற்றி தங்களுக்குத் தானென்றும் பிரிட்டிஷ், பிரெஞ்சு, அமெரிக்கப் பத்திரிகைகள் பிரமாதமான

பிரசாரத்தில் இறங்கின. தள்ளாடி வந்த பகைத்துருப்புகள் அதனால் மீண்டும் புதிய பலம் பெற்றனர். அவர்கள் மீண்டும் நம்பிக்கைப் பெற்று நம் பீரங்கிகளை எல்லாம் திகிலின்றி எதிர்த்து நிற்கத் தொடங்கினர். பகைத் தேசங்களிலெல்லாம் வெற்றியில் நம்பிக்கை பலமடைய ஆரம்பித்தது. அதன் பலனாக அவர்கள் வெகு உக்கிரமாகப் போராடினர். எனவே ஜெர்மனியிலேற்பட்ட வேலை நிறுத்தமானது, ஆயிரக்கணக்கான ஜெர்மன் சிப்பாய்கள் பலியாவதற்குக் காரணமாயிற்று. இன்னும் ஒரு சில வெற்றி நிச்சயமென்பதைப் பகைத் தேசங்கள் அறிந்து, ஜெர்மனியில் உள்நாட்டு ஒற்றுமையைக் குலைப்பதற்கான பிரசாரத்திற்காக ஏராளமான தொகையும் செலவழித்தன.

பகைவர்களுடன் இறுதியாகக் கணக்குத் தீர்த்துக் கொள்ளும் சமயம் வந்தது. அது ஜெர்மன் சிப்பாய்களுக்கு அளவற்ற உற்சாகத்தை அளித்தது. எனவே அவர்கள் எல்லோரும் 2574ல் (1914) போர் புரிந்தது போல் மிகுந்த குதூகலத்துடன் போரில் ஈடுபட்டனர். இருந்தாலும் 2578ம் (1918) வருஷம் கோடை காலம், ஜெர்மன் சிப்பாய்களிடையே திடீரென ஒருவித மனச்சோர்வு ஏற்பட்டது. உள்நாட்டிலோ பரஸ்பரம் சச்சரவிட்டு வந்தனர். தங்கள் சுயநலத்திற்காக ஜெர்மனியையே பலி கொடுக்கும் பாதகர்கள் நிர்வாகத்திலிருந்ததால், போர்முனைக்கு வரும் புதிய துருப்புகள் மிகவும் மோசமான நிலைமையிலிருந்தன. அவர்களின் வருகையினால் போர்முனையிலுள்ள சிப்பாய்களுக்குப் புதிய உற்சாகமும், புதிய பலமும் ஏற்படுவதற்குப் பதிலாக, மனச்சோர்வு முன்னரைக் காட்டிலும் அதிகமாயிற்று.

எனினும் எங்கள் பிரிவு சிப்பாய்கள் அதியுக்ரமாகப் போர் புரிந்தனர். தங்கள் தேசத்தின் சுதந்திரத்திற்காகவும், விடுதலைக்காகவும் அவர்கள் தங்கள் உயிர்களைக் கொடுக்கச் சிறிதும் தயங்கவில்லை. 2574ல் (1914) நாங்கள் தகர்த்த பிரதேசத் திலேயே மூன்றாவது முறையாக 2578ல் (1918) உக்கிரமான போராட்டம் நடந்தது. அவ்வருஷம் அக்டோபர் மாதம் 13-, 14ந் தேதி இரவு முழுதும் வர்விக்கிற்குத் தெற்கேயுள்ள ஒரு குன்றிலிருந்த எங்கள் மீது பிரிட்டிஷார் மணிக்கணக்காக விஷப்புகை வெடிகுண்டுகளை வீசினர். நடுநிசிக்கு எங்கள் சகாக்களில் பலரும் கொல்லப்பட்டனர். காலையில் எனக்கு ஒருவித வேதனை ஏற்பட்டு, நாழிக்கு நாழி அதிகமாகி வந்தது. பின்னர் காலை 7 மணிக்கு என் கண்களில் எரிச்சல் சகிக்க முடியவில்லை. எனவே நான் தள்ளாடிக் கொண்டு திரும்பினேன். சில மணி நேரம் கழித்து என் கண்கள் தணல்போல் சிவந்துவிட்டன. என்னால் பார்க்க முடியவில்லை, எங்கும் இருள்மயமாகியது.

போமரேனியாவிலுள்ள ஓர் ஆஸ்பத்திரிக்கு என்னை

அனுப்பினார்கள். ஜெர்மனியிலேற்பட்ட புரட்சியைப் பற்றி அங்குதான் நான் கேள்விப்பட்டேன். கடற்படையிலிருந்தும் அதிருப்திகரமான வதந்திகள் வர ஆரம்பித்தன. ஒரு சிலருடைய கற்பனைதான் அவ்வதந்திகளுக்கு காரணமாக இருக்கலாமென நினைத்தோம். நானிருந்த ஆஸ்பத்திரியிலும் கூடிய சீக்கிரம் யுத்தம் முடிந்து விடுமென பலர் பேசிக் கொண்டனர். எனக்கு அப்போது பத்தரிகைகள் வாசிக்க முடியவில்லை.

நவம்பர் மாதம் பொதுவாக பரபரப்பு அதிகமாயிற்று. ஒருநாள் திடீரென யாதொரு எச்சரிக்கையுமின்றி எங்களை ஆபத்து ஆட்கொண்டது. அதாவது மாலுமிகள் மோட்டார் லாரிகளில் வந்து, புரட்சி செய்யும்படி எங்களைத் தூண்டினர். அக்கோஷ்டிக்கு யூதச் சிறுவர்களே தலைமை வகித்தார்கள். "தேசிய வாழ்க்கையின் சுதந்திரம், வனப்பு, கண்ணியம்" -இதுதான் அவர்களின் சுலோகம். அவர்களில் ஒருவருக்காவது போர்க்களம் எப்படியிருக்குமென்றுகூடத் தெரியாது!

எனது சரீர நிலைமை சிறிது குணமடைய ஆரம்பித்தது. கண்களில் முன்போல் அவ்வளவு அதிக எரிச்சலும், வேதனையும் இல்லை. என் சமீபத்திலிருப்பதை எல்லாம் நான் ஓரளவு பார்க்க முடிந்தது. எண் கண் பார்வை சொஸ்தமாகி நான் பின்னர் ஏதாவதொரு தொழிலில் ஈடுபட முடியுமென்ற நம்பிக்கையும் ஏற்பட்டது. எனினும் நான் மீண்டும் சித்திர வேலையில் ஈடுபடுவதென்ற பேச்சே எழ இடமில்லை. ஏனெனில் என் கண்களிருந்த நிலைமையில் அது முடியாத காரியம்.

அவ்விதமாக நான் குணமடைந்து வருகையில் தேசத் துரோக நடவடிக்கைகள் பீறிட்டுக் கொண்டு கிளம்பின. ஏதோ ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் மாத்திரம்தான் அவ்வித அனர்த்தம் நேர்ந்திருக்க முடியுமென நான் முதலில் நினைத்தேன். என் தோழர்களிடமும் அவ்விதம்தான் கூறினேன். ஆஸ்பத்திரியிலிருந்த பவேரிய நண்பர்கள் என் அபிப்பிராயத்தை அங்கீகரித்தனர். அவர்களுக்குப் புரட்சி வெறி ஏற்பட்டதை என்னால் கற்பனை செய்து கொள்ளவும் முடியவில்லை. ஒரு சில யூதர்களின் பாட்டிற்குத் தாளம் போடும் பேர்வழிகள் மியூனிச் வாசிகளல்லவென்றே நான் நினைத்திருந்தேன். எனவே கடற்படையில் மாத்திரமே புரட்சி ஏற்பட்டிருக்கிறதென்றும், அது சீக்கிரத்தில் அடக்கப்பட்டு விடுமென்றும் நம்பினேன். ஆனால் நாட்கள் செல்லச் செல்ல வதந்திகள் உறுதியாகத் தொடங்கின. போர்முனையிலிருப்பவர்கள் சரணடைய விரும்புகிறார்கள் என்ற வெட்ககரமான செய்தியும் கிடைத்தது. ஐயோ! அது எவ்வாறு உண்மையாக இருக்க முடியும்? அச்செய்தியைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனேன்.

நவம்பர் மாதம் 10ந் தேதி அந்நகரைச் சேர்ந்த பாதிரி ஆஸ்பத்திரிக்கு வந்து ஒரு சிறு பிரசங்கம் செய்தார். அப்போதுதான் நாங்கள் அவ்வதந்தி எல்லாம் உண்மையான கதையே என்பதை உணர்ந்தோம். அவர் கூறிய விவரங்களைக் கேட்டபோது எனக்குண்டான பரபரப்பும், துக்கமும் சொல்ல முடியாது. கெய்ஸர் குடும்பத்தினர் இனி கிரீடந் தரிக்க மாட்டார்களென்றும், தாய்நாடு 'குடியரசா'க மாறி விட்டதென்றும், எனினும் புதிய ஒழுங்கை ஆசீர்வதிக்கும்படியும், எதிர்காலத்தில் நம் ஜனங்களைக் கைவிட்டுவிடக் கூடாதெனவும் நாம் கடவுளைப் பிரார்த்திக்க வேண்டுமென்றும் அவர் தழுதழுத்த குரலில் குறிப்பிட்டார். ஜெர்மனிக்கு ராஜ குடும்பத்தினர் செய்துள்ள தொண்டைப் பாராட்டி அவர் அதிக நேரம் பேச முடியவில்லை. துக்கம் நெஞ்சை அடைத்தது, கண்ணீர் விட்டுத் தேம்பி அழுதார். அக்கூட்டத்திலிருந்தவர்களில் ஒருவர்கூடக் கண்ணீரை அடக்கிக் கொள்ள முடியவில்லை. நானோ துக்கத்தைச் சிறிதும் அடக்க முடியாமல் கதறினேன். மற்றும் ஜெர்மானியர்கள் யுத்தத்தில் வெற்றியடைந்து விட்டதாயும், வெற்றி பெற்றவர்களின் தயவில் நாங்கள் வாழும்படி நேர்ந்திருக்கிறதென்றும், எதிர்காலத்தில், ஜெர்மன் மகத்தான பளுவைச் சுமக்கும்படி நேருமென்றும், சமாதான நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு பகைவர்களின் கண்ணிய புத்தியில் நம்பிக்கை வைப்பதைத் தவிர வேறு வழியில்லை என்றும் கூறினார். அதற்கு மேல் அவர் கூறுவதைக் கேட்க எனக்குச் சகிக்கவில்லை. என் கண்களுக்கு எங்கும் அந்தகாரமாகத் தோன்றியது. தள்ளாடிக் கொண்டே என் படுக்கைக்குச் சென்று கம்பளத்தால் போர்த்திக்கொண்டு கதறியழுதேன்.

என் தாயாரின் சமாதிக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு நான் அழுததற்குப் பின் ஒருபோதும் கண்ணீர் விட்டுக் கதறியதில்லை. சிறு வயதில் விதியின் வலிமையால் நான் சொல்லொணாக் கஷ்டத்திற்கு உள்ளானபோதுகூட என் நெஞ் சுறுதி அதிகமாயிற்றே அன்றி துக்கத்திற்கும், கண்ணீருக்கும் நான் இடங்கொடுக்கவில்லை. யுத்தத்தில் என் அருமை நண்பர்கள் கொல்லப்பட்டபோதும், அவர்களுக்காக துக்கப்படுவது பாவமென நினைத்தேன். ஏனெனில் அவர்கள் ஜெர்மனிக்காக உயிரை விட்ட புண்ணியவான்களல்லவா? யுத்தத்தில் விஷப்புகை என்னைச் சூழ்ந்துகொண்டபோது, எங்கு நான் நிரந்தரமாக பொட்டையனாகி விடுவேனோ என்ற எண்ணம் என்னை வாட்டியது. ஆனால் உடனே, "அட பாவிப்பயலே, ஆயிரக்கணக்கானவர்கள் உன்னைவிட எவ்வளவோ மடங்கு அதிக கஷ்டங்களுக்குள்ளாகி வருகையில் நீ இந்த அற்ப

கஷ்டத்திற்காகவா தடபுடல் செய்கிறாய்" என்று என் மனச்சாட்சி என்னை இடித்துக் காட்டியது. எனவே அக்கஷ்டத்தை நான் மௌனமாகச் சகித்துக் கொண்டேன். ஒரு தேசத்தின் துரதிர்ஷ்ட நிலைமையை நினைக்கும்போது, ஒரு தனி நபரின் கஷ்டம் எம்மாத்திரமென சமாதானமடைந்தேன்.

நாங்கள் வருஷக்கணக்காக இடைவிடாது பட்ட கஷ்டங்கள் வீண் - செய்த தியாகங்கள் வீண்- பட்டினி, தாகம், மரண பயம், கடமையைச் செய்த 20 லட்சம் பேர்களின் உயிர்த்தியாகம் சகலமும் வீண் - எல்லாம் அடியோடு வியர்த்தமாயின. தாய்நாட்டிடம் பூர்ண விசுவாஸமும், நம்பிக்கையும் கொண்டு சென்ற லட்சக்கணக்கானவர்கள் திரும்பி தாய்நாட்டிற்கு வராமற்போக நேர்ந்ததை எண்ணிப் பாருங்கள். அதைக் காட்டிலும் ஒருவன் தன் தேசத்திற்காகச் செய்யும் உயர்ந்த தியாகம் எது? எனவே அத்தகையோரைத் துரோகம் செய்தவர்கள் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்காக அவர்களின் ஆவி மண்ணிலிருந்தும் இரத்தப் புழுதியிலிருந்தும் தாய்நாட்டிற்கு வர அவர்களின் சமாதிகள் திறக்கப்பட வேண்டாமா? அத்தகைய துரோகத்திற்காகவா அவர்கள் 2574 (1914) ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் உயிரைப் பலி கொடுத்தனர்? அத்தகைய துரோகத்திற்காகவா அடுத்துச் சென்ற தொண்டர் படைகளும் போர்க்களத்தில் உருக்குலைந்து மடிந்தனர்? அதற்காகவா பிளாண்டர்ஸில் பதினேழு வயது பாலர்கள் மண்ணோடு மண்ணாயினர்? தங்கள் மக்களுக்கு, மனந்துடிக்க விடை கொடுத்தனுப்பிய ஜெர்மன் தாய்மார்களின் தியாகத்திற்கு அதுதானா பலன்? வெறுக்கத்தக்க சில அயோக்கியர்கள் தாய்நாட்டைச் சூறையாடுவதற்கு வசதியாயிருப்பதற்காகவா அவ்வளவெல்லாம் செய்யப்பட்டன? உடம்பை உருக்கும் உஷ்ணம், கண்களை மறைக்கும் கடும் பனிக்காற்று, குளிர், பசி, தாகம், இரவில் துயிலின்மையால் களைப்பு, எல்லையற்ற படையெடுப்புகள், பீரங்கிக் குண்டுகளின் கொடுமை, விஷப்புகை ஸ்நானம் இவைகளை எல்லாம் சிறிதும் லட்சியம் செய்யாது தாய்நாட்டைக் காப்பாற்றுவதற்காக எதிரிகளை அஞ்சா நெஞ்சத்துடன் எதிர்த்துப் போரிட்ட வீரர்களுக்கு அதுவா பிரதியுபகாரம்?

'ஏ, பிரயாணியே, நீ ஜெர்மனி செல்லும்போது, தாய்நாட்டில் உண்மையான விசுவாசத்துடன் கடமையைச் செய்த நாங்கள் இங்கு கிடக்கின்றோமென்று எங்கள் நாட்டினரிடம் சொல்லு" என்று அந்த வீரர்களின் சமாதிகள் கூவியழைக்கின்றன. ஜெர்மனியின் பழைய பெருமையைப் பற்றிப் பறைசாற்றிக் கொள்ள இனி நமக்கு என்ன யோக்கியதையிருக்கிறது? அந்த துரோகத்தைக் குறித்து நம் சந்ததிகளுக்கு நாம் என்ன சமாதானம் கூறுவது?

அந்த பயங்கரமான சம்பவங்களைப் பற்றிய திட்டமான விஷயங்களை நான் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக அறிந்து கொள்ள முயற்சித்தேனோ, அவ்வளவுக்கவ்வளவு என் மனதில் ஆத்திரமும், வெட்கமும் பொங்கி எழுந்து என் மண்டை கொதித்தது. அந்த கோர நாடகத்துடன் ஒப்பிடும்போது என் கண்களுக்கேற்பட்ட வேதனை எம்மாத்திரம்? அதிலிருந்து சில நாட்கள் வரை இரவு பகலாக நான் பட்ட மனோவேதனை பயங்கரமானது. அத்துரோகத்திற்குக் காரணஸ்தர்கள் மீது என்ன கஷ்டம்! பகைவர்களின் தயவில் வாழ வேண்டுமென புத்தியற்ற பேதைகளும், பொய்யர்களுமல்லவா கூறுவர்?

சில நாட்கள் கழித்து என் கதி என்னவென்பதும் என் கண் முன் தெளிவாகத் தோன்றியது. என் சொந்த வாழ்க்கையின் எதிர்காலத்தைப் பற்றி அதுவரை நான் அடிக்கடி மனக் கலக்கமடைந்ததுண்டு. ஆனால் மேலே குறிப்பிட்ட கோர சம்பவங்களுக்குப் பின் அவ்வெண்ணத்தை நான் இகழ்ந்து உதறித் தள்ளினேன்.

மார்க்ஸ் கட்சித் தலைவர்களுக்கு முதலில் கைகொடுத்து அன்பு காட்டியவர் இரண்டாவது வில்லியம் சக்கரவர்த்தி (கெய்சர்) தான். அந்தோ! அவர்கள் மான, அவமான உணர்ச்சியற்ற வஞ்சகர்களென அவர் சந்தேகிக்கவேயில்லை. ஆனால் அப்பாதகர்களோ, சக்ரவர்த்தியின் ஒரு கையை 'அன்பாகப்' பிடித்துக் கொண்ட மற்றொரு கையால் கத்தியை எடுத்துச் சொருகிவிட்டனர். எனவே இனி யூதர்களுடன் சமரசமென்ற பேச்சிற்கே இடமில்லை.

மேலே குறிப்பிட்ட சம்பவங்களின் பயனாக, நான் அரசியல் அலுவல்களில் ஈடுபடுவதெனத் தீர்மானித்தேன்.



# 8. எனது அரசியல் பிரவேசம்

நவம்பர் மாதக் கடைசியில் நான் மியூனிச்சிற்குச் சென்று என் படை முகாமில் சேர்ந்து கொண்டேன். அங்கு நிர்வாகம் மிகவும் வெறுக்கத்தக்க முறையில் நடந்து வந்ததால், எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு சீக்கிரத்தில் அதை விட்டுச் சென்று விடுவதெனத் தீர்மானித்தேன். பின்னர் நானும், எனது யுத்தகால அந்தரங்க நண்பரான எர்னஸ்ட் ஷிமிடெட்டும், டிரான்ஸ்டீன் சென்று எங்கள் முகாம் கலைக்கப்படும் வரையில் அங்கிருந்தோம். *2579 (1919)* மார்ச் மாதம் நாங்கள் திரும்பவும் மியூனிச் வந்து சேர்ந்தோம்.

ஜெர்மனியிலேற்பட்ட புரட்சியின் நோக்கத்தை அனுசரித்து, எங்கும் அப்போது யூதர் ஆதிக்கம் பரவி வந்தது. அவ்வமயம்தான் என் மனதில் பற்பல திட்டங்கள் உருவாயின. எதிர்காலத்தில் என்ன செய்ய வேண்டுமென்பது பற்றி நான் நாட்கணக்காக ஆலோசித்து வந்தேன். எத்திட்டமாயினும் அதைப் பிரயோஜனகரமான முறையில் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதற்கு அவசியமான பூர்வாங்க அந்தஸ்துகூட துரதிர்ஷ்டவசமாக எனக்கில்லை. அதாவது என்னை யாருக்குமே தெரியாது.

புதிய சோவியத் புரட்சி மியூனிச்சில் நடைபெற்றதால், என் நடவடிக்கைகள் மத்திய சபையினருக்கு அதிருப்தியை உண்டுபண்ணின. எனவே, *2579 (1919)* ஏப்ரல் *27*ந் தேதி அதிகாலையில் என்னைக் கைது செய்வதற்காக வந்த மூன்று பேர்வழிகளும் என் துப்பாக்கிக்குப் பயந்து வந்த வழியே திரும்பி விட்டார்கள். சில நாட்கள் கழித்து விசாரணைக் கமிஷன் முன்னிலையில் ஆஜராகும்படி எனக்கு உத்தரவு வ்ந்தது. புரட்சி நடவடிக்கைகளைக் கவனித்து அறிவிப்பதே அக்கமிஷனின் அலுவல். அதுதான் எனது முதல் அரசியல் பிரவேசமாகும்.

அதன்பின் சில வாரங்கள் கழித்து, ராணுவத்தைச் சேர்ந்தவர்களுக்கு அரசியல் ஞானமூட்டும் நோக்கத்துடன் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பிரசங்கக் கூட்டங்களுக்கு ஆஜராகும்படி எனக்கு உத்தரவு வந்தது. என் போன்ற மனோ நிலைமையும் எண்ணங்களுமுள்ள சகாக்களை நான் அங்கு சந்திக்க நேர்ந்தது எனக்குத் திருப்தியைக் கொடுத்தது. அரசியல் நிலைமை பற்றி அவர்களுடன் விவாதித்தேன். நவம்பர் மாதம் நிகழ்ந்த துரோகத்தில் கலந்து கொண்ட மத்தியக் கட்சியினரும், அபேதவாத ஜனநாயக வாதிகளும் ஜெர்மனியை ரக்ஷிப்பது முடியாத காரியமென்பதை நாங்கள் எல்லோரும் திட்டமாக அறிந்து கொண்டோம். ஜெர்மனிக்கு ஏற்பட்ட பாதகத்தை

நடுத்தர வகுப்பைச் சேர்ந்த தேசியவாதிகளால் சீர்திருத்த முடியாதென்பதையும் உணர்ந்து கொண்டோம்.

எனவே ஒரு புதிய கட்சியை அமைக்கும் விஷயமாக நாங்கள் விவாதித்தோம். புதிய இயக்கத்தின் பெயரானது பாமர ஜனங்களின் மனதைக் கவரக் கூடியதாக இருக்க வேண்டும் என்றும், அவ்விதமில்லாவிடில் நமது முயற்சிகளெல்லாம் வியர்த்தமாகி விடுமென்றும் நாங்கள் கருதி, எங்கள் கட்சிக்கு அபேதவாதப் புரட்சிக் கட்சி என்று பெயர் சூட்டினோம்.

நாங்கள் அப்பெயர் சூட்டியதற்கு மற்றொரு காரணமும் உண்டு. எனது இளம் பிராயத்தில் நான் பொருளாதாரப் பிரச்னைகளையொட்டி அவ்வளவு அதிக கவனம் செலுத்தியதில்லை. அதனால் அப்பிரச்னை சம்பந்தமாக தவறான அபிப்பிராயங்களேற்பட்டிருந்தன. உழைப்பின் மூலம் மாத்திரமே மூலதனம் உற்பத்தியாகிறதென நான் நினைத்து வந்தேன். மூலதனமானது சர்க்காருக்கு உட்பட்டிருக்க வேண்டுமேயன்றி, தேசிய நலன்களை ஆக்கிரமிப்பதாக இருக்கக் கூடாது. மூலதனத்தின் இன்றியமையாத கடமைகள் இரண்டு: அவை, தேசிய பொருளாதார சுதந்திரத்திற்குப் பூரண உதவியளிப்பதும், தொழிலாளர்களின் சமுதாய உரிமைகளைப் பாதுகாப்பதும்தான். மூலதனத்தில் இரு வகை உண்டென்பதும் அப்போது எனக்குத் தெரியவில்லை: *1.* ஆக்க வேலையால் உருவாகும் மூலதனம். *2.* யாதொரு தொழிலும், முயற்சியுமின்றி வெறும் சாகஸ முறையால் உருவாகும் மூலதனம். இவ்விரண்டிற்குமுள்ள வேற்றுமையை அதற்குமுன் நான் உணரவில்லை. காட்பிரீட் பீடர் என்பார் செய்த பிரசங்கங்களிலிருந்தே அந்த தத்துவத்தை அறிந்து கொண்டேன். மூலதனங்களைப் பற்றிய பரிசீலனையை அப்போதுதான் முதன்முதலாக மூலதனங்கள் பற்றிய விவரங்களைக் கேட்க எனக்குச் சந்தர்ப்பமும் கிடைத்தது. பீடரின் முதல் பிரசங்கத்தைக் கேட்டவுடனேயே, ஒரு புதிய கட்சியை அமைப்பதற்கு இன்றியமையாத பூர்வாங்க அம்சமொன்றிற்கான வழியை நான் கண்டுபிடித்து விட்டதாக எனக்குத் தோன்றியது. பண்டங்களின் கொள்முதல் விற்பனையில் உபயோகிக்கப்படும் மூலதனம் பற்றியும் அவர் ஆணித்தரமாகவும் சல்லி சல்லியாகவும் பரிசீலனை செய்ததிலிருந்து அவரது திறமையை நன்கு அறிந்து கொண்டேன். மூலதன சம்பந்தமான மூலாதாரத் தத்துவங்கள் பற்றி அவர் கூறிய விஷயங்கள் பகுத்தறிவிற்கு அணுவளவும் முரணாக இல்லை. அவரது வாதங்களைக் கண்டித்தவர்கள் கூட அவரது பொருளாதார நிதி தத்துவங்கள் சிறந்தவை என்பதை ஒப்புக் கொண்டனர். இருந்தாலும் அவை அனுஷ்டான சாத்தியமாவென்பதே அவர்களுடைய சந்தேகம்.

ஆனால் அவ்வித சந்தேகம் தவறானது. நிதி விஷயங்களிலோ அல்லது இதர துறைகளிலோ நிபுணர்களின் கடமையானது சம்பந்தப்பட்ட முக்கியப் பிரச்னைகளை அலசி ஆராய்ந்து அவைகளைத் தீர்ப்பதற்கான திட்டங்களை எடுத்துக் கூறுவதுடன் முடிந்து விடுகிறது. நிரந்தரமான சத்தியத்தை ஆதாரமாகக் கொண்ட லட்சியத்தை நிர்ணயிக்க வேண்டியதே அவர்களின் கடமை, அதை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரும் வகையைத் தேட வேண்டியது அரசியல் தலைவர்களின் கடமை. அரசியல் ஞானி வகுக்கும் இறுதி லட்சியத்தை ஒருபோதும் பரிபூரணமாக அடைய முடியாது. ஏனெனில் மானிடரின் பலவீனமும், குறைகளுமே அதற்குக் காரணம். எனினும் இயன்ற வரையில் அதை அடைவதற்கான முறைகளை வகுத்து, அவைகளை வெற்றிகரமாக அமுலுக்குக் கொண்டு வருவோரே சாமர்த்திய சாலியான அரசியல் தலைவராவார். அனுஷ்டான அசாத்தியம் என்பதற்காக அரசியல் ஞானி, இறுதி லட்சியத்தின் தீவிரத்தை ஒருபோதும் தணித்து விடமாட்டார். அவரை, கனவு உலகத்தில் சஞ்சரிப்பவர் என்றும் கூறுவதுண்டு. மானிட அசாத்தியமான, கடவுளைத் திருப்தி செய்யக் கூடிய முறையை அவர் வகுப்பார். அதுதான் அவரது சீரிய கடமை. ஆனால் அதை சாத்தியமான வரையில் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர முயற்சிப்பது அரசியல்வாதியின் கடமை. உலக மதஸ்தர்களின் உயர்ந்த உபதேசங்கள் அனுஷ்டான சாத்தியமல்லவென்பதற்காக அவர்களுடைய பெருமையையும், புனிதத் தன்மையையும் நாம் அலட்சியம் செய்துவிட முடியாது. மானிட நாகரிகம், மானிட தர்மம், ஒழுக்கம் இவைகளின் அஸ்திவாரமாக அவர்களுடைய உபதேசங்கள் திகழ்கின்றன. அவைகளை வைத்துக்கொண்டு நம்மால் சாத்தியமான வரையில் வாழ்க்கையின் மாளிகையை நிர்மாணிக்க முற்பட வேண்டும். அதுபோல் அரசியல் தத்துவ ஞானிகள் சிறந்த உபதேசங்களின் மூலம் அஸ்திவாரத்தை அமைத்து விடுகின்றார்கள். அதை ஆதாரமாகக் கொண்டு மாளிகையை நிர்மாணிக்க வேண்டியது அரசியல் தலைவர்களின் கடமையாகின்றது. சிறு மனம் படைத்த அரசியல்வாதிகள் உடனே வெற்றித் தரக்கூடிய சில்லரைத் திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வந்து “பெயர்” பெறுவதுடன் திருப்தியடைந்து விடுவார்கள். ஆனால் மகான்களான அரசியல்வாதிகளோ, மிகுந்த கஷ்ட நஷ்டங்களையும் கவனியாது, சாசுவதமாகவும், எதிர்கால சந்ததிகளுக்கு க்ஷேமகரமாகவுமிருக்கக் கூடிய திட்டங்களை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர முற்படுவார்கள். அம்முயற்சி தங்களுடைய வாழ்நாளில் வெற்றிபெற முடியாதென்று தெரிந்தாலும்கூட, அவர்கள் கவலைப்பட மாட்டார்கள்.

ஏனெனில் அவர்களின் லட்சியம் சீரிய தேசத் தொண்டேயொழிய, ஜனங்கள் தற்காலிகமாக அளிக்கும் 'சபாஷ்' பட்டமல்ல. அற்ப புத்தி படைத்த அரசியல்வாதிகளால் ஏற்படும் பலன் நீர்க்குமிழி போன்றது, பூஜ்யர்களான அரசியல்வாதிகளின் கைங்கர்யங்களோ கல் மேலெழுத்துப் போல் சாசுவதமானவை.

அரசியல் தத்துவஞானிகளே, தங்களுடைய உபதேசங்களை அனுஷ்டானத்திற்கும் கொண்டு வரும் பேராற்றல் படைத்திருப்பதுண்டு. ஆனால் அத்தகையோர் பல நூற்றாண்டுகளுக்கொரு முறை அபூர்வமாகவே ஜனிப்பார்கள். சிறந்த அரசியல்வாதிகளின் உபதேசங்களை அவர்களது வாழ்நாளில் எதிர்த்த ஜனங்களின் சந்ததிகள், பின்னர் தங்கள் தவறை உணர்ந்து அந்த உபதேசங்களைப் பின்பற்றுவதன் மூலம் பிராயச் சித்தம் செய்து கொள்வதுமுண்டு. உயர்ந்த கொள்கைகளுக்காகப் போராடுவோர்தான் மகான்களாவர். அவர்களைப் பற்றிய ஞாபகம்தான் எதிர்கால சந்ததிகளுடைய ஹிருதயங்களில் கோயில் கொள்ளும். அத்தகைய மகான்களின் உபதேசங்கள்தான் மனமுடைந்த ஜனங்களுக்கு சஞ்சீவியாகவும், சோர்வடைந்த ஜனங்களுக்கு ஆவேசமூட்டுவதாகவும் அமையும். மகா பிரடரிக் சக்ரவர்த்தி, மார்ட்டின் லூதர், ரிச்சார்ட் வாக்னர்* முதலிய ஞானிகள் இக்கோஷ்டியில் சேர்ந்தவர்களாவர்.

'வட்டி - அடிமைத்தனத்தை ரத்து செய்தல்' என்பது பற்றி காட்பிரீட் பீடரின் முதல் பிரசங்கத்தை நான் கேட்டவுடனேயே ஜெர்மன் ஜனங்களின் எதிர்கால க்ஷேமத்திற்கான ஒரு மூலாதார உண்மையை அவர் வெளிப்படுத்தி உள்ளாரென்பதை அறிந்து கொண்டேன். அப்பிரசங்கத்தின் சாரமே நமது எதிர்காலப் போராட்டத்தின் அஸ்திவாரமாகுமென்பதையும் உணர்ந்து கொண்டேன். அதுவரை அனுஷ்டிக்கப்பட்டு வந்த பொருளாதார முறைகள் ஜெர்மானியர்களின் க்ஷேமத்திற்கு முற்றிலும் முரணானவை என்பது பிரசங்கத்தின் மூலம் ருஜுவாயிற்று. சென்ற மகாயுத்த சமாதானத்தை நரக வேதனையாகச் செய்வதும் சர்வதேசப் பண்டமாற்று மூலதனம் தானென்பதை நம்மிடையுள்ள மடையர்களான அரசியல்வாதிகளும் இப்போது

---

* மார்ட்டின் லூதர் : பிரபல ஜெர்மன் சீர்திருத்தக்காரர், பைபிளை மொழிபெயர்த்தவர், :பிரபல நூலாசிரியர். ரிச்சார்ட் வாக்னர்: பிரபல ஜெர்மன் சங்கீத நிபுணர், உலகப் பிரசித்தி பெற்ற ஏராளமான பாட்டுக்களை இயற்றியுள்ளார். மகா பிரடரிக் சக்ரவர்த்தி: 2440ம் வருஷத்திலிருந்து 2486 வரை ப்ரஷ்ய சக்ரவர்த்தியாக இருந்தவர்; பல யுத்தங்களில் வெற்றி பெற்றதுடன், தம் தேசத்திற்குத் தாம் தர்மகர்த்தா என்ற உயர்ந்த நீதியை மூலாதாரமாகக் கொண்டு ராஜ்யாதிகாரத்தை நடத்தியவர்.

அந்தரங்கத்திலாவது அறிந்து கொண்டுள்ளனர்.

எனக்கும், உண்மைத் தேசிய அபேதவாதிகளான இதரர்களுக்கும் ஒரே ஒரு லட்சியம் ஜனங்களின் முன்னேற்றமும், தாய்நாட்டின் க்ஷேமமும்தான். மற்ற முறைகளெல்லாம் அதை அடைவதற்கான உபகரணங்களே. ஜெர்மானியர்களின் குலச் சிறப்பிற்கும், ஜீவனத்திற்கும் ஆபத்தேற்படாமல் பாதுகாப்பதற்காகவே நாங்கள் போராடத் தீர்மானித்தோம். அப்போராட்டத்தை நடத்த பொருளாதார, நிதிப் பிரச்னையை நன்கு அறிந்து கொள்ள வேண்டியதவசியம். அவ்விதம் அறிந்து கொள்வதற்கு காட்பிரீட் பீடரின் பிரசங்கங்கள் மிகவும் உதவியாயிருந்தன. பின்னர் நான் அப்பிரச்னையை முதன்முதலாக ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தபோதுதான், யூதரான கார்ல் மார்க்ஸின் மூலதனத்தைப் பற்றிய தத்துவத்தைத் தெளிவாக அறிந்து கொள்ள முடிந்தது. தேசியப் பொருளாதாரக் கொள்கைக்கு விரோதமாக அபேதவாத ஜனநாயகவாதிகள் போராடிய மர்மத்தையும் அப்போதுதான் முற்றிலும் அறிந்துகொள்ள என்னால் முடிந்தது. காட்பிரீட் பீடரின் பிரசங்கங்கள் எனக்கு மற்றொரு விதத்திலும் முக்கிய பலனையளித்தன.

ஒருநாள், நானும் விவாதத்தில் கலந்து கொள்ள விரும்புவதாக அறிவித்தேன். யூதர்கள் சார்பில் ஒருவர் பேசினார். நான் அவரது வாதங்களை எதிர்த்தேன். அப்பிரசங்கத்திற்கு வந்திருந்த பெரும்பாலோர் என்னுடைய அபிப்பிராயங்களையே ஆதரித்தனர். அதன் பயனாக சில நாட்கள் கழித்து என்னை மியூச்சிலிருந்த ஒரு ராணுவப் பிரிவின் "போதனா அதிகாரியாக" நியமித்தனர்.

அப்போது அப்பிரிவுத் துருப்புகளிடையே ஒழுங்கு உணர்ச்சி என்பதே கிடையாது. எனவே சிறிது சிறிதாகவும், மிகவும் ஜாக்கிரதையுடனும் தான் அவர்களிடையே ஒழுங்கு உணர்ச்சி ஏற்படும்படி செய்வது சாத்தியம். அதாவது முதன்முதலாக சிப்பாய்களின் மனதில் தேசப்பற்றுதலும் தேசிய பண்ணங்களும் எழும்படி செய்ய வேண்டியிருந்தது.

மிகுந்த சந்தோஷத்துடனும் சிரத்தையுடனும் நான் அவ்வேலையில் ஈடுபட்டேன். அப்போது ஏராளமானவர்கள் அடங்கிய கூட்டத்தில் பேசவும் எனக்குச் சந்தர்ப்பமேற்பட்டது. பிரசங்கம் செய்வதில் எனக்கு ஓரளவு திறமையிருக்கிறதென அதுவரையில் நான் அபிப்பிராயப்பட்டு வந்தது அப்போது உறுதியாயிற்று. மண்டபத்திலுள்ள சகல சிப்பாய்களுக்கும் கேட்கும்படியாக நான் பேச முடிந்தது. அதைக் காட்டிலும் எனக்கு ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடிய விஷயம் வேறெதுவுமில்லை. எனக்கு மிகுந்த பற்றுதலுள்ள ராணுவத்திற்குப் பிரயோஜனகரமான

தொண்டு செய்ய முடிந்தது பற்றி நான் சந்தோஷமடைந்தேன். எனது பிரசங்கங்களும் பலனைக் கொடுத்தன. அவைகளின் பயனாக ஆயிரக்கணக்கானவர்களுக்கு மீண்டும் தங்கள் சகோதரர்களான ஜெர்மானியர்கள் மீதும், தாய்நாட்டின் மீதும் பற்றுதலேற்பட்டது. அவ்விதமாக அந்த சிப்பாய்களைத் 'தேசிய'மயமாக்கவும், அவர்களிடையே ஒழுங்கு நிலவும்படி செய்யவும் சாத்தியமானதுடன் அங்கு பலரிடமும் எனக்கு அறிமுகமுமேற்பட்டது. அவர்களெல்லோரும், பின்னர் உருவான புதிய கட்சியில் முதல் கோஷ்டி அங்கத்தினர்களாயினர்.



# 9. ஜெர்மன் தொழிற் கட்சி

ஓர் அரசியல் சங்கத்தின் தன்மைப் பற்றி விசாரிக்கும்படி எனக்கு மேலதிகாரிகளிடமிருந்து ஒருநாள் ஓர் உத்தரவு கிடைத்தது. 'ஜெர்மன் தொழிற் கட்சி' என்பதே அதன் பெயர். அக்கட்சியின் கூட்டமொன்றில் காட்பிரீட் பீடர் பேசுவாரென அறிவிக்கப்பட்டிருந்தது. அக்கூட்டத்திற்குச் சென்று அதன் நடவடிக்கைகளை அறிவிக்கும்படி எனக்கு உத்தரவிட்டிருந்தார்கள். ஸ்டெர்னெகர் சாராயக் கடையில் (இப்போது அது சரித்திரப் பிரசித்தி பெற்ற இடமாகியிருக்கிறது) அக்கூட்டம் நடந்ததால் அன்று மாலை அங்கு நான் சென்றபோது சுமார் 20 அல்லது 25 பேர்கள் அதற்கு வந்திருந்தனர். அவர்களில் பெரும்பாலோரும் கீழ்த்தர வகுப்பைச் சேர்ந்தவர்களே. பீடர் எவ்விஷயமாகப் பிரசங்கம் செய்வாரென்பது நான் அறிந்ததேயாதலின், அதை விடுத்து, அச்சங்கத்தைப் பரிசீலனை செய்வதில் என் முழு கவனத்தையும் செலுத்த முடிந்தது. அதைப் பற்றி எனக்கு நல்ல அபிப்பிராயமும் ஏற்படவில்லை, கெட்ட அபிப்பிராயமும் ஏற்படவில்லை. அப்போது எங்கணும் முளைத்து வந்த பல புதிய சங்கங்களைப் போல் அதுவும் ஒன்றென்றே நினைத்தேன். அன்று நிகழ்ந்து வந்த சம்பவங்களில் அதிருப்தியடைந்த மற்ற கட்சிகளிடம் நம்பிக்கை இழந்த ஒவ்வொருவரும் ஒரு புதிய கட்சியை அமைப்பது அவ்வமயம் வழக்கமாக இருந்தது. எனவே எங்கு பார்த்தாலும் புதிய சங்கங்கள் ஈசல்கள் போல் கிளம்புவதும் எவ்வித பலனையும் உண்டு பண்ணாமலும், யாதொரு சந்தடியும் செய்யாமலும் மறைவதுமாக இருந்து வந்தன. நிரந்தரமான அஸ்திவாரத்தைக் கொண்டும், ஏராளமானவர்களை ஒன்று சேர்த்தும் ஒரு கட்சியையோ அல்லது இயக்கத்தையோ எவ்விதம் உருவாக்குவதென்பது அத்தகைய சங்க ஸ்தாபகர்களுக்குத் தெரியவே தெரியாது. அக்காட்சிகளெல்லாம் மறைந்ததற்கு அதுதான் காரணம்.

'ஜெர்மன் தொழிற் கட்சி'யின் நடவடிக்கைகளை நான் இரண்டு மணி நேரம் வரை கவனித்து வந்தேன். மற்ற கட்சிகளுக்கும் அதற்கும் அதிக வேற்றுமையில்லையென்றே தோன்றியது. எனவே பீடர் தமது பிரசங்கத்தை முடித்தபோது நான் சந்தோஷமடைந்தேன். போதிய அளவு நான் நடவடிக்கைகளைக் கவனித்து விட்டதால், அக்கூட்டத்தை விட்டுச் செல்லலாமென்றெண்ணிப் புறப்படும் தறுவாயில் மற்றும் பேச விரும்புவோர் பேசலாமென அறிவிக்கப்பட்டது. அதனால் நான் சிறிது நேரம் தங்கிவிட்டுச் செல்லலாமென்று தீர்மானித்தேன்.

யாதொரு முக்கியத்துவமுமின்றி விவாதம் நடந்து வருகையில் திடீரென ஒரு "பண்டிதர்" பேச ஆரம்பித்தார். ஆனால் அவரது ஆட்சேபணைகளுக்கு பீடர் ஆணித்தரமாக பதில் அளித்துவிடவே, பண்டிதர் திடீரென அக்கட்சியின் திட்டத்தில், ப்ரஷ்யாவிலிருந்து பவேரியாவைப் பிரித்து விட வேண்டுமென்ற யோசனையையும் சேர்க்கும்படி வற்புறுத்தினார். அவ்வாறு பிரித்துவிட்டால், பின்னர் ஜெர்மன் - ஆஸ்திரியா பவேரியாவுடன் சேர்ந்து சமாதானமேற்படுமென்றும் கூறினார். அது போன்ற மற்றும் பல யோசனைகளை அவர் கூறவே, அவருக்குச் சரியான பதிலளிக்க வேண்டியது எனது கடமையாயிற்று. எனவே எனக்கும் பேச அனுமதி கொடுக்க வேண்டுமென கேட்டுக் கொண்டேன். நான் பேசியதன் பயனாக, அந்தக் கனவான் சவுக்கடிப் பட்ட ஒரு நாய் போல் எழுந்தோடி விட்டார். நான் பேசியதைக் கூட்டத்திலிருந்தவர்கள் மிகவும் ஆச்சரியத்துடன் கேட்டனர். இறுதியில் நான் விடைபெற்றுக் கொண்டு செல்லும் சமயம் ஒருவர் என்னிடம் வந்து அரசியல் துண்டுப் பிரசுரமொன்றைக் கொடுத்து, அதைச் சிரத்தையுடன் படிக்கும்படி கேட்டுக் கொண்டார். அதைக் குறித்து நான் சந்தோஷமடைந்தேன். ஏனெனில் சலிப்பை உண்டாக்கும் அக்கட்சியின் கூட்டங்களுக்கு நான் செல்லாமலேயே அத்துண்டுப் பிரசுரத்தின் மூலம் அக்கட்சியைப் பற்றி அறிந்து கொள்ள முடியுமல்லவா? மற்றும் ஒரு தொழிலாளியைப் போல் தோன்றிய அவர் மீது எனக்கு ஒரு நல்லெண்ணமும் உண்டாயிற்று.

அப்போது நான் ராணுவ முகாமைச் சேர்ந்த ஓர் அறையில் வசித்து வந்தேன். ராணுவத்தைச் சேர்ந்த பல கிளைகளிலும் நடந்த கூட்டங்களுக்கும், பிரசங்கங்களுக்கும் நான் சென்று வந்ததால் இரவில் மாத்திரமே படுக்க என் அறைக்கு வருவேன். நான் எப்போதும் விடியற்காலம் சுமார் 5 மணிக்கு விழித்துக் கொண்டு விடுவது வழக்கம். என்னுடைய சிறிய அறையில் சுண்டெலிகள் அங்குமிங்கும் துள்ளி விளையாடுவது எனக்கு வேடிக்கையாக இருக்கும். எழுந்திருக்குமுன் அதைப் பார்த்துக் கொண்டே படுத் திருப்பேன். தரையில் நான் அவைகளுக்காக தினசரி ரொட்டித் தூள்களை இறைப்பதுண்டு. அப்பட்சணங்களை அவை தின்று கொண்டே சந்தோஷமாக சுற்றிச் சுற்றி விளையாடுவதைக் கவனித்துக் கொண்டிருப்பேன். என் வாழ்க்கையில் நான் பட்டினியின் ருசியைப் பூரணமாக அனுபவித்திருந்ததால், அந்த ரொட்டித் தூள்களைக் கண்டு அச்சிறு ஜந்துக்களுக்கு ஏற்படும் குதூகலத்தை என்னால் நன்கு கற்பனை செய்து கொள்ள முடிந்தது.

கூட்டத்திற்குச் சென்று வந்த மறுநாளும் நான் விடியற்காலம்

விழித்துக் கொண்டு, சுண்டெலிகள் ஒன்றுக்கொன்று போட்டி போட்டு விளையாடுவதைப் படுக்கையிலிருந்தபடியே பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது திடீரென எனக்கு அந்தத் துண்டுப் பிரசுரத்தின் ஞாபகம் வந்தது. மார்க்ஸ் கட்சித் தளைகளிலிருந்தும், தொழிலாளர் சங்க அடைமொழிகளின் மயக்கத்திலிருந்தும் தான் விடுதலை பெற்று மீண்டும் தேசீய வாதியானதைக் குறித்து அதில் அத்தொழிலாளி விவரித்திருந்ததுடன், அச்சிறு புத்தகத்திற்கு "எனது அரசியல் விழிப்பு" என்ற மகுடமிட்டதற்கு அதுதான் காரணமென்றும் குறிப்பிட்டிருந்தார். அதை வாசிக்க ஆரம்பித்தவுடனேயே அது என் கவனத்தை ஈர்த்தது. எனவே மிகச் சிரத்தையுடன் அதை இறுதி வரையில் வாசித்தேன். 10 வருஷங்களுக்கு முன் எனக்கேற்பட்ட சிந்தனைச் சுழல்களே அதில் விவரிக்கப் பெற்றிருந்தன. என்னை அறியாமலேயே என் சொந்த அனுபவங்கள் என் மனக்கண் முன் மீண்டும் தோன்றின. அன்று முழுதும் அத்துண்டுப் பிரசுரத்தைப் பற்றிய ஞாபகம் என் மனதில் அடிக்கடி எழுந்தது. பின்னர் அதை நான் மறந்து விடத் தீர்மானித்தேன். எனினும் ஒரு வாரங்கழித்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. ஜெர்மன் தொழிற் கட்சியில் நான் சேர்த்துக் கொள்ளப்பட்டிருப்பதாக அதில் அறிவிக்கப் பெற்றிருந்தது. அதைப் பார்த்ததும் எனக்கு ஏற்பட்ட ஆச்சரியம் கொஞ்சமல்ல. அக்கடிதத்திற்குப் பதிலளிக்கும்படியும், அடுத்த புதன்கிழமை நடைபெறும் கமிட்டிக் கூட்டத்திற்கு வரும்படியும் என்னைக் கேட்டுக் கொண்டிருந்தனர். அங்கத்தினர்கள் சேர்க்கும் அம்முறையைக் குறித்து சிரிப்பதா அல்லது சீறி விழுவதாவென்று எனக்குத் தெரியவில்லை. ஏற்கெனவே அமைக்கப்பட்டுள்ள ஒரு கட்சியில் சேரும் உத்தேசமே எனக்கு அப்போது கிடையாது. சொந்தமாக ஒரு புதிய கட்சியை அமைக்கவே விரும்பினேன். ஆகையால் நான் அக்கட்சியில் சேருவதென்ற பேச்சே எழ இடமில்லை. அவ்விதமே நான் பதில் எழுதிவிட உத்தேசித்தேனென்றாலும், பின்னர் அக்கமிட்டியின் கூட்டத்திற்குச் சென்று அங்கு என்னதான் நடக்கிறதென்பதைப் பார்க்க வேண்டுமென்ற ஆர்வம் எனக்கேற்பட்டது. அவர்களிடம் என் கொள்கைகள் பற்றி நேரில் விவரிக்கலாமென்றும் நினைத்தேன். புதன்கிழமையன்று "ஆல்டிரோஸன்பாட்" என்ற ஒரு சாராயக் கடையில் அக்கூட்டம் நடந்தது. நான் அங்கு சென்றபோது அக்கடையில் வாடிக்கையாகச் சாப்பிடுபவர் ஒருவர்கூட இல்லை. கமிட்டிக் கூட்டம் நடக்கும் அறைக்குள் சென்றபோது அங்கு மங்கிய விளக்கொன்று எரிந்து கொண்டிருந்தது. ஒரு மேஜையைச் சுற்றி நான்கு இளைஞர்கள் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவர்தான், முந்திய கூட்டத்தில் என்னிடம் துண்டுப்

பிரசுரத்தைக் கொடுத்தவர். அவர் என்னை ஜெர்மன் தொழிற் கட்சியின் ஒரு புதிய அங்கத்தினர் என்ற ஹோதாவில் அன்புடன் வரவேற்றார். பின்னர்தான் தலைவர் வந்தார். ஸ்டார்டெனகர் சாராயக் கடையில் ஏற்கெனவே நடந்த கூட்டத்திற்குத் தலைமை வகித்தவரும் அவர்தான். அவர்களுடைய பெயர்களை எல்லாம் நான் தெரிந்து கொண்டேன். ஹர் ஹாரர் என்பார்தான் சங்கத் தலைவர். ஆன்டன் டிரெக்ஸ்லர் என்பார் அச்சங்கத்தின் மியூனிச் ஜில்லா பிரதேசத் தலைவர்.

பிறகு கூட்டம் ஆரம்பமாகி, சென்ற கூட்டக் குறிப்புகள் வாசிக்கப் பெற்றன. காரியதரிசி மீது ஒரு நம்பிக்கைத் தீர்மானம் நிறைவேறியது. சங்கத்தின் மொத்த நிதி 7 ஷில்லிங் 6 பென்ஸ் என்று அறிவிக்கப்பட்டது! பொக்கிஷதாரரிடம் அங்கத்தினர்கள் தங்களுக்குள்ள நம்பிக்கையைக் குறித்து உறுதி கூறினார்கள். மூன்று கடிதங்களுக்கு எழுதப்பட்டிருந்த பதில்கள் வாசிக்கப் பெற்று எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டன. மற்றும் மூன்று இடங்களிலிருந்து வந்திருந்த கடிதங்களையும் வாசித்தார்கள். கடிதப் போக்குவரத்து அவ்விதம் 'அதிகமாகி' வருவது, கட்சியின் வளர்ச்சியைக் குறிக்கிறதென்று அங்கத்தினர்கள் மிகவும் சந்தோஷமடைந்தது போல் தோன்றியது! புதிதாக வந்திருந்த கடிதங்களுக்கு என்ன பதில் அனுப்புவதென்பது பற்றி நீண்ட நேரம் விவாதம் நடந்தது. அத்தகைய ஒரு சங்கத்திலா அங்கம் வகிப்பதென நான் திகைத்தேன். ஒரு திட்டமா, துண்டுப் பிரசுரமா, அங்கத்தினர்களுக்கான சீட்டா, கட்சி முத்திரையா எதுவுமே இல்லை. சங்கத்தின் சொத்து என்னவெனில் நம்பிக்கையும், நல்லொழுக்கமும்தான்!

அந்நிலைமையானது அங்கத்தினர்களின் மனக்குழப்பத்திற்கும், திகைப்பிற்குமே அறிகுறியாக இருந்தது. எனினும் ஜெர்மன் தேசத்தை உத்தாரணம் செய்ய வேண்டுமென்பதில் அவர்களுக்குள்ள தாகத்தை நான் உணர்ந்து கொள்ளாமலிருக்க முடியவில்லை.

அன்று மாலை அறைக்குச் சென்றதும் அச்சங்கத்தையொட்டி ஒரு திட்டமான அபிப்பிராயம் கொண்டேன். நான் என் வாழ்க்கையிலேயே மிகக் கஷ்டமான ஒரு பிரச்னையை சமாளிக்க வேண்டியிருந்தது. அதாவது அக்கட்சியில் சேருவதா அல்லது சேர மறுத்து விடுவதா என்பதே. அறிவை ஆதாரமாகக் கொண்டு கவனிக்குமிடத்து அதில் சேர மறுத்து விடுவதைத் தவிர வேறு வழியில்லை. ஆனால் என்னுடைய உணர்ச்சியோ வேறுவிதமாக இருந்தது. எவ்வளவு மடத்தனமான முறையில் அச்சங்கம் நடந்து வருகிறதென்பதை ஆலோசிக்க, ஆலோசிக்க எனக்கு அதன் மீது அனுதாபமே ஏற்பட்டது.

அவ்விஷயமாக நான் தீர்க்காலோசனை செய்தேன். அதனாலேற்படக் கூடிய சாதக பாதகங்களைச் சீர்தூக்கிப் பார்த்தேன். அரசியலில் கலந்து கொள்ள நான் ஏற்கெனவே தீர்மானித்து விட்டதால் ஒரு புதிய இயக்கத்தின் மூலம்தான் அத்தீர்மானத்தை அமுலுக்குக் கொண்டு வர முடியும். எனினும் அதுவரை அவ்விஷயமாக நான் எந்தவொரு முயற்சியெதுவும் எடுத்துக் கொள்ளவில்லை. தற்காலிக உற்சாகத்தின் மீது இன்று ஒன்றை ஆரம்பித்து விட்டு, நாளை மனமாற்றமடைந்து அதைக் கைவிட்டுவிடும் சுபாவம் எனக்கில்லை. என் கனவு உண்மையில் நிறைவேறுவதற்குற்ற புதிய இயக்கமொன்றை ஆரம்பிக்க வேண்டும். அவ்விதமில்லாவிடில் அதை ஆரம்பிக்காமலிருந்து விடுவதே நல்லது. எல்லாவற்றிலும் கலந்து கொண்டு ஒன்றையும் இறுதிவரை நிறைவேற்றாத பேர்வழிகளைக் கண்டு எனக்கு இயற்கையாகவே ஒரு வெறுப்பேற்பட்டது. அத்தகையோரால் எந்த இயக்கத்திற்கும் ஆபத்தேயொழிய நன்மையில்லை என்றே கருதினேன்.

அந்நிலையில் விதியே எனக்கு வழிகாட்டுவது போல் தோன்றியது. அப்போதிருந்த பெரிய கட்சிகள் எதிலும் நான் சேருவதால் பலனேற்படாது. ஆனால் மிகச் சிறிய கட்சியான ஜெர்மன் தொழிற் கட்சியிலோ, தனி ஹோதாவிலுள்ளவர்கள் பிரயோஜனகரமான முறையில் தொண்டு செய்வதற்கு இடமிருந்தது. அவ்வியக்கம் குழந்தைப் பருவத்திலிருந்ததால், நாம் கோரும் விதம் அதன் உருவத்தைத் திருத்தியமைப்பது சாத்தியமல்லவா? மற்றும் அதன் மூலம் இயக்கத்தின் தன்மை, அடைய வேண்டிய லட்சியம், செல்ல வேண்டிய பாதை முதலியவைகளையும் புதிய முறையில் நிர்ணயிக்க முடியும். ஆனால் ஏற்கெனவே வளர்ச்சி பெற்றுள்ள பெரிய கட்சிகள் விஷயத்தில் அவ்விதம் செய்வதென்பது சாத்தியமல்ல. சிறிய, இன்னும் வளர்ச்சி பெறாத ஒரு கட்சியை தேசீயப் புனருத்தாரணத்திற்கான தகுந்த கருவியாக உருவாக்க முடியும். துருப்பிடித்துப் போன பழைய கொள்கைகளை விடாப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருக்கும் பார்லிமெண்டு அரசியல் கட்சிகளையோ அல்லது சுயநல நோக்கத்துடன் புதிய ஆட்சியை ஆதரிக்கும் கட்சிகளையோ அவ்வாறு ஒரு தகுந்த கருவியாக்க முடியாது. ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?

எனினும் எனது நோக்கத்தை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவது மிகவும் கஷ்டமான காரியமாகியது. அத்தகைய காரியத்தைச் சாதிக்க எனக்கிருந்த யோக்யதாம்சங்களென்ன? நானோ பரம ஏழை. எனவே என்னால் புதிய கட்சிக்குப் பண பலமோ அல்லது செல்வாக்கோ ஏற்படாது. மற்றும்

என்னை யாருக்கும் தெரியாதென்பது அதைவிட சங்கடமான ஒரு பிரச்னை. கோடிக்கணக்கானவர்களில் நானும் ஒருவன் என்பதைத் தவிர, எனக்கு விசேஷ யோக்கியதை எதுவுமில்லை. அப்போது என்னைத் தெரியுமென அண்டை வீட்டுக்காரன் கூட சொல்லிக் கொள்ள விரும்பான்! மற்றும் எனக்குப் பள்ளிக்கூடப் படிப்புமில்லை. அப்போது ஒருவன் எவ்வளவு சாமர்த்தியசாலியாயினும், அவனிடம் பள்ளிக்கூடத்தில் தேர்ச்சி பெற்றதாக பத்திரங்களிருந்தாலன்றி அவனை யாரும் லட்சியம் செய்ய மாட்டார்கள்.

அவ்விதம் இரண்டு நாட்கள் வரை தீர்க்காலோசனை செய்தபின் ஒரு திட்டமான முடிவிற்கு வந்தேன். அது என் வாழ்க்கையையே நிர்ணயிக்கும் ஒரு தீர்மானமாகும். பிறகு பின் வாங்குவதென்பது முடியாத காரியம். அம்முடிவை அனுசரித்து அக்கட்சியில் ஓர் அங்கத்தினனாகச் சேர்ந்தேன். அங்கத்தினர் ஜாப்தாவில் என் ஸ்தானம் ஏழாவதாகும். அதற்குமுன் அதில் ஆறு பேர்களே சேர்ந்திருந்தனர்.





# 10. ஜெர்மன் சாம்ராஜ்யம் வீழ்ச்சியடைந்ததேன்?

முதல் படியிலிருந்து பூமியில் விழுபவனுக்கும், உச்சிப் படியிலிருந்து பூமியில் விழுபவனுக்கும் மிகுந்த வித்தியாசமுண்டு. அவ்விருவரும் விழும் இடம் ஒன்றேயாயினும் அதனாலேற்படும் விளைவு வெவ்வேறாகவே இருந்து தீரும். தேசங்களின் விஷயத்திலும் அவ்வாதம் முற்றிலும் பொருந்தும். மிகவும் உச்ச ஸ்தானத்திற்குச் சென்ற ஒரு தேசம் வீழ்ச்சியடையும்போது, அதைக் காண்போருக்குத் திகைப்பும், கலக்கமும் ஏற்படாமலிருப்பதென்பது முடியாத காரியம். எனவே கற்பனைக்கு எட்டாத உன்னத ஸ்திதியிலிருந்து ஜெர்மனி வீழ்ச்சி அடைந்தது மகத்தான பிரமிப்பை உண்டுபண்ணியது. ஜெர்மனி துன்பத்திற்கும் அவமதிப்பிற்கும் உள்ளாகியிருக்கும் இந்நாளில் அதன் பழைய பெருமையைக் கற்பனை செய்து கொள்ளவும் முடியவில்லை.

யுத்தத்திற்கு முன் ஜெர்மனியின் பெருமை ஜகஜோதியாக விளங்கியது. அதன் கீர்த்தியாகிய ஒளி ஜனங்களின் கண்ணைப் பறித்து மனதை மயக்கியது. என்றும் அழியாத வீரத்தனத்தினால் கிடைத்த வெற்றித் தொடரை ஆதாரமாகக் கொண்டு ஜெர்மன் சாம்ராஜ்யமானது வீரர்களுடைய சந்ததிகளிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. அந்த சாம்ராஜ்யமானது அரசியல் சமரசப் பேச்சுகளாலும், பார்லிமெண்டு நடவடிக்கைகளாலும் நிர்மாணிக்கப்பட்டதல்ல. அதன் அஸ்திவாரம், பார்லிமெண்டு விவாத சங்கீத கோஷம் தொடர அமைக்கப்படவில்லை, பீரங்கி முழக்கமும், போர்க்களப் பேரிடியும் தொடர அமைக்கப்பட்டது. பிஸ்மார்க்கின் ராஜ்யமானது தேசத்துரோகிகளாலோ, கொலைகாரர்களாலோ, ஆபத்தைக் கண்டு அஞ்சிப் பதுங்கும் ஆஷாடபூதிகளாலோ உருவடைந்ததல்ல; போர்க்களத்தில் வீரத்தனத்தைக் காட்டிய உத்தமர்களால் உருவானது. அதனாலேயே அந்த சாம்ராஜ்யம் சரித்திரப் பிரசித்தி பெற்று விளங்கியது. வெளியுலகம் சம்பந்தப்பட்ட வரையில் அது சமத்துவமாகவும் சுதந்திரத்துடனும் திகழ்ந்தது. உள் நாட்டிலோ சுகத்திற்கும் செல்வத்திற்கும் குறைவில்லை. செல்வம் பெருகியது போல் சந்ததிகளும் பெருகின. தேசத்தின் கௌரவமும் ஜனங்களின் கௌரவமும் இணையற்ற ராணுவ வீரர்களால் பாதுகாக்கப்பட்டும் வந்தது.

அப்படிப்பட்ட உன்னத ஸ்திதியிலிருந்து ஒரு சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சியானது ஜனங்களைத் திகைக்க வைத்து உணர்ச்சியற்றுப்

போகும்படி செய்துவிட்டது. பழைய பெருமையை எவரும் கற்பனை செய்து கொள்ளவும் முடியவில்லை. அப்பெருமை எல்லாம் வெறும் கனவு போல் தோன்றியது. வசிக்க இடம், வயிற்றுக்கு உணவு, இவைதான் வாழ்க்கையின் லட்சியம் என்ற எண்ணமுடையவர்களைத் தவிர மற்றவர்கள் அந்த வீழ்ச்சியைக் கண்டு துடிதுடித்தனர். சரீரத்திலுண்டாகும் ரோகங்களின் மூலகாரணத்தைக் கண்டுபிடித்து அதற்குப் பரிகாரம் செய்தாலன்றி அது எவ்விதம் குணமடையாதோ, அதுபோலவே அரசியல் ரோகங்களின் மூலகாரணத்தைக் கண்டுபிடித்துப் பரிகார முறைகளைக் கைக்கொண்டாலன்றி தேசம் உய்ய முடியாது. கண்களுக்குத் தோன்றும் அடையாளங்களைக் கொண்டு மாத்திரம் ரோகத்தை நிர்ணயித்துவிட முடியாது; கண்களுக்குப் புலப்படாத மூலகாரணத்தையும் கண்டுபிடிக்க வேண்டும்.

அப்பொழுது ஜெர்மனியின் வீழ்ச்சிக்குப் பொருளாதார உற்பாதம்தான் காரணமென பெரும்பாலோரும் நினைத்தனர். பொருளாதாரச் சீர்குலைவானது, இரண்டாவது அல்லது மூன்றாவது காரணமாகும். கலாச்சார, அரசியல், ஒழுக்க சம்பந்தமான விபரீதப் புரட்சிதான் அதற்கு மூலகாரணமென்பதைப் பெரும்பாலோரும் அறிந்து கொள்ளவில்லை. அந்நிலைமையில் பிரயோஜனகரமான பரிகார முறைகளைக் கைக்கொள்வதென்பது எவ்விதம் சாத்தியமாகும்? எந்த அரசியல் இயக்கமாயினும், அது வெற்றிகரமாக நடக்க வேண்டுமாயின் ஜெர்மன் வீழ்ச்சியின் மூலகாரணத்தை அறிந்து கொண்டு பரிகார முறைகளைக் கைக்கொள்ள முற்பட வேண்டும். அப்படியானால்தான் தேசம் முன்னேற்றமடைவது சாத்தியம்.

நம் யுத்தத்தில் தோல்வியுற்றதே தற்போதைய துரதிர்ஷ்ட நிலைக்குக் காரணமென பொதுவாகக் கூறப்படுகின்றது. அது சுத்த மடத்தனமான ஒரு வாதம். அவ்வாதத்தை உண்மையென நம்பும் யோக்கியர்கள் இருக்கின்றனர். அது முழுப் பொய்யென்று தெரிந்தும் அவ்விதம் இடைவிடாது கூறிவரும் அயோக்கிய சிகாமணிகளுமிருக்கின்றனர்.

யுத்தத்தின் முடிவு எவ்விதமாயினும் அதைப் பற்றி ஜனங்கள் கவலைப்பட வேண்டியதில்லையென புரட்சி இயக்கத்தின் 'தீர்க்கதரிசிகள்' பறைசாற்றி வந்தார்கள். பணம்படைத்தவர்கள்தான் ஜெர்மனியின் வெற்றியில் சிரத்தை கொண்டுள்ளனரேயன்றி, ஜெர்மன் ஜனங்களுக்கும் தொழிலாளர்களுக்கும் அதில் சிரத்தையில்லை என்றும் அவர்கள் கூறிவந்தனர். மற்றும் ஜெர்மனியில் "ராணுவ வெறி" நசுக்கப்பட்டு விட்டால் பின்னர் ஜெர்மன் ஜனங்களின் புனருத்தாரணத்திற்கு எவ்விதத் தடையுமிராதென்றும் அத்துரோகிகள் தமுக்கடித்து வந்தனர்.

அப்படியிருக்க யுத்தத்திலேற்பட்ட தோல்விதான் ஜெர்மனியின் தற்போதைய துரதிர்ஷ்டத்திற்குக் காரணமென்று அவர்கள் இப்போது கூறுவது வடிகட்டிய அயோக்கியத்தனமல்லவா? ஜெர்மன் தோல்வி காரணமாக அரசியல் விபரீதங்களெதுவும் நிகழ்ந்துவிடாதென ஜனங்களுக்கு உறுதி கூறிவந்த அவர்கள், பின்னர் ஏற்பட்ட ஜெர்மனியின் கஷ்ட நஷ்டங்களுக்கு ராணுவத் தோல்விதான் காரணமென்று கூறச் சிறிதும் வெட்கப்படவில்லை. அப்பொய்யர்களின் கபட நாடகங்கள் பற்றி நான் அனாவசியமாக வார்த்தைகளைச் செலவழிக்க விரும்பவில்லை என்றாலும், அக்கூற்றுகளை நம்பும் சாதுக்களான ஜனங்கள் அறிந்து கொள்ள வேண்டுமென்பதற்காகவே, அதுபற்றி சில முக்கிய விஷயங்களைக் குறிப்பிட்டேன்.

யுத்தத்தில் ஏற்பட்ட தோல்வி, தேசத்தின் எதிர்கால க்ஷேமத்திற்குப் பெரும் பாதகமாக முடியுமென்பது மறுக்க முடியாத உண்மை. எனினும் அத்தோல்விக்கு சிப்பாய்களோ அல்லது ராணுவத் தலைவர்களோ காரணஸ்தர்களல்ல. வீரர்கள் போர்க்களத்தில் உயிர்த்தியாகம் செய்து வருகையில், தாய்நாட்டில் துரோகிகள் திரை மறைவில் சூழ்ச்சி செய்தனர். அப்பாதகர்களின் சூழ்ச்சிதான் தோல்வியில் வந்து முடிந்தது. நம் ராணுவத் தலைவர்களின் திறமைக்கும், சிப்பாய்களின் தீரத்திற்கும் இணையேயில்லை. எனவே தோல்விக்குக் காரணம் துரோகிகளின் சூழ்ச்சியேயொழிய ராணுவத்தின் திறமையின்மையல்ல. நான்கு வருஷ காலத்திற்குள் ஜெர்மனி உலகையே எதிர்த்து நின்று பல வெற்றிகள் பெற்றது. அப்படியிருக்க ஜெர்மன் ராணுவத் தலைவர்களையோ, சிப்பாய்களையோ எவர் துணிந்து குறைகூற முடியும்? மற்றும் உள்நாட்டு ஊழல், கோழைத்தனம், ஒழுக்கமின்மை முதலியவைகளின் காரணமாக ஏற்படும் ராணுவத் தோல்விகளால் தான் தேசத்திற்கு ஆபத்து உண்டாகுமேயொழிய, மற்ற காரணங்களாலேற்படும் தோல்வி, மேற்கொண்டு அத்தேசத்தின் புனருத்தாரணத்திற்கும், தீவிர முயற்சிக்குமே பூர்வாங்கமாக அமையும். ராணுவத்தின் தோல்வியால் மாத்திரம் தேசிய வாழ்க்கை சிதறுண்டுவிடாது. இந்த உண்மைக்கு ஆதாரமாக சரித்திரத்தில் எவ்வளவோ உதாரணங்களிருக்கின்றன.

நமக்கேற்பட்ட தோல்வியானது கடவுளால் நமக்கு விதிக்கப் பட்ட சரியான சிட்சையேயாகும். நம் ஜனங்களின் விபரீத நடத்தைக்காக இயற்கை தேவி நம் மீது அவ்வாறு வஞ்சம் தீர்த்துக் கொண்டாள். பகைவர்களின் வீரத்தனத்தால் நாம் தோல்வியடைந்துவிடவில்லை. நம் தேசத்தினரின் துரோகத் தினாலேயே தோல்வியடைந்தோம். அச்சமயம் பலரும்

வெட்கமின்றி ஜெர்மனியின் துரதிர்ஷ்டத்தை சந்தோஷத்துடன் வரவேற்கவில்லையா? அத்தகைய பாவிகள் எவ்விதம் இயற்கையின் வஞ்சத்திற்கு ஆளாகாமலிருக்க முடியும்? போர் முனையைப் பலவீனப்படுத்தியதன் மூலம் ஜெர்மன் வீழ்ச்சியைத் துரிதப்படுத்தியதாக அப்போது பெருமையடித்துக் கொண்டவர்களும் உண்டு! ராணுவத் தோல்வி காரணமாக ஜெர்மனி வீழ்ச்சியடைந்திருக்குமாயின், அது ரோமியர்களின் உதாரணத்தைப்' பின்பற்றி, தோல்வியடைந்த துருப்புகளை அன்போடு வரவேற்று, சாம்ராஜ்யத்தில் நம்பிக்கையிழந்துவிட வேண்டாமென அவர்களை வேண்டிக்கொண்டு உற்சாகப்படுத்தியிருக்கும். ஆனால் உண்மையில் நடந்ததென்ன? போர்க்களத்திலிருந்து திரும்பி வந்த துருப்புகள் ஏளனம் செய்யப்பட்டார்கள். தாய்நாட்டிற்காக இரத்தம் சிந்தியவர்களுக்கு அவ்வித வரவேற்புதான் கிடைத்தது!

ஜெர்மன் வீழ்ச்சிக்கு உண்மையான காரணங்களை மறைத்து அவ்விதம் பொய்க்கூற்றுகளைத் திரித்து விட்டவர்கள் யூதர்கள் தானென்பதைச் சொல்ல வேண்டியதில்லை. தாங்களிழைத்த துரோகத்தை மறைப்பதற்காகவே யூதர்களும், மார்க்ஸ் கட்சியினரும் அவ்வாறு ராணுவத்தின் மீது பழிசுமத்தி வந்தனர். தேசத் துரோகிகளுக்குச் சரியான பாடம் கற்பிக்கும் யோக்கியதையும், திறமையும் ஜெர்மனியிலேயே லூடன்டார்ப் ஒருவருக்குத்தான் உண்டென்பதை அவர்கள் அறிவர். அதனாலேயே அவர் மீது பழியைச் சுமத்தி, அவரிடம் ஜெர்மன் ஜனங்களுக்குள்ள நம்பிக்கையைக் குலைத்துவிட வேண்டுமென அவர்கள் சூழ்ச்சி செய்தனர். எப்போதுமே பெரும் புளுகைப் பொது ஜனங்கள் வெகு சுலபமாக நம்பி விடுவது வழக்கம். ஏனெனில் யாதொரு ஆதாரமுமின்றி அவ்வளவு அபாண்டமான ஒரு பொய்யை எவரும் சிருஷ்டி செய்யமாட்டார்களென்பது அவர்களுடைய நம்பிக்கை. குறிப்பிட்ட ஒரு விஷயம் சிறிதும் ஆதாரமற்ற பொய்க்கூற்றென்று நிரூபிக்கப்பட்டாலும் கூட, அதன் சம்பந்தமாக பொது ஜனங்களின் மனதில் சிறிதளவு சந்தேகமிருந்தே தீரும். உலகிற் சிறந்த ஒரு ஞானியான ஷோபன்ஹார், யூதர்கள் பொய் சொல்லுவதில் மகா நிபுணர்களென்று கூறியிருப்பது முற்றிலும் உண்மையாகும். எனவே, பொய் சொல்லுவதில் யூதர்கள் "மகாமேதாவிகளெ"ன்பதை அறியாதவர்களோ அல்லது அறிந்து கொள்ள விரும்பாதவர்களோ, சத்தியத்திற்கு அழிவில்லையென்ற நியதி அனுஷ்டானத்திறகு வர ஒரு நாளும் உதவி புரிய முடியாது.

எனினும் ஜெர்மனிக்கு அவ்வளவு பெரிய மகத்தான கஷ்டமேற்பட்டதும் ஒருவிதத்தில் நன்மைதான். திடீரென்று தோன்றி மனிதர்களை அலையலையாகக் கொன்று குவிக்கும்

கொள்ளை நோயைத் தடுத்து ஒழிக்க சிறிதும் தாமதமின்றி கடுமையான முறைகளைக் கைக்கொள்கிறான். ஆனால் ஒருவருக்கும் தெரியாமல் சிறிது சிறிதாக ஆட்கொண்டு மனித வர்க்கத்தை அழிக்கும் க்ஷயரோகத்தை ஒழிப்பதில் அவன் அவ்வளவு துரிதமாக முற்படுவதில்லை. அதனாலேயே கொள்ளை நோய் மனிதனால் அடக்கப்பட்டுள்ளது, க்ஷயரோகமோ மனிதனை ஏய்த்து வருகின்றது. அதுபோலவே ஜெர்மனிக்கு கொள்ளை நோய் போல் திடீரென மகத்தான ஆபத்து நேர்ந்தது, அதை எதிர்க்கும் விஷயத்திலும் ஜனங்களிடையே தீவிர உறுதியை உண்டுபண்ணியது.

சென்ற யுத்தத்திற்கு முன் நீண்டகாலம் சமாதானம் நிலவி வந்தபோது, இங்குமங்கும் சில விபரீதங்கள் தென்பட்டன. ஆனால் அவைகளின் மூலகாரணத்தைக் கண்டுபிடிப்பதற்கான முயற்சி எதுவும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. யுத்தத்திற்கு முன் ஜெர்மனியின் ஜனத்தொகை அபரிமிதமாகப் பெருகி வந்ததால் அவர்களுடைய தினசரி உணவிற்கு வகை செய்ய வேண்டிய பிரச்னை இன்றியமையாததாயிற்று. ஆனால் பொறுப்புள்ளவர்கள், துரதிர்ஷ்டவசமாக அதையொட்டி சரியான ஒரே தீவிர வழியைப் பின்பற்றாது, சுலபமான முறைகளைக் கைக்கொள்ள ஆரம்பித்தனர். அதாவது புதிய பிரதேச ஆக்கிரமிப்புக் கொள்கையில் பைத்தியக்காரத்தனமாக ஆசை வைத்தனர். அது எல்லையற்ற பாதகத்தை விளைவிக்கக் கூடிய கைத்தொழில் பெருக்கத்திற்குக் காரணமாயிற்று. அதன் விளைவாக முதலிலேற்பட்ட விபரீத பலன், வேளாண்மை வகுப்பினரின் சீர்குலைவே. விவசாயிகளின் நிலைமை எவ்வளவுக்கெவ்வளவு பலவீனமடைந்ததோ, அவ்வளவுக்கவ்வளவு நகரப் பிரதேசங்களில் தொழிலாளர்களின் தொகையும் அதிகமாயிற்று. அதனால் பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்குமுள்ள வேற்றுமையை உள்ளங்கை நெல்லிக்கனி போல் சகலரும் நிதர்சனமாகக் காண முடிந்தது. போக வாழ்க்கையும், பட்டினி வாழ்வும் ஒன்றுக்கொன்று வெகு சமீபத்திலிருந்தன. வறுமையினாலும், வேலையில்லாத் திண்டாட்டத்தினாலும் ஜனங்களிடையே அமைதியின்மையும், துவேஷமும் ஏற்பட ஆரம்பித்தன. வர்த்தக சுபிட்சத்தினால்கூட அந்த அமைதியின்மையைத் தடுக்க முடியவில்லை. எனவே, அத்தகைய நிலைமை நீடிக்க முடியாதென்ற உணர்ச்சி பரவ ஆரம்பித்தது. எனினும் அதன் விளைவாக எதிர்காலத்தில் என்ன நேருமென்பது யாருக்கும் தெரியவில்லை.

வர்த்தகத்தின் ஆதிக்கம் எல்லை மீறி பணமே பிரதானமாகியது. நாளடைவில் பணத்தை, கடவுள்போல் கூட வணங்க ஆரம்பித்து விட்டனர். உண்மைக் கடவுள் கர்னாடகமாகி, அதன் ஸ்தானத்தை

பணக்கடவுள் ஆக்கிரமித்துக் கொண்டார்!

மற்றெந்த சமயத்தையும்விட, ஒரு தேசத்தை நெருக்கடி அணுகும்போதுதான் உயர்ந்த கொள்கை அத்யாவசியமானது. அப்படியிருக்க, ஜெர்மனியை நெருக்கடி நெருங்கியபோது அதற்கு நேர்மாறாக பணத்தை வணங்கும் பாமரத் தன்மையே பிரபலமாக விளங்கியது. துரதிர்ஷ்டவசமாக கெய்சர் சக்ரவர்த்தியும் அவ்வலையில் சிக்கினார். பணம் படைத்த 'பிரதிநிதி'களுக்குப் பட்டங்கள் வழங்கப்பட்டன. பணம் முதல் ஸ்தானத்திற்கு வந்துவிட்டதால், மற்ற உயர்ந்த கொள்கைகளுக்கெல்லாம் முக்கிய ஸ்தானம் அளிக்கப்படவில்லை. அதுபோலவே வீரபுருஷனுக்கு அணிகலமான கத்தி தத்துவத்திற்கும் இனி முக்கிய ஸ்தானமில்லை என்பது நிதர்சனமாயிற்று.

தனி ஹோதாவிலுள்ளவர்களைச் சேர்ந்த மூலதனங்கள் ஒரு சிறு கூட்டத்தின் நிர்வாகத்திற்கு வர ஆரம்பித்தன. தொழிலாளர்களின் கௌரவம் குறைந்து, அவர்கள் இரக்கமற்ற கொள்ளைக்கார முதலாளிகளின் கைப்பம்பரமாக ஆட நேர்ந்தது. நிதி நிர்வாகக் கூட்டமானது சிறிது சிறிதாக தேசிய வாழ்க்கையையே ஆக்கிரமித்துக் கொள்ள முற்பட்டது. நேர் பாதையல்லாத பங்கு வெளியீடுகளின் மூலம், ஜெர்மன் பொருளாதார நிர்மாணத்தை சர்வதேசமயமாக்கும் முயற்சி யுத்தத்திற்கு முன்பே சிலரால் ஆரம்பமாகிவிட்டது. ஜெர்மன் கைத்தொழில் முதலாளிகளில் அந்த ஆபத்தைத் தவிர்க்க முயற்சித்தார்களெனினும், இறுதியில் அவர்கள் அம்முயற்சியைக் கைவிட்டுவிடும்படி நேர்ந்தது. பணப்பேராசை பிடித்த முதலாளி வர்க்கத்தின் ஏகோபித்த எதிர்ப்பை அவர்களால் சமாளிக்க முடியவில்லை. அவ்வர்க்கத்தின் அந்தரங்க சிஷ்யர்களான மார்க்ஸ் கட்சியினரும் பேராசைக்காரர்களுக்கு உதவியளித்தனர். ஜெர்மன் சர்க்கார் ரயில்வே நிர்வாகத்தையும் அவர்கள் கைப்பற்ற ஆரம்பித்தனர். அவ்வாறாக 'சர்வதேச அபேதவாத ஜனநாயக'த்தின் விபரீத லட்சியங்கள் நிறைவேறி வந்தன.

யுத்தம் முடிந்தபின் ஜெர்மன் கைத்தொழிலைச் சேர்ந்த பிரபல முதலாளி ஒருவர் கூறிய அபிப்பிராயத்திலிருந்து ஜெர்மனியை வர்த்தகக் கொள்கையானது எவ்வாறு ஆட்கொண்டிருந்ததென்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஜெர்மனி புனருத்தாரணமடைவதற்குற்ற ஒரே வழி வர்த்தகம்தானென்று அவர் கூறினார்! அதே சமயம் பிரான்ஸிலோ கல்வித்துறையில் அதிக கவனம் செலுத்தி வந்தனர். தேசத்தின் உயர்ந்த வாழ்வானது சிறந்த கொள்கைகளைப் பொறுத்திருக்கிறதேயொழிய, வர்த்தகத்தைப் பொறுத்ததில்லை என்பதை பிரெஞ்சுக்காரர்கள் உணர்ந்து, அதற்குற்ற முறைகளை எடுத்துக் கொண்டனர்.

ஆனால் ஜெர்மனியிலோ அதற்கு நேர்மாறான கொள்கை உபதேசிக்கப்பட்டு வந்தது பெரும் குழப்பத்தை உண்டு பண்ணியது. யுத்தத்திற்கு முன் ஜெர்மனியில் அளிக்கப்பட்டு வந்த கல்வியும் திருப்திகரமாக இல்லை. அக்கல்வியானது, கேவலம் அறிவாளிகளை மாத்திரம் உற்பத்தி செய்வதாக இருந்ததேயன்றி, தினசரி வாழ்க்கைக்கு இன்றியமையாத திறமையை வளர்ப்பதாக இல்லை. மேலும் ஒழுக்க வளர்ச்சி பற்றியும் கவனம் செலுத்தப்படவில்லை. அதன் விளைவாக "காக்காய் பிடிக்கும்" குணமுள்ள அடிமைகளின் தொகைதான் அதிகமாயிற்றேயொழிய, பொறுப்பு உணர்ச்சி, உறுதி, மனச்சாட்சிக்கு முரணின்றி தங்கள் அபிப்பிராயத்தைப் பட்டவர்த்தகமாகக் கூறும் தைரியம் முதலிய குணங்கள் வளருவதற்கு வகையிராமற் போயிற்று. மகத்தான பொறுப்பை பயமின்றி வகிக்கக் கூடிய தைரியத்தையும், மூலாதாரப் பிரச்னைகளை மேலெழுந்தவாரியாக விட்டுவிடாது ஊடுருவிச் சமாளிக்கும் ஆற்றலையும் அப்போதைய கல்வி வளர்க்கவில்லை. பெரிய இடங்களில் பல்லைக் காட்டி வயிறு வளர்ப்பதையே பேரின்பமென நினைத்து வந்த பக்தர்கள், யோக்கியப் பொறுப்புள்ள சாதாரண ஜனங்களை வெகு அலட்சியமாகக் கருதினர். ஜெர்மனியில் முடியரசின் வீழ்ச்சிக்கு அடிகோலியவர்கள் அத்தகையோர்தான்.

முடியரசுக் கொள்கைதான் முக்கியமேயொழிய அந்த முடியை யார் தரித்துக் கொண்டிருக்கிறாரென்பது அவ்வளவு முக்கியமல்ல. மகா பிரடரிக், முதலாவது வில்லியம் போன்ற மேதாவிகளான வீரமன்னர்கள் பல நூற்றாண்டுகளுக்கொரு முறைதான் ஜனிப்பார்கள். தங்கள் கடமையைச் செய்யும் மன்னர்களைப் போற்ற ஜனங்களுக்கு உரிமையிருப்பதுபோல், கடமையிலிருந்து வழுவும் மன்னர்களை அகற்றுவதற்கும் அவர்களுக்கு உரிமையிருக்க வேண்டும். கொள்கையில் பற்றுதலற்ற தடுமாற்றவாதிகளால் முடியரசுக்கு நன்மையேற்பட முடியாது. 2578ல் (1918) கெய்சரைக் கைவிட்டுவிட்டு ஓடிய பேர்வழிகளே பின்னர் முடியரசுக்குப் பரிந்து கொண்டு பேச முன்வந்தனர்! அத்தகைய வேஷதாரிகளின் கபட நாடகத்தை மன்னர்கள் அறிந்து கொள்ளத் தவறுவதே பொதுவாக அவர்களின் வீழ்ச்சிக்குக் காரணமாகின்றது.

ஜெர்மனியின் வீழ்ச்சிக்கு மற்றொரு முக்கிய காரணம், எந்த மகத்தான பிரச்னையையொட்டியும் அரைகுறையான முறைகளுடன் திருப்தியடைந்து வந்ததேயாகும். பொறுப்பேற்கப் பயந்து நழுவும் நோய்க்கு மூலஸ்தானம் பார்லிமெண்டுதான். அங்குதான் பொறுப்பைக் கழித்துக் கொள்ளும் கலையானது மிகச் சிரத்தையுடன் பயிற்சி செய்யப்பட்டு வருகிறது. பொறுப்பேற்றுச்

சிக்கலான பிரச்னைகளைப் பரிசீலனை செய்து சமாளிக்கும் தைரியம் பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்கிருப்பதில்லை. அவ்வாறாக இறுதியில் பொறுப்பைக் கழிக்கும் நோய், தேசிய வாழ்க்கையின் சகல துறைகளிலும் பரவி அனர்த்தமாகி விடுகின்றது. இதன் சம்பந்தமாக நான் நேரில் அறிந்த சில விஷயங்களை மாத்திரம் ஈண்டு குறிப்பிட விரும்புகிறேன்.

பத்திரிகைகளின் சக்தி பிரமாதமானதென்று கூறப்படுகின்றது. அது உண்மையே. சகலருக்கும் பள்ளிக்கூடக் கல்வியானது இளம் வயதில் முடிந்துவிடுகிறது. அதற்குப் பின்னர் எல்லோருக்கும் கல்வி போதித்து வருவது பத்திரிகைகள்தான். பத்திரிகை வாசிப்போர் மூன்று பிரிவினராவர்: 1. தாங்கள் வாசிப்பதை எல்லாம் நம்புகிறவர்கள், 2. தாங்கள் வாசிக்குமெதையும் நம்பாதவர்கள், 3. தாங்கள் வாசிப்பதை ஆராய்ந்து, தங்கள் பகுத்தறிவைக் கொண்டு எது நல்லது எது கெட்டதென்ற தீர்மானத்திற்கு வருவோர்.

முதலாவது கோஷ்டியினரின் தொகைதான் மிகவும் அதிகம். பெரும்பாலான பாமர ஜனங்களும், அக்கோஷ்டியைச் சேர்ந்தவர்களே. பிறர் சமைத்து வைத்த பதார்த்தங்களை, நல்லதாயினும் கெட்டதாயினும் ருசி பார்க்காமல் சாப்பிட்டுவிடுவதுபோல், அவர்கள் பிறர் எழுதும் விஷயங்களையும் அப்படியே நம்பி விடுகிறார்கள். அதற்கு ஓரளவு அவர்களுடைய் திறமையின்மையையும், ஓரளவு அறியாமையுமே காரணம். இதைத் தவிர, சோம்பேறித்தனம் காரணமாகவும் அவர்கள் தங்களுடைய யோசனா சக்தியை உபயோகிப்பதில்லை. எனவே தினசரி பிரச்னைகள் விஷயத்தில் அவர்களுடைய நிலைமையை உருவாக்குவது முற்றிலும் பத்திரிகைகளேயாகும். சத்திய சந்தர்களும் பேரறிஞர்களும் எழுதுவதை எல்லாம் அவர்கள் நம்புவதன் மூலம் அளவற்ற நன்மையே உண்டாகும். ஆனால் பத்திரிகைகளில் எழுதுவோதெல்லாம் அவ்விதமிருக்கின்றார்களா? அயோக்கியர்களும், பொய்யர்களும் எழுதுவதை ஜனங்கள் நம்பிவிடுவதன் மூலம் பிரமாத ஆபத்தே நேரிடுகின்றது.

இரண்டாவது கோஷ்டியினரின் தொகை முதல் கோஷ்டியினரின் தொகையைக் காட்டிலும் சிறிது குறைவாகும். இவர்களில் பலர் ஏற்கெனவே முதல் கோஷ்டியிலிருந்தவர்கள், பத்திரிகைகளின் கூற்றுகளை நம்பி அடுக்கடுக்காக ஏற்பட்ட ஏமாற்றங்களால் சலித்துப் போனவர்கள். எனவே அச்சடித்த எதையும் அவர்கள் நம்ப மாட்டார்கள். பத்திரிகைகளைக் கண்டாலே அவர்களுக்கு நஞ்சைக் கண்டது போலிருக்கும். பத்திரிகைகளை வாசிக்க மாட்டார்கள். வாசித்தாலும் அவைகளில் காணப்படும் விவரங்களை எல்லாம் வெறும்

பொய்க் களஞ்சியங்களென்றும் தவறான கூற்றுகளென்றும் தள்ளிவிடுவார்கள். அவ்வாறு நம்பிக்கையிழந்தவர்களைச் சமாளிப்பதுதான் கடினமான காரியம். தீவிரமான எவ்வித அலுவலுக்கும் அவர்கள் தகுதியற்றவர்களாகி விடுகிறார்கள்.

மூன்றாவது கோஷ்டியினர் மிகச் சிறுபான்மையோராவர். அவர்கள் தான் பகுத்தறிவுள்ளவர்கள், எவ்விஷயத்தையும் தங்கள் சொந்த புத்தியையும், பகுத்தறிவையும் கொண்டு சீர்தூக்கிப் பார்த்து ஒரு முடிவிற்கு வரும் குணமுற்றவர்கள். பத்திரிகைகளிலுள்ள விஷயங்களைக் கண்மூடித்தனமாக நம்பிவிட மாட்டார்கள், ஒரேயடியாக மூடப் பிடிவாதங் கொண்டு நம்பாமலிருக்கவும் மாட்டார்கள். தங்கள் சொந்த அறிவை உபயோகித்து, சக்கையைத் தள்ளிவிட்டு சாரத்தை மாத்திரமே கிரஹிப்பார்கள். எனவே பத்திரிகைப் புளுகுகளால் அவர்களிடையே எவ்வித ஆபத்துமேற்படாது.

எனினும் அறிவுள்ள ஒருசிலரைக் காட்டிலும் பெரும்பான்மையோரின், அதாவது முதல் கோஷ்டியைச் சேர்ந்த - எதையும் நம்பும் சாதுக்களின் தீர்மானத்தையே இறுதியான முடிவாகக் கருதும் ஒரு சமூகத்தில் பத்திரிகைகளாலேற்படக் கூடிய சாதக பாதகங்கள் எல்லையற்றவை. எனவே அவைகளை மிகவும் ஜாக்கிரதையாகக் கண்காணித்து வரவேண்டியது சர்க்காரின் கடமையாகும். ஜனங்களுக்கு நிரந்தரமாக மகத்தான நன்மை செய்யவும் அல்லது தீங்கு செய்யவும் சக்தி பொருந்திய அக்கருவி, சர்க்காரின் கட்டுப்பாட்டிலிருக்க வேண்டியது இன்றியமையாதது. அப்படியானால்தான் அக்கருவியின் மூலம் ஜன சமூகத்திற்கு நன்மையேற்படும்படி பார்த்துக் கொள்ள முடியும். 'பத்திரிகைகளின் சுதந்திரம்' என்ற கூக்குரலுக்குப் பயந்து அவர்கள், பத்திரிகைகளை இஷ்டப்படி நடந்து கொள்ள விட்டுவிடக் கூடாது. அவைகளின் எதேச்சாதிகாரத்தைத் தயவு தாட்சண்யம் சிறிதுமின்றி கட்டுப்படுத்தி வரவேண்டும்.

யுத்தத்திற்கு முன் ஜெர்மன் பத்திரிகைகளின் போக்கு கொடிய விஷத்தன்மை பொருந்தியதாக இருந்தது. மற்ற நாடுகள் ஜெர்மனி மீது பாய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகையில், ஜெர்மன் பத்திரிகைகள் மாத்திரம் சமாதானக் கொள்கை என்ற விஷத்தை ஜனங்களின் மனதில் பாய்ச்சி வந்தன. "மேற்கத்தி ஜனநாயகங்களை" அவை பாராட்டியும் வந்தன. ஜெர்மன் ஜனங்களின் ஆத்துமார்த்த அழிவிற்கும் அவைதான் காரணமாக இருந்தன. ஒழுக்கமும் கண்ணியமும் கர்னாடக சரக்குகளென அவை போதித்து வந்ததால், நம் ஜனங்கள் இறுதியில் நவீன நாகரிகவாதிகளாயினர். சர்க்காரின் அதிகாரத்தைச் சீர்குலைத்து வந்ததும் ஜெர்மன் பத்திரிகைகள் தான். மற்றும் அவை

ராணுவத்தின் கௌரவத்திற்கும், கீர்த்திக்கும் களங்கமேற்படும்படி செய்ததுடன், கட்டாய ராணுவப் பயிற்சி முறையைச் சீர்குலைத்து, ராணுவ மான்யங்களுக்கும் அனுமதி கிடைக்க முடியாதவாறு செய்தன. அதாவது ஜெர்மன் ஜனங்களுக்கும் சாம்ராஜ்யத்திற்கும் குழி தோண்டுவதே அவைகளின் அலுவலாக இருந்தது. பூனைக்கு எலி எவ்வளவு அவசியமோ, அதுபோல் மார்க்ஸ்வாத கோஷ்டிப் பத்திரிகைகளுக்குப் பொய் சொல்லுவதும் அத்தியாவசியமாகும்! அவ்வாறாக ஜெர்மானியர்கள் யூதர்களின் அடிமைகளாவதற்கான வழியை அப்பத்திரிகைகள் செப்பனிட்டு வந்தன. ஆனால் பொது ஜனங்களின் மனதை விஷமாக்கும் அந்தக் கொடுமையை எதிர்க்க சர்க்கார் என்ன முறைகளை எடுத்துக் கொண்டனர்? ஒன்றுமில்லை, ஒன்றுமேயில்லை!

அத்தகைய விபரீதங்களைத் தடுக்க சர்க்கார் தவறியதுடன் நிற்கவில்லை. தவறான, பலனற்ற, அரைகுறையான முறைகளை எடுத்துக் கொண்டதன் மூலம் தங்கள் கோழைத்தனத்தையும் விளம்பரப்படுத்தியதுதான் அதிக ஆபத்தை உண்டுபண்ணியது. உறுதியுடன் தீவிர பரிகார முறைகளை எடுத்துக் கொள்ளும் தைரியம் எவருக்குமில்லை. விஷப்பாம்பை அடித்துக் கொல்லாது அதை சமாதானப்படுத்தவே முயன்றனர். அதனால் அக்கொடிய ஜந்துவின் பலம் வருஷத்திற்கு வருஷம் அதிகமாயிற்று. அது கடித்தபோது, ஒன்றிருவரை சில வாரங்களோ அல்லது சில மாதங்களோ சிறைப்படுத்துவதுடன் சர்க்கார் திருப்தியடைந்து வந்தனர். அதனால் விஷப்பாம்புக் கூட்டம் எவ்வித ஆபத்துமின்றி கொழுத்து வந்தது. அத்தகைய நிலைமைக்குக் காரணம் ஒருபுறம் யூதர்களின் சூழ்ச்சியும், மற்றொருபுறம் அதிகாரிகளின் மடத்தனமும், கபடமற்ற தன்மையுமேயாகும்.

மார்க்ஸ் கட்சிப் பத்திரிகைகளில் சில பகிரங்கமாக சர்க்காரையும் சாம்ராஜ்யத்தையும் கண்டித்து வந்ததுடன், ஜனங்களிடையும் பரஸ்பரம் துவேஷமுண்டாகும்படி தூண்டி வந்தன. ஆனால் மற்றும் சில பத்திரிகைகளோ மிகவும் கண்ணியமானவை போல் நடித்துக் கொண்டே ஜனங்களின் மனதைப் பாழ்படுத்தி வந்தன. வெளித் தோற்றத்தைக் கண்டு திருப்தியடையும் மடையர்கள், அத்தகைய யூதப் பத்திரிகைகளின் 'மரியாதை'யையும் 'கண்ணியத்'தையும் கண்டு மதிமோசம் போயினர். தங்களுடைய அந்தரங்க நோக்கத்தைக் குறித்து எதிர்ப்பு ஏற்படாமலிருக்கவே 'பிராங்க் பர்ட்டர் ஜீட்டங்', 'பர்லினர் டாஜ்பிளாட்' போன்ற பத்திரிகைகள் அவ்விதம் வேஷம் போட்டனவென்பதைப் பலரும் அறிந்து கொள்ளவில்லை. 'பத்திரிகைச் சுதந்திரம்', 'பொதுஜன அபிப்பிராய சுதந்திரம்' போன்ற கோஷங்களால் அப்பத்திரிகைகளுக்கு தங்களுடைய

உண்மைச் சொருபத்தை மறைத்துக் கொள்ளவும் முடிந்தது. அத்தகைய விஷமானது தேசிய வாழ்க்கையை உருக்குலைத்து வருகையில், எவ்வளவு காலந்தான் சாம்ராஜ்யம் நிலைத்திருக்க முடியும்?

மேலும் அப்பத்திரிகைகள் எப்போதும் ஸ்தூல பலத்தை வெறுத்து, "அறிவாயுதங்களை"க் கொண்டு போராடுவதுதான் கண்ணியமானதென்றும் அடிக்கடி வலியுறுத்தி வந்தன. அறிவாயுதங்களைக் கொண்டு போராடுவதென்பது இயற்கைக்கு முரணான விஷயம். இடைவிடாத போராட்டமும் பகையும் இவ்வுலக வாழ்க்கையின் இயற்கை நியதியாக இருந்து வருகையில், அவ்வித உபதேசத்திற்குச் செவி கொடுப்பது விபரீதமாக முடியுமென்பதைப் பலரும் உணர்ந்து கொள்ளவில்லை. சூரியனும், சந்திரனும், கிரஹங்களும் தங்களுக்கிடப்பட்ட பாதையில் வழுவிச் சென்று வரும் வரையில், மானிடரும் தங்களுக்கிடப்பட்டுள்ள இயற்கையின் கட்டளைப்படி நடந்துதான் தீரவேண்டும். இல்லாவிடில் அழிவுதான். பலவான்கள் என்றென்றும் பலவீனர்களுடைய எஜமானர்களாகவே இருந்து வருவார்கள். இது யாரும் மாற்ற முடியாத இயற்கை நியதி. இதை மனிதன் நன்கறிந்து கொள்ள முடியுமேயன்றி, இதன் ஆதிக்கத்திலிருந்து அவன் தன்னை விடுவித்துக் கொள்வது ஒரு நாளும் முடியாத காரியம்.

யூதப் பத்திரிகைகள் பாமர ஜனங்களை மயக்க ஒருவித வேஷத்தையும், 'அறிவாளி'களுக்காக யூதர்கள் நடத்தி வரும் பத்திரிகைகள், 'வெட்டு ஒன்று, துண்டு இரண்டு' என்ற தோரணையில் பட்டவர்த்தனமாக தங்கள் கருத்துக்களை வெளியிடுவதில்லை. அவைகளின் தடபுடலான தொனியும், அழகிய அடைமொழிகளும் வாசகர்களை மயக்கி விடுகின்றன. ஜனங்களிடையே அறிவையும் ஒழுக்கத்தையும் அபிவிருத்தி செய்வதுதான் அவைகளின் மூலாதாரமான கொள்கையென்று நம்பி வாசகர்கள் சொக்கும்படியும் செய்து விடுகின்றன. ஆனால் உண்மையில் எதிர்ப்பையும், யூதர்கள் மீது ஜனங்களுக்கு உண்டாகும் கோபத்தையும் சமாளித்துச் சிதறடிக்கவே, அப்பத்திரிகைகள் தளுக்கான தந்திர பாஷையை உபயோகித்து வருகின்றனவென்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

அவ்வாறாக அப்பத்திரிகைகள், நேர்முகமாகவும் மறைமுகமாகவும் யாதொரு தடையுமின்றி, பொதுஜன வாழ்க்கையில் விஷத்தைப் பாய்ச்சி வந்தன. அக்கொடுமையைத் தடுக்க சர்க்காரும் பிரயோஜனகரமாக அவர்கள் எடுத்துக் கொண்ட வெட்கக் கேடான அரைகுறை முறைகளே, சாம்ராஜ்யம் தகர்ந்து வருகிறதென்பதைக் காட்டின. தன்னிடமுள்ள சகல

ஆயுதங்களையும் உபயோகித்துத் தன்னைத்தான் பாதுகாத்துக் கொள்ளும் உறுதியற்ற ஒரு ஸ்தாபனம், சீக்கிரமாகவோ அல்லது தாமதித்தோ, தகர்ந்தொழிவது நிச்சயம். எனவே, இந்தத் தலைமுறையைச் சேர்ந்தவர்களாவது சரியான பாதையில் நடத்தப்படுவார்களாயின், அவர்கள் இந்த ஆபத்தை சுலபமாகச் சமாளித்து வெற்றி பெறுவார்கள்.

பொதுஜன அபிப்பிராயத்தைப் பாழ்படுத்தி வரும் அப்பத்திரிகைகளை அன்னியர்கள், ஜனங்களின் சத்துருக்கள் இவர்களுடைய நிர்வாகத்தில் விடாது சர்க்கார் தங்களுடைய நிர்வாகத்தில் எடுத்துக் கொண்டால், உடனே யூதர்களின் கூக்குரல் வானைப் பிளக்குமென்பதில் சந்தேகமில்லை. அவர்கள் தங்களிஷ்டப்படி கூக்குரலிடட்டும். இரத்த முறிஞ்சும் யூதர்களுக்குச் சொந்தமான ஆயிரம் பத்திரிகைகளின் சீறலைக் காட்டிலும் 12 அங்குல பீரங்கி ரவைகளின் சீறல் அதிக தூரம் ஆழ்ந்து செல்லக் கூடியதல்லவா! ஆகையால் அவர்களின் கூக்குரலை நாம் லட்சியம் செய்ய வேண்டியதில்லை.

யுத்தத்திற்குமுன், மூலாதாரமான தேசீயப் பிரச்னைகளைத் தீர்க்கும் விஷயத்தில் எவ்விதம் கோழைத்தனமும், தடுமாற்றமும் வந்து குறுக்கிட்டன என்பதற்கு மற்றோர் உதாரணமும் கூறலாம். ஒருபுறம் ஜனங்களின் அரசியல் வாழ்க்கையும், ஆத்துமார்த்த வாழ்க்கையும் பாழ்படுத்தப்பட்டு வருகையில், மற்றொருபுறம் பல வருஷங்களாக ஜனங்களின் ஆரோக்கியமும் அழிக்கப்பட்டு வந்தது. தேசத்தின் சகல பாகங்களிலும் விசாரம் காரணமாக கிரந்தி நோய்க்கும் மற்றும் க்ஷயரோகத்திற்கும் ஏராளமான ஜனங்கள் பலியாகி வந்தனர். அக்கொள்ளை நோய்களைத் தடுக்க யாரும் எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை.

விபசாரம் காரணமாக தாண்டவமாடிய கிரந்தி நோயைத் தடுக்க மிக மிகக் கடுமையான முறைகளைக் கைக்கொண்டிருக்க வேண்டும். அதன் மூலகாரணத்தையகற்ற முயற்சித்திருக்க வேண்டும். காதல் துஷ்பிரயோகம் செய்யப்பட்டதே அதன் மூலகாரணமாகும். புனித காதல் உணர்ச்சியானது விவாகத்திற்கு அஸ்திவாரமாக அமைவதொழிந்து, பொருளாதார காரணங்களே அதற்கு இன்றியமையாத பூர்வாங்க அம்சமாகி வருகின்றன. அத்தகைய விவாகத்தின் பலன் என்ன? இயற்கை உணர்ச்சியை ஆதாரமாகக் கொண்டு சிருஷ்டியாகும் ஆரோக்கியம் பொருந்திய குழந்தைகளுக்குப் பதிலாக, பொருளாதாரக் கணக்கின் பயனாக உண்டாகும் பரிதாபகரமான பிண்டங்களையே நாம் காண முடியும். மற்ற விஷயங்களில் இயற்கை நியதியை மீறுவதுபோல் இதிலும் நாம் அந்நியதியை சிறிது காலம் மீறி வரலாமெனினும், அவ்விதம் மீறுவோர் மீது இயற்கை, சீக்கிரமாகவோ அல்லது

தாமதித்தோ, வஞ்சம் தீர்த்துக் கொள்வது நிச்சயம். பொதுவாக இந்த உண்மையை மனிதன் உணர்ந்து கொள்ளும்போது, காலங்கடந்து விடுவதால் பரிகாரமெதுவும் செய்து கொள்ள முடியாமலும் போய்விடுகின்றது.

சாதாரணமாக விவாகம் செய்து கொள்வதன் முக்கிய நோக்கங்களை மனிதன் உணர்ந்து கொள்ள மறுப்பது, நாசகரமான விளைவுகளுக்கேமாகும். ஒருபுறம் சமுதாய நிர்ப்பந்தத்தினாலும், மற்றொருபுறம் பொருளாதார நோக்கங்களை ஆதாரமாகக் கொண்டும் அவர்களிடையே ஏற்படும் பலாபலன்களை நாம் பகிரங்கமாகப் பார்க்கிறோம். அதனால் முறையே பரம்பரையாக சந்ததிகள் பலவீனமடைவதுடன் இரத்தமும் களங்கப்பட்டு விடுகின்றது. யூதர்களின் புதல்விகளை சிறந்த சந்தான அபிவிருத்திக்கு ஏற்ற கருவிகளென்று கருதுகிறார்கள். இதெல்லாம் முற்றிலும் சீரழிவிற்கே இடமாகின்றது. இப்போது நம்மிடையுள்ள நடுத்தர அந்தஸ்தினரும் அதே முடிவிற்குத்தான் வந்து சேருவார்கள்!

நம் தேசத்தில் பெரும் நகரங்களிலுள்ள ஜனங்கள், தங்களுடைய காம இச்சையைத் தீர்த்துக் கொள்ள விபசாரிகளை நாடுவது நாளுக்கு நாள் அதிகமாகி வருகின்றதென்பதை எவரும் மறுக்க முடியாது. அதனால் துன்மார்க்க நோய்களின் கொள்ளையும் நாளுக்கு நாள் அதிகமாகி வருகின்றது. இக்கொடுமையின் நிதர்சனமான பலன்களை பைத்தியக்கார ஆஸ்பத்திரிகளிலும், நம் குழந்தைகளிடத்திலும் காணலாம். நமது சிற்றின்ப வாழ்க்கையைப் பாழ்படுத்திவரும் கொள்ளை நோய்க்கு அவை துக்ககரமான பிரத்தியக்ஷ சாட்சிகளாக இருந்து வருகின்றன. அந்தோ! பெற்றோர்களின் துன்மார்க்கத்தினால் குழந்தைகள் அவ்வாறு துன்பப்படுகின்றன. அதிருப்திகரமும், பயங்கரமுமான இந்த உண்மையைப் பலரும் கவனிக்கவில்லை. கவனிக்க விரும்பவில்லை. ஏனெனில் அவ்விதம் கண்மூடித்தனமாக இருப்பதுதான் எளிதான காரியம்! மற்றும் பலர் போலிக் கூச்சம் என்ற 'புனித' போர்வையால் தங்களை மூடிக்கொண்டு பேசாமலிருக்கின்றனர். அத்தகைய விபரீதத்தை நிலைமையை அவர்கள் வெறுத்து கண்களை மூடிக்கொண்டு, அவ்வாறு பாவம் செய்வோர் மீது, சாத்தியமாயின் தாங்கள் இறந்தபின்! - நெருப்புமாரி பெய்யும்படி இறைவனைப் பிரார்த்திப்பதுடன் தங்கள் கடமை முடிந்துவிட்டதாகக் கருதுகின்றனர்! மற்ற வர்களோ, அத்தகைய விபரீதத்தை எதிர்த்து நிற்க தங்களுக்குத் திறமையில்லை என்பதை உணர்ந்து கையை விரித்துவிட்டுப் பேசாமலிருந்து விடுகின்றனர். இவ்வாறாக அதன் பயங்கர விளைவுகளை அறிந்தும், அவைகளைத் தடுக்க எவராலும் எவ்வித

முயற்சியுமெடுத்துக் கொள்ளப்படுவதில்லை.

அவ்விதமிருப்பது மிகவும் சுலபமென்றாலும், அதனால் தேசிய வாழ்க்கையே உருக்குலைந்து சின்னாபின்னமாகி விடுமென்பதை அலட்சியம் செய்துவிடக் கூடாது. அதே கொடுமையால் மற்ற தேசங்களும் அல்லல்படுகின்றனவெனில், அதனால் நமது சீர்குலைவு தடைபட்டு விடாது. அக்கொள்ளை நோயைத் தடுக்க முதன்முதலில் எந்த தேசம் தகுந்த முறைகளைக் கைக்கொள்ளப் போகின்றது. எந்த தேசங்கள் அதனால் ஆக்கிரமிக்கப்பட்டு படுவீழ்ச்சி அடையப் போகின்றனவென்பதே கேள்வியாகும். இச்சோதனையில் தோல்வியுறும் வர்க்கத்தினர் அடியோடு நாசமாகி, அவர்களின் ஸ்தானத்திற்கு ஆரோக்கியமும், அதிக கஷ்டங்களைத் தாங்கும் பலமுமுள்ள வர்க்கத்தினரே வருவார்கள். இரத்தத்தையும் வர்க்கத்தையும் களங்கப்படுத்தும் பாவம் இவ்வுலகில் பரம்பரையாக நிகழ்ந்து வருகிறது. அப்பாவத்தைச் செய்யும் எந்த தேசமும் இறுதியில் ஆபத்திற்குள்ளாகியே தீரும்.

யுத்தத்திற்கு முன் ஜெர்மனியில் இந்த மூலாதாரமான பிரச்னையையொட்டி சர்க்காரின் நிலைமை மிகவும் வருந்தத்தக்க தாயிருந்தது. பெரிய நகரங்களிலுள்ள நம் இளைஞர்கள் விபசாரத்தில் வீழ்ச்சியடைவதைத் தடுக்க என்ன முறைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன? நம்மிடையே சிற்றின்ப வாழ்க்கை களங்கமுறாமலும் பணத்தை ஆதாரமாகக் கொண்டிராமலும் தடுக்க என்ன செய்தார்கள்? நம் தேசீய வாழ்க்கையையே அடியோடு சீர்குலைத்த கிரந்தி நோயை எதிர்த்துப் போராட முயற்சியெடுத்துக் கொள்ளப்பட்டதா?

எதிர்கால சந்ததிகளின் அதிர்ஷ்டமோ அல்லது துரதிர்ஷ்டமோ, அப்பிரச்னைகள் திருப்திகரமாகத் தீர்க்கப்படுவதையே பொறுத்திருக்கிறதென்பதை சர்க்கார் அறிந்து, தீவிர பரிகார முறைகளையும் கைக்கொண்டிருக்க வேண்டும். அக்கொள்ளை நோய்களால் எதிர்கால சந்ததிகள் உருக்குலைந்து விடுமென்ற உண்மையை ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ளும்படி சர்க்கார் பிரசாரம் செய்திருக்க வேண்டும். தேசம் முழுவதும் பரவும் மகத்தான ஆபத்தைச் சமாளிக்கும் விஷயத்தில் அவ்விதம் அபாரமான சிரத்தை எடுத்துக் கொண்டாலன்றி வெற்றி பெற முடியாது. சர்க்காரும், பொது ஜனங்களும் ஏகோபித்த முறையிலெடுத்துக் கொள்ளும் எம் முயற்சியும் பலனளிக்காமற் போகாது. ஒரு தேசமாயினும், தனி நபராயினும் விடாமுயற்சியுடன் தன் சக்தி முழுவதையும் உபயோகித்தாலன்றி, சிறந்த லட்சியத்தில் வெற்றி பெறுவது முடியாத காரியம். பல பிரச்னைகளிலும் கவனம் செலுத்தி குழப்பாமல், தங்கள் லட்சியத்தை படிப்படியாக நிறைவேற்ற வேண்டும். ஒரு படியைத்

தாண்டுமுன் அடுத்தப்படியில் கவனம் செலுத்தக் கூடாது.

மேலே குறிப்பிட்ட முக்கியப் பிரச்னையிலிருந்து ஜனங்களுடைய கவனத்தைச் சிதறடிக்கும் இதர தினசரிப் பிரச்னைகளை எல்லாம் பின்னணியில் ஒதுக்கிவிட வேண்டும். தேசம் வாழ்வதா அல்லது வீழ்வதா என்பது, அந்த ஒரே பிரச்னை திருப்திகரமாகத் தீர்க்கப்படுவதையே பொறுத்திருக்கிறதென்பதை ஆதாரமாகக் கொண்டு முழு சக்தியையும் உபயோகித்துப் பிரசாரம் செய்து பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும். அப்படிச் செய்தால்தான் அவ்விஷயத்தில் பொதுஜனங்களுக்கு மிகுந்த சிரத்தையேற்பட்டு மகத்தான பலன்களைப் பெற முடியும். ஒரு தேசத்தில் விபசாரமும், வெட்டை நோயும் பரவுவது, அத்தேசத்தின் ஆத்துமார்த்த, ஆரோக்கிய அழிவிற்கு அறிகுறி என்ற பயங்கர உண்மையைப் பொதுஜனங்களிடையே இடைவிடாது கூறி அவர்களின் மனதில் பதிய வைத்து சிறிதும் இரக்கமற்ற பரிகார முறைகளைக் கைக்கொண்டால்தான் அவைகளைத் தடுக்க முடியும். அவ்வித முறைகளை அமுலுக்குக் கொண்டு வர பல வருஷங்களாயினும், மகத்தான தியாகங்கள் செய்ய வேண்டியிருப்பினும் சோர்வடையக் கூடாது.

கிரந்தி நோயை எதிர்த்துப் போராடுவதென்பது, விபசாரம், மூட எண்ணம், துருப்பிடித்துப் போன பழக்கவழக்கங்கள், நவீன நாகரிகம், பொதுஜன அபிப்பிராயம், போலிக்கூச்சம், இவைகளையெல்லாம் எதிர்த்துப் போராடுவதேயாகும். சர்க்கார் இவ்விபரீதங்களை வெற்றிகரமாக எதிர்த்துப் போராட வேண்டுமாயின், அதற்கு இன்றியமையாத முதல் நிபந்தனை என்னவெனில், இளைஞர்களுக்கு பால்யத்திலேயே விவாகம் செய்துகொள்ள வசதிகள் அளிக்க வேண்டும். அதிக வயதாகி விவாகம் செய்து கொள்ளுவது, எவ்விதம் நோக்கினும், மானிட வர்க்கத்திற்கே இழிவை உண்டுபண்ணக் கூடிய விஷயமாகும். விபசாரத்தைத் தடுக்க பால்ய விவாகம்தான் சிறந்த ஒரு வழி.

விபசாரமானது, மானிட வர்க்கத்திற்கே ஒரு பெரும் அவமதிப்பாகும். வெறும் விவாதத்தினாலோ அல்லது தயவான முறைகளாலோ அதை ஒழித்துவிட முடியாது. விபசாரத்திற்குக் காரணமான பல தீங்குகளையும் முதலில் வேரறக் களைய வேண்டும். பால்யத்தில் விவாகம் செய்து கொள்ளாத வழக்கமும் அத்தீங்குகளிலொன்றே.

'பெரிய' இடங்களைச் சேர்ந்த தாய்மார்கள், பால்யத்தில் ஒழுங்கு தவறி திருவிளையாடல்களில் ஈடுபட்டு ஒரு முடிவிற்கு வந்தவர்கள் தங்கள் பெண்களுக்குக் கணவர்களாக வந்தால் சந்தோஷமடைவது வழக்கமாயிருக்கிறது! அதிலிருந்து ஜனங்களின் மனமானது எவ்வளவு விபரீதமான வழியில்

செலுத்தப்பட்டிருக்கிறதென்பதை அறிந்து கொள்ளலாம். அத்தகைய வீணர்களுக்குக் குறைவில்லாததால், பெண்களுக்கு அத்தகைய கணவர்களைக் கண்டுபிடிப்பதிலும் கஷ்டமெதுவுமில்லை. அப்படிப்பட்ட தம்பதிகளுக்குப் பிறகும் குழந்தைகளின் நிலைமை எவ்விதமிருக்கும் என்பது பற்றி அறிந்து கொள்வதும் கஷ்டமான விஷயமல்ல!

மற்றும் சந்தான உற்பத்தியைத் தடுக்க சகல முயற்சியுமெடுத்துக் கொள்ளப்படுகின்றது. அவ்விதமாக இயற்கை நியதிக்கே முரணாக நடந்து கொள்ளும்போது, விவாகம் என்ற ஒரு வழக்கத்தை ஏன் இன்னும் அனுஷ்டித்து வர வேண்டும்? விவாகத்தின் நோக்கமென்ன? விவாகத்திற்கும் விபசாரத்திற்கும் வித்தியாசமில்லையா? இயற்கையின் மூலாதார நோக்கமான சந்தான உற்பத்தி நிறைவேறவே, விவாகம் விதிக்கப்பட்டிருக்கிறது. அப்படியிருக்க அக்கடமையை அலட்சியம் செய்வதன் மூலம், மனித வர்க்கமானது இயற்கையின் வஞ்சத்திற்கு ஆளாகும்படி நேருமென்பதில் சந்தேகமென்ன? நாகரிக தேசங்கள் நாளடைவில் நலிந்து நசிப்பதற்கு அதுதான் காரணம். விவாகமானது மனிதனின் இறுதியான லட்சியமல்ல, மூலாதார லட்சியமான சந்தான உற்பத்திக்கும், குலம் நசுக்காமலிருக்கவும் அது ஒரு சாதனமே.

வாழையடி வாழையாகக் குலத்தை வளர்க்கும் லட்சியத்தை நிறைவேற்றும் சாதனமான விவாகம், எப்போது செய்துகொள்ள வேண்டுமென்பது மிகவும் முக்கியமான விஷயம். அத்தகைய லட்சியம் நிறைவேற பால்ய விவாகங்கள்தான் இன்றியமையாதவை. பயமறியாத, கவலையற்ற, உற்சாகம் ததும்பும் இளங்காளைகளும், கட்டுவிடாத இளம் பெண்களும்தான் ஆரோக்கியமான சந்ததிகளுக்கு ஆணிவேர்களாவர். அத்தகைய தம்பதிகளுக்குப் பிறக்கும் குழந்தைகள்தான் ஆரோக்கியத்துடனும் சோர்வடையாத, களங்கமற்ற சக்தி பெற்றும் விளங்கும்.

பால்ய விவாகத்திற்குப் பூர்வாங்கமாக பல சமுதாய முறைகளை அமுலுக்குக் கொண்டு வர வேண்டியது அத்தியாவசியம். அவ்விதமின்றி பால்ய விவாகத்தைக் கனவிலும் கருதுவதற்கில்லை. உதாரணமாக வீட்டுவசதிப் பிரச்னையையே நம் "குடியரசு" சர்க்கார் சமாளிக்கச் சக்தியற்றவர்களாயிருந்து வருகின்றனர். அதனால் பலரும் விவாகம் செய்து கொள்ள முடியவில்லை. அத்தகைய நிலைமையானது மேற்கொண்டு விபசாரம் வளருவதற்குக் காரணமாகின்றது.

பால்ய விவாகத்திற்குத் தடையாக இருக்கும் மற்றொரு விஷயமென்னவெனில், சம்பளத் திட்டத்தைக் கட்டுப்படுத்தும் மடத்தனமான முறைதான். அதாவது குடும்பத்தை ஆதரிப்பதற்குப்

கொடுக்கப்படுவதில்லை. எனவே போதுமான சம்பளம் கொடுக்கப்படுவதில்லை. எனவே பால்ய விவாகத்திற்கு வசதியான முறைகளை எடுத்துக் கொண்டாலொழிய, விபசாரத்தைத் தடுப்பதென்பது முடியாத காரியம். விபசார பிரச்னையைத் தீர்ப்பதற்கும் பூர்வாங்கமான முதல் பரிகாரம் பால்ய விவாகம்தான். அடுத்தபடியாக, அடுக்கடுக்கான மூட எண்ணங்களை ஆதாரமாகக் கொண்ட கல்வி முறையையும் சீர்திருத்த வேண்டும்.

கல்வி முறையில் அறிவு வளர்ச்சி, தேகப் பயிற்சி இவ்விரண்டிற்குமுள்ள ஸ்தானங்களை நிர்ணயிக்க வேண்டும். ஆரோக்கியமான சரீரமுள்ளவர்களுக்குத்தான் ஆரோக்கியமான மனமிருக்க முடியுமென்ற உண்மையை, நமது கல்வி முறையானது முற்றிலும் அலட்சியம் செய்வதாயிருக்கிறது. யுத்தத்திற்குமுன் அவ்விஷயமாக ஜெர்மனியில் எவருமே கவனம் செலுத்தியதாகத் தெரியவில்லை. தேசத்தின் உயர்விற்கு அறிவு வளர்ச்சி மாத்திரம் போதுமென்று கருதி தேகப் பயிற்சியை அறவே அலட்சியம் செய்துவிட்டார்கள். அத்தவற்றின் பலன், நாம் எதிர்பார்த்ததைக் காட்டிலும் சீக்கிரமாகவே ஏற்பட்டுவிட்டது. வாழ்க்கைப் போராட்டத்தில் அறிவைக் காட்டிலும் சரீர பலம்தான் முக்கியமென்ற உண்மையை அவர்கள் மறுத்துவிட்டதால், அறிவாளிகள் கோழைகளாயினர். மற்றும் தேகப் பயிற்சியை அலட்சியம் செய்வதால், இளைஞர்களின் மனதில் ஒழுங்கீனமான எண்ணங்களேற்படுகின்றன. தேகப் பயிற்சி பெற்று திடசாலிகளாக இருக்கும் யுவர்களுக்குத்தான், பெண் சம்பந்தமான இச்சையைக் கட்டுப்படுத்தும் சக்தி ஏற்படுகின்றது. தேகப் பயிற்சிக்கு முக்கிய ஸ்தானமளிக்காத எக்கல்வி முறையும் சிறந்த முறையாகாது. தவிர, ஒரு பெண்ணிடமிருந்து ஆரோக்கியமுள்ள ஓர் யுவன் எதிர்பார்க்கும் இன்பங்களுக்கும், பிஞ்சில் பழுத்த ஒரு கோழை எதிர்பார்க்கும் இன்பங்களுக்கும், மிகுந்த வித்தியாசமுண்டென்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. எனவே நம் கல்வி முறையானது, சிறுவர்கள் தேகப் பயிற்சி செய்ய பூர்ண அவகாசமளிக்கும் விதத்தில் அமைக்கப்பட வேண்டும். தெருக்களில் திரிந்து கொண்டும், சினிமாக்களுக்குச் சென்று கொண்டுமிருக்க சிறுவர்களுக்கு உரிமையில்லை. அவர்கள் தினசரி தங்களுடைய அலுவல் முடிந்ததும், சரீர பலத்தை அபிவிருத்தி செய்வதற்கான பயிற்சிகளில் ஈடுபட வேண்டும். சரீரத்தில் சக்தியைப் புகுத்தாது மண்டையில் புத்தியைப் புகுத்துவதால் மாத்திரம் பலனேற்பட்டுவிடாது. சரீர பலத்தை அபிவிருத்தி செய்து கொள்ள வேண்டியது அவரவர் இஷ்டம் என்று நினைப்பதும் தவறாகும். ஏனெனில் எதிர்கால சந்ததிகளுக்கு கஷ்டத்தை உண்டுபண்ணும் பாவத்தைச்

செய்ய எவருக்கும் உரிமையில்லை என்பதை சர்க்கார் உணர்ந்து கொள்ள வேண்டும். சினிமா சாலைகள், நாடக சாலைகள் முதலியவிடங்களில், இளைஞர்களின் மனதில் காமத்தையும், கெட்ட எண்ணங்களையும் உண்டுபண்ணக் கூடிய விளம்பரங்கள் தென்படுகின்றன. அவைகளின் காரணமாக இளைஞர்களுக்கு சீக்கிரத்தில் கிழட்டுத்தனம் வந்து விடுகின்றது. அவர்களை துர்வியாதிகள் ஆட்கொண்டு விடுகின்றன. பெரிய நகரங்களிலுள்ள விபசாரிகள் யுவர்களுக்குக் காம இச்சையை மூட்டி, அவர்களைக் கெடுத்து குட்டிச் சுவராக்கி சரீர பலமும் மூளை பலமும் குன்றி சீரழியும்படி செய்து விடுகிறார்கள். 14, 15 வயது சிறுவர்கள் அத்தகைய விபரீதங்களில் மூழ்கி மதிமயங்குவது அடிக்கடி நீதிமன்றங்களில் வரும் வழக்குகளிலிருந்து நன்கு தெரிகிறது. ஒரு குறிப்பிட்ட வயதிற்குள் சிறுவர்கள் சிற்றின்ப மர்மங்களையறிய இடமே கொடுக்கக் கூடாது. நாடகம், கலை, இலக்கியம், பத்திரிகைகள் முதலிய அனைத்தையும் தேசிய க்ஷேமத்திற்குற்றவாறு அமைக்க வேண்டும். அவ்விதம் அமைப்பதை ஆட்சேபிப்பவர்கள் தேசத்துரோகிகளாவர். தேச க்ஷேமத்திற்கு முரணான எதிலும் தலையிட சர்க்காருக்கு உரிமையுண்டு. அவ்வாறு தலையிடுவது தனி நபரின் அல்லது ஜனங்களின் சுதந்திரத்தை அபகரிப்பதாகுமென்பது அர்த்தமற்ற கூக்குரல் மாத்திரமல்ல, அனர்த்தத்தையும் கொடுக்கக் கூடியதாகும். அவ்விபரீதச் சுழலிலிருந்து சிறுவர்களைக் காப்பாற்றாவிடில், எதிர்கால சந்ததிகளின் சரீரமும், ஆத்துமாவும் அதோகதியாகி விடும். தனி நபரின் சுதந்திரத்தைக் காட்டிலும் தேசத்தின் க்ஷேமம் மிகமிக முக்கியமானதென்பதை நாம் மறந்துவிடக் கூடாது.

மேலே குறிப்பிட்ட சீர்திருத்த முறைகளையெல்லாம் எடுத்துக் கொண்ட பின்தான், முன்கூறிய நோய்களையொட்டி வைத்திய முறைகளைக் கைக்கொள்வதன் மூலம் பலனேற்படும். அதிலும் அரைகுறையான முறைகளுடன் திருப்தியடைந்து விடக்கூடாது. தற்போதைய சந்ததிகளையும், எதிர்கால சந்ததிகளையும் அந்நோய்களிலிருந்து பாதுகாக்க வேண்டுமாயின், கடுமையான, தயவு தாட்சண்யமற்ற முறைகளை அமுலுக்குக் கொண்டு வந்துதான் தீரவேண்டும். லட்சக்கணக்கானவர்கள் க்ஷேமமடைவதற்காக, சிலர் கஷ்டத்திற்குள்ளாவதைப் பொருட்படுத்தக் கூடாது. ஒருவருடைய கஷ்டத்தைக் கண்டு சகியாது நூற்றுக்கணக்கானவர்களுக்கு அழிவேற்படும்படி செய்வது போலி ஜீவகாருண்யமாகும். நோயாளிகள் மேன்மேலும் ரோகிகளான சந்ததிகளை உண்டுபண்ணுவதற்கு அனுமதிக்கவே கூடாது. தீரா வியாதிகளால் கஷ்டப்படுவோரை ஒதுக்கி வைத்துவிட வேண்டும். அந்த துர்ப்பாக்கியர்கள் விஷயத்தில்

மிருகத்தனமான முறையைக் கைக்கொள்வதும் தவறாகாது. ஏனெனில் அவ்விதம் செய்வது எதிர்கால சந்ததிகளின் ஆயிரக்கணக்கான தலைமுறைகளுக்கு ஒரு வரப்பிரசாதமாக அமையுமென்பதை நாம் மறந்துவிடக் கூடாது. கிரந்தி நோயையும் அதன் சிநேகிதமான விபசாரத்தையும் எதிர்த்துப் போராடுவது மானிட வர்க்கத்தின் பிரமாண்ட கடமைகளிலொன்றாகும். அவ்விரண்டும் ஒழிந்தால், மனித வர்க்கத்தை ஆட்டி வரும் இதர பல தீங்குகளும் ஒழியும். கிரந்தியானது சரீர சம்பந்தமான நோய் மாத்திரமல்ல, சம்பந்தப்பட்டவர்களின் ஒழுக்க, சமுதாய, வர்க்க உணர்ச்சிகளின் அழுகிப் போன தன்மையையும் அது குறிக்கின்றது. சோம்பேறித்தனம் காரணமாகவோ அல்லது கோழைத்தனம் காரணமாகவோ அவ்வித தீவிர முறைகளை எடுத்துக் கொள்ளாவிடில், இன்னும் 500 வருஷங்களுக்குப் பின் மானிட வர்க்கத்தின் நிலைமை பரிதாபகரமாகி விடும். பின்னர் மானிடர், கடவுளின் பிரதிபிம்பமாக இருப்பதற்குப் பதிலாக, சரீர பலமும் மனோ பலமும் குன்றிய சைத்தானின் பிரதிபிம்பமாகி விடுவர்!

ஜெர்மனியில் அந்நோய்களைத் தடுக்க தீவிர முறைகளெதுவும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. விபசாரிகளை வைத்திய பரிசோதனை செய்து கட்டுப்படுத்தி வருகின்றார்கள். நோயுள்ளவர்களை ஆஸ்பத்திரிகளுக்கு அனுப்புகின்றார்கள். எனினும் வெளித் தோற்றத்திற்கு குணமடைந்தவர்கள் போல் தென்பட்டதும் மீண்டும் மானிட வர்க்கத்தை வேட்டையாட அவர்களைத் திருப்பியனுப்பி விடுகிறார்கள். துர் வியாதியால் பீடிக்கப்பட்டவர்கள் பூர்ண குணமடையாது சம்போகம் செய்வார்களாயின் தண்டிக்கப்படுவார்களென சட்டமிருக்கிறதெனினும், அதை அமுலுக்குக் கொண்டு வருவது சுலபமான விஷயமல்ல. முதலாவதாக, தங்கள் ஆரோக்கியத்தைக் கெடுத்த ஆடவர்களுக்கு விரோதமாக கோர்ட்டில் சாட்சியம் கூற பெண்கள் நாணத்தைவிட்டு முன்வரமாட்டார்கள். மற்றும் தங்கள் சொந்தக் கணவன் மூலமே வியாதி ஏற்பட்ட பெண்கள் அவர்களுக்கு விரோதமாக சாட்சியம் கூற முன்வருவார்களா! ஆடவர்களுக்கோ, அவர்கள் குடித்துவிட்டால் தாங்கள் எந்த 'அழகி'யுடன் சம்போகம் செய்து சரக்கை வாங்கிக் கொண்டோமென்பதுகூட தெரிவதில்லை. நோய் பிடித்த 'அழகிகள்' தங்கள் அபீஷ்டம் நிறைவேற அத்தகைய குடிகார 'மன்மதர்களையே' விரும்புகின்றனர்! இந்த விபரீதங்கள் பர்லின், மியூனிச் போன்ற நகரங்களில் மிகவும் சகஜமாக நடந்து வருகின்றன. இதரவிடங்களிலிருந்து இந்நகரங்களுக்கு வருவோர் நகர வாழ்க்கையில் சொக்கி, விபசாரிகளின் வலையில்

வெகுகாலமாக வீழ்ச்சியடைந்து வருகின்றார்கள். எனவே மேலே குறிப்பிட்ட தீவிர முறைகளின்றி சட்டத்தினால் மாத்திரம் அதைத் தடுப்பதென்பது முடியாத காரியம். இப்பிரச்னை எவ்வளவு தூரம் பரவியிருக்கிறதென்ற புள்ளி விவரங்களைக் கவனிக்க வேண்டியதவசியம். மற்றும் சென்ற ஒரு நூற்றாண்டில் அது எத்துணை அதிகமாகியிருக்கிறது, இன்னும் மேற்கொண்டு எவ்வளவு தூரம் பரவ இடமிருக்கிறதென்பதையும் ஆராய்ச்சி செய்ய வேண்டும். விபசாரத்தினால் சமூகம் எவ்வளவு சீரழிகின்ற தென்பதை அறிந்து கொள்வோர் நடுநடுங்காமலிருக்க முடியாது.

தன்னுடைய ஆரோக்கியத்திற்கு அழிவை உண்டாக்கும் ஓர் ஆபத்தைத் தடுத்துப் போராடும் தைரியம் ஒருவருக்கில்லாவிடில், போராட்டம் நிறைந்த இவ்வுலகில் வாழ அத்தகையோர் தகுதியற்றவரென்றே முடிவு செய்ய வேண்டும். மேலே குறிப்பிட்டபடி சரீர சம்பந்தமான விபசாரம் ஒருபுறம் தாண்டவமாடியதுபோல், மற்றொருபுறம் கலாசார சம்பந்தமான விபசாரமும் தாண்டவமாடி வந்தது. உதாரணமாக நாடகசாலைகளுக்கு வெளியில் 'வயது வந்தவர்களுக்கு மாத்திரம்' என்ற விளம்பரம் காட்சியளிப்பதுண்டு. இளைஞர்களுக்கு அறிவைப் புகட்ட வேண்டிய ஸ்தாபனங்கள் அவ்விதம் அவர்களைக் குட்டிச்சுவராக்க துஷ்பிரயோகம் செய்யப்பட்டன. அத்தகைய விளம்பரத்தை ஜெர்மன் பேரறிஞர்களான ஷில்லரோ அல்லது கீதேயோ பார்த்திருந்தால் எத்துணை வெறுப்படைவார்கள்? ஆனால் மேலே குறிப்பிட்ட நவீன ஜெர்மன் கலாவீரர்களுக்கு ஷில்லர், கீதே, ஷேக்ஸ்பியர் முதலியோரைப் பற்றிக் கவலை எதற்கு!

நவீன நாகரிகமென்பதும், புரட்சி என்பதும் பழையன அடியோடு கழிக்கப்பட்டு புதியன புகுத்தப்படுவதல்ல. அவ்விதம் செய்வது மனுஷ்ய சாத்தியமான காரியமுமல்ல. அத்தகைய கொள்கையை அனுஷ்டிக்கும் பட்சத்தில் முன்னேற்றத்திற்கே இடமிராமற்போய் விடும். மானிடவர்க்க முன்னேற்றமானது காலக்கிரமத்தில் படிப்படியாக ஏற்பட்டதேயன்றி திடீரென்று நிர்மாணிக்கப்பட்டதல்ல, அவ்விதம் நிர்மாணிக்கவும் முடியாது. எனவே நாகரிகம், புரட்சி இவைகளின் தத்துவமென்னவெனில், வெகு காலமாக நிர்மாணமாகி வரும் மாளிகையிலுள்ள தகுதியற்ற பாகங்களையகற்றி விட்டு, அப்பாகத்தைச் சீர்திருத்தி மேற்கொண்டு நிர்மாண வேலையைத் தொடர்ந்து செய்வதுதான்.

ஆனால் ஜெர்மனியிலோ உண்மையான புராதனப் பெருமை வாய்ந்தவை எல்லாம் இழிவுபடுத்தப்பட்டன. ஒருவரின் இழிகுணமும், புன்மதியும் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அவர் நம்

முன்னோரின் பெருமைகளை இழிவுபடுத்துவதும், வெறுப்பதும், அவைகளின் மீது துவேஷங் கொள்வதும் அதிகமாகும். தங்களால் எதுவும் செய்ய முடியாத கபோதிகள்தான், புராதனப் பெருமைகளையும், உயர்ந்தோரையும் தூற்றுவர். ஏனெனில் அவ்விதம் செய்தாலொழிய அவர்களுக்கு இவ்வுலகில் பிழைப்பில்லை. எவ்வித பெருமையுமற்ற பதர்கள் தான், மானிட வர்க்கத்திற்கு அணுவளவும் ஊழியம் செய்யும் சக்தியும், ஆற்றலுமற்ற வீணர்கள்தான், புராதனச் சிறப்பையெல்லாம் தூற்றிக் கொண்டு காலங்கழிப்பர். ஒவ்வொரு தலைமுறையைச் சேர்ந்தவர்களும் தங்களுக்கு முன்னிருந்த தலைமுறையினர் சாதித்தவைகளை எல்லாம் நிராகரித்து வருவார்களாயின், பின்னர் மானிடவர்க்கமே முன்னேற்றமின்றி ஸ்தம்பித்து விடும்.

ஜெர்மன் கலாசாரத் துறைகளில் போல்ஷிவிக் கொள்கை புக ஆரம்பித்ததும் ஜெர்மனியின் க்ஷீணதசைக்குக் காரணமாக அமைந்தது. ஜெர்மன் நகர ஜனங்களுக்குத் தாங்கள் வாழும் அந்நகரங்களிடம் பற்றுதலில்லை. சிற்பச் சிறப்பு போன்ற கலாசாரப் பெருமையற்ற நகரங்கள்பால் ஜனங்களுக்கு எவ்விதம் பாசமிருக்க முடியும்? ஜெர்மனியிலுள்ள பெரிய நவீன நகரங்களில் அவைகளின் பெருமையை வெளிப்படுத்தக் கூடிய சிறந்த ஞாபக சின்னங்களில்லை. ஆனால் அதற்குமுன் ஒவ்வொரு புராதன நகரிலும் அவ்வித ஞாபக சின்ன நிர்மாணங்களிலிருந்து வந்தன. இப்போது பெரிய நகரங்களில் ஜனங்களின் தொகைதான் பெருகி வருகின்றதேயொழிய நகரங்களின் பெருமையைக் குறிக்கும் கட்டிடங்களால் பலனில்லை. சமூகத்தின் பெருமையையும் தேசத்தின் பெருமையையும் நிரந்தரமாக வெளிப்படுத்தக் கூடிய பொதுக் கட்டிடங்களிருக்க வேண்டும்.

இடிந்து பாழடைந்து கிடக்கும் புராதனக் கட்டிடங்கள் இன்றும் நம் கண்களுக்கு விருந்தளித்து, பரவசத்தை உண்டுபண்ணுகின்றன. அவையெல்லாம் அன்று வியாபார மாளிகைகளாக இருந்தவையல்ல, இறைவன் கொலுவிருந்த கோவில்களும், சர்க்கார் காரியாலயங்களும், இதர பொதுக் கட்டிடங்களுமேயாகும். சிற்பச் செல்வம் நிறைந்த அக்கட்டிடங்களுக்குத் தனி நபர் எவரும் சொந்தக்காரரல்ல, மகாஜனங்கள் தான் சொந்தக்காரர்களாக இருந்தார்கள். சர்க்காருக்குச் சொந்தமானது சமூகத்திற்குச் சொந்தமானதே.

ஆனால் ஜெர்மனியில் இன்றைய நிலைமை என்ன? பர்லினையே எடுத்துக் கொண்டாலும்கூட, வர்த்தக, நிதி சம்பந்தமான கட்டிடங்களுக்கும் சர்க்கார் கட்டிடங்களுக்குமுள்ள ஏற்றத்தாழ்வைக் கண்டு வெட்கித் தலைகுனிய வேண்டியிருக்கிறது. சர்க்கார் கட்டிடச் செலவுகளுக்கு அனுமதிக்கப்படும் தொகையோ

சொற்பம். அத்தொகையைக் கொண்டு பலமான, நிரந்தரமாக தேசத்தின் பெருமையை விளக்கக் கூடிய கட்டிடங்களை எவ்வாறு நிர்மாணிக்க முடியும்? ஒரு யுத்தக் கப்பலின் நிர்மாணச் செலவில் பாதித் தொகைகூட ஜெர்மன் பார்லிமெண்டு கட்டிடங்களுக்காகச் செலவிடப்படவில்லை! பல நூற்றாண்டுகள் வரை பலமாக இருக்க வேண்டிய அக்கட்டிடங்களை அவ்விதமா நிர்மாணிப்பது! பார்லிமெண்டின் உட்புறத்தை அலங்கரிக்கும் விஷயமாக கற்களை உபயோகிக்க வேண்டுமென்பதை ஆட்சேபித்து, அதற்குப் பதிலாக சுண்ணாம்பையே உபயோகிக்க வேண்டுமென பார்லிமெண்டு மேல்சபை தீர்மானித்தது. ஆனால் அதன் சரித்திரத்திலேயே பார்லிமெண்டு தகுதியான ஒரு முடிவைச் செய்தது அந்த ஒரு தடவைதான். ஏனெனில் பார்லிமெண்டில் வீற்றிருப்பவர்களின் களிமண் மூளைக்கு கற்சுவர்களைக் காட்டிலும் மண் சுவர்கள்தான் பொருத்தமென்று அவ்விதம் தீர்மானிக்கப்பட்டது போலும்! 41973

மற்றத் துறைகளைப் போல் மத விஷயங்களிலும் அத்தகைய சீர்குலைவு பரவியது. ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் ஏராளமானவர்களை கிறிஸ்துவ மதத்தில் மாற்றுவதற்காக ஸ்தாபனங்களிருந்து வருகையில், ஐரோப்பா அம்மதத்திலிருந்து கோடிக்கணக்கானவர்களை இழந்து வந்தது. மதத்தில் அவர்களுக்கு நம்பிக்கை குறைந்ததால், வாழ்க்கையைக் கற்பனை செய்து கொள்வதும் முடியாத காரியம். ஏனெனில் ஒரு தேசத்திலுள்ள சகலரும் தத்துவ ஞானிகளாக இருப்பதென்பது முடியாத காரியம். சாதாரண ஜனங்களின் ஒழுக்க வாழ்க்கைக்கு மத நம்பிக்கைதான் அஸ்திவாரம். ஜனங்களை நேர்பாதையில் செலுத்த மத நம்பிக்கைக்கு ஈடு வேறு எதுவுமேயில்லை. கட்டிடங்களிராவிடில் எவ்விதம் சர்க்காரில்லையோ, அதுபோலவே நம்பிக்கையின்றி மதமில்லை. அந்த நம்பிக்கையை, தர்க்க சாஸ்திரத்தின் மூலமோ அல்லது விஞ்ஞான சாஸ்திரத்தின் மூலமோ ஆராய முற்படுவது அர்த்தமற்ற காரியம். சில லட்சக்கணக்கானவர்களின் சீரிய வாழ்க்கை, பகுத்தறிவை ஆதாரமாகக் கொண்டு உருவடையலாம். ஆனால் கோடிக்கணக்கான பாமரர்களின் வாழ்க்கை, மத நம்பிக்கையின் மூலம்தான் உருவாக முடியும். மதத்திலுள்ள சில குறைகளை எடுத்துக் கொண்டு, மதத்தை மதிப்பிடக் கூடாது. மதத்தை ரத்து செய்துவிட வேண்டுமென மடையர்களும், அயோக்கியர்களும்தான் கூறுவார்களேயன்றி, நியாயபுத்தி படைத்தவர்களும், சமூக க்ஷேமத்தில் சிரத்தை கொண்டவர்களும் கூற மாட்டார்கள். எனினும் மதத்தின் தற்போதைய அதிருப்திகரமான நிலைமைக்கு சம்பந்தப்பட்ட சிலர்தான் காரணஸ்தர்களாவர். அவர்கள் செய்த தவறுக்காக மதத்தையே

குறைகூறுவது எவ்விதம் நியாயமாகும்? மதத்திற்கும் விஞ்ஞானத்திற்கும் ஏற்பட்டுள்ள போராட்டத்திற்கும் அவர்கள்தான் காரணஸ்தர்கள். மதத்தின் பலன் கண்களுக்குத் தெரியாதது, விஞ்ஞான பலனோ கண்களுக்குத் தெரியக் கூடியது. மதத்தின் பலனைக் காண ஆழ்ந்த ஆராய்ச்சியும், அறிவும் வேண்டும், விஞ்ஞான பலன் பாமரரின் கண்களுக்கும் நிதர்சனமாகத் தெரியக் கூடியது. அறிவை உபயோகித்து ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யாத சோம்பேறிகள்தான் மதத்தை இழிவுபடுத்துவர் மற்றும் ஜன சமூகத்தைச் சீர்குலைக்க விரும்பும் துரோகிகளுக்கும், மதத்தை இழிவுபடுத்துவதுதான் சுலபமாக வெற்றியைக் கொடுக்கக் கூடிய ஓர் ஆயுதமாகும்! அரசியல் நலன்கள் அல்லது வர்த்தக நலன்களுக்காக மதத்தை இழிவுபடுத்துவதுதான் சமூகத்திற்கு எல்லையற்ற பாதகத்தை விளைவிக்கும். பணத்திற்காகவும் பதவிகளுக்காகவும் மதம் மாறும் பதர்களும், மதத்தைத் தூற்றும் பதர்களுமுளர்.

யுத்தத்திற்கு முன் ஜெர்மனியில் கிறிஸ்துவ மத நம்பிக்கை குறைந்ததற்குக் காரணமென்னவெனில், அரசியல் கட்சிகள் தங்கள் சுயநலத்திற்காக மதத்தை இழிவான முறையில் உபயோகித்ததுதான். அதனால் சிலருக்கு பார்லிமெண்டில் ஸ்தானங்கள் கிடைத்தன. என்றாலும், அதன் விளைவாக மதத்தின் பெருமை குன்றியது. உயர்ந்த சம்பிரதாயங்களும், ஒழுக்கமும் ஆட்டங்கண்டன.

மேலே குறிப்பிட்ட சீர்குலைவு அரசியல் துறையையும் ஆட்கொள்ளாது விடவில்லை. அப்போதைய அரசியல் தலைவர்களுக்கு சுய அறிவு சூன்யமாக இருந்தது. அத்துடன் மமதையால் அவர்கள் பிறர் கூறுவதையும் கேட்பதில்லை. ஜெர்மனியின் பலவீனத்திற்கு பார்லிமெண்டு "திலகமாக" விளங்கியது! கோழைத்தனம், பொறுப்பையேற்க பயம் - இவ்விரு குணாதிசயங்களும் அங்கத்தினர்களிடம் பொருந்தியிருந்தன! தேசத்திற்குப் பலமளிக்க வேண்டிய பார்லிமெண்டு, தேசத்தின் நாசத்திற்கான ஒரு பாசக் கயிறாக அமைந்தது! ஜெர்மன் உள்நாட்டு விஷயங்களிலும் சரி, வெளிநாட்டு விஷயங்களிலும் சரி, பார்லிமெண்டு படுமோசமாக நடந்து கொண்டது. பார்லிமெண்டு அங்கத்தினர்கள் அரைகுறையான முறைகளுடன் திருப்தியடைந்து ஜெர்மன் ராணுவத்தைப் பற்றி அபாண்டமான புளுகுகளைக் கூறியதன் காரணமாக, லட்சக்கணக்கான ஜெர்மன் இளைஞர்கள் போர்க்களத்தில் மடிந்தனர், ஜெர்மன் ஜனங்களும் சுதந்திர யுத்தத்தில் தோல்வியடைந்தனர். பார்லிமெண்டின் கோழைத்தனத்தை தளபதி லூடன்டார்ப் எவ்வளவோ எதிர்த்துப் போராடியும் கூட, துரதிர்ஷ்டவசமாக அவரது

முயற்சி வெற்றி பெறவில்லை. பொறுப்பற்றவர்களின் அலட்சிய புத்தியால் லட்சக்கணக்கானவர்கள் பலியாயினர், ஜெர்மனி செய்த தியாகங்கள் வியர்த்தமாயின. ஏராளமானவர்கள் அங்கஹீனர்களாயினர், தேசம் மானமிழந்து வெட்கித் தலைகுனிய நேர்ந்தது. சுவர்க்கத்தை நரகமாகவும், நரகத்தைச் சுவர்க்கமாகவும் சித்தரிப்பதில் கைதேர்ந்த யூதப் பிரசாரகர்களே ஜெர்மனியின் வீழ்ச்சிக்கு மூலபுருஷர்கள்.

ஜனங்களிடையே பொறுப்பு உணர்ச்சி மறைந்து, எவ்வித பொறுப்பையும், ஏற்றுக்கொள்ளாது நழுவும் பழக்கம் எங்கணும் பரவி வருகையில், ஜெர்மனிக்கு கௌரவத்தையும், பெருமையையும் அளித்த ஓர் அம்சம் ராணுவந்தான். ஒரு கொள்ளை நோயைப் போல் கோழைத்தனம் நாடெங்கும் பரவி விடுமோவென்ற பீதியேற்பட்டது. சமூகத்தின் க்ஷேமத்திற்காக சொந்த நலன்களைத் தியாகம் செய்வது அசட்டுத்தனமென்று கருதப்பட்டு வந்த சமயத்தில், கோழைத்தனத்தை அகற்றி, அஞ்சா நெஞ்சமும் ஆண்மையும், மகத்தான பொறுப்பை பயமின்றி வகிக்கும் ஆற்றலும் ராணுவத்தின் மூலம்தான் பலருக்கும் உண்டாயின. தங்களுடைய சொந்த நலன்களைப் பாதுகாத்துக் கொள்வோரை புத்திசாலிகளென்று நினைத்து வந்த சமயத்தில், சர்வதேச சகோதரத்துவமென்ற போலிக் கொள்கையின் மூலம் ஜெர்மனி கதிமோட்சமடைய முடியாதென்பதையும், அதன் கதிமோட்சமானது ஜெர்மானியர்களின் பலத்தையும் ஒற்றுமையையும் தான் பொறுத்திருக்கிறதென்பதையும் ஜெர்மானியர்களுக்குக் கற்பித்ததும் ராணுவம்தான். பேராசையும் சுயநலமும் வாழ்க்கையின் சகல துறைகளையும் பாழ்படுத்தி வந்தபோது, தேசத்திற்காகவும், தேசத்தின் கௌரவத்திற்காகவும் உயிரையும் தியாகம் செய்யும் ஆற்றலையுண்டு பண்ணியதும் ராணுவம்தான். பெரும்பான்மையோர் என்ற ஜனநாயகப் பகட்டை எதிர்த்து தனி நபர்களின் யோக்கியதாம்சங்களில் அதிக நம்பிக்கையுண்டு பண்ணிய பெருமை ராணுவத்திற்கே உரியதாகும். ஒருங்கே சரீர பலமும் மனோபலமுமுள்ள உண்மையான ஆடவர்களை உருவாக்கியதும் ராணுவமே. ராணுவத்தில் சேர்ந்த இளைஞர்களின் சரீரங்கள் எஃகுபோல் கெட்டியாயின. நடையின் ஒய்யாரத்திலிருந்தே ராணுவப் பயிற்சி பெற்ற இளைஞர்களின் பெருமையை அறிந்து கொள்ள முடிந்தது. ஜெர்மனியின் சுதந்திரத்திற்கும், தற்காப்பிற்கும் ராணுவம்தான் அசைக்க முடியாத ஓர் அரணாக இருந்தது. அதனால் ஜெர்மன் விரோதிகளுக்கும், ஜெர்மனிக்கும் பாதகம் நினைத்த துரோகிகளுக்கும் ஜெர்மன் ராணுவத்தின் மீது அடக்க முடியாத பொறாமையும், துவேஷமுமேற்பட்டன.

பழைய ஜெர்மன் சாம்ராஜ்யத்தின் ஆச்சரியகரமான பலத்திற்கும், சக்திக்கும் முடியரசு, ராணுவம், சிவில் சர்வீஸ் இவைதான் காரணம்; பார்லிமெண்டு சபையினரின் பிதற்றல்களும், சட்டங்களின் மிரட்டல்களுமல்ல. தவிர மிரட்டலாலும், பயங்கர ஆட்சி முறையாலும் எந்த சர்க்காரும் நீடிக்க முடியாது. நிர்வாகிகளின் அந்தரங்க சுத்தியிலும், திறமையிலும் ஜனங்களுக்கு நம்பிக்கையேற்பட வேண்டும். எந்த சர்க்கார் முறையும் நீடிப்பதற்கு அந்த நம்பிக்கைதான் உறுதியான அஸ்திவாரமாகும். மற்றும் வர்க்கப் பிரச்னை அசட்டை செய்யப்பட்டதும், ஜெர்மனியின் வீழ்ச்சிக்கு மூலாதாரமான ஒரு காரணம்.



## குறிப்பு

• 'ரோமியர்களின் உதாரணம்' என்று ஹிட்லர் கூறியிருப்பது சரித்திப் பிரசித்தமானஇருசம்பவங்களைக்குறிக்கின்றது.1.சுமார்2350ஆண்டுகளுக்கு முன்காலியர்கள்ரோம்மீதுவெற்றிகரமாகபடையெடுத்துவந்தபோதுரோம் செனெட் சபையினர் தங்கள் செனெட் சம்பிரதாய ராஜாங்க உடையுடன் கோவிலுக்குச் சென்று அங்கு எதிரிகளின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்து தங்கள் உயிர்களைத் தியாகம் செய்தனர். அவ்விதம் செய்தால் தங்கள் நகரைக் காப்பாற்ற முடியுமென அவர்கள் கருதினர். அந்த அற்புதத் தியாகமானது அப்போது பலனளிக்கவில்லையெனினும், அச்சம்பவமானது இத்தாலி தேசம் முழுதும் தலைமுறை தலைமுறையாக பிரமாத தேசாவேசத்தை உண்டுபண்ணி எதிர்கால சந்ததிகள் மகத்தான காரியங்களைச் சாதிப்பதற்கான மனோபலத்தையும், ஆத்தும பலத்தையும் அளித்தது. 2. சுமார் 2180 ஆண்டுகளுக்கு முன் கான்னீ என்றவிடத்தில் ரோமியர்கள் தோல்வியடைந்தனர். ரோமிய தளபதியான வாரோ என்பாரே பெரிதும் அத்தோல்விக்குப் பொறுப்பாளி. அப்படியிருந்தும் அவர் இறுதிவரை ரோடி விட்டு ரோம் நகருக்குத் திரும்பி வந்ததற்காக அவருக்கு வந்தனமளித்தனர். அச்செய்கையானது தேசத்திற்கும், ராணுவத்திற்கும்எல்லையற்றஒருபுதியசக்தியையூட்டியது.அதன்பலனாக ரோமியர்கள், வெற்றிபெற்ற பகைவர்களிடம் சமாதானம் செய்துகொள்ள மறுத்து விட்டனர்.



# 11. வம்சமும் ஜனங்களும்

வாழ்க்கையின் பாதையோரங்களில் எல்லோர் கண்களுக்கும் புலப்படும்படியாக சில உண்மைகள் உள்ளன. அப்படியிருந்தும் அவைகளைப் பெரும்பாலோர் கவனியாது அலட்சியம் செய்து விடுகிறார்கள். தினசரி வாழ்க்கையில் தென்படும் சாதாரண உண்மைகளின் விஷயத்தில்கூட கண்மூடித்தனமாக இருக்கும் ஜனங்களுண்டு. அவைகளைச் சுட்டிக் காட்டினால் அத்தகையோர் அவைகளைக் குறித்து மிகவும் ஆச்சரியமடைகின்றனர்.

இயற்கையாகிற நந்தவனத்தில் நடந்து செல்லுவோர், சகல விஷயங்களும் தங்களுக்குத் தெரிந்திருப்பதாக கர்வமடைகின்றனர். அப்படியிருந்தும் பெரும்பாலோரும் தினசரி நிகழும் சர்வ சாதாரண உண்மையைக் கவனிப்பதில்லை. அதாவது ஒவ்வொரு மிருகமும் தன் இனத்துடனேயேதான் புணர்ச்சி செய்கிறது. ஒரு பறவை பெண் பறவையுடன்தான் சேருகின்றது. நாரை பெண் நாரையுடனேயே சேருகின்றது, எலி பெண் எலியுடன்தான் சேருகின்றது, ஓநாய் பெண் ஓநாயுடன் மாத்திரமே சேருகின்றது. இது இயற்கையின் மூலாதார நியதி. மிகவும் அபூர்வமாகத்தான் இந்த நியதியிலிருந்து வழுவும்படியான நிர்ப்பந்தம் ஜந்துக்களுக்கேற்படும். குறிப்பிட்ட ஜந்து சிறைப்பட்டு விட்டாலோ அல்லது அதற்கு வேறு இடையூறு ஏற்பட்டாலோதான் அவ்வித நிர்ப்பந்தம், அதாவது தன் இனத்தை விட்டு இதர இனத்துடன் புணர்ச்சி செய்யும்படியான நிர்ப்பந்தமேற்படும். எனினும் அது இயற்கைக்கு முரணானது. அவ்வித புணர்ச்சியின் மூலம் உண்டாகும் கலப்புப் பிறவி, மலட்டுத் தன்மை பொருந்தியதாகவோ அல்லது அதற்கு உற்பத்தி சக்தி குறைவாகவோ தானிருக்கும். அத்தகைய கலப்புப் பிறவிக்கும் அதன் சந்ததிகளுக்கும் நோயைத் தாங்கும் சக்தியோ, இயற்கையான தற்காப்பு சக்தியோ இருப்பதில்லை. எனவே கலப்பற்ற பிறவிதான் இயற்கை நியதிக்கு ஒத்ததாகும். அப்படியானால்தான் அந்தந்த இனத்தின் தேக அம்சங்களுக்கும், குறிப்பான விசேஷ சக்திகளுக்கும் பங்கம் வராமலிருக்கும். சாதாரணமாக நரி எப்போதும் நரியாகவே இருக்கிறது, வாத்து வாத்தாகவே இருக்கிறது, புலி புலியாகவே இருக்கிறது. அவைகளின் சுபாவம் மாறுவதேயில்லை. நரி வாத்திடமோ, அல்லது பூனை எலியிடமோ அன்பு காட்டுவதில்லை.

பலமற்ற ஆண் பலம் பொருந்திய பெண்ணைப் புனர்வதன் மூலம் நாளடைவில் சந்ததிகளின் பலமும் குன்றி அவை நசித்து விடக்கூடும். பலசாலிகளும், திடகாத்திரர்களும்தான் வாழ்க்கைப் போரில்

வெற்றி பெற முடியுமேயன்றி, கோழைகளும் நோயாளிகளுமல்ல. ஜந்துக்கள் விஷயத்தில் எது இயற்கை நியதியோ, அதுதான் மனித வர்க்கத்திற்கும் நியதியாகும். அதாவது உயர்ந்த வம்சத்தினர் தாழ்ந்த வம்சத்தினருடன் புணர்ச்சி செய்வதன் மூலம் காலக்கிரமத்தில் உயர்ந்த வம்சம் பலம் குன்றி நசிந்துவிடும். இதை ருஜூப்பிக்க சரித்திரத்தில் எண்ணிக்கையற்ற உதாரணங்கள் உள்ளன. உயர்ந்த கலாசாரங்களின் திலகர்களான ஆர்யர்கள் தாழ்ந்த வம்சத்தினருடன் சேர்ந்ததன் பயனாக சிறப்பு மறைந்து வீழ்ச்சியடைந்துள்ளனர். மத்திய, தென் அமெரிக்காவிலுள்ள ஐரோப்பியர்கள் பெரிதும் அங்குள்ள சுதேசிகளுடன் இரத்த சம்பந்தம் வைத்துக் கொண்டதால், அவர்களின் உயர்வு குறைந்துவிட்டது. ஆனால் வட அமெரிக்காவிலுள்ள ஐரோப்பியர்கள் அவ்வித சம்பந்தம் வைத்துக் கொள்ளாமல் சுத்தமாக இருந்ததாலேயே, இன்று அவர்கள் அமெரிக்கா கண்டம் முழுவதற்கும் எஜமானர்களாக விளங்கி வருகிறார்கள். அவர்கள் இரத்தம் சுத்தமாக இருந்து வரும் வரையில், அந்த உயர்ந்த ஸ்தானத்திலிருந்து வீழ்ச்சியுற மாட்டார்களென்பது நிச்சயம்தான். கலப்பற்ற பிறவிகள் எப்போதும் வாழ்க்கையில் உயர்ந்த ஸ்திதியிலேயே இருந்து வந்திருக்கிறார்கள். இரத்தக் கலப்பினால் உயர்ந்த வம்சத்தினரின் அந்தஸ்து குறைந்து விடுகின்றது. பின்னர் சரீர பலமும் மனோபலமும் குன்றி, நாளடைவில் ஜீவசக்தியும் உறிஞ்சப்பட்டு விடுகின்றது. அத்தகைய செய்கையானது ஆதியந்தமற்ற சிருஷ்டி கர்த்தாவிற்கே துரோகமாகும். கலப்புப் புணர்ச்சியானது இயற்கை நியதிக்கு விரோதமானதால், அப்பாவத்தில் ஈடுபடுவோர் இயற்கையின் வஞ்சத்திற்கு ஆளாகியே தீரவேண்டும். இயற்கையின் இரும்புச் சட்டத்திற்கு விரோதமாக மனிதன் எதையாவது உருவாக்கும்போதுதான், அவன் தன் வாழ்விற்கு மூலகாரணமான ஒரு நியதிக்கே முரணாக நடந்து கொள்கிறான். அவ்விதம் நடந்து கொள்ளும் மனிதன் தனக்குத்தானே அழிவிற்கான பாதையை நாடிச் செல்லுகிறானென்று கூறிவிடலாம்.

"இயற்கையை அடக்கி ஆளலாம்" என்ற யூதர்களின் சுலோகம் வெறும் பகட்டேயாகும். இயற்கையை வெல்ல மனிதனால் இதுவரை முடியவில்லை, இனியும் முடியாது. இயற்கையின் இரகசியங்களும், மர்மங்களும் எல்லையற்றவை, ஆதியந்தமற்றவை. அவைகளில் ஏதோ ஓர் அணுப் போன்ற பாகத்தைக் கண்டுபிடிப்பதில் மனிதன் வெற்றி பெற்றிருக்கிறான். அவ்விதம் கண்டுபிடிக்காத ஜீவன்களை அவன் அடக்கியாள்கிறான். எனினும் இயற்கையின் இரகசியத்தை அணுவளவு அவன் கண்டுபிடிக்கலாமேயன்றி, அவனுக்கு அவ்வாறு கண்டுபிடிக்கும்

சக்தியும், கற்பனாசக்தியுமுளதே அன்றி, சிருஷ்டி சக்தி எதுவுமில்லை. அவன் என்றென்றும் இயற்கைக்கு அடிமையாக இருந்துதான் தீரவேண்டும்.

உலகில் சமாதானக் கொள்கை நிலவவேண்டுமென விரும்புவோர், ஜெர்மானியர்கள் உலகை ஜெயிக்க உதவி புரிய வேண்டும். ஜெர்மானியர்கள் நசித்துவிட்டால் உலகில் சமாதானவாதிகள் நசித்து விட்டார்களென்றே கருத வேண்டும். மனித வர்க்கத்தின் உயர்ந்த வம்சத்தினருக்குத்தான் உலகிற்கே எஜமானர்களாக இருக்க உரிமையுண்டு. இவ்விதம் நான் கூறுவதைக் கண்டு ஜனங்கள் ஏளனம் செய்யக் கூடுமென்றாலும், இயற்கை நியதி அதுதானென்பதை யாரும் மறக்கக் கூடாது. அத்தகைய உரிமையுள்ளவர்களின் வம்சம் கலப்பற்றதாக இருக்க வேண்டும். பழங்காலத்திலிருந்த பெரும் நாகரிகங்கள் மறைந்து போனதற்குக் கலப்பு இரத்தம்தான் காரணம்.

இவ்வுலகில் வாழ விரும்புவோர் போராடத் தயாராக இருக்க வேண்டும். வாழ்க்கையே நிரந்தரமான ஒரு போராட்டமல்லவா? போராட விருப்பமற்றவர்களுக்கு இவ்வுலகில் வாழ உரிமை யில்லை. மானிட வர்க்கத்தில் மிகச் சிறந்தவர்கள் உலகை அடக்கி யாள்வதில் வெற்றி பெறுவார்களாயின் பின்னர் சமாதானமும், ஜீவகாருண்யமும் எல்லோரும் அனுஷ்டிக்க வேண்டிய அற்புதமான கொள்கைகளாக இருந்து வருவது சாத்தியம். எனினும் அவர்கள் அவ்வாறு வெற்றி பெறும் வரையில் போராட்டம்தான் இவ்வுலகில் தினசரி நியதியாக இருந்து வரும். கனவு உலகில் சஞ்சரிப்பவர்களின் கொள்கைகளால் மனிதரின் வாழ்க்கை அந்தஸ்து ஒரு காலத்திலும் உயர்ந்ததில்லை. இயற்கையின் இரும்பு போன்ற விதிகளைக் கண்டிப்பாக அனுஷ்டிப்பதன் மூலம்தான் அவர்களின் அந்தஸ்து உயர்வடைந்திருக்கிறது. எனவே முதலில் போராட்டம், பின்னர் சமாதானம் என்பதே மூலாதாரக் கொள்கையாக இருந்துவர வேண்டும்.

மானிட வர்க்கத்தின் கலாசாரங்களைக் கண்டுபிடித்த ஆதிவம்சம் அல்லது வம்சங்கள் எவை என்பது பற்றி விவாதிப்பதால் எவ்வித பலனுமேற்படாது. ஆனால் இன்றைய நிலைமை சம்பந்தப்பட்ட வரையில் மாத்திரம் அக்கேள்விக்குப் பதிலளிப்பது சுலபம். இன்று நம் கண் முன் காணும் கலாசாரம், சிற்பம், விஞ்ஞானம், தொழில் திறமை முதலியன யாவும் ஆர்யர் சிருஷ்டி சக்தியின் உற்பத்தியே. ஆர்யனின் தேஜஸ் பொருந்திய நெற்றியிலிருந்துதான் எக்காலத்தும் ஞானவொளி வீசி அந்தகாரத்தை அகற்றி வந்திருக்கிறது. எனவே அவன் மறைந்தால் அவனியை அந்தகாரம் ஆட்கொள்ளும், சில ஆயிரக் கணக்கான வருஷங்களில் கலாசாரம் மறைந்து உலகமே வெறும்

பாலைவனமாகிவிடும்.

கலாசார சிருஷ்டி கர்த்தாக்கள் - கலாசார ரக்ஷகர்கள் - கலாசார சம்ஹார கர்த்தாக்கள் - என மானிட வர்க்கத்தை மூன்று பிரிவினராகப் பிரித்தோமாயின் ஆர்யர்கள்தான் முதல் ஸ்தானம் வகிப்பார்கள். மகத்தான கலாசார மாளிகைக்கு அஸ்திவாரம் போட்டு அதன் சுவர்களையும் எழுப்பியவர்கள் ஆர்யர்கள்தான். அதன் உருவம், வர்ணம், முதலியவைதான் மற்ற தேசங்களால் தீட்டப்பட்டவை.

கலாசாரங்களும், சாம்ராஜ்யங்களும் க்ஷீணிப்பதற்குக் காரணம், இரத்தக் கலப்பும், வம்சத்தின் மாற்றும் குன்றுவதுதான். யுத்தம் காரணமாக எந்த தேசமும் அழிவதில்லை, ஆனால் எதிர்க்கும் சக்தி குறைவதால்தான் அது நாசமாகின்றது. எதிர்க்கும் சக்தி குறைவதற்குக் காரணம் இரத்தக் கலப்புதான்.

தற்காப்பு உணர்ச்சி என்பது சகல ஜந்துக்களுக்குமுள்ள இயற்கையான உணர்ச்சியாகும். மிருகங்களின் தற்காப்பு உணர்ச்சி அதனுடன் மாத்திரம் நின்றுவிடுகிறது. அதாவது மிருகங்கள் பசிக்கும்போதுதான் இரை தேடுகின்றன. தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவே போரிடுகின்றன. மனிதனோ நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் கூட தற்காப்பிற்கான முறைகளை எடுத்துக் கொள்கிறான். சிலர் தம் சொந்தப் பாதுகாப்பு, தங்களுடைய குடும்பத்தின் பாதுகாப்பு இவைகளை மாத்திரமே முக்கியமாகக் கருதுகின்றன. ஒருவன் தன் மனைவி மக்களுக்காக தான் கஷ்டத்திற்குள்ளாவதை லட்சியம் செய்யாதிருப்பதன் மூலம் தியாக உணர்ச்சியை வெளிப்படுத்துகின்றான். தன் குடும்பத்திற்காகச் செய்யும் தியாகத்தில் எல்லை குறுகியது. அந்த எல்லையைக் கடந்து செய்யப்படும் தியாகத்தின் மூலம்தான் பெரும் சங்கங்களும், சர்க்கார்களும் உருவடைகின்றன. பிறருக்காகத் தன் சொந்த நலனையும், தன் உயிரையும் கூட தியாகம் செய்வதுதான் ஆர்ய வம்சத்தின் உயர்ந்த குணம். ஆர்யனின் பெருமை அவனது அறிவினாலேற்படுவதல்ல. சமூகத் தொண்டிற்காக தன் திறமையை எல்லாம் உபயோகிக்கும் ஆற்றலை ஆதாரமாகக் கொண்டே ஏற்படுகின்றது. அதுதான் புனிதத் தன்மையுடன் கூடிய தற்காப்பு உணர்ச்சியாகும். சமூக நலன்களில் பற்றுதலின்றி, தன் சொந்தப் பாதுகாப்பிற்காக மாத்திரமே செய்யும் காரியம்தான் கொள்ளை எனப்படும். சமூக க்ஷேமத்திற்காக சொந்த நலனைத் தியாகம் செய்வது உயர்ந்த நாகரிகத்தின் முதற்படி. அத்தகைய புனிதமான உணர்ச்சி காரணமாகவே மனிதன் மகத்தான காரியங்களை நிறைவேற்ற முடிந்திருக்கிறது. பணந்திரட்டும் ஆசையற்ற ஒவ்வொரு தொழிலாளியும், ஒவ்வொரு விவசாயியும், ஒவ்வொரு ஆராய்ச்சியாளரும், ஒவ்வொரு உத்தியோகஸ்தரும் அந்த உயர்ந்த

தத்துவத்தின் பிரதிநிதிகளாவர். சமூகத்தின் க்ஷேமத்திற்காக தன் உயிரையே அர்ப்பணம் செய்வது தியாகத்தின் சிகரமாகும். தியாக உணர்ச்சியுடன் கூடிய அறிவுதான் வாசனையுடன் கூடிய ரோஜா மலர் போன்றது. தியாக உணர்ச்சியற்ற அறிவிற்கு ஆத்துமார்த்த மதிப்பில்லை. தன் சொந்த நலன்களுக்காகப் பாடுபட்டவர்களை சந்ததிகள் போற்றிப் புகழ மாட்டார்கள், சமூகத்திற்காக தங்கள் சுகத்தைத் தியாகம் செய்த வீரர்களையே சந்ததிகள் போற்றிப் பரவசமடைவர்.

யூதர்களோவென்றால், ஆர்யர்களுக்கு நேர் விரோதமானவர்கள். அவர்களைப் போல் தற்காப்பு உணர்ச்சியை அபிவிருத்தி செய்து கொண்டுள்ள ஜனங்கள் உலகில் வேறெவருமில்லை. அப்பிரிவினர் இன்றும் கூட உலகிலிருந்து வருவதே அதற்கு உதாரணம்! 2000 வருஷங்களாகியும், அவர்களின் மனப்போக்கிலும், குணத்திலும் எவ்வித மாறுதலுமேற்படவில்லை. மகத்தான புரட்சிகள் மனித வர்க்கத்தையே ஆட்டி வைத்திருக்கின்றன எனினும் யூதர்கள் மாத்திரம் அன்றிருந்த மேனிக்கு எவ்வித அழிவுமின்றி இருந்து வருகின்றனர். அவர்களுடைய தந்திர புத்தியோ, சுயநல உணர்ச்சியோ எப்போதும் போலவேயே மாற்றுக் குன்றாமல் இருந்து வருகிறது! அவர்களுக்குச் சொந்தமான கலாசாரமோ, நாகரிகமோ, ராஜ்யமோ கிடையாது. பிறரைச் சுரண்டிப் பிழைப்பதே அவர்களின் 'பிறப்புரிமை' மற்றும் உயர்ந்த கொள்கைகளுக்கும் யூதர்களுக்கும் வெகு தூரமிருக்கிறது. அதனால்தான் அவர்களுடைய அறிவானது எப்போதும் அழிவு மார்க்கத்திலேயே செல்லுகின்றது. அவர்கள் தங்களுக்கு உதவி புரியும் ஜனங்களின் உதிரத்தை உறிஞ்சும் குணமுள்ளவர்கள். அவர்களுடைய திறமையெல்லாம் பிற சமூகங்களை வஞ்சிக்கவே உபயோகிக்கப்படுகின்றது. மற்ற சமூகத்தினர் தங்களுடைய ஆழ்ந்த எண்ணங்களைச் சித்தரிப்பதற்கே பாஷையை உபயோகிக்கின்றனர். ஆனால் யூதர்களின் பாஷையோ, அவர்களுடைய ஆழ்ந்த எண்ணங்களை மறைந்து, பிறரை வஞ்சிப்பதற்கு உபயோகிக்கப்படுகின்றது. அவர்களிடையேயுள்ள இன உணர்ச்சிக்கும், ஓநாய்கள், குதிரைகள் முதலியவைகளிடையுள்ள இன உணர்ச்சிக்கும் வித்தியாசமில்லை. பொதுவான ஆபத்தேற்படும்போது அவைகளெல்லாம் ஒன்று சேர்ந்து அதை எதிர்க்கும், ஆபத்து நீங்கியதும், தனித்தனியாகப் பிரிந்து ஓடிவிடும். யூதர்களின் இன உணர்ச்சியும் அது போன்றதே. வியாபார சூழ்ச்சி, அதிக வட்டிக்குக் கடன் கொடுப்பது, பிற சமூகத்தினரின் சொத்துக்களைச் சிறிது சிறிதாக அபகரித்துக் கொள்வது, இவையெல்லாம் யூதர்களிடம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஊறி வந்துள்ள குணங்களாகும்.

பிறரைக் கெடுத்தாலன்றி தாங்கள் வாழ முடியாதென்பதை

யூதர்கள் தெரிந்து கொண்டிருப்பதால், பொது ஜன அபிப்பிராயத்தை உருவாக்கும் பத்திரிகைகளையும், தேசத்தின் செல்வ நிலைமையை உருவாக்கும் பொருளாதாரத் துறைகளையும் தங்களுடைய ஏகபோக நிர்வாகத்தின் கீழ் கொண்டுவர முயற்சித்து வெற்றி பெற்றார்கள். மற்றும் செல்வாக்குள்ள கிறிஸ்துவர்களின் ஆதரவைப் பெறுவதற்காக யூதர்கள் தங்கள் பெண்களையும் அவர்களுக்குத் தத்தம் செய்வதுண்டு. அச்சேர்க்கையின் மூலம் பிறக்கும் கலப்புப் பிறவிகள் பிற்காலத்தில் யூதர்கள் பக்கமே சேரும்! யூதர் கிறிஸ்துவப் பெண்ணை விவாகம் செய்து கொள்வது அபூர்வமான விஷயம். கிறிஸ்துவர்தான் யூதப் பெண்களை விவாகம் செய்து கொள்வர். இவ்விதம் அவர்கள் சமூகத்தின் உயர்வைச் சீர்குலைக்கவும் முற்பட்டனர். கடன் கொடுக்கும் தொகைக்கு வட்டி வாங்குவதென்ற முறையை ஆதியில் கண்டுபிடித்தவர்கள் யூதர்கள்தான். அதுபோலவேயே முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் வேற்றுமை ஏற்பட முதன்முதலாக சூழ்ச்சி செய்தவர்கள் யூதர்களே. பொருளாதாரத் துறையிலும், அரசியல் துறையிலும் உலகம் தங்களுக்கு அடிமையாக இருக்க வேண்டுமென்பதே யூதர்களின் பேராசை.

தொழிலாளர்களுக்கும் மற்றும் பாமர ஜனங்களுக்கும் நண்பர்கள் போல் பாசாங்கு செய்யும் யூதர்கள், தங்கள் சூழ்ச்சி பலித்து தங்கள் கைக்கு அதிகாரம் கிட்டியதும் தங்களுடைய சுய ரூபத்தைக் காட்டி, ஜனங்களை அடிமைகளாக்க முற்படுவார்கள். ருஷியாவில் யூதர்கள் 3 கோடி ஜனங்களைப் பட்டினி போட்டுக் கொன்றனர். தேசத்தின் க்ஷேமத்திற்கும் வளர்ச்சிக்கும் இன்றியமையாத மதம், ஒழுக்கம், கலாச்சாரம் முதலியவைகளை எல்லாம் தகர்த்து அத்தேசத்தை வீழ்த்தவே யூதர்கள் படுமோசமான தந்திரம் செய்தனர்.

எத்தேசமாயினும் அதற்கு ஏற்படும் ஒவ்வொரு தோல்வியும் எதிர்கால வெற்றிக்கு அஸ்திவாரமாகவும், எதிர்காலப் புனருத்தாரணத்திற்கு வழிகாட்டியாகவும் அமையும். மனிதனுக்கு ஏற்படும் ஒவ்வொரு கஷ்டமும் அவனுடைய சக்திக்கு ஒரு புதிய வேகத்தைக் கொடுக்க வல்லது. ஆனால் குலத்தின் இரத்தம் மாத்திரம் அசுத்தமாகி விடக் கூடாது. ஒரு சமூகத்தினரைச் சீரழித்து இழிவுபடுத்தக் கூடிய பயங்கர ஆயுதம் அதுதான். குலத்தின் இரத்தம் சுத்தமாக இருக்குமாயின் மற்றப்படி எவ்வித கஷ்டங்களையும், தோல்விகளையும் சமாளித்துப் புதிய பலமும், சக்தியும் பெற முடியும். இந்த உண்மைகளை எல்லாம் நன்குணர்ந்து அதற்குற்ற முறைகளை எடுத்துக் கொண்டாலன்றி, ஜெர்மனி க்ஷீணித்து வருவதைத் தடுக்க முடியாதென்பதையும் நாங்கள் நிச்சயமாகத் தெரிந்து கொண்டோம்.



# 12. ஜெர்மன் தேசீய அபேதவாதத் தொழிற் கட்சி

இந்த அத்தியாயத்துடன் முதல் பாகம் முடிகின்றது. எனவே, எங்கள் இயக்கத்தின் ஆரம்ப நிலைமை பற்றியும், நாங்கள் சமாளிக்க வேண்டியிருந்த பிரச்னைகள் பற்றியும் மாத்திரம் ஈண்டு சுருக்கமாகக் குறிப்பிடுகிறேன். எங்கள் கொள்கைகளைப் பற்றி விவரிக்க தனியாக ஒரு பாகம் வேண்டும். இரண்டாவது பாகத்தில் அவைகள் பற்றி விவரிக்க விரும்புகின்றேன்.

கோடிக்கணக்கான ஜெர்மானியர்கள் தங்கள் தேசீய வாழ்க்கையில் அதிதீவிரமான மாறுதல்களை விரும்புகிறார்கள் என்பது பல விதத்திலும் ருஜுவாகியிருக்கிறது. அவர்களின் அந்த அபிலாஷையானது ஆயிரம் வழிகளில் வெளியாகியிருக்கின்றது. அவர்களிடையே எங்கும் அமைதியின்மை நிலவுகிறது. பலர் உற்சாகமிழந்து திகைக்கின்றனர். வேறு பலர் ஆத்திரமும், கோபமும் கொள்கின்றனர். பலர் தேர்தலில் கலந்து கொள்ள விரும்பவில்லை. மற்றும் பலர் வெறிபிடித்த அதி தீவிரவாதிகளை ஆதரிக்கின்றனர். எனவே, அமைதியின்மை, அதிருப்தி, உற்சாகக் குறைவு முதலியவைகளால் ஆட்கொள்ளப்பட்டவர்களுக்கே எங்கள் இயக்கம் கவர்ச்சியாக இருக்க வேண்டும். அது தேசத்தில் மேலெழுந்தவாரியாக இருக்கக் கூடாது. அதன் ஆணிவேர் பாமர ஜனங்களிடையே பரவ வேண்டும்.

*2578ல் (1918)* தேசமானது இரு பாகங்களாகப் பிரிந்திருந்தது. கற்றறிவுள்ளவர்களான சிறுபான்மையோர் ஒரு பக்கமும், கோடிக்கணக்கான பாமரர்கள் மற்றொருபுறமும் இருந்தனர். அவ்விரு பிரிவினருக்கும் பரஸ்பரம் சம்பந்தமிராமலிருந்தது. பாமரர்களிடையே, அதாவது சரீர உழைப்பினால் ஜீவனம் நடத்துவோரிடையே, மார்க்ஸ் கொள்கை பரவி வந்தது. அக்கொள்கையை ஆதாரமாகக் கொண்டே அவர்களுடைய இயக்கங்களும் உருவாகியிருந்தன. மிருக பலத்தை உபயோகித்தாவது அறிவாயுத பலத்தைத் தகர்க்க அவர்கள் உறுதி கொண்டிருந்தனர். அவர்களுக்கு தேசப் பற்றுதலிராததுடன் தேச விரோதிகளின் நலன்களுக்கும் அவர்கள் ஆதரவளித்து வந்தார்கள். அப்போது ஒரு விஷயம் மிகவும் தெளிவாயிற்று. அதாவது வெளியுலகத்தை எதிர்த்து நிற்கக் கூடியவாறு நமது தேசீய பலத்தைப் புனருத்தாரணம் செய்தாலன்றி, ஜெர்மனியின் புனருத்தாரணம் அசாத்தியமான காரியமென்பதே. அவ்விதம் எதிர்த்து நிற்பதற்குற்ற அத்தியாவசியமான உபகரணம் ஆயுத பலமல்ல,

மன உறுதிதான். ஒரு சமயம் ஜெர்மனியிடம் அவசியத்திற்கு மேல் அதிகமாக ஆயுதங்களிருந்தன. அப்படியிருந்தும் அவர்களால் தங்கள் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியவில்லை. அவர்களுக்குப் போதிய உறுதியும், மனோ பலமும் இராததுதான் அதற்குக் காரணம். அவையின்றி எவ்வளவு சிறந்த ஆயுதங்களிருப்பினும் அணுவளவு பலனுமேற்படாது என்பதற்கு ஜெர்மனியின் தோல்வியே தகுந்த எடுத்துக் காட்டாகும். பின்னர் ஏற்பட்ட ஆயுத பரிகரணத்திற்கும் அத்தகைய உறுதியின்மையையும், கோழைத்தனமும்தான் காரணம். ஜெர்மனியின் சக்தியை மீண்டும் புனருத்தாரணம் செய்வது, நாம் எப்படி யுத்தக் கருவிகளை உற்பத்தி செய்வதென்பதைப் பொறுத்ததல்ல, அக்கருவிகளைத் தகுந்த முறையில் உபயோகிக்கக் கூடிய உறுதியைப் புனருத்தாரணம் செய்வதையே பொறுத்திருக்கிறது. அந்த உறுதி ஏற்பட்டுவிடுமாயின், பின்னர் போதிய ஆயுதங்களை உற்பத்தி செய்வதற்கு ஆயிரம் வழிகளிருக்கின்றன. வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம். ஒரு கோழையிடம் பல துப்பாக்கிகளிருந்தாலும் அவைகளை உபயோகிக்கும் தைரியம் அவனுக்கேற்படாது. ஆத்துமார்த்த சக்தியின்றி, ஆயுதங்களால் மாத்திரம் பலனில்லை. உயிரற்ற இரும்புக்கு உயிரைக் கொடுக்கவல்லது மனோ தைரியமே ஒழிய கோழைத்தனமல்ல.

வர்செயில்ஸ் உடன்படிக்கையின்படி நம் தேசம் நிராயுத பாணியாக இருந்து வருகிறது. நாம் அவ்விதமே இருந்து வருகிறோ மோவென்பதை ஆயிரக்கணக்கானவர்களின் கழுகுக் கண்கள் கூர்ந்து கவனித்து வருகின்றன. இந்நிலையில் நம் தேசத்தின் விடுதலைக்காக நாம் எவ்வித ஆயுத முஸ்தீபுகளையும் செய்ய முடியாதவர்களாக இருக்கிறோம். நம் தேசம் விடுதலையடைய வேண்டுமாயின், முதலாவதாக உள்நாட்டிலுள்ள உளவாளிகள டங்கிய 'படையை' அடியோடு ஒழிக்க வேண்டும். அப்படி ஒழித்த பின்னரும், காசுக்காக எதையும் செய்யும் சில பிறவித் துரோகிகள் இருந்தே தீருவார்கள். எனினும் நாம் அவர்களைச் சமாளிப்பது கஷ்டமல்ல. அரசியல் அபிப்பிராய பேதம் காரணமாக எவ்வித தேசீய புனருத்தாரண முறையையும் ஆட்சேபிக்கும் கோடிக்கணக்கானவர்களின் எதிர்ப்புதான், நமக்கு ஒரு மகத்தான முட்டுக்கட்டையாக இருந்து வருகிறது. அத்தகைய எதிர்ப்பிற்குக் காரணம் சர்வதேச மார்க்ஸ் கொள்கைதான். எனவே கோடிக்கணக்கான பாமரர்களின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டுமாயின், முதலில், அக்கொள்கையை ஒழிக்க வேண்டும். தேசத்திலுள்ள பெரும்பாலோரின் மனதிலும் ஆண்மையையும் ஆவேசத்தையும் ஊட்டினாலன்றி தேசத்திற்கு வெளியிலுள்ள விரோதிகளையோ, உள்நாட்டிலுள்ள துரோகிகளையோ

அடக்குவதென்பது அசாத்தியம். தேசம் சுதந்திரம் பெறுவதற்கு இன்றியமையாத முதற்படி பெரும்பாலோருடைய ஆதரவுதான். அரசியல் சுதந்திரமும், ஜனங்களின் கௌரவமும் நிலை நிறுத்தப்பட்டாலன்றி, கலாசார அபிவிருத்திக்கும் இடமிராமற் போய்விடும்.

1. *2579ல் (1919)* எங்கள் இயக்கத்தின் மூலாதார முதல் நோக்கம், பாமர ஜனங்களைத் தேசிய மயமாக்குவதுதானென்ற திட்டமான ஒரு முடிவிற்கு வந்தோம். அந்த லட்சியம் நிறைவேறுவதற்கு, முதலாவதாக பொருளாதாரத் துறையில் எவ்வித தியாகமும் செய்யப் பின்வாங்கக் கூடாது. முக்கியமாக தேசிய பொருளாதார அமைப்புக்கு முரணின்றி தொழிலாளர்களின் சகல கோரிக்கைகளையும் அங்கீகரிக்க வேண்டும். தேசத்தின் உயிர்நாடி பெரும்பாலான பாமர ஜனங்கள் தான். அவர்களிடையே ஐக்கியமேற்பட்டாலன்றி, பொருளாதார அபிவிருத்தியோ அல்லது முதலாளிகளுக்கு அதிக லாபமோ கிடைப்பதென்பது முடியாத காரியம். கண்மூடித்தனமும், அற்ப புத்தியும் படைத்தவர்கள்தான் இந்த உண்மையையறிந்து கொள்ளாமலிருப்பர். யுத்தத்தின்போது ஜெர்மன் தொழிலாளர் சங்கங்கள் தொழிலாளர்களின் நலன்களை வற்புறுத்தியிருக்குமாயின், தங்கள் கோரிக்கைகளையடைய தொழிலாளர்கள் வேலைநிறுத்த ஆயுதத்தை உபயோகித்திருப்பார்களாயின், அதே சமயத்தில் அவர்கள் தங்கள் நலன்களை உறுதியுடன் வற்புறுத்துவது போல் தேசத் தற்காப்பிலும் தீவிரமாக ஈடுபட்டிருப்பார்களாயின், யுத்தத்தில் நாம் ஒருபோதும் தோல்வியடைந்திருக்க மாட்டோம்.

2. பாமர ஜனங்களின் சமுதாய நிலைமையை அபிவிருத்தி செய்து தேசிய வழிகளில் அவர்களுக்குக் கல்வியளிக்க வேண்டும். அப்படியானால்தான் தேசத்தின் கலாசார வாழ்க்கையில் சகலரும் பங்கு பெறுவதற்குற்றவாறு சமுதாய நிலைமையை அபிவிருத்தி செய்ய முடியும்.

பாமர ஜனங்களைத் தேசியமயமாக்க அரைகுறையான முறைகளுடன் திருப்தி அடைந்துவிடக் கூடாது. அதிதீவிரமான முறைகளைக் கைக்கொள்ள வேண்டும். தேசீயத்தில் பலரகங் களில்லை. கலப்பற்ற தீவிர தேசீயந்தான் தேசீயமாகும். விஷத்தை விஷத்தினால்தான் முறிக்க முடியும். அதுபோல் தேசீயத்திற்கு விரோதமான காளான்களைக் கடுமையான முறைகளால்தான் களைந்தெறிவது சாத்தியம். பாமர ஜனங்கள் பண்டிதர்களல்ல, ராஜதந்திரிகளுமல்ல. பகுத்தறிவைக் கொண்டு உயர்ந்த கொள்கைகளை ஆராய்ச்சி செய்யும் ஆற்றல் அவர்களுக்கில்லை. ஒரு விஷயத்தில் அவர்களுக்கு நம்பிக்கையேற்பட்டு விட்டால், பின்னர் அந்த நம்பிக்கையை அசைப்பது முடியாத காரியம்.

எனவே அவர்களின் மனதில் உணர்ச்சியும் நம்பிக்கையுமேற்பட்டு, அவர்கள் வெறி கொண்டு செயலில் ஈடுபடும்படி செய்ய வேண்டும். அத்தகைய வெறியும் நம்பிக்கையுமே உலகில் மகத்தான புரட்சிகளை உண்டு பண்ணியிருக்கின்றன. அவ்விதம் செய்யத் தளரா உறுதி வேண்டும். அவசியமாயின், அதையொட்டி பலாத்காரத்தையும் உபயோகிக்கத் தயங்கக் கூடாது. பாமர ஜனங்களின் மனதைக் கொள்ளை கொள்ள விரும்புவோர் இந்த மர்மத்தை அறிந்து கொள்ள வேண்டும்.

4. தங்கள் லட்சியங்களை நிறைவேற்றுவதற்கான தீவிர போராட்டத்தைத் தொடர்ந்து நடத்துவதுடன், அவைகளை எதிர்க்கும் எதிரிகளை ஒழிக்கவும் திடசங்கல்பம் செய்து கொள்ள வேண்டும். ஏககாலத்தில் அவ்விரு முறைகளையும் கைக்கொண்டால்தான், இயக்கத்தின் தலைவர்கள் பொது ஜனங்களை வசீகரிக்க முடியும். சிறிதும் தளர்ச்சியுறாது அதி தீவிரமாக எதிர்ப்பவர்கள் பக்கத்தில்தான் நியாயமிருக்கிறதென்று பொது ஜனங்கள் எப்போதுமே கருதுவது வழக்கம். பலசாலிகள் வெற்றி பெற வேண்டும், பலவீனர்கள் ஒழிய வேண்டும் அல்லது பலசாலிகளுக்குப் பணிய வேண்டும். இதுதான் பொது ஜனங்களுக்கு உடன்பாடாக இருக்கும். விரோதிகள் பரஸ்பரம் கைகுலுக்கும் தத்துவத்தை அறிந்து கொள்ளும் சக்தி பாமர ஜனங்களுக்கும் இல்லை. சிறிதும் இரக்கமின்றி விரோதிகளை ஒழிப்பவர்கள் மீதுதான் அவர்களுக்குப் பிரியமேற்படும்.

5. தேச ஜனங்களின் குல இரத்தம் சுத்தமானதாக இருக்க வேண்டும். மானிடரின் சக்தி பெருகுவதும் தேய்வதும் இரத்தத்தின் சுத்தத்தையே பொறுத்ததாகும். இந்த உண்மையை அறியாதவர்களோ அல்லது சுத்த இரத்தத்திற்குக் களங்கம் ஏற்படாமல் பாதுகாப்பதில் சிரத்தை கொள்ளாதவர்களோ, காலை நக்கும் வீட்டு நாயை கொடிய மிருகங்களையும் அலறச் செய்யும் வேட்டை நாயாக்க முயற்சிப்பவருக்கொப்பாவர்! தேசீய இரத்தத்தில் வந்து கலக்கும் அன்னியக் கிருமிகளை அடியோடு ஒழித்துவிட வேண்டும். தேசத்தின் அநாகரிகத்தையும், சீர்குலைவையும் தடுக்க அவ்விதம் ஒழிக்க வேண்டியது அத்தியாவசியம். குலப்பிரச்னை திருப்திகரமாகத் தீர்ந்தால்தான் மானிட வர்க்க சரித்திரத்தையும் கலாசாரங்களையும் சகலரும் நன்கு அறிந்து கொள்ள முடியும்.

6. தொழிலாளர்களின் அந்தஸ்தை உயர்த்த வேண்டும். சகோதரத்துவத்தைக் குறித்துப் பொதுக்கூட்டங்களில் வானளாவப் பேசுவதன் மூலமல்ல, அவர்களுடைய சமுதாய, கலாச்சார வாழ்க்கை அபிவிருத்தி அடைவதன் மூலம்தான் அவர்களின் அந்தஸ்து உண்மையிலேயே உயரும். எனவே இந்த லட்சியத்தை

முக்கியமாகக் கொண்ட ஓர் இயக்கத்தில் தொழிலாளர்கள்தான் அதிகமாக இருக்க வேண்டும். இவ்வித மாறுதலை 10 அல்லது 20 வருஷங்களில் உண்டாக்கிவிட முடியாது. அதற்குப் பல தலைமுறைகளாகும். தொழிலாளர்களின் மனதில் தேசப் பற்றுதலையுண்டு பண்ணாத எந்த இயக்கமும் தன் லட்சியத்தில் வெற்றி காண்பது முடியாத காரியம். எனினும் பொதுஜன க்ஷேமத்திற்கோ அல்லது தேசியப் பொருளாதார அமைப்பிற்கோ முரணாக தொழிலாளர்கள் எவ்வித கோரிக்கைகளையும் சமர்ப்பிக்கக் கூடாது. அது போலவே முதலாளிகளும் மிருகத் தனமான முறைகளையும், தொழிலாளர்களின் உழைப்பினால் கொள்ளை லாபம் அடிப்பதையும் விட்டுவிட வேண்டும்.

7. திட்டமான, தெளிவான, ஒரு சார்பான பிரசாரம் அவசியமாகும். பாமர ஜனங்களிடையே உத்வேகத்தையும், தேசிய உணர்ச்சியையும் உண்டுபண்ணுவதே எங்கள் இயக்கத்தின் நோக்கமாதலால், அவர்களின் மனதில் தெளிவாகப் பதியும்படியாக விஷயங்களை எடுத்துக் கூற வேண்டும். சிலர் சர்வகலாசாலைப் பண்டிதர்களும், மாணவர்களுமடங்கிய கூட்டத்தில் வெகு அழகாகப் பேசுவார்கள். ஆனால் அவர்களின் பிரசங்கம் பாமரர்களிடையே சிறிதும் கவர்ச்சியை உண்டுபண்ணாது. சிலர் பாமரர்கள் கூட்டத்தில் அழகாகப் பேசி அவர்களுடைய மனதைக் கொள்ளை கொள்ளுவார்கள். ஆனால் அத்தகையோரின் பேச்சு கொச்சையாக இருக்கிறதென்று பண்டிதர் கோஷ்டி பரிகாசம் செய்யலாம். இரு சாராருமடங்கிய கூட்டத்தில் வெற்றிகரமாகப் பிரசங்கம் செய்யும் ஆற்றல் ஆயிரத்தில் ஒருவர்தான் வாய்க்கப் பெற்றிருப்பார். எவ்வளவு சிறந்த கொள்கையாயினும், அதைப் பரம பாமரர்களும் அறிந்துகொள்ளும்படி தெளிவான பாஷையில் எடுத்துக் கூறினாலன்றி, பலனெதுவுமேற்படாது. பிரசாரமானது பாமர ஜனங்களின் மனதையே கவரும் வண்ணமிருக்க வேண்டும்.

8. பொதுஜனங்களுக்கு அறிவையூட்ட முயற்சிப்பதன் மூலமோ அல்லது அதிகாரத்திலுள்ளவர்களிடையே செல்வாக்கை உபயோகிப்பதன் மூலமோ எந்த அரசியல் சீர்திருத்த இயக்கமும் வெற்றி பெற முடியாது. அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொள்வதன் மூலம்தான் ஜெயம் பெற முடியும். மேலும் அதிகாரத்தைக் கைப்பற்றுவதால் மாத்திரம் எந்த இயக்கமும் பூர்ண வெற்றி பெற்றதாகக் கருதிவிட முடியாது. அதன் உண்மையான வெற்றி, அதிகாரத்தைப் பொதுஜன க்ஷேமார்த்தமாக உபயோகிப்பதையே பொறுத்திருக்கிறது. எந்தெந்த முறைகளைக் கைக் கொண்டால் ஓர் உயர்ந்த கொள்கையை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வர முடியுமோ அம்முறைகளை எல்லாம் கைக்கொள்ள சம்பந்தப்பட்டவர்களுக்கு உரிமை உண்டென்பது மாத்திரமல்ல,

அவ்விதம் கைக்கொள்ள வேண்டியது கடமையுமாகும்.

9. புதிய இயக்கத்தின் தன்மையானது 'பார்லிமெண்டரி' முறையை ஆதாரமாகக் கொண்டிருக்கக் கூடாது. அதாவது பெரும்பான்மையோரின் 'வோட்டு'களால் தீர்மானங்கள் செய்வதென்பதுகூடாது. அதற்கு மாறாக, சிறிய பிரச்னைகளாயினும் சரி, பெரும் பிரச்னைகளாயினும் சரி, அவைகளையொட்டி ஒரே ஒருவருக்குத்தான் பூர்ண அதிகாரமும், சகல பொறுப்பும் இருக்க வேண்டும். அந்த ஸ்தாபனத்தைச் சேர்ந்த சகல கமிட்டிகளும் அத்தலைவருக்குப் பொறுப்பாளிகளாக இருக்க வேண்டுமேயன்றி, அவர் கமிட்டிகளுக்குப் பொறுப்பாளியாக இருப்பதென்பது கூடாது. எங்கள் இயக்கத்திலும் இம்முறைகளையே அனுஷ்டித்து வருகின்றோம். அத்தலைவரின் தீர்மானம்தான் முடிவானது. எனினும் அத்தீர்மானத்தின் முழுப் பொறுப்பும் அவரையே சார்ந்திருக்கும். தலைவர் ஆட்சேபகரமாக நடந்து கொண்டால், புதிய தேர்தலுக்கு நிற்கும்படி அவரைக் கேட்க அங்கத்தினர்களுக்கு உரிமையுண்டு. மற்றும் இயக்கத்தின் விதிகளை அவர் மீறினாலோ அல்லது இயக்க அலுவல்களில் போதிய அளவு சிரத்தையெடுத்துக் கொள்ளாவிட்டாலோ, தலைமைப் பதவியிலிருந்து அவரை விலக்கி அவரைக் காட்டிலும் அதிகப் பொறுப்பும் திறமையும் வாய்ந்த ஒருவரை அப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கவும் அங்கத்தினர்களுக்கு உரிமையுண்டு. தலைவராக வருவோருக்கு எல்லையற்ற அதிகாரம் உண்டு. அதுபோல் மகத்தான பொறுப்பும் உண்டு. தன் நடவடிக்கைகளுக்குப் பொறுப்பையேற்கும் தைரியமிராதவர் தலைவர் பதவிக்குத் தகுதியற்றவர். வீர புருஷரோ அப்பதவியை வகிக்க யோக்கியதையுள்ளவர். மானிடர் முன்னேற்றத்திற்கும், கலாசாரங்களுக்கும் காரண பூதர்கள் பாமரர்களல்ல, மகா மேதாவிகளான தனி நபர்களே. பொதுவாக மானிட சமூகத்தின் க்ஷீணதசைக்குக் காரணமான பார்லிமெண்டு முறையை ஒழிப்பதே எங்கள் இயக்கத்தின் நோக்கம். ஒரு வேளை நாங்கள் பார்லிமெண்டில் பிரவேசித்தாலும் உள்ளேயிருந்து கொண்டு அதை அழிப்பதுதான் எங்கள் நோக்கமாக இருக்கும்.

10. நம் இயக்கத்தின் நோக்கம், ஜனங்களின் அரசியல் புனருத்தாரணமேயன்றி, மதச் சீர்திருத்தமல்ல. எனினும் கிறிஸ்துவ மதத்தின் இரு பிரிவுகளும் ஜனங்களின் ஆத்துமார்த்த வாழ்க்கைக்கும் ஒழுக்கத்திற்கும் மூலாதாரமானவை. அவைகளை இழிவுபடுத்தும் கட்சிகளின் மீது நமது இயக்கமானது போர் தொடுக்கும். ஒரு ஜெர்மன் சாம்ராஜ்யத்தைச் சிருஷ்டிப்பதுதான் நம் இயக்கத்தின் நோக்கமேயன்றி, முடியரசை ஸ்தாபிப்பதோ அல்லது குடியரசைப் பாதுகாப்பதோ அல்ல.

11. இயக்க ஸ்தாபன முறைகளை சமயோசிதமாக மாற்றிக்

கொள்ள வேண்டும். ஸ்தாபனமானது லட்சியத்தை அடைவதற்கான ஒரு சாதனமேயன்றி, இறுதியான லட்சியமல்ல. அதை இறுதியான லட்சியமென்று கருதுவது அனர்த்தமாக முடியும். ஒருவருடைய மூளையிலிருந்து உதயமாகும் உயர்ந்த கொள்கையை ஜனங்களிடையே பரப்புவதற்கு ஸ்தாபனம் உதவியாக இருக்கிறது. ஒருவர் சகலருடனும் நேர் சம்பந்தம் வைத்துக் கொண்டு தமது கொள்கையை விளக்கிக் கூறுவது முடியாத காரியம். ஸ்தாபனம் என்ற ஒரு கருவியின் மூலம்தான் அவருக்கு அதை விளக்கிக் கூறுவது சாத்தியம். அதில் சேரும் ஜனங்களின் தொகை அதிகமாவதற்குற்றவாறு கிளை ஸ்தாபனங்களை அமைக்கும்படியான அவசியமேற்படுகிறது.

ஆரம்பத்தில் இயக்க சம்பந்தமான சகல நடவடிக்கைகளையும் ஒரு நகரில், அதாவது மியூனிச்சில் அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். முற்றிலும் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். ஓரிடத்தில் நிதர்சனமான பலன்களைப் பெறுவதன் மூலம் இயக்கத்திற்கு மதிப்பேற்படும்படி செய்ய வேண்டும். மார்க்ஸ் கொள்கை எவராலும் தகர்க்க முடியாததென்ற நம்பிக்கையைப் பொய்த்துப் போகும்படி செய்வதுடன், அதன் ஸ்தானத்தில் வேறொரு தகுந்த கொள்கையை அமுலுக்குக் கொண்டு வருவது சாத்தியமென்பதையும் நிதர்சனமாகக் காட்ட வேண்டும். அப்படியானால் தான் இயக்கத்திற்குப் பெயரும், புகழுமேற்படும். தலைமை ஸ்தாபனம் கீர்த்தி பெற்று பலமடைந்த பின்தான் ஜில்லா, மாகாண கிளை ஸ்தாபனங்களை அமைக்க வேண்டும். தலைவர்களாக வரக் கூடிய திறமையும், அறிவுமுள்ளவர்களை வசீகரித்துப் பயிற்சி செய்வதற்கு அவசியமான பணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். ஏனெனில் சம்பளம் பெறும் அதிகாரிகளின் மூலம்தான் இயக்கத்தைச் சீக்கிரத்தில் பலப்படுத்த முடியும். கௌரவ நிர்வாகிகளால் எப்போதுமே சகல அலுவல்களும் மிகவும் தாமதமாகத்தான். நடைபெறும். தகுந்த யோக்கியதையுள்ள தலைவர்கள் கிடைத்தாலன்றி அவசரப்பட்டுக் கொண்டு கிளை ஸ்தாபனங்களை ஆரம்பித்து விடக்கூடாது.

12. ஓர் இயக்கத்தின் வெற்றியானது, அதன் அங்கத்தினர்களின் உறுதியையும், பிடிவாதத்தையும், போர்க்குணத்தையுமே பொறுத்திருக்கிறது. தற்காலிக நலன்களை முன்னிட்டு மற்ற அரசியல் ஸ்தாபனங்களுடன் ஐக்கியமடைந்து விடக்கூடாது. அதனால் நாளடைவில் ஸ்தாபனம் பலவீனமாகிவிடும். தங்கள் லட்சியம் நிறைவேற எவ்வளவு காலம் போராடும்படி நேர்ந்தாலும் பிரமிக்கக் கூடாது. தற்காலிக நலன்களுக்காக, பிடிவாதத்தையும், உறுதியையும் சிறிதும் தளர விட்டுவிடக்

கூடாது. ஏனெனில் எந்த இயக்கத்தில் அபிவிருத்திக்கும் போராட்டம் அவசியமென்பதையும், எந்த இயக்கமும் தன் கொள்கையை விட்டுக் கொடுக்காது பூர்ண வெற்றி பெற்றாலன்றி பூர்ண பலம் பெற்றதாகாதென்பதையும் மறந்துவிடக் கூடாது. கைமேல் உடனே கிடைக்கும் தற்காலிக வெற்றிக்காக கொள்கைகளைச் சிறிதும் விட்டுக் கொடுக்கக் கூடாது. ஓர் இயக்கம் தன் கொள்கைகளில் பூர்ண வெற்றி பெறுவதற்காக எவ்வளவுக்கெவ்வளவு பிடிவாதத்துடன் போராடுகின்றதோ, அவ்வளவுக்கவ்வளவு அதன் பலம் பிரமாதமாகப் பெருகி வரும்.

13. போராட்டமானது விரும்பத்தக்க ஓர் அம்சமெனக் கருதும்படி நம் இயக்கத்தைச் சேர்ந்தவர்களின் மனதைப் பக்குவப் படுத்த வேண்டும். விரோதிகளின் எதிர்ப்பைச் சிறிதும் லட்சியம் செய்யக் கூடாது. நம்மீது எதிரிகளுக்குள்ள துவேஷத்தை வரவேற்க வேண்டும். பொய்கள், அபாண்ட அவதூறுகள் முதலியவைகளின் மூலம் எதிரி தன் துவேஷத்தை வெளிப்படுத்துவான். அதைக்கண்டு அஞ்சிவிடக் கூடாது. யூதர் பத்திரிகைகளால் எதிர்க்கப்படாதவரும் தூற்றப்படாதவரும் உறுதியுள்ள ஜெர்மானியரல்ல, உண்மையான தேசிய அபேதவாதியுமல்ல. யாருடைய பெயர் நமது எதிரிகளுக்கு மிகுந்த ஆத்திரத்தையுண்டு பண்ணுகிறதோ, அவர்தான் அந்தரங்க சுத்தியும், உறுதியும், ஒழுக்கமும் உள்ளவரென்று கருதவேண்டும். யூதர்களின் பொய்க் கூற்றுகளும், அவதூறுகளும் நம் தோழர்களுக்குக் கௌரவமளிக்கக் கூடியவை. யார் மீது யூதர்களுக்குத் துவேஷம் பொங்குகின்றதோ, அவர்கள்தான் நமது சிறந்த மனப்பூர்வமான நண்பராவர். நம்மை என்று யூதர்கள் துன்பத்திற்குள்ளாக்க வில்லையோ, தூற்றவில்லையோ, இழிவுபடுத்தவில்லையோ அன்றைய தினத்தை நாம் வியர்த்தமாகக் கழித்தவர்களாவோம். இவ்வுண்மைகள் நம்முடைய உதிரத்தில் ஊறிவிடுமாயின், பின்னர் நம் இயக்கம் யாராலும் எதிர்க்க முடியாத இரும்புக் கோட்டையாகி விடும்.

14. தேசத்திற்குப் பெருமையையும், புகழையும் உண்டாக்கும் மேதாவிகளிடம் மரியாதை காட்டும் குணம் ஜனங்களுக் கேற்படுவதற்கான சகல முறைகளையும் நம் இயக்கமானது கைக்கொள்ள வேண்டும். இவ்வுலகில் பிரமாதமான புரட்சிகள், மகத்தான வெற்றிகள், உயர்ந்த கலாசார நிர்மாணங்கள், ராஜதந்திரிகளின் அழியாத கீர்த்தி பெற்ற சிருஷ்டிகள் முதலியவைகளுக்கெல்லாம் காரணபூதர்கள் தனி நபர்களே. ஒவ்வொரு மகத்தான காரியத்தையொட்டியும் ஒருவருடைய பெயர்தான் குன்றின் மேலிட்ட தீபம்போல் பிரகாசித்து வரும். அத்தகையோரைப் புகழ்ந்து ஞாபகப்படுத்திக் கொள்வதன் மூலம்

அத்தேச ஜனங்களுக்குப் புதிய சக்தி பிறக்கும். அத்தகையோரைப் புகழ்ந்து போற்றத் தவறுவது, மகத்தான அந்த சக்தியை அலட்சியம் செய்வதாகும்.

ஆனால் யூதர்களின் போக்கு அதற்கு நேர்விரோதமானது. மானிட வர்க்கத்தின் அழிவிற்கான காரியங்களைச் செய்யும் திறமையுள்ள 'பெரியார்கள்'தான் அவர்களுக்குப் பூஜ்யமானவர்கள்! உண்மையான உத்தம புருஷர்களைப் புகழ்ந்தால், 'இது என்ன நர ஸ்துதி' என்று அவர்கள் காதைப் பொத்திக் கொள்வார்கள்!

மனிதரின் ஹிருதயங்கள் வெடித்துவிடும் போலிருக்கும் சமயத்திலும், அவர்களுடைய ஆத்துமாக்கள் ஏக்கங்கொண்டு பிரமிப்பாகிற படுகுழியில் வீழ்ந்து பரிதவிக்கும்போதும், அவர்களுடைய முன்னோர்களின் ஆவி அவர்களை நோக்குகின்றது. கவலை, கடுந்துன்பம், அடிமைத்தனம் முதலியவைகளை ஜெயிக்கும் வழியை அறிந்த அந்த முன்னோர்கள், திக்பிரமை கொண்டு தவிக்கும் ஆத்துமாக்களுக்குப் புத்துயிரளித்து உற்சாகமூட்டி அபயமளிப்பதற்காக தங்கள் ஹஸ்தங்களை நீட்டும்போது, அவைகளைப் பிடித்துக் கொள்ள வெட்கப்படும் தேசம் அதோகதியாக வேண்டியதுதான்.

நிற்க, ஆரம்பத்தில் நாங்கள் பெரும் முட்டுக்கட்டையொன்றைச் சமாளிக்க வேண்டியிருந்தது. அதாவது எங்களுடைய பெயர்களை வெளியில் எவருமே அறியார். எங்களையோ, எங்கள் கட்சியையோ லட்சியம் செய்வார் எவருமில்லை! இருந்தாலும் எங்களுடைய லட்சியமோ ஜெர்மன் சாம்ராஜ்யத்தை முன்னரைக் காட்டிலும் அதிக சக்தியும், மகிமையும் பொருந்தியதாகப் புனருத்தாரணம் செய்வதுதான். மகத்தான கட்சிகள் செய்யத் தவறிய அப்பெரிய சாகஸத்தை ஏழைகளான ஆறு அல்லது ஏழு பயல்கள் சேர்ந்து கொண்டு எவ்விதம் செய்ய முடியுமென்பதை யோசித்துப் பாருங்கள்! எங்களை யாராவது கண்டித்தாலோ அல்லது ஏளனம் செய்தாலோ கூட எங்களுக்குச் சந்தோஷமேற்பட்டிருக்கும். எனினும் எங்களை ஒரு பிராணிகூட சட்டை செய்யவில்லை. இவ்விஷயம் எனக்கு மட்டற்ற மனோ வேதனையைக் கொடுத்தது. ஐந்து அல்லது ஆறு பேர்களடங்கிய எங்கள் கட்சிக் கூட்டம் ஒரு குட்டிப் பார்லிமெண்டு போலவே இருந்தது! அதாவது கட்சிக்கு வந்த கடிதங்கள் பற்றிப் பிரமாதமாக விவாதம் நடந்தது. அந்த விவாதத்திற்கு ஒரு முடிவு காண்பதாகவும் தெரியவில்லை. இக்கட்சியைப் பற்றி மியூனிச்சில் எவருக்கும் எதுவுமே தெரியாது!

பிரதி புதன்கிழமையும் ஒரு ஹோட்டலில் எங்கள் கமிட்டிக் கூட்டம் நடப்பது வழக்கம். ஒவ்வொரு வாரத்திலும் ஒருநாள், விவாதத்திற்காக ஒதுக்கி வைக்கப்பட்டது. அவ்விரு

கூட்டங்களுக்கும் திரும்பத் திரும்ப கட்சி அங்கத்தினர்களே வருவர். புதிதாக எவரும் வருவதில்லை. எனவே புதிய அங்கத்தினர்களைச் சேர்க்க வேண்டியதும், மற்றும் நம் இயக்கத்தைப் பொது ஜனங்கள் அறிந்து கொள்ள வேண்டியதும் அவசியமென உணர்ந்தோம். அதற்காக மாதம் ஒரு கூட்டம் நடத்துவதென்றும், அதற்குப் பொது ஜனங்களையும் அழைப்பதென்றும் முடிவு செய்தோம். அதற்கிணங்க அழைப்புப் பிரசுரங்களை 'டைப்' செய்தும் கையினாலெழுதியும் அனுப்பினோம். நாங்களே தெருக்களிலும், வீடுகளுக்குச் சென்றும் அவைகளை வழங்கினோம். எங்களுக்கு அறிமுகமுள்ளவர்களிடம் இயக்க விஷயமாகப் பிரசாரமும் செய்தோம். இருந்தாலும் பலன் பரிதாபமாக இருந்தது. ஒரு சமயம் நானே நேரில் 80 அழைப்புப் பத்திரங்களை விநியோகம் செய்தேன். அன்று கூட்டத்திற்கு ஜனங்கள் வருவார்களென ஒரு மணி நேரம் காத்திருந்தோம். ஆனால் எங்கள் ஏழு பேர்களைத் தவிர வேறு எவரும் வரவில்லை!

பின்னர் எங்கள் பிரசார முறைகளை மாற்ற முற்பட்டோம். அதாவது அழைப்புப் பத்திரங்களை 'டைப்' செய்து, அதிலிருந்து பல பிரதிகளை எடுத்து தெருக்களில் வழங்கவே அக்கூட்டத்திற்கு அதிக பேர்கள் வந்திருந்தனர். அவ்விதம் வருவோரின் தொகை அதிகமாகி இறுதியில் 34 பேர்கள் வரை வந்தனர்! பின்னர் நாங்கள் எங்களுக்குள்ளேயே அற்ப தொகையை வசூலித்து எங்கள் கூட்டத்தைப் பற்றி 'மியூனிச் அப்ஸர்வர்' பத்திரிகையில் விளம்பரம் செய்தோம். அக்கூட்டத்தை நாங்கள் ஒரு மண்டபத்தில் ஏற்பாடு செய்தோம். அதில் 130 பேர்களுக்கு மேல் உட்காருவதற்கு இடம் போதாது. அன்றைய கூட்டத்திற்கு 111 பேர்கள் வரை வந்திருந்தனர். ஒரு மியூனிச் பண்டிதர் முதலில் பேசினார். பிறகு நான் பேசினேன். ஒரு பொதுக்கூட்டத்தில் நான் பேசியது அதுதான் முதல் தடவை. நான் 30 நிமிஷ நேரம் பேசினேன். என்னுடைய பேச்சு அங்கு கூடியிருந்த ஜனங்களின் மனதில் உணர்ச்சியை உண்டுபண்ணியதென்பது நன்கு புலப்பட்டது. அவர்கள் நன்கொடையளிக்க வேண்டுமென நான் வேண்டிக் கொண்டதற்கிணங்க, 300 மார்க்குகள் வசூலாயின. அதிலிருந்து அங்கு கூடியிருந்தவர்களின் உற்சாகத்தை உணர்ந்து கொள்ள முடிந்தது. அத்தொகை எங்களுக்கு ஒரு வரப்பிரசாதமாக இருந்தது! ஏனெனில் துண்டுப் பிரசுரங்கள் அச்சடிப்பதற்குக் கூட எங்களிடம் அப்போது காசில்லை. எனவே மிகவும் அவசரமான, அவசியமான செலவுகளை அத்தொகையைக் கொண்டு சமாளிப்பதென முடிவு செய்தோம்.

அக்கூட்டத்தின் பயனாக புதிதாக அங்கத்தினர்கள் சேர ஆரம்பித்தனர். இருந்தாலும் எங்கள் இயக்கத் தலைவரான

ஹர் ஹாரரும், மியூனிச் பிரிவு தலைவரான ஹர்டி ரெக்ஸ்லரும் கூட்ட ஜனங்களுக்குக் கவர்ச்சி உண்டுபண்ணும் விதத்தில் பேசத் திறமையற்றவர்களாயிருந்தனர்.

அப்போது தேசீய நோக்கங்கொண்ட கூட்டங்கள் கூடுவதே ஆபத்தான ஒரு காரியம். அவ்வித கூட்டங்களில் கலந்து கொள்வோர் மண்டையுடைந்து கலையும்படி நேருவதுமுண்டு. பாமர ஜனங்களின் கவனத்தை ஈர்க்கும் எவ்வியக்கத்தையும் மார்க்ஸ் கட்சித் தலைவர்கள் வெறுத்தனர். மற்றும் அவர்கள் ஜனங்களை வஞ்சித்தும், அவர்களிடையே தப்பெண்ணத்தை உண்டாக்கியும் வந்தனர். "ஜெர்மன் தொழிற்கட்சி" என்ற பெயரே அவர்களுக்கு ஆத்திரத்தை உண்டுபண்ணியது. அதனால், 2578ல் (1918) ஏற்பட்ட வெற்றி போதையில் மமதை கொண்டு கிடந்த மார்க்ஸ் கட்சிக் கொடியர்களின் எதிர்ப்பையே நாங்கள் முதன்முதலில் சமாளித்து நிற்க வேண்டியிருக்குமென்பது தெளிவாயிற்று.

தகராறு ஏற்படக்கூடுமென்பது பற்றி எங்கள் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் கவலை கொண்டனர். பகிரங்கமான தகராறைக் கூடுமானவரை தவிர்க்க வேண்டுமென்பது அவர்களுடைய அவா. இல்லாவிடில் முதலிலேயே சச்சரவேற்பட்டு இயக்கமே பாழாகி விடுமோவென அவர்கள் அஞ்சினர். அத்தகராறைத் தவிர்க்க முற்படக் கூடாதென்றும், தகராறு ஏற்பட்டால் அதைப் பகிரங்கமாக எதிர்த்து நின்று சமாளிக்க வேண்டுமென்றும், பலாத்காரத்தை எதிர்க்க அதற்குத் தகுந்த ஆயுதங்களுடன் நாங்கள் தயாராக இருக்க வேண்டுமென்றும், பயங்கர முறையை அதற்குப் பிரதியான பயங்கர முறையினாலேயே எதிர்க்க வேண்டுமென்றும் கருதினேன். மற்றும் முதல் பொதுக்கூட்டத்தின் வெற்றி என் மனதை திடப்படுத்தியது. எனவே இன்னும் பரந்த முறையில் இரண்டாவது கூட்டத்திற்கான ஏற்பாடுகளை அங்கத்தினர்கள் உற்சாகத்துடன் செய்தனர்.

2579 (1919) அக்டோபர் மாதம் மற்றொரு விடத்தில் இரண்டாவது கூட்டம் நடந்தது. அக்கூட்டத்தில் பேச நிர்ண யிக்கப்பட்டிருந்த விஷயம் பிரெஸ்ட் -லிடோவஸ்க், வர்செயில்ஸ் உடன்படிக்கைகள் பற்றியதாகும். அப்போது நால்வர் பேசினர். நான் சுமார் ஒரு மணி நேரம் வரையில் பேசினேன். முதல் கூட்டத்தைக் காட்டிலும் அக்கூட்டம் அதிக வெற்றிகரமாக நடைபெற்றது. 130 பேர்களுக்கு மேல் கூட்டத்திற்கு வந்திருந்தனர். கூட்டத்தைக் கலைப்பதற்காக நடந்த முயற்சியை என் தோழர்கள் தடுத்து, கலகம் செய்வதற்காக வந்தவர்களை வெளியில் தள்ளி அவர்களுடைய தலைகளில் முத்திரைகள் (காயங்கள்) தோன்றும்படி செய்துவிட்டனர். இரண்டு வாரங்கள் கழித்து

மற்றொரு கூட்டம் நடந்தது. அதற்கு 170 பேர்களுக்கு மேல் வந்திருந்தனர். அக்கூட்டம் அதற்கு முந்திய கூட்டத்தைக் காட்டிலும் அதிக வெற்றிகரமாக முடிந்தது. பின்னர் பெரிய மண்டபமொன்றில் கூட்டம் நடந்தது. அதற்கு 140 பேர்களே வந்திருந்தனர். அடிக்கடி கூட்டம் கூட்டுவதால் அதிக பேர்கள் வரமாட்டார்களென கமிட்டி அங்கத்தினர்கள் கூறினர். ஏழு லட்சம் ஜனங்களுள்ள ஒரு நகரில் 15 நாட்களுக்கொரு முறை ஒரு கூட்டமல்ல, பிரதி வாரமும் பத்துக் கூட்டங்கள் கூட கூட்டலாமென்று நான் கூறினேன். கூட்டங்களுக்கு ஏராளமானவர்கள் வரவில்லையே என்று உற்சாகம் குன்ற வேண்டாமென்றும், எனவே முன்வைத்த காலைப் பின் வைக்காமல் உறுதியுடன் செல்வோமாயின் எதிர்காலத்தில் வெற்றி கிடைத்தே தீருமென்றும் அவர்களுக்கு எடுத்துக் காட்டினேன். மலையையும் அசைக்கக் கூடிய நம்பிக்கை நம் மனதில் உண்டாகி விடுமாயின், நம் இயக்கம் வெற்றி பெறுவது நிச்சயமென்பதையும் உணர்ந்து கொண்டேன்.

நான் கூறியபடி எங்களுடைய அடுத்த கூட்டத்திற்கு 200 பேர்களுக்கு மேல் வந்திருந்தனர். விளம்பர சம்பந்தமாகவும், நிதி வசூல் விஷயமாகவும் அக்கூட்டம் பெரும் வெற்றியைக் கொடுத்தது. அடுத்து மற்றொரு கூட்டம் கூட்ட வேண்டுமென நான் வற்புறுத்தினேன். அக்கூட்டத்திற்கு 270 பேர்களுக்கு மேல் விஜயம் செய்தனர். அதன்பின் இரண்டு வாரங்கள் கழிந்து நடந்த கூட்டத்திற்கு 400 பேர்களுக்கு மேல் பிரசன்னமாயிருந்தனர்.

எங்கள் கட்சியில் அடிக்கடி கடுமையான விவாதங்கள் நடப்பதுண்டு. அடிக்கடி சில்லறை ஆட்சேபனைகளும், முட்டுக் கட்டைகளும் எழுவதுண்டு. எங்கள் கட்சியின் முன்னேற்றத்தைத் தடுக்கப் பலரும் முயற்சித்தனர். வீணர்கள், வாசா கைங்கர்யவாதிகள், விஷமிகள், கர்விகள், சுயநலவாதிகள் முதலியோர் எங்கள் கட்சியில் சேர்ந்து அதைக் குட்டிச் சுவராக்கிவிடாமலும் நாங்கள் பாதுகாக்க வேண்டியிருந்தது. “மௌனத் தொண்டர்கள்” எனக் கூறப்படுவோர், கத்தியை வெறுத்து விட்டுக் கழுகு இறகைக் கையில் பிடித்திருப்போர் (வாசா கைங்கர்யவாதிகளான எழுத்தாளர்கள்) முதலியோரும் எங்கள் கட்சியில் சேரத் தகுதியற்றவர்களென்பதையும் அறிந்து கொண்டேன். அத்தகையோர் தாங்கள் தைரியமாக எதையும் செய்ய முன்வரமாட்டார்கள். யோக்கியப் பொறுப்புள்ளவர்கள் செய்யும் தொண்டின் பலனையும் திருடி தாங்கள் தான் அத்தகைய பலனுக்குக் காரணஸ்தர்களென வேஷம் போடுவார்கள்.

எங்கள் கட்சியின் ஆதரவில் பிரமாண்டமான பொதுக் கூட்டமொன்றிற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென 2580ம்

(1920) வருஷ ஆரம்பத்தில் நான் ஒரு யோசனை கூறினேன். அந்த யோசனையையொட்டி எங்களுக்குள் அபிப்பிராய பேதமேற்பட்டது. அத்தகைய கூட்டம் கூட்டுவதற்குற்ற காலம் வரவில்லையென்றும், எனவே அந்நிலைமையில் கூட்டம் கூட்டுவது பாதகமாக முடியுமென்றும் கட்சியைச் சேர்ந்த சில முக்கிய அங்கத்தினர்கள் அபிப்பிராயப்பட்டனர். அப்போது சில பத்திரிகைகள் எங்கள் விஷயத்தில் கவனம் செலுத்த ஆரம்பித்ததுடன், அதிர்ஷ்டவசமாக அவைகளின் ஆத்திரத்திற்கும் நாங்கள் ஆளானோம். மற்வர்களின் கூட்டங்களுக்கும் சென்று கேள்விகள் கேட்பது, பிரசங்கம் செய்வோரின் கூற்றுகளை ஆட்சேபிப்பது முதலிய அலுவல்களில் ஈடுபட்டோம். அவ்விதம் செய்யும்போது அக்கூட்டங்களிலுள்ளவர்கள் உடனே சப்தம் போட்டு எங்களை உட்காரும்படி கூறி ஆத்திரப்படுவார்கள். இருந்தாலும் அத்தகைய நடவடிக்கைகளால் எங்கள் நோக்கம் ஓரளவு நிறைவேறியது. அதாவது “தேசீய அபேதவாத ஜெர்மன் தொழிற் கட்சி” என்று ஒரு கட்சி பிறந்திருக்கிறதென்பதை ஜனங்கள் அறிந்து கொள்ள ஆரம்பித்தனர்.

எங்கள் பொதுக் கூட்டத்தைக் கலைக்க முயற்சி நடைபெறுமென்பதை நான் நன்குணர்ந்தேன். இருந்தாலும் எதிர்ப்பைச் சமாளித்துத்தானே தீரவேண்டும். அப்போதில்லாவிட்டாலும் சில மாதங்கள் கழித்தாவது போராட்டமேற்படுவது நிச்சயம். எனவே கண்மூடித்தனமான நம்பிக்கையுடனும், தளரா உறுதியுடனும் முன் செல்வதென நாங்கள் ஆரம்பம் முதல் திட சங்கல்பம் செய்து கொண்டோம். நாங்கள் உறுதியுடன் விரோதிகளின் எதிர்ப்பை வரவேற்று நின்றால், ஏதிரிகள் சிறிது சலசலப்படைவதுடன், கட்சியில் புதிய அங்கத்தினர்களும் சேருவது நிச்சயமென நினைத்தேன். தீவிர எதிர்ப்புக் கொள்கையில் ஈடுபட வேண்டுமென்பதை மற்ற அங்கத்தினர்களுக்கும் வலியுறுத்தினேன். ஆனால் கட்சித் தலைவரான ஹார் ஹாரர் எனது அபிப்பிராயத்தை ஆதரிக்கவில்லை, எனவே மிகவும் யோக்கியப் பொறுப்புடனும், கண்ணியமாகவும் அவர் தமது பதவியை ராஜிநாமா செய்தார். அவரது ஸ்தானத்தில் ஹர் ஆண்டன் டிரெக்ஸ்லர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார். பிரசார அலுவல்களை நான் ஏற்றுக் கொண்டேன்.

கடைசியாக 2580 (1920) பிப்ரவரி மாதம் 20ந் தேதி அக்கூட்டத்தை நடத்துவதெனத் தீர்மானம் செய்தோம். அதன் சம்பந்தமான பூர்வாங்க ஏற்பாடுகளையெல்லாம் நானே செய்தேன். ஜனங்களுக்குக் கவர்ச்சியை உண்டுபண்ணுவதற்காகவும் அவைகளைச் சிவப்பு வர்ணத்தில் அச்சடித்தோம்.

தேச நலனையே முக்கியமாகக் கருதிய யோக்கியப்

பொறுப்புள்ள தேச பக்தரான எர்னஸ்ட் போஹனர், டாக்டர் பிரிக் இவர்களைத் தவிர மற்ற போலீஸ் அதிகாரிகள் சகலரும் எங்களது முயற்சிகளைத் தடுக்க சகல முறைகளையும் எடுத்துக் கொண்டனர். அப்போது விரோதிகளின் விஷமங்களையோ, அதிகார வர்க்கத்தின் அடக்குமுறைகளையோ கண்டு நான் அஞ்சவில்லை. ஆனால் நான் அடைந்த பீதி என்னவெனில், எங்கு கூட்டம் நடக்கும் என்பதுதான். அன்றைய கூட்டத்திற்கு ஏராளமான ஜனங்கள் வந்துவிட்டால் எங்கள் இயக்கம் வெற்றியடைவது நிச்சயமென எனக்குத் தோன்றியது. எனவே நெஞ்சு படபடக்க, கூட்டம் ஆரம்பமாகும் நேரத்தை எதிர்பார்த்து வந்தேன்.

7.30 மணிக்குக் கூட்டம் ஆரம்பமாகுமென்று அறிவிக்கப்பட்டிருந்தது. அதற்குக் கால் மணி நேரத்திற்கு முன், மியூனிச்சிலுள்ள ஹாவ் பிரௌஹாஸ் மண்டபத்தின் வழியாக நான் சென்றபோது எனக்கு உண்டான ஆனந்தத்தை அளவிட முடியாது. சற்றேறக் குறைய 2000 பேர்கள் கூட்டத்திற்கு வந்திருந்தனர். அப்போது அதுதான் எனக்கு மிகமிகப் பிரமாண்டமான கூட்டமாகத் தோன்றியது. அவர்களில் பாதிக்கும் மேற்பட்டவர்கள் பொதுவுடைமைக்காரர்களும், சுயேச்சை வாதிகளுமாவர். அவர்கள் கூட்டத்திற்கு வர வேண்டுமென்பதுதான் எங்களுடைய ஆர்வமும்!

முதலில் ஒருவர் பேசியபின் நான் பேச எழுந்தேன். சில நிமிஷங்கள் சென்றதும் மண்டபத்தில் எழுந்த சந்தடியும், சச்சரவும் சகிக்க முடியவில்லை. என் அந்தரங்க சகாக்களில் சிலர் விஷமிகளையடக்கி அமைதியேற்படும்படி செய்தனர். பின்னர்தான் என்னுடைய பிரசங்கத்தை தொடர முடிந்தது. அரைமணி நேரம் சென்றதும், விரோதிகளின் கூக்குரல்களும், ஊளையும், கரகோஷப் பிரவாகத்தினால் மூழ்கடிக்கப்பட்டன. எதிர்ப்புக் கூக்குரல்களும் சிறிது சிறிதாகக் குறைந்து, கரகோஷமும் உற்சாக ஆரவாரமும் அதிகமாயின. நாங்கள் வகுத்திருந்த 25 ஷரத்துகளையும் விளக்கிக் கூறி அவைகளையொட்டி பொதுஜனங்களின் தீர்ப்பை நாடினேன். அவர்கள் மிகுந்த உற்சாகத்துடன் அவைகளை அங்கீகரித்தனர். கடைசி ஷரத்தை நான் விளக்கிக் கூறியபோது எள் விழ இடமின்றி மண்டபம் நிறைந்திருந்தது. அவர்களிடையே ஒரு புதிய நம்பிக்கையும், புதிய உறுதியும், புதிய ஒற்றுமையும் பீறிட்டெழுந்தன.

சுமார் 4 மணி நேரத்திற்குப் பின் கூட்டம் கலைய ஆரம்பித்தது. அதை நான் கவனித்தபோது, ஜெர்மன் ஜனங்களிடையே ஒரு மகத்தான இயக்கம் உதயமாகி விட்டதென்பதையும் இனி எக்காலத்தும் அவ்வியக்கம் மறையாதென்பதையும்

அறிந்து கொண்டேன். அவ்விதம் மூட்டப்பட்ட தேசிய ஜ்வாலையில், ஜெர்மனியின் சுதந்திரத்தைப் புனருத்தாரணம் செய்வதற்கும், ஜெர்மனியை மீண்டும் உயிர்ப்பிப்பதற்குமுற்ற ஒரு பட்டாக் கத்தியை உருவாக்க முடியுமென்பதையும் அறிந்து கொண்டேன். மற்றும் 2578 (1918) நவம்பர் மாதம் 9ந் தேதி நடந்த தேசத்துரோகத்திற்காகப் பழி தீர்க்க, வஞ்ச தேவி விசுவரூபமெடுக்க ஆரம்பித்து விட்டாளென்றும் எனக்குத் தோன்றியது.



# 1. எங்கள் கட்சி

**2580**ம் (1920) வருஷம் பிப்ரவரி மாதம் 24ந் தேதி நடந்த எங்கள் கட்சியின் முதல் பொதுக் கூட்டத்தில் கட்சிக் கொள்கைகளைப் பொது ஜனங்கள் அறிந்து கொள்ளும்படி விளக்கிக் கூறினோம். தேசத்தைச் சீர்குலைத்து வரும் துருப்பிடித்துப் போன கொள்கைகளையும், அபிப்பிராயங்களையும் அறவே ஒழிப்பதற்கான புதிய போராட்டத்தை எவ்விதம் நடத்துவதென்பதையும் அவர்களுக்கு அறிவித்தோம். கோழைகளான நடுத்தர வகுப்பினர்களிடையே அவ்விதம் ஒரு புதிய சக்தியைத் தோற்றுவிக்க வேண்டியிருந்தது. மார்க்ஸ் கட்சியினரின் வெற்றிகரமான முன்னேற்றத்தைத் தடுத்து முட்டுக்கட்டை போடுவதே அந்த சக்தியின் வேலையாயிற்று.

அப்புதிய இயக்கமானது மகத்தான போராட்டத்தில் ஈடுபடுவதாயின், முதலில் பொதுஜனங்களின் ஆதரவைப் பெற வேண்டும். அதாவது அக்கட்சி புதிய தேர்தல் சுலோகத்தை ஆதாரமாகக் கொண்ட ஒரு சூழ்ச்சியல்ல. அதி தீவிரமாகத் தொண்டு செய்யப் போகும் ஓர் இயக்கமென்ற புனித எண்ணமானது பொதுஜனங்களின் மனதில் பொங்கியெழும்படி செய்ய வேண்டும். தேர்தலில் வெற்றி பெறும்வரை, 'வானத்தை வில்லாக வளைப்போம்' மணலைக் கயிறாகத் திரிப்போம்' என்றெல்லாம் தடபுடல் செய்துவிட்டு, தேர்தலில் வெற்றி பெற்ற பின் இனி ஐந்து வருஷ காலத்திற்குக் கவலையில்லை என்று படிச்செலவைப் பெற்று ஏப்பமிடும் பார்லிமெண்டு அங்கத்தினர்கள் போன்று அக்கட்சியினர் சமய சஞ்சீவிகளல்ல என்பதையும் பொதுஜனங்களுக்கு நிதர்சனமாக நிரூபிக்க வேண்டும்.

தேர்தலுக்காக அத்தகைய வேஷதாரிகள் வகுக்கும் புதிய திட்டமானது, யாருக்கும் எதையும் அளிக்கும் ஒரு கற்பக விருட்ஷமாக விளங்கும்! விவசாயிகளின் நலன்களுக்குச் சிறிதும் பாதகமேற்படாது அவை காப்பாற்றப்படும் - தொழிற்சாலை முதலாளிகளுக்குச் சகல பாதுகாப்புகளும் அளிக்கப்படும் - விலைவாசிகள் அதிகமாகி கஷ்டத்திற்காளாகாமல் ஜனங்கள் ரட்சிக்கப்படுவார்கள். உபாத்தியாயர்களின் சம்பளங்கள் உயரும். சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு அதிக உதவிச் சம்பளம் (பென்ஷன்) கொடுக்கப்படும். விதவைகளும் அனாதைகளும் சர்க்காரிடமிருந்து சகல உதவியும் பெறுவார்கள். வர்த்தகம் அபிவிருத்தி செய்யப்படும். தீர்வைகள் குறைக்கப்படும் - வரிகள் ரத்து செய்யப்படாவிடினும் பெரும்பாலும் ரத்து செய்யப்படும்:

இவ்விதமெல்லாம் சகலருடைய நலன்களையும் பாதுகாப்பாக அத்திட்டத்தில் ஜனங்களுக்கு அபயமளிக்கப்பட்டிருக்கும். இவ்வாறு ஒவ்வொரு தேர்தலிலும் பொதுஜனங்களைப் பார்லிமெண்டு அங்கத்தினர்கள் மோசம் செய்து வருவது பட்டவர்த்தனமாகத் தெரிந்தும்கூட, பத்திரிகைகளின் பிரசாரத்தினாலும், புதிய திட்டத்தின் பகட்டினாலும் அவ்விபரீதத்தைப் பொதுஜனங்கள் மறந்து, மீண்டும் வாசாகைங்கர்யவாதிகளுக்கு வோட்டுக் கொடுக்கச் சிரத்தையுடன் முன்வந்து விடுகின்றனர். ஐந்து வருஷம் முடிவதற்குள் ஏதாவது நெருக்கடி உண்டாகி, பார்லிமெண்டு கலைந்து விடக்கூடுமென்ற நிலைமை ஏற்பட்டால், அங்கத்தினர்கள் உடனே மீண்டும் தங்களுடைய 'அன்பார்ந்த' பொதுஜனங்களிடம் வந்து தாங்கள் மகத்தான காரியங்களைச் சாதித்திருப்பதாயும், இருந்தாலும் எதிர்க்கட்சியினர் துவேஷனத்தினால் தங்களை முன்செல்லவிடாது தடுத்து வருவதாயும் புலம்புவார்கள். பொதுஜனங்களில் சிலர் அவர்களின் வேஷத்தைக் கண்டுபிடித்து கண்டிக்க ஆரம்பித்தால், உடனே அங்கத்தினர்கள் அவர்களைத் திருப்தி செய்வதற்காக தங்களுடைய திட்டத்தை மாற்றியமைப்பார்கள். அவ்விதமாக மீண்டும் பழைய கதையே ஆரம்பமாகும். அந்த அங்கத்தினர்கள், மேற்சட்டையைப் போன்று கொள்கைகளையும் சமயோசிதம் போல் மாற்றிக் கொள்பவர்கள் என்பதையும், அவர்கள் பொது வாழ்க்கையாகிற மரத்தில் முளைத்துள்ள புல்லுருவிகளென்பதையும் அவர்கள் சுயநலத்திற்காகப் பல்லைக் காட்டும் பதர்கள், - காசுக்காகக் கட்சியைக் கைவிடும் காதகர்கள், - பதவி வேட்டைக்காரர்கள் என்ற உண்மைகளை எல்லாம் பொது ஜனங்கள் அறிந்து கொள்வதில்லை.

நமது தற்போதைய இயக்கம் புரட்சி மார்க்கத்தில் சென்று வருவதாக சில அரசியல் சோதாக்கள் நம் மீது குற்றஞ் சாட்டுகிறார்கள். அவர்களுக்கு நாம் கூறும் பதில் இதுதான்: "முட்டாள்களும் அயோக்கியர்களுமான நீங்கள் செய்த தவறைச் சீர்படுத்தவே நாங்கள் முயற்சித்து வருகிறோம். உங்களுடைய வயிற்றுப் பிழைப்பு பார்லிமெண்டு கொள்கையால் நீங்கள் நம் தேசத்தின் அழிவிற்கே காரணஸ்தர்களாகியிருக்கிறீர்கள். அந்நிலைமையைச் சீர்படுத்தவே இப்போது நாங்கள் அதி தீவிரக் கொள்கையை அனுஷ்டிக்க முற்பட்டிருக்கிறோம். நம் தேசத்தினர் மீண்டும் சுதந்திர ஆலயத்திற்கு ஏறிச் செல்லுவதற்கான படிகளை நாங்கள் நிர்மாணித்து வருகின்றோம்."

எங்கள் கட்சியில் சேருவோர் அத்தகைய புல்லுருவிகளாக இருக்கக் கூடாதென்பதில் நாங்கள் மிக மிக ஜாக்கிரதையாக இருந்தோம். எவ்வித சந்தேகத்திற்கும் இடமின்றி எங்கள்

கொள்கைகளைத் திட்டமாகக் குறிப்பிட்டோம். எனினும் ஒரு கட்சி எவ்வளவு சிறந்ததாயினும், மானிட சமூகத்திற்குப் பிரயோஜனகரமாயினும், அதன் கொள்கைகளை நிர்த்தாட்சண்யமாக அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரும் ஆண்மையிருந்தாலன்றி, அதனால் என்ன பலன் ஏற்பட முடியும்? எவ்வளவு உயர்ந்த கொள்கைகளாயினும் வாயளவில் அவைகளைப் புகழ்ந்து கொண்டிருப்பதால் எவ்வித பலனுமில்லை. அவைகளை வெற்றிகரமாக அமுலுக்குக் கொண்டு வர வேண்டும் சுயநலவாதிகளோ, சமய சஞ்சீவிகளோ அவைகளைக் கிரியாம்சையில் கொண்டு வர முடியாது. அந்தரங்க சுத்தியும், ஆண்மையும், ஆவேச உணர்ச்சியும் படைத்த வீர புருஷர்களால் தான் அது சாத்தியம். அப்படிப்பட்ட ஒரே ஒருவர்கூட ஒரு தேசத்தையே உய்விக்க முடியும்.





# 2. அரசாங்கத்தின் முதற் கடமை

**2580 - 81**ம் (1920 - 21) வருஷத்திலேயே நடுத்தர வகுப்பைச் சேர்ந்த சில கோழைகள் எங்கள் இயக்கத்தின் மீது அடிக்கடி குற்றஞ்சாட்டி வந்தார்கள். ஒரு புதிய அரசியல் தத்துவத்தை ஆதாரமாகக் கொண்ட இந்த ஆரம்ப இயக்கத்தை எப்படியாவது நசுக்கிவிட முயற்சித்தனர். எங்கள் இயக்கமானது நவீன அரசாங்க முறையில் குறை காண்பதாக இருக்கிறதேயொழிய அபிவிருத்தியேற்படும்படி செய்வதாக இல்லை என்பது அவர்களுடைய புகார்.

அரசாங்க முறை என்றால் என்ன? அரசாங்க முறை பற்றி வியாக்கியானம் செய்வோரை மூன்று பிரிவாகப் பிரிக்கலாம். அரசாங்கத்தைச் சதா வணங்கி அதன் அதிகாரத்திற்கு உட்படுவதுதான் தங்களுடைய தெய்வீகக் கடமை என்று கருதுவோர் முதல் கோஷ்டியினர். பெரும்பான்மையோரும் இக்கோஷ்டியைச் சேர்ந்தவர்களே. ஜனங்களுக்குத் தொண்டு செய்வதற்காக அரசாங்கம் இல்லை, அரசாங்கத்தை வணங்குவதற்காகவே ஜனங்களிருக்கின்றன என்பது அத்தகையோரின் கொள்கை! பவேரியாவிலும் ஆஸ்திரியாவிலுமுள்ள சில அரசியல்வாதிகளும் ஜெர்மனியைச் சேர்ந்த பிற்போக்காளர்களும் இக்கோஷ்டியைச் சேர்ந்தவர்களே.

இரண்டாவது கோஷ்டியில் அவ்வளவு அதிக தொகையினர் இருக்க மாட்டார்கள். தன் அதிகாரத்தை நிலைநிறுத்துவதுடன் அரசாங்கத்தின் கடமை முடிந்து விடாதென்பதும், ஜனங்களுடைய க்ஷேமத்தை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்பதும் இக்கோஷ்டியின் கொள்கை. அதாவது ஜனங்களின் பொருளாதார சுபிட்சத்திற்கு உத்திரவாதமளிக்க வேண்டியது அரசாங்கத்தின் முதற் கடமை என்பதும், நிர்வாக சௌகர்யத்திற்காக அரசாங்க முறை ஒரேவிதமாக இருக்க வேண்டியதுடன், சாத்தியமாயின் ஒரே ஒரு பாஷையே உபயோகிக்கப்பட வேண்டுமென்பதும் அவர்களின் அபிப்பிராயம்.

மூன்றாவது கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் மிகமிகச் சிறுபான்மையோராவர். தங்கள் எல்லைக்கு வெளியிலும் கூட தங்களுடைய அதிகாரத்தைப் பரப்பி தேசியமயமாக்கும் கொள்கையை நிறைவேற்றவும் ஒரு பொது பாஷை அத்தியாவசியமானதென்ற அபிப்பிராயமுடையவர்களே இக்கோஷ்டியினர். ஜனங்கள் ஜெர்மன் பாஷையைப் பேசும்படி அரசாங்கம் செய்துவிட்டால் எல்லாம் ஜெர்மன்மயமாகிவிடுமென்பது அவர்களுடைய எண்ணம். எனினும் ஒரு நீக்ரோவோ

அல்லது ஒரு சீனரோ ஜெர்மன் பாஷையைக் கற்றுக்கொண்டு பேச ஆரம்பித்துவிட்டால் அவர் ஜெர்மானியராகி விட முடியுமா? ஆனால் இவ்வுண்மை அச்சிறுபான்மையோருக்குப் புலப்படுவதில்லை. ஒரு சமூகத்தை உருவாக்குவது இரத்தமேயொழிய பாஷையல்ல. ஒரு சமூகத்தினரின் பாஷையை மற்றொரு சமூகத்தினர் பேசுவதன் மூலம் அச்சமூகத்தினரின் குணாதிசயங்களும் அவர்களுக்கு ஏற்பட்டுவிட முடியாது. கலப்பு இரத்தமின்றி சுத்த இரத்தமுள்ள எந்த சமூகத்தினரும் சரீர பலத்திலும் மனோபலத்திலும் அறிவிலும், ஆண்மையிலும் உயர்ந்து விளங்குவரென்பதில் சந்தேகமில்லை. கலப்பு இரத்தத்திலிருந்து உண்டாகும் சந்ததிகள் காலக்கிரமத்தில் சகல உயர்ந்த அம்சங்களும் குன்றி மறைந்தொழியுமென்பதிலும் சந்தேகமில்லை. கலப்பு இரத்தத்திலிருந்து உண்டாகும் சந்ததிகளும் சரி, க்ஷயரோகிகள், பரம்பரையான கர்மரோகிகள், அங்கஹீனர்கள், சரீர பலமும் மனோ பலமுமற்ற சோதாக்கள் முதலியோருக்குப் பிறக்கும் குழந்தைகளும் சரி, தெய்வீக அம்சங்கள் பொருந்திய மானிட வர்க்கத்தின் பெருமையையே சீர்குலைக்கும் சைத்தான்களாவர். எனவே ஜெர்மனி அத்தகைய விபரீதங்களுக்கு ஆளாகிவிடாது பார்த்துக் கொள்ள வேண்டியது அத்தியாவசியமாகும்.

இறுதியான ஒரு லட்சியத்தையடைய அரசாங்கம் ஒரு சாதனமேயன்றி, அதையே இறுதியான லட்சியமாகக் கருதுவது பெரும் தவறு. அரசாங்கத்தைச் சாதனமாகக் கொண்டு உயர்ந்த நாகரிகத்தை உருவாக்க வேண்டும். அரசாங்கத்தைச் சிருஷ்டிப்பவர்கள் மனிதர்களேயன்றி, மனிதர்களைச் சிருஷ்டிப்பது அரசாங்கமல்ல. நூற்றுக்கணக்கான சிறந்த அரசாங்கங்கள் இப்புவியிலிருக்கலாம். ஆயினும் நாகரிகத்தைச் சிருஷ்டிப்பவர்களும், பாதுகாப்பவர்களுமான ஆர்யர்கள் மறைந்து விட்டால், சிறந்த தேசங்களின் ஆத்துமார்த்தமான தேவைகளுக்கு இன்றியமையாத சகல கலாசாரங்களும் அவர்களுடன் மறைந்துவிடும் என்பதில் சந்தேகமில்லை. பின்னர் உயர்ந்த தத்துவங்களை அனுஷ்டிக்கும் சக்தியும் மறைந்துவிடும்.

உதாரணமாக, பூமியில் ஒரு மகத்தான பூகம்பமேற்பட்டு, கடலின் அலைகளிலிருந்து ஒரு புதிய ஹிமயமலை உற்பவிப்பதாக வைத்துக் கொள்வோம். மானிடரின் நாகரிகத்தை அடியோடு அழிக்க அத்தகைய பிரளயமொன்றே போதுமானது. அந்நிலையில் அரசாங்கம் அழிந்துவிடும். சகல ஒழுங்கும் சீர்குலைந்து விடும். ஆயிரக்கணக்கான வருஷங்களாக உருவாக்கப்பட்ட கலாசாரங்களெல்லாம் மறைந்துவிடும். எதுவும் மீதியிராது. எங்கு பார்த்தாலும் தண்ணீரும், சேறும் வெள்ளக்காடாகி நிற்கும். உயிர்களும் பொருள்களும்

அடியோடு அழிந்து, ஒரே மயானத்திடலாகும். எனினும் அத்தகைய பயங்கரமான பிரளயத்திற்குப் பின்னரும், மீண்டும் நாகரிகத்தை நிர்மாணிப்பதற்குற்ற சக்தி பொருந்திய ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சேர்ந்தவர்களில் சிலர் உயிர் தப்பிப் பிழைப்பார்களாயின், மறுபடியும் பூமியில் மானிடருக்குள்ள நிர்மாண சக்தியின் சின்னங்கள் தோன்ற ஆரம்பித்துவிடும். அதன் பயனாக, ஆயிரம் வருஷங்கள் சென்றாலும் கூட பழைய நிலைமை ஏற்பட ஹேதுவுண்டாகும். கலாசார சிருஷ்டி சக்தி வாய்ந்த சமூகத்தினரைச் சேர்ந்த ஒருவர்கூட தப்பிப் பிழைக்காவிட்டால்தான், இப்புவியானது வறண்ட பாலைவனமாக மாறும்.

கலாசார வளர்ச்சியில் திட்டமான முன்னேற்றத்தைக் கொண்டு வருவது அரசாங்கமல்ல. ஆனால் அத்தகைய முன்னேற்றத்திற்கு காரணஸ்தர்களான சமூகத்தினரை அரசாங்கம் பாதுகாக்க முடியும். அச்சமூகத்தினரின் இரத்தம், கலப்பு காரணமாக எவ்வளவுக்கெவ்வளவு அசுத்தமாகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு கலாசாரச் சீர்குலைவு ஏற்பட்டுவிடும். எனவே அவ்விதச் சீர்குலைவைத் தடுக்க முற்படாத அரசாங்கத்திற்கு இவ்வுலகில் வாழ உரிமையில்லை. அரசாங்கம் ஒரு கப்பல் போன்றது. சமூகங்கள், அதிலுள்ள சரக்குகள் போன்றவை. சரக்குகள் பாதுகாக்கப்படாவிடில் கப்பலால் என்ன பலன்?

தேசீய அபேதவாதிகளான எங்களுடைய அபிப்பிராயங்கள் இவைதான். அதனாலேயே நாங்கள் புரட்சிக்காரர்களெனப் பட்டம் சூட்டப் பெற்றுள்ளோம். எனினும் சத்தியத்தை ஆதாரமாகக் கொண்ட ஒரு கடமையை நாங்கள் செய்து வரும்போது, பிறரின் அங்கீகாரத்தையோ அல்லது ஆட்சேபனையையோ அனுசரித்து எங்கள் அபிப்பிராயங்களையும், நடவடிக்கைகளையும் நிர்ணயித்துக் கொள்வது கூடவே கூடாது. பிற்கால சந்ததிகள் எங்களுடைய தொண்டை அங்கீகாரம் செய்து போற்றுமென்பதே எங்கள் நம்பிக்கை.

அரசாங்கத்தின் உண்மையான பலமும், தேசத்தின் உண்மையான பலமும், இரத்தக் கலப்பற்ற உயர்ந்த சமூகத்திற்குப் பாதகமேற்படாமல் பாதுகாப்பதையே பொறுத்திருக்கின்றன. ஆனால் துரதிர்ஷ்டவசமாக ஜெர்மனியின் நிலைமை அவ்விதமில்லை. முப்பது வருஷ யுத்தத்திலிருந்து ஜெர்மனியின் 'சரீரத்தை' விஷமானது அரித்து வந்திருக்கிறது. நம் தேசத்தின் பாதுகாப்பற்ற திறந்த எல்லைகள், - ஜெர்மானியரல்லாதாருடன் சேர்க்கை, - ஜெர்மனிக்குள் அன்னியர் இரத்தக் கலப்பு. - இவை காரணமாக ஜெர்மனியின் தேசீய அரசாங்கமும் தேசீய ஆத்துமாவும் அழிக்கப்பட்டிருக்கின்றன.

இரத்த ஒற்றுமையிருந்தாலன்றி இன ஒற்றுமை ஏற்படுவதென்பது முடியாத காரியம். மகத்தான கஷ்ட காலங்களில் அழிந்துவிடாமல் தேசங்களைப் பாதுகாப்பதற்கு இன ஒற்றுமை இன்றியமையாதது. நெருக்கடியான சமயங்களில் சில்லறை வேற்றுமைகளை மறந்து பகைவர்களை ஏகோபித்து எதிர்க்கும்படி தூண்டுவது இன ஒற்றுமைதான். அவ்வித ஒற்றுமையால் மற்ற தேச ஜனங்கள் எவ்வளவோ பலனடைந்திருக்கிறார்கள். ஜெர்மன் ஜனங்களிடையும் அவ்வொற்றுமை நிலவியிருக்கும் பட்சத்தில் இன்று அவர்கள் உலகிற்கே எஜமானர்களாகி இருப்பார்கள். உலக சரித்திரமும் வேறுவிதம் மாறியிருக்கும். கண்மூடிகளான சமாதான வாதிகள் நம்புவது போல் வருந்துவதாலும், விம்முவதாலும், வேண்டிக் கொள்வதாலும் உண்மையான சமாதானம் ஏற்படாதென்பதும், உலகிற்கே எஜமானராகும் சக்தியும், உயர்ந்த நாகரிகத்தை நிலைநிறுத்தும் நிர்வாகத் திறமையுமுள்ள ஜனங்களின் வெற்றிவாள்தான் சமாதானத்திற்குற்ற உத்தரவாதமென்பதும் வெளியாகி இருக்கும்.

நமது லட்சியமானது எவ்வளவுக்கெவ்வளவு உயர்ந்ததாக இருக்கின்றதோ அவ்வளவுக்கவ்வளவு நாம் அடையும் வெற்றியும் பிரமிப்பை உண்டுபண்ணக் கூடியதாயிருக்கும். சரித்திரத்தின் படிப்பினை இதுதான். லட்சியமானது சரியான முறையில் வகுக்கப்பட்டு, அதையடைவதற்கான போராட்டமும் உறுதியுடன் நடைபெறுமாயின், அதன் மூலம் கிடைக்கும் வெற்றிதான் மிகச் சிறந்ததாயிருக்கும். போதுமென்ற மனமும், சோம்பேறித்தனமும், சுக வாழ்க்கையில் ஆசையுள்ளவர்கள் அத்தகைய வெற்றி பெற முடியாது. எவ்வளவு இடையூறு நேரினும் அச்சமின்றி ஓயாது உழைப்பவர்கள்தான் அதற்கு யோக்கியதையுடையவர்கள்.

சரீரமும், மனமும் தளர்ந்து கிடக்கும் சமூகத்திலிருந்து, புதிய கொள்கைக்காகப் போராடும் ஓர் இயக்கத்தில் சேர சிலர்தான் முன்வருவர். எனினும் அதற்காகச் சோர்வடைய வேண்டிய அவசியமில்லை. மகத்தான போராட்டங்களில் வெற்றி பெறுவோர் சிறுபான்மையாரே அன்றி, பெரும்பான்மையோரல்ல. உலக சரித்திர சம்பவங்களே சிறுபான்மையோரால்தான் உருவாக்கப்படுகின்றன. அச்சிறுபான்மையோர், தேச ஜனங்களின் உறுதி, சக்தி, முயற்சி இவைகளுக்குப் பிரதிநிதிகளாக இருக்கும்போது அவர்களால் ஆகாத காரியம் எதுவுமிருக்க முடியாது. தவிர, இடையூறுகள் அதிகமாக இருப்பது நிச்சயமான வெற்றிக்கு அறிகுறியே. அப்படியானால்தான் திடசித்தமுள்ளவர்கள் நம் இயக்கத்தில் சேருவார்கள். அவ்வித மனோ உறுதி, கலப்பு இரத்தமுள்ள சமூகத்தினருக்கு இருப்பதென்பது முடியாத காரியம். அப்படியே இருந்தாலும் அது காலக்கிரமத்தில் மறைந்துவிடும்.

கலப்பு இரத்தமுள்ளவர்களால் எவ்விதம் எதிர்கால சந்ததிகளின் சக்தி குறைந்து விடுகிறதோ, அதுபோலவே கர்ம ரோகிகள், பரம்பரை ரோகிகள், அங்கஹீனர்கள், வீர்யமற்றவர்கள் முதலியோரால் எதிர்கால சந்ததிகளுக்கு மிகுந்த அனர்த்தமே ஏற்படுகின்றது. இவ்விதம் கூறுவது கிருஸ்துவ மத தர்மத்திற்கு முரணானதென்று கூறும் மதப்பித்தர்களுமிருக்கின்றார்கள். சிறந்த தம்பதிகளுக்குப் பிறக்கும் குழந்தைகள்தான் கடவுளின் பிரதிபிம்பங்களென்பதையும், மேலே குறிப்பிட்டவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் குரங்குகளின் பிரதிபிம்பங்களென்பதையும் அந்த குருமார்கள் அறிந்து கொள்வதில்லை. குஷ்டர்களும், க்ஷயரோகிகளும், அங்கஹீனர்களும் குழந்தைகளைப் பெற்று அக்குழந்தைகளுக்குக் கஷ்டத்தையும், சமூகத்திற்கே துன்பத்தையும் விளைவிப்பதைக் காட்டிலும், பெற்றோர்களையிழந்து தவிக்கும் குழந்தைகளை அவர்கள் ஸ்வீகாரம் செய்து அவர்களுக்குத் தாங்கள் பெற்றோராகும்பட்சத்தில் எத்துணை நன்மை ஏற்படும்? அவ்விதமின்றி நொண்டியையும், சப்பாணியையும் பெற்று சமூகத்திற்கு இழிவையுண்டாக்குவது ஒரு பெருமையா? ஒரு தேச ஜனங்களுக்குக் குழந்தைகள்தான் மற்றெதையும் காட்டிலும் சிறந்த பொக்கிஷம். தேசம் செழித்துச் சீருடன் விளங்க ஆரோக்கியமுள்ள குழந்தைகள்தான் அத்தியாவசியம். எனவே ஆரோக்கியமற்ற குழந்தைகளைப் பெறுவதும், ஆரோக்கியமுள்ள குழந்தைகளைப் பெறாமலிருப்பதும் மகா பாவமாகும். அப்பாவத்தைத் தடுக்க வேண்டியது அரசாங்கத்தின் கடமை. ஆரோக்கியமுள்ள குழந்தைகள் உற்பத்தியாவதற்குற்ற நவீன வைத்திய முறைகளை எல்லாம் அரசாங்கம் கைக்கொள்ள வேண்டும். கர்ம ரோகிகளையும், பரம்பரை நோயாளிகளையும், சித்த சுவாதீனமற்றவர்களையும் மலடாக்கிவிட வேண்டும். ஆரோக்கியமுள்ள குழந்தைகளைப் பெறும் யோக்கியதை உள்ளவர்களுக்கு, அவர்கள் பணமுடையாலோ, பொருளாதார அசௌகரியங்களாலோ கஷ்டத்திற்கு உள்ளாகாதவாறு வசதிகள் செய்து கொடுக்க வேண்டும். யுவர்களானபின் கவனம் செலுத்துவதைக் காட்டிலும் குழந்தைகள் விஷயத்தில் அரசாங்கம் கவனம் செலுத்துவதன் மூலம் அளவற்ற நன்மை ஏற்படும். ஜனங்களில் சிலர் சரீர, மன நோய்களால் துன்புறும்படி நேருவதில் இழிவெதுவுமில்லை என்றும், எனினும் அத்தகையோர் குழந்தைகளைப் பெற்று அந்த நோய்களைத் தங்கள் வம்சத்தில் சிரஞ்சீவியாக இருக்கும்படி செய்வதுதான் மிகவும் ஆட்சேபகரமானதென்றும் அரசாங்கம் அவர்களுக்குப் போதிக்க வேண்டும். இம்முறைகளை அமுலுக்குக் கொண்டு வரும் விஷயமாக அரசாங்கம் சிலர் அல்லது பலரின்

போற்றுதலையோ அல்லது தூற்றுதலையோ லட்சியம் செய்யக் கூடாது. சரீர, மனநோயாளிகள், குழந்தை பெறுவதைத் தாங்களாகவே தடுத்துக் கொள்வார்களாயின் அவர்கள் பெரிதும் போற்றுதற்குரியவராவர். அவர்களை மலடாக்கும் முறையானது 600 வருஷ காலத்திற்கு அனுஷ்டிக்கப்பட்டு வருமாயின், அதன் பயனாக மானிட வர்க்கமே ஒரு மகத்தான துரதிர்ஷ்டத்திலிருந்து விடுதலையடையும். பின்னர் எவரது கற்பனைக்குமெட்டாத விதம் சமூகத்தில் ஆரோக்கியம் நிலவும்.

சமூகத்திற்காக அவ்விதம் தியாகம் செய்வது சாத்தியமான விஷயமே. உதாரணமாக, உலகில் ஆயிரக்கணக்கானவர்கள் தாங்களாகவே வலுவில் பிரம்மச்சரியத்தை அனுஷ்டிக்கவில்லையா? ஆத்துமார்த்த காரியத்தை முன்னிட்டு பிரம்மச்சாரியாக இருப்பதற்கும், சமூகத்தின் க்ஷேமத்தை உன்னி பிரம்மச்சாரியாக இருப்பதற்கும் அதிக வேற்றுமை எதுவுமில்லை. ஒரு காரியம் சமூகத்திற்கு மிகுந்த தீங்கு விளைவிப்பதை அறிந்தும்கூட, அதைத் தவிர்ப்பது அனுஷ்டான சாத்தியமல்லவென்று கூறிக்கொண்டு வாளாவிருப்பதைக் காட்டிலும் அறியாமையும், அட்டூழியமும் வேறில்லை. எத்துணை தியாகம் செய்ய வேண்டியிருப்பினும் அத்தீங்கை ஒழித்தே தீருவதென திட சங்கல்பம் செய்து கொண்டாலன்றி, அதையொழிக்க முடியாது. சமூகத்தையே நாசமாக்கும் கொடிய குடியிலிருந்து ஜனங்களை விடுவிக்க ஒரு கண்டமே போர் தொடுத்தாலும் கூட, அது அனுஷ்டான சாத்தியமல்லவென்று கூறி, அத்தகைய முயற்சியை இழிவுபடுத்தும் அயோக்கியர்களும், சோம்பேறிகளுமிருந்து கொண்டுதானிருக்கிறார்கள். அத்தகையோர் தங்களுடைய வாதத்திற்கு ஆதாரமாக வேதாந்தோபதேசம் செய்ய முன்வரவும் தயங்க மாட்டார்கள். எனவே அதையெல்லாம் கண்டு யாரும் கலங்கிவிடக் கூடாது. ஓர் அரசாங்கம் ஜனங்களுக்கு நன்மை செய்வதாயின், ஆரோக்கியமுள்ள குழந்தைகள் ஜனிப்பதற்கும் வகை கண்டே தீரவேண்டும். பலமும் ஆரோக்கியமுமுள்ள மனமானது கோயில் கொள்ள முடியுமென்ற தத்துவத்தை அரசாங்கம் அறிந்து கொள்ளவேண்டும். ஏதோ ஒன்றிருவர் விஷயத்தில் அது விலக்காக இருக்கலாமெனினும், பெரும்பாலோர் சம்பந்தப்பட்ட வரையிலும் அதுதான் நிரந்தர உண்மை.

அரசாங்கத்தின் முதற் கடமை, ஜனங்களைத் தேகப்பயிற்சி மூலம் திடகாத்திரர்களாகச் செய்வதுதான். இரண்டாவதாக அவர்களுக்கு ஒழுக்கமும், மனோ உறுதியுமேற்படும்படி செய்ய வேண்டும். அதற்கடுத்தபடியாகவே அறிவு வளர்ச்சிக்கான கல்வியளிப்பதில் கவனம் செலுத்த வேண்டும் திடகாத்திரமும், மனோ உறுதியுமில்லாதவர்கள் அடங்கிய ஒரு தேசத்திற்கு

அவர்களால் என்ன பலனேற்பட முடியும்? எப்போதுமே தனி நபரின் அல்லது ஜனங்களின் வாழ்க்கைப் போராட்டத்தில் திடசாலிகள் தோல்வியடைவதில்லை. அறிவுள்ள, ஆனால் மனோவலிமையற்ற நோஞ்சல்கள் வெற்றி பெறுவது கடினம். மற்றும் சரீர ஆரோக்கியமற்றவர்களுக்கு உயர்ந்த கல்வி போதிப்பதும் தவறாகும். சரீர திடமும், மனோபலமும் ஒருங்கே அமைவதுதான் மானிடர்க்கழகு. எனவே ஜனங்களின் தேகப்பயிற்சி விஷயத்தில் அரசாங்கம் முக்கிய கவனம் செலுத்த வேண்டியது முதற் கடமை. குழந்தைப் பருவத்திலிருந்து தேகப் பயிற்சி பெற்று வந்தால்தான் பிற்காலத்தில் ஏற்படும் கஷ்டங்களை அவர்கள் சமாளித்து நிற்க முடியும். அவ்விதம் தேகப் பயிற்சியளிக்கும்படி தாய்மார்களுக்கும், சகோதரிகளுக்கும் போதிக்க வேண்டும். ஜனங்களின் அரசாங்கமானது, பள்ளிக்கூடங்களில் தேகப் பயிற்சிக்கு அதிக நேரம் ஒதுக்கி வைக்க வேண்டும். அதை விட்டுவிட்டு குழந்தைகளின் மூளையில் தாங்க முடியாத சுமையை ஏற்றுவது மடத்தனமாகும். அவ்விதம் சுமத்துவதால் அவர்கள் சாரத்தை மறந்து சக்கையை ஞாபகத்தில் வைத்துக் கொள்வார்கள். ஏனெனில் தாங்கள் கற்கும் விஷயங்களில் எவை சாரம், எவை சக்கை என்பதைப் பாகுபாடு செய்து கொள்ளும் ஆற்றல் சிறு வயதிலேற்பட்டு விடாதல்லவா? இப்போது உயர்தரப் பள்ளிக்கூடங்களில் கூட வாரத்திற்கு இருமுறைதான் தேகப்பயிற்சி பாடம் வைத்திருக்கிறார்கள். அதிலிருந்து, மூளைக்கு வேலை கொடுக்கப்படும் கால அளவிற்கும், சரீரத்திற்கு வேலை கொடுக்கப்படும் கால அளவிற்குமுள்ள வேற்றுமையைத் தெரிந்து கொள்ளலாம். அவ்வித வேற்றுமையால் அனர்த்தமே ஏற்படும். அதற்கு மாறாக, தினசரி மாணவர்கள் காலையில் ஒரு மணி நேரமும், மாலையில் ஒரு மணி நேரமும் தேகப்பயிற்சி செய்துதான் தீரவேண்டுமென வற்புறுத்த வேண்டும். முக்கியமாகக் குத்துச்சண்டைப் பயிற்சியை அலட்சியம் செய்துவிடக் கூடாது. ராணுவ உணர்ச்சி அபிவிருத்தி அடைய குத்துச்சண்டைதான் இன்றியமையாதது. அதன் பயனாக சரீரம் தன்னிஷ்டப்படி எஃகு போல் வளைந்து கொடுக்கும். ஆரோக்கியசாலிகளான யுவர்கள் கடுமையான குத்துக்களைச் சகிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். அறிவுத்திறனால் பிறரைத் தோற்கடிப்பதுபோல், சரீர பலத்தினாலும் பிறரைத் தோற்கடிக்கும் ஆற்றல் பெற்றிருப்பதுதான் விசேஷமாகும். விளையாட்டுகள், பந்தயங்கள் முதலியவைகளில் கலந்து கொள்வது பலம், சுறுசுறுப்பு, துணிச்சல், வாழ்க்கையிலேற்படும் அசௌகரியங்களைச் சகிக்கும் சக்தி முதலியன ஏற்படுவதற்கே. இந்த அம்சத்தை நம் தலைவர்கள் அலட்சியம் செய்ததுதான் ஜெர்மனியின் வீழ்ச்சிக்குக் காரணம்.

ஏனெனில் நம் விரோதிகள் இரும்புப் பாளங்களை ஆயுதமாக உபயோகித்து வருகையில், அவர்களை எதிர்க்க நம் தலைவர்கள் அறிவாயுதத்தை உபயோகித்து வந்தார்கள்!

2574ம் (1914) வருஷ ஆரம்பத்தில் நம் சிப்பாய்கள் வெற்றி மேல் வெற்றி பெற்றதற்கு அவர்கள் பெற்ற தேகப் பயிற்சியே காரணம். தேகப் பயிற்சி எவ்விதம் அஞ்சா நெஞ்சம், உறுதி, கஷ்டங்களைச் சகிக்கும் சக்தி முதலியவைகளை உண்டுபண்ணுகிறதென்பதற்கு நம் ராணுவமே நிதர்சன உதாரணம். ஜெர்மனி தோல்வியடைந்ததற்கு ஜனங்களின் பலவீனம் காரணமேயன்றி, வீரர்களான நம் சிப்பாய்களல்ல. நம் சிப்பாய்களுக்கிருந்த சுய நம்பிக்கையும், உறுதியும் ஜனங்களுக்கிருந்திருக்குமாயின் ஜெர்மனி வீழ்ச்சியுற்றிராது. எனவே, குழந்தைப் பருவம் முதல் அத்தகைய சுய நம்பிக்கையேற்படும்படியான முறையில் நம் கல்வி முறை அமைக்கப்பட வேண்டும். அப்படியானால்தான் மீண்டும் சுதந்திரத்தைப் பெற முடியுமென்ற நம்பிக்கை ஜனங்களிடையே ஏற்பட்டு ஜெர்மனி புனருத்தாரணமடைய முடியும்.

பிரமாதமான வீழ்ச்சியிலிருந்து ஜெர்மானியர்களை மீண்டும் உத்தாரணம் செய்வது, பெரு முயற்சியின்றி முடியாது. நம்மைப் பிணைத்திருக்கும் அடிமைச் சங்கிலியை அறுத்து அத்துண்டுகளை எதிரிகளின் முகங்களில் வீசியெறிய நாம் சக்தி பெற வேண்டும். எல்லையற்ற தேசீய உத்வேகமும், சுதந்திர தாகமுமின்றி அந்த மகத்தான காரியத்தைச் சாதிக்க முடியாது. எனவே தோள் வலிமை அவசியம். கத்தி கொண்டு பிளந்தாலும், கட்டுவிடாத உடலுறுதி வேண்டும்!

மற்றும் உடை விஷயத்திலும் நம் யுவர்கள் சீர்திருந்த வேண்டும். இன்று அவர்கள் நவீன நாகரிக உடைகளில் மயக்கங் கொண்டிருப்பதைக் காண கண்றாவியாக இருந்து வருகிறது. நம் யுவர்கள் திடசரீரத்துடன் கட்டழகர்களாக இராததால்தான், ஆயிரக்கணக்கான நம் பெண்களை யூதர்கள் மயக்க முடிந்திருக்கிறது. எவ்விதத்தில் நோக்கினும், தேகப் பயிற்சி அத்தியாவசியமென்பது தெரிகிறது. நம் பெண்கள் சிப்பாய்களைத்தான் விரும்புகின்றனரேயன்றி, சிப்பாய்களல்லாதாரை விரும்புவதில்லை என்பதையும் கவனித்து சகலரும் அதற்குற்றவாறு நடந்துகொள்ள வேண்டும். ஜனங்களை திடசாலிகளாகச் செய்யாத அரசாங்கமானது தன் கடமையிலிருந்து தவறியதாகின்றது. யுவர்கள் கல்விச் சாலைகளையும், கலாசாலைகளையும் விட்ட பின்னர்கூட தேகப் பயிற்சியை அலட்சியம் செய்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டியதும் அரசாங்கத்தின் கடமை. அப்படியானால்தான் அவர்கள் பின்னர் தகுந்த ராணுவப் பயிற்சி பெறுவதற்கு

வசதியாக இருக்கும்.

ராணுவப் பயிற்சியின் பயனாக நம் இளைஞர்கள் மேலதிகாரிகளிடம் கீழ்ப்படிந்து நடப்பதற்கு மாத்திரமல்ல, தான் அப்பதவிக்கு வரும்போது அதிகாரம் செய்வதற்கும் கற்றுக் கொள்ள வேண்டும். மேலதிகாரிகள் நியாயத்துடனோ அல்லது நியாயமின்றியோ தன்னைக் கண்டித்தாலும் மௌனமாக இருக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். ராணுவப் பயிற்சி முடிந்தபின் அவர்களுக்கு இருவித நற்சாட்சிப் பத்திரங்கள் அளிக்க வேண்டும். ஒன்று, பொது விஷயங்களில் கலந்து கொள்ள அவர்களுக்கு உரிமையளிப்பது; மற்றொன்று, அவர்கள் நல்ல ஆரோக்கியம் உள்ளவர்கள் என்பதையும், விவாகம் செய்து கொள்ளத் தகுதியுள்ளவர்களென்பதையும் அறிவிப்பது.

பெண்களுக்கும் மேலே குறிப்பிட்டபடி கல்வியும் தேகப்பயிற்சியும் அளிக்க வேண்டும். எனினும் அவர்களுடைய வாழ்க்கையின் ,இறுதியான லட்சியம் குழந்தைகள் பெற்றுத் தாய்மார்களாவதே என்பதை மறந்துவிடக் கூடாது.

பொறுப்பற்ற முறையில் பேசாமலிருக்கவும் ரகசியங்களை வெளியிடாதிருக்கவும், கோட் சொல்லாமலிருக்கவும் யுவர்களுக்குப் போதிக்க வேண்டும். பொறுப்பற்ற முறையில் பிறரைப் பற்றிப் பேசுவதால் எண்ணிக்கையற்ற நஷ்ட ஈடு வழக்குகளேற்படுகின்றன. ரகசியங்களை வெளியிடுவதால் தேசத்திற்கு மிகுந்த பாதகமுண்டாகின்றது. அதிலும் ராணுவ ரகசியங்களைப் பாதுகாக்கக் கற்றுக் கொள்ள வேண்டியது அத்தியாவசியமானது. யுத்த காலத்தில் அனாவசியமாகப் பேசுவதாலும் ரகசியங்களை வெளியிடுவதாலும் படுதோல்விகளும் ஏற்படக் கூடும். தன் நண்பன் மீது கோட் சொல்லி அவனுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் குணமுள்ள ஒருவன், தேசத்திற்கு விரோதமாக நடந்துகொண்டு அதைக் காட்டிக் கொடுக்கத் தயங்கான். எனவே குழந்தைப் பருவத்திலிருந்தே அத்தகைய விபரீத குணங்கள் வளர்ச்சி பெறாது தடுத்து நற்குணங்களை அபிவிருத்தி செய்ய வேண்டும். மற்றும் விசுவாசம், தியாகம், சமயோசிதமாக மௌனம் சாதிப்பது முதலிய குணங்கள் அபிவிருத்தி அடையும்படியும் செய்ய வேண்டும். புகார் கூறாது சரீர வேதனையையும் காயத்தையும் பொறுக்கும் சக்தியையும் வளர்க்க வேண்டும்.

2578ம் (1918) வருஷம் நவம்பர், டிசம்பர் மாதங்களில் ஜெர்மன் சக்ரவர்த்தியிலிருந்து கீழ்த்தர ராணுவ அதிகாரி வரை, எவரும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளத் துணியவில்லை. அதற்குக் காரணம் நம் கல்வி முறையின் ஊழலே. எனவே நெருக்கடியான சமயத்தில் காலதாமதமின்றி உறுதியான தீர்மானத்திற்கு வரவும்,

தான் சொந்தத்தில் பொறுப்பை ஏற்றுக் கொள்ளவும் சகலரும் பயிற்சி பெற வேண்டும். "வெற்றி கிடைக்குமென 51 சதவிகிதம் நிச்சயமாகத் தெரிந்தால்தான் நான் அக்காரியத்திலிறங்குவேன்" என்று ஒரு ஜெர்மன் தளபதி கூறினார். அதைக் காட்டிலும் தவறான மனோநிலைமை வேறெதுமிருக்க முடியாது. இறுதிவரை வெற்றி கிடைக்காதென்று தோன்றும் ஒரு காரியத்தில், கடைசி க்ஷணம் வெற்றி கிடைப்பதுண்டு. தவிர, ஒரு குறிப்பிட்ட காரியத்தில் வெற்றி கிடைக்குமா, கிடைக்காதாவென்பதைக் கடைசி வரையில் எவரும் கூற முடியாது. ஒருவருக்குப் புத்துரண நோய் கடுமையாகி விட்டதாக வைத்துக் கொள்வோம். அந்நிலைமையில் மரணம் நிச்சயந்தான். அப்போது 51 சதவிகிதம் வெற்றி கிடைப்பதாக இருந்ததால்தான் அவருக்கு ரண சிகிச்சை செய்வதென்றால், அது உருப்பட்டுவரக் கூடிய காரியமா? 1/2 சதவிகிதம் வெற்றி கிடைப்பதாக இருந்தாலும் கூட தைரியமுள்ளவன் ரண சிகிச்சை செய்தே தீருவான். இறுதியில் வெற்றி கிடைக்காவிடினும் அதற்காக அவன் வருந்த மாட்டான்.

எதிர்கால வாழ்க்கையில் எவ்வித பலனையும் கொடுக்காத விஷயங்களை மாணவர்களுக்குப் போதிப்பது, அனாவசியமான விஷயங்களை மொந்தையுருப்போட்டு மனப்பாடம் செய்து கொள்வது போன்ற ஊழல்களையும் ஒழிக்க வேண்டும். ஜெர்மனியைப் போல் வேறெந்த தேசத்திலும் சரித்திர பாட போதனை இவ்வளவு மோசமாக இல்லை. சரித்திர பாட போதனையின் கருத்தை மாணவர்கள் அறிந்து கொள்வதில்லை. சில குறிப்பிட்ட தேதிகளையும், ஜனன மரண வருஷங்களையும் மனப்பாடம் செய்து கொள்கிறார்கள். சரித்திரத்தின் சாரமான அம்சங்களை விட்டுவிட்டு சக்கைதான் அவர்களுக்குப் போதிக்கப்படுகிறது. சென்ற காலத்தில் என்ன நேர்ந்ததென்பதை அறிந்துகொள்வது முக்கியமல்ல, அச்சம்பவமானது எதிர்காலத்தில் நமக்கு ஒரு படிப்பினையாக இருக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். சரித்திர பாட போதனையின் லட்சியம் அதுதான். சரித்திர ஆராய்ச்சி பண்டிதர்களுக்கு தேதிகள், வருஷங்கள் முதலிய விவரங்கள் முக்கியமானவை எனினும், மற்றத் துறைகளில் ஈடுபடக் கூடிய மாணவர்கள் அவ்விவரங்களையெல்லாம் உருப் போட்டு ஏன் மூளையை உடைத்துக் கொள்ள வேண்டும்? குறிப்பிட்ட விஷயங்களையொட்டி விசேஷ ஆராய்ச்சியில் ஈடுபடுவோரைத் தவிர, மற்றவர்கள் சகல பாடங்களையும் ஒட்டிய முக்கியமான அம்சங்களை மாத்திரம் தெரிந்து கொண்டால் போதும். அவர்கள் மீதியுள்ள நேரத்தை தேகப் பயிற்சி, ஒழுக்கப் பயிற்சி, மனோவலிமையை அபிவிருத்தி செய்து கொள்வது, நெருக்கடியான சமயத்தில் அச்சமும்,

தடுமாற்றமும், தாமதமுமின்றி உறுதியுடன் ஒரு முடிவிற்கு வரும் முதலியவைகளில் ஈடுபடுவோர்களாயின், ஆற்றலை வளர்ப்பது அவர்களுக்கு மாத்திரமல்ல, அவர்களுடைய எதிர்காலத்தில் தேசத்திற்கே அளவற்ற நன்மையுண்டாகும்.

கைத்தொழில், ரசாயனம் முதலியவைகளால் ஆக்கிரமிக்கப் பட்டுள்ள இவ்வுலகில் விஞ்ஞான சம்பந்தமான அறிவும் வேண்டியது அவசியமென்றாலும், தேசத்தின் உயர்ந்த க்கு அது அஸ்திவாரமல்ல என்பதுடன், அந்த அறிவை அஸ்திவாரமாகக் கொள்வது ஆபத்தாகவும் முடியும். ஒரு தேசத்தின் உண்மையான தற்காப்பு அதன் ஆயுத பலத்தில் இல்லை, ஜனங்களிடமே இருக்கிறது. அபார பலம் பொருந்திய கோட்டைகளும் கொத்தளங்களும் ஒரு தேசத்தைக் காப்பாற்றிவிட முடியா. வீர விடுதலைக் காதலும், தேச ஆவேச உணர்ச்சியும் நிறைந்த ஆடவர்களும் பெண்களுமடங்கிய உயிர்ச்சுவர்தான் தேசத்தை ரக்ஷிக்க வல்லது. ஒவ்வொரு சிறுவனம், சிறுமியும் பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேறுகையில், தான் ஒரு சமாதானவாதியென்றோ, ஜனநாயகவாதி என்றோ, அல்லது வேறேதாதொரு வாதியென்றோ நினைக்கக் கூடாது. "நான் களங்கமற்ற, அந்தரங்க சுத்தியுள்ள ஒரு ஜெர்மானியன்" என்று மார்தட்ட வேண்டும். அவர்களுக்கு தேச பக்தியானது ஒரு போர்வையாக இருக்கக் கூடாது, இரத்தத்துடன் கலந்திருக்க வேண்டும். அப்படியானால்தான் அவர்கள் தேச்த்திற்காக உயிர்த் தியாகம் செய்வதையும் பொருட்படுத்த மாட்டார்கள். அவ்வித தேசபக்தியும், அறிவுமேற்பட சமூகத்தின் இரத்தம் களங்கமற்றிருக்க வேண்டியது அத்தியாவசியம். நாய், குரங்கு முதலிய மிருகங்களைப் பழக்கி குறிப்பிட்ட காரியங்களைச் செய்யக் கற்றுக் கொடுப்பது போல், கீழ்த்தர சமூகத்தினரையும் அவ்வாறு பழக்கி பல துறைகளிலும் பங்கெடுத்துக் கொள்ளும்படி செய்யலாம். இருந்தாலும் அதே சிரமத்தை உயர்ந்த சமூகத்தினர் விஷயத்தில் எடுத்துக் கொண்டால் ஆயிரம் மடங்கு அதிக பலனேற்படும். இயற்கையான திறமையும் அறிவுமுள்ளவர்கள் கல்வி வசதியின்றி வீணாகும்படி விட்டுவிடக் கூடாது. அவ்விதம் செய்வதால் தேசத்திற்கு மகத்தான நஷ்டமேற்படும். பரம ஏழையாயினும் ஒருவனுக்கு இயற்கைத் திறமையிருக்குமாயின், அவனுக்கு அரசாங்கம் எவ்வளவு தூரம் உயர்ந்த கல்வியளிக்க முடியுமோ, அவ்வளவு தூரம் அளித்து அவனைச் சமூகத்திற்கே ஓர் அணிகலனாகச் செய்து விட வேண்டும். இயற்கைத் திறமை வாய்ந்த ஒருவர்கூட பொருளாதார கஷ்டம் காரணமாக கல்வி கற்காமலிருந்து விடுவதை அரசாங்கம் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது. எவ்வளவு ஏழையாயினும், திறமையுள்ளவர்கள் உயர்தரக் கல்வி கற்கவும், உயர்ந்த பதவிகளுக்கு வரவும் சகல வசதிகளும்

அளிக்கப்பட வேண்டும். அவ்வாறு அளித்தால்தான் தேசம் ஏராளமான சிறந்த தலைவர்களைப் பெறுவது சாத்தியமாகும். அவ்விதமானால்தான் தலைவர்களுக்கும் பாமர ஜனங்களுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுவதும் சாத்தியம். தலைவர்களுக்கும் பாமர ஜனங்களுக்கும் நெருங்கிய சம்பந்தம் ஏற்பட்டால்தான் பரஸ்பரம் ஒருவரையொருவர் நன்கு அறிந்து கொண்டு பயன் பெற முடியும். பாமரர்களிடையிலிருந்து வரும் தலைவர்களுக்குத்தான் பெரிதும் மன உறுதியும், துணிச்சலும், அபார சக்தியுமிருக்கின்றன. அக்குணங்களின்றி மிதமிஞ்சிய அறிவுமாத்திரம் படைக்கப் பெற்ற தலைவர்கள், நெருக்கடியான சமயத்தில் தேசத்தைக் கைவிட்டு விடுகிறார்களென்பதை நாம் நிதர்சனமாகப் பார்த்துள்ளோம்.

சமுதாயத்தில் ஒருவருடைய அந்தஸ்தை அவரது சம்பளத்தைக் கொண்டு நிர்ணயிக்கும் வழக்கமும், சரீர உழைப்பு சம்பந்தமான வேலைகளை இழிவாகக் கருதும் வழக்கமும் ஒழிய வேண்டும். ஒருவருடைய சம்பளம் என்னவாயினும், அவரது அலுவல்களால் சமூகம் எவ்வளவு தூரம் பலனடைகிறதென்பதை ஆதாரமாகக் கொண்டே அவரது அந்தஸ்தை நிர்ணயிக்க வேண்டும். எந்த வேலையின் தன்மையையும் அதன் ஸ்தூல, சூக்ஷ்ம பலனைக் கொண்டே அளவிட வேண்டும்.

சரீர உழைப்பாளிகளின் சம்பளத்திற்கும் மூளை உழைப்பாளி களின் சம்பளத்திற்கும் மிதமிஞ்சிய வேற்றுமையிருக்கக் கூடாது. அதிக சம்பளம் கொடுத்தாலன்றி அறிவாளிகள் கிடைக்க மாட்டார்களென்று கூறும் வாதம் உண்மைக்குப் புறம்பானது. உலகில் கலாசாரம், விஞ்ஞானம் முதலிய பல்வேறு துறைகளிலும் அபூர்வ விஷயங்களைச் சிருஷ்டித்தவர்களும், கண்டுபிடித்தவர்களும் யார்? பண ஆசை கொண்டவர்களல்ல, தியாகிகள்தான். பணத்தைக் காட்டிலும் பெரிய கடவுள் இவ் வுலகத்தில் இருப்பதை எவரும் மறந்துவிடக் கூடாது. மானிடரின் வாழ்க்கையைச் சிறப்புச் செய்வது பணமும் சொத்துமல்ல. பணமே பிரதானமென்று கட்டியழும் கயவர்கள் கூட்டத்தால் ஒரு தேசம் அதோகதியாகுமேயன்றி, உத்தாரணமடைய முடியாது. மிகவும் சாதாரண வேலை செய்யும் ஒரு தொழிலாளி கூட கௌரவமாகவும், கண்ணியமாகவும் ஜீவனத்தை நடத்தச் சந்தர்ப்பமளிக்க வேண்டும். இதெல்லாம் அனுஷ்டான சாத்தியமல்ல வென்று கூறுவதும் சரியல்ல. ஆதி முதல் மானிட வர்க்கம் அவ்விதம் கூறிக்கொண்டு வாளாவிருந்திருக்கும் பட்சத்தில் இன்று இவ்வளவு தூரம் முன்னேற்றமடைந்திருக்க முடியாது. சமூகத்திலுள்ள குறைகளை ஒழிக்க இடைவிடாது முயற்சி செய்ய வேண்டுமே அன்றி எவ்விஷயத்தையொட்டியும் அனுஷ்டான சாத்தியமல்ல என்ற எண்ணத்திற்கு இடங்கொடுக்கவே கூடாது. இன்று அனுஷ்டான

சாத்தியமற்றதெனத் தோன்றும் ஒருமுறை, நாளை அனுஷ்டான சாத்தியமாகிவிடும். எத்துணையிலும் விடாமுயற்சி பலனைக் கொடுத்தே தீரும். சட்ட நிர்வாகத்தில் தவறுகளேற்படுகின்றன என்பதற்காக நீதிமுறையையோ, எல்லையின்றி நோய்களிருந்து வருவதற்காக வைத்திய சாஸ்திரத்தையோ உதறித் தள்ளிவிட முடியுமா? எனவே எந்த உயர்ந்த கொள்கையையும் அனுஷ்டான சாத்தியமல்லவென்று கைவிட்டு விடக்கூடாது. எவ்வளவு உயர்ந்த லட்சியங்களாயினும் அவைகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர முடியுமென்ற நம்பிக்கையுடனேயே முன் செல்ல வேண்டும். அதுபோலவே இணையற்ற பெருமையுடன் ஜெர்மன் சாம்ராஜ்யத்தைப் புனருத்தாரணம் செய்ய முடியுமென்பதில் பூர்ண நம்பிக்கையுடன் நாம் முயற்சி செய்ய வேண்டும்.





# 3. ஜன அரசாங்கத்தின் அம்சங்கள்

அரசாங்கம் ஜனங்களை இரு பிரிவுகளாகப் பிரிக்கின்றது: 1. சுதந்திரப் பிரஜைகள், 2. அன்னியர்கள். பிறப்பு காரணமாகவோ அல்லது அத்தேச பிரஜையாக மாறுவதன் மூலமோ பூர்ண பிரஜா உரிமைகள் பெற்றிருப்போரே சுதந்திரப் பிரஜைகள். வேறு தேசத்தில் அத்தகைய உரிமைகளுடையோர் அன்னியர்கள். இவ்விரு பிரிவுகளிலும் சேராத ஒரு கோஷ்டியுமுள்ளது. அக்கோஷ்டியினர் ஒரு தேச வாசியுமல்ல, அவர்களுக்கு ஓரிடத்திலும் பிரஜா உரிமைகளுமில்லை.

ஒருவர் ஒரு தேச எல்லைக்குள் பிறந்தால் அவர் அத்தேசத்தில் பிரஜா உரிமைகள் பெற்றவராகி விடுகின்றார். அச்சந்தர்ப்பத்தில் அவர் எந்த வர்ணத்தினர், எத்தேசத்தினர் என்ற பிரச்னையே எழுவதில்லை. ஜெர்மன் காலனியொன்றில் வசித்த நீக்ரோவின் குழந்தையானது ஜெர்மனிக்கு வந்து இங்கு வசிக்க ஆரம்பிக்குமாயின், அது ஜெர்மன் பிரஜையாகவே கருதப்படுகின்றது. அதுபோலவே, யூதர், போலீஸ்காரர், ஆப்பிரிக்கர் அல்லது ஆசியாக்காரரின் குழந்தைகள் ஜெர்மனியில் வசிக்க வருமாயின் ஜெர்மன் பிரஜைகளாகி விடுகின்றன.

ஒருவர் ஒரு தேசத்தில் பிறந்தால் அத்தேசப் பிரஜையாகின்றார். எனினும் வேறு தேசத்தில் பிறந்தவர்களும் அத்தேசத்திற்கு வந்து அதன் பிரஜைகளாக மாறலாம். அத்தகையோர் சாதாரணமாக பல்வேறு நிபந்தனைகளுக்குட்பட வேண்டியிருக்கும். உதாரணமாக அவர்கள் திருடர்களாகவோ, பண விஷயத்தில் அரசாங்கத்திற்குப் பாரமாகவோ இருக்கக் கூடாது. இது போன்ற நிபந்தனைகளைத் தவிர, அவர்களுடைய வர்ணம் முதலிய மற்ற விஷயங்களைப் பற்றி யாரும் எதுவும் கவனிப்பதில்லை. அவ்விதம் கடவுளும் செய்ய முடியாத ஒரு காரியத்தை அரசாங்கத்தின் தலைவர் மந்திர சக்தியினால் செய்வது போல் தம்முடைய பேனா முனையினால் செய்து விடுகின்றார்! அவரது வர்ணத்தைப் பற்றியோ, ஆரோக்கிய நிலைமை பற்றியோ எதுவும் விசாரிக்கப்படுவதில்லை. அவர் துன்மார்க்க வியாதியால் பீடிக்கப்பட்டவராயினும், அதைப் பற்றி யாரும் கவலைப்படுவதில்லை. அவ்விதம் ஒரு தேசத்தில் வருஷா வருஷம் விஷமானது பிரமாதமாகப் பரவி விடுகின்றது.

ஒரு பிரஜைக்கும் அன்னியருக்குமுள்ள மற்றொரு வேற்றுமை என்னவெனில், பிரஜைக்கு அத்தேசத்திலுள்ள சகல அரசாங்க உத்தியோகங்களிலும் உரிமையுண்டு. அவர் ராணுவத்திலும் சேரலாம், பொதுத் தேர்தல்களிலும் கலந்து கொள்ளலாம்.

இதைத் தவிர மற்றபடி ஒரு பிரஜைக்கு எவ்வளவு சுதந்திரமும், உரிமைகளுமுண்டோ அவ்வளவு அன்னியருக்கும் உண்டு. இப்போது ஜெர்மன் குடியரசு ஆட்சியிலிருந்து வரும் நிலவரம் இதுதான்.

நான் இவ்வாறு கூறுவது எவருக்கும் பிடிக்காதென்பதை அறிவேன். இருந்தாலும் ஜெர்மன் பிரஜா உரிமைச் சட்டம் போன்று தர்க்கவாதத்திற்குப் பொருத்தமின்றியும், பைத்தியக்காரத்தனமாகவுமுள்ள ஒரு விஷயத்தை வேறெங்குமே காண முடியாது.

இன்றுஇவ்வுலகில்மாத்திரம்ஒருதேசம்அவ்விஷயத்தையொட்டி ஓரளவு புத்திசாலித்தனமாக நடந்து கொண்டு வருகின்றது. அதன் சம்பந்தமாக அமெரிக்கா பகுத்தறிவை உபயோகித்து வருகின்றது. ஆரோக்கியம் மோசமாக இருப்பவர்களை அமெரிக்க அதிகாரிகள் தங்கள் நாட்டில் குடியேற அனுமதிப்பதில்லை. மற்றும் சில குறிப்பிட்ட வர்ணத்தினருக்கு அமெரிக்கப் பிரஜையாக மாற உரிமையில்லை என்றும் விதித்திருக்கிறார்கள்.

ஜெர்மனியிலும் ஜனங்களின் அரசாங்கமானது அவை போன்ற நிபந்தனைகளையே வகுக்க வேண்டும். ஜெர்மன் அரசாங்கம், ஜனங்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்க வேண்டும். அவையாவன: சுதந்திரப் பிரஜைகள், சாதாரணப் பிரஜைகள், அன்னியர்கள்.

ஒருவர் ஜெர்மனியில் பிறந்தவரென்பதற்காக அவர் சகல பிரஜா உரிமைகளும் பெற்றவராகிவிட மாட்டார். அவர் தேசத்தின் பிரஜையென்பதைத் தவிர, அவருக்கு அரசாங்கத்தில் உத்தியோகங்களை வகிப்பதற்கோ அல்லது தேர்தலில் ஈடுபடுவது போன்று அரசியல் வாழ்க்கையில் கலந்து கொள்வதற்கோ உரிமையிருக்கக் கூடாது. மற்றும் ஒவ்வொரு பிரஜையும் தான் எந்த வர்ணத்தவரென்பதையும், எந்த தேசத்தினரென்பதையும் ருஜூப்பிக்க வேண்டும். அவருக்கு எச்சமயத்திலும் தன் சொந்த தேசத்தின் பிரஜையாக மாறவும் உரிமையுண்டு.

ஜெர்மன் தேசத்தைச் சேர்ந்த ஒவ்வொரு சிறுவனும், சிறுமியும், பள்ளிக்கூடக் கல்வியைப் பூர்த்தி செய்துதான் தீரவேண்டும். பள்ளிக் கூடத்தை விட்டபின், ஆடவர்கள் அரசாங்கச் சட்டத்தையனுசரித்து தேகப் பயிற்சியில் ஈடுபட வேண்டும். அதன்பின் ராணுவத்தில் சேர வேண்டும். ராணுவப் பயிற்சி முடிந்தபின், ஆரோக்கியமும் ஒழுக்கமும் திருப்திகரமாக இருக்கிறதென நற்சாட்சிப் பெறும் ஒவ்வொரு யுவருக்கும் மாத்திரமே பிரஜா உரிமைகள் வழங்கப்படும். அந்த நற்சாட்சிப் பத்திரம்தான், ஒவ்வோர் இளைஞரும் ஆயுள்வரையில் காப்பாற்ற வண்டிய ஓர் அரிய பொக்கிஷமாக இருக்கும்.

அப்பத்திரமுடையவர்களுக்கு சகல பிரஜா உரிமைகளும் உண்டு. அத்தகையோருக்கும், ஜீவனத்திற்காகக் குடியேறியுள்ள மற்ற பிரஜைகளுக்கும் வித்தியாசமிருக்க வேண்டும். நற்சாட்சிப் பத்திரம் பெறும்போது ஒவ்வொருவரும் தேசத்தினிடமும், சமூகத்தினிடமும் விசுவாசப் பிரமாணம் செய்து கொள்ள வேண்டும். அந்த நற்சாட்சிப் பத்திரங்கள் தேசத்திலுள்ள பல்வேறு பிரிவினரையும் ஒன்றுபடுத்தும் பந்தமாக இருக்கும். அன்னிய தேசத்தில் மன்னராக இருப்பதைக் காட்டிலும் ஜெர்மனியில் ஒரு தோட்டியாக இருப்பதே கௌரவமென்ற உணர்ச்சி ஒவ்வோர் உண்மையான ஜெர்மானியரின் மனதிலும் உதயமாக வேண்டும். எனினும் அத்தகையோர் கௌரவமின்றியோ ஒழுக்கமின்றியோ நடந்து கொண்டாலும், அல்லது இழிவான குற்றங்கள் செய்தாலும் அவர்களுடைய பிரஜா உரிமைகள் பறிமுதல் செய்யப்பட வேண்டும். பின்னர் அவர்களை, அன்னிய நாட்டிலிருந்து வந்து குடியேறியுள்ள பிரஜைகளைப் போலவே கருத வேண்டும்.

ஜெர்மன் பெண்கள் விவாகம் செய்து கொண்ட பின்தான் பூர்ண பிரஜா உரிமைகளைப் பெற முடியும். எனினும் சுதந்திரமாக ஜீவனத்தை நடத்தும் ஜெர்மன் பெண்களுக்கு சகல பிரஜா உரிமைகளையும் பெற யோக்கியதை உண்டு. இவையெல்லாம் ஜன அரசாங்கத்தின் அம்சங்களாகும்.





# 4. ஜன அரசாங்க தத்துவம்

யாரால் தேசமானது உருவாகின்றதோ அவர்களுடைய கல்வி அபிவிருத்தியிலும், வாழ்க்கை அபிவிருத்தியிலும் கவனம் செலுத்த வேண்டியது தேசிய அபேதவாத ஜன அரசாங்கத்தின் முக்கிய கடமையெனில், அக்கடமையை நிறைவேற்றுவதற்கு உள்ளவாறு அது தன் ஸ்தாபனத்தை அமைத்துக் கொள்ள வேண்டும். சகல மனிதரும் சமமானவர்களே என்ற மார்க்ஸ் கொள்கையை ஓர் புறம் எதிர்த்து வாதாடுவதுடன், மற்றொருபுறம் தான் வகுத்துள்ள கொள்கையை நிறைவேற்றுவதற்கான முயற்சிகளையும் செய்து வரவேண்டும். அவ்விதமின்றி ஒரு குறிப்பிட்ட சமூகத்தினர் என்பதற்காக ஒருவரைப் புகழ்வது மடத்தனமாகும். ஒரு சமூகம் எவ்வளவு உயர்ந்ததாயினும் அதைச் சேர்ந்த சகலரும் முதல்தர மூளை படைத்தவர்களாக இருக்க முடியாது. ஒருவருடைய மூளைக்கும் மற்றொருவருடைய மூளைக்கும் எவ்வளவோ விதத்தில் வித்தியாசமிருந்தே தீரும். எனவே யாரிடம் அந்த சமூகத்தைச் சேர்ந்த குணாதிசயங்கள் அதிகமாக இருக்கின்றனவோ, அத்தகையோருக்கு உற்சாகமளித்து அவர்களின் தொகையைப் பெருக்க முயற்சிக்க வேண்டும். அவ்விதம் பெருக்கினால்தான் தேசம் சிறந்து விளங்க முடியும்.

இவ்வுலகில் மகத்தான சாகஸ காரியம் ஒவ்வொன்றும் ஒவ்வொருவருடைய மூளையிலிருந்து உதயமானதே. அதாவது ஒவ்வொரு அற்புத விஷயத்திற்கும் மூலகர்த்தா தனி நபரேயன்றி, பலரல்ல. உதாரணமாக, சிறந்த ராணுவ தந்திர முறையொன்றை முதலில் ஒருவர் கண்டுபிடிக்கிறார். பின்னர் அது ஒரு சம்பிரதாயமாக வந்து விடுகின்றது. கல்லிலிருந்து ஆயுதத்தையும், மிருகங்களைத் தனக்கு ஊழியம் செய்யும்படியான யுக்தியையும் முதலில் கண்டுபிடித்தவர் தனிநபர்தான். மிருக உலக மட்டத்திலிருந்து மானிட வர்க்கத்தை உயர்த்தியவை அத்தகையோரின் ஆராய்ச்சி வெற்றிகளே. ஆதியில் பெற்ற ஆராய்ச்சி வெற்றியே இன்று விஞ்ஞான உலகிற்கேற்ப பக்குவமடைந்திருக்கிறது. ஆரண்ணியத்தில் வேட்டையாட அன்றைய மனிதன் வில்லையும், அம்பையும் தூக்கிச் சென்றான். மனிதன் கண்டுபிடிக்கும் ஒவ்வொன்றும் அவனது வாழ்க்கைப் போராட்டத்திற்கு உதவியாக இருக்கின்றது. அவனது ஆக்க சக்தியே அவனை உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்திருக்கிறது. அவ்வாறு கண்டுபிடித்த மேதாவிகளே மானிட வர்க்கத்தின் போஷகர்கள். அவர்களுடைய ஊழியம் காரணமாக கோடிக்கணக்கானவர்கள் பலனடைந்திருக்கின்றனர்.

ஸ்தூல விஷயங்களில் அத்தத்துவம் எவ்வளவு உண்மையோ,

அது போலவே சூக்ஷ்மமான கொள்கைகள் விஷயத்திலும் அதே தத்துவம் உண்மையாகும். சமூகமானது அத்தகைய தனி நபருக்கு கௌரவ ஸ்தானமளிக்க வேண்டும். ஸ்தாபனக் கொள்கையின் முக்கிய நோக்கமும் அஃதே. ஓர் உயர்ந்த கொள்கையைக் கண்டுபிடிப்பதும் ஒரு தனி நபரேயன்றி பெரும்பான்மையோரல்ல. ஆகையால் நம் ஸ்தாபனமானது மேதாவிகளை உயர்ந்த பீடத்தில் வைக்க வேண்டும். அவர்கள்தான் ஜனங்களுக்கு க்ஷேமத்தை உண்டாக்கக் கூடியவர்கள். அறிவும், அஞ்சா நெஞ்சமும், ஆண்மையும், உறுதியும், ஊக்கமும் நிறைந்த ஒரு சில வீரர்கள்தான் ஆட்சி புரிய வேண்டுமேயன்றி, பெரும்பான்மையோரல்ல.

அத்தகைய மேதாவிகளான சிலர் கடுமையான வாழ்க்கைப் போராட்டத்தின் மூலமே தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அப்போராட்டத்தில் முறிந்து வீழ்ச்சியடைவோர் பலர். எஞ்சியுள்ளவர்களே சமூகத்திற்குத் தலைமை வகிக்க வேண்டுமென்பது விதியின் கட்டளை. கலாசாரம், சிற்பம், பொருளாதாரம், அரசாங்கம், ராணுவம் முதலிய பல துறைகளிலும் அதே தேர்தல் முறை நடைபெற வேண்டும். இதுதான் ஆர்யர்களின் ஆக்கமுறை. ஆனால் இதற்கு நேர்மாறான பெரும்பான்மையோர் ஆட்சி, யூதர்களின் அழிவு முறையே. மானிடர் நாகரிகத்தைத் தகர்க்கும் கைங்கர்யம் யூதர்களின் ஏகபோக பாத்தியமான விஷயம்! மார்க்ஸ் கொள்கையும் அதுதான். இவர்களுடைய அழிவு முயற்சிதான் அரசியல் பார்லிமெண்டு முறையாக 'பக்குவ'மடைந்திருக்கிறது! பொருளாதாரத் துறையிலும் தொழிலாளர் சங்க இயக்கத்தை யூதர் பிரவேச விஷமானது சீர்குலைத்து அவ்வியக்கத்தின் மூலம் தொழிலாளர்களுக்கு உண்மையான க்ஷேமமேற்பட முடியாதவாறு செய்திருக்கிறது.

தேசீய அபேதவாத இயக்கம் வெற்றி பெற்று ஜனங்களும், தேசமும் உத்தாரணமடைய வேண்டுமாயின் பொறுப்பற்ற பெரும்பான்மையோர் ஆட்சியைச் சிறிதும் இரக்கமின்றி ஒழித்துவிட்டு, அதன் ஸ்தானத்தில் பொறுப்புள்ள தனி நபர்களின் ஆட்சியைஸ்தாபிக்கவேண்டும்.ராணுவத்தில்ஒவ்வொருபிரிவிற்கும் ஒருதலைவர் இருக்கின்றார். அத்தலைவர்களுக்கெல்லாம் ஒருவர் தலைவராக இருக்கின்றார். சகல விஷயங்களையுமொட்டி அவர்தான் இறுதியான பொறுப்பாளி. அரசாங்க நிர்வாகம், பொருளாதார நிர்வாகம் முதலிய சகல துறைகளிலும் அதே நியதிதான் அனுஷ்டிக்கப்பட வேண்டும். சிறந்த மூளை படைத்தவர்கள், செயற்கை முட்டுக்கட்டை எதுவுமின்றி சமுதாயத்தில் முக்கியத்துவமும் செல்வாக்கும் பெற வேண்டும். அவ்விதம் பெறுவதை, சாத்தியமாகும்படி செய்வதுதான் சிறந்த அரசியலும், சிறந்த சர்க்கார் முறையுமாகும்.

ஸ்தல நிர்வாக சபை (முனிசிபாலிட்டி)யிலிருந்து தேச நிர்வாக சபை (பார்லிமெண்டு) வரையில் ஒவ்வொரு சபைக்கும் ஒருவர்தான் இறுதியான பொறுப்பாளியாக இருக்க வேண்டும். ஆலோசனைகர்த்தாக்களடங்கிய கமிட்டிகள் அவர்களுக்கு உதவியாக இருக்கலாம். நிர்வாக சபைகள் உண்மையான ஊழியம் செய்யும் சபைகளாக இருக்க வேண்டுமேயன்றி 'வோட்டு'க் கொடுக்கும் யந்திரங்களாக இருக்கக் கூடாது. முடிவான தீர்மானம் செய்யும் பொறுப்பு முற்றிலும் தலைவரைச் சார்ந்ததாக இருக்க வேண்டும். பொறுப்பற்ற பார்லிமெண்டு முறையை ஒழித்து, 'பூர்ண அதிகாரமும், பூர்ண பொறுப்பும்' என்ற முறை அமுலுக்கு வரும்படி செய்ய வேண்டும். பெரும்பான்மையோரின் தீர்மானங்களால் ஆட்சி புரியும் அரசாங்கம் அதிக காலம் உருப்படுவதில்லையென்பது சரித்திர உண்மை. எனவே மேலே குறிப்பிட்ட முறைகளை எல்லாம் லட்சியமாகக் கொண்டே தேசிய அபேதவாத இயக்கம் உருவடைய வேண்டும். அவைகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதே அதன் கடமையாக இருக்க வேண்டும்.





# 5. கட்சி ஸ்தாபன அமைப்பு

ஜனங்களின் அரசாங்கம் எவ்விதம் அமைக்கப்பட வேண்டுமென்பது பற்றி நான் மேலெழுந்தவாரியாகக் குறிப்பிட்டுள்ளேன். எனினும் அவ்வரசாங்கத்தின் இன்றியமையாத அம்சங்களை நாம் அறிந்து கொள்வதால் மாத்திரம் அது அமுலுக்கு வந்துவிடாது. தற்போதுள்ள கட்சிகள் அரசாங்கத்தினிடமிருந்து லாபம் பெற்று வருகின்றன. எனவே தற்போதைய ஆட்சி முறையில் அவைகளின் மூலம் எவ்வித தீவிர மாறுதலையும் எதிர்பார்ப்பதற்கில்லை. மற்றும் எந்த நிர்வாகத்தை எடுத்துக் கொண்டாலும் ஒரே யூதர் மயமாக இருந்து வருகிறது. இப்போதுள்ள நிலைமையை நீடிக்கவிடும் பட்சத்தில், யூதர்கள் மற்ற தேசங்களை விழுங்கிவிட்டு உலகிற்கே எஜமானர்களாக வந்து விடுவார்களென்ற ஜோஸ்யமானது உண்மையாகி விடும்.

கோழைத்தனம், சோம்பேறித்தனம், மடத்தனம் காரணமாக ஜெர்மானியர்கள் அழிவு மார்க்கத்தை நோக்கிச் சென்று வருகிறார்கள். அதற்கு மாறாக யூதர்களோ தங்களுடைய எதிர்கால லட்சியத்தை இமை கொட்டாது கவனித்துக் கொண்டே அதை நோக்கிச் சென்று வருகின்றனர். அவர்களால் நடத்தப்படும் எக்கட்சியும் அவர்களுடைய நலன்களைத் தவிர வேறெதற்காகவும் போராடாது. அவர்களுடைய நலன்களோ, ஆர்யதேசங்களின் நலன்களுக்கு நேர் முரணானவை. எனவே மேலே குறிப்பிடப்பட்ட கற்பனை அரசாங்கத்தை உண்மையாக்க வேண்டுமாயின், தற்போது பொதுஜன வாழ்க்கை யாருடைய ஆதிக்கத்திலிருக்கிறதோ, அவர்களுடன் எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்ளக் கூடாது. அவர்களுடன் போராடுவதற்குற்ற புதிய சக்திகளையே நாடவேண்டும். அவ்வித அரசாங்கத்தை அமைப்பதற்குற்ற முதற்படி, தற்போதுள்ள யூத ராஜ்யத்தை ஒழிப்பதுதான். எப்போதுமே புதிய ஒழுங்கை அமைக்கும் விஷயமாக உள்ள பெரும் கஷ்டம், அதற்கான பாதையைச் செப்பனிடுவதாகும். பாதையைச் சீர்படுத்திவிட்டால் பின்னர் புதிய ஒழுங்கை அமைப்பதில் அதிக கஷ்டமிராது. துவேஷமும், சுய நலமும் கொண்ட கோஷ்டியினருக்கு புதிய ஒழுங்கு என்றதும் நடுக்கமேற்பட்டு விடுகின்றது. எனவே அவர்கள் அதை வெகு உக்ரமாக எதிர்ப்பார்கள். அதனால்தான் புதிய கொள்கையின் கர்த்தாக்கள், அதை அமுலுக்குக் கொண்டு வருவதற்கான ஆக்க வேலையில் ஈடுபடுமுன் அழிவு கொள்கைகளில் ஈடுபட வேண்டியிருக்கிறது. புது ஒழுங்கை ஸ்தாபிப்பதற்கு சகிப்புத்தன்மை அணுவளவும் கூடாது. ஏனெனில் அதற்கு

விரோதமாக இருப்பவர்களை எல்லாம் இரக்கமின்றி ஒழித்தால்தான், அது அமுலுக்கு வருவது சாத்தியமாகும். அரசியலில் சகிப்பையும், மதத்தில் வெறியும் மிகவும் வருந்தத்தக்க அம்சங்களே எனினும், மகத்தான புதிய மாறுதலை உண்டுபண்ணுவதற்கு அவை அவசியமாகி விடுகின்றன. முரண்பாடான கொள்கையுடையவர்களுக்குள் ராஜ்யமேற்படுவதென்பது எவ்விதம் சாத்தியம்? ராஜியை விரும்புவோர் அரசியல் நரிகளாவர். போர்க்குணம் படைத்த வீரர்கள் ராஜிக்கு இணங்கி தங்கள் ஸ்தாபனத்தைச் சீர்குலைக்கும் புல்லுருவிகளைச் சிருஷ்டித்துக் கொள்ள மாட்டார்கள்.

ஓர் இயக்கத்தின் உயர்ந்த தத்துவத்தை அதைச் சேர்ந்த சகலரும் நன்கு அறிந்து கொள்ளும்படி செய்வது சாத்தியமல்ல. எனவே அவர்கள் தங்கள் இயக்கத்தினரின் கட்டளைப்படி நடந்து கொள்வதன் மூலம் தான் இயக்கம் வெற்றியடையும். ராணுவத்தில் எல்லோரும் தளபதியாக இருந்தால் பின்னர் அத்தகைய ராணுவம் போர் செய்வதற்கே தகுதியற்றதாகி விடும். எனவே ஏராளமான சாதாரண சிப்பாய்கள் ராணுவத்திலிருக்க வேண்டும். அவர்கள் எவ்வித ஆட்சேபனையும் இன்றி தளபதிகளின் கட்டளைகளுக்குட்பட்டு நடக்க வேண்டும். மிகுந்த கட்டுப்பாடுடனும், தளபதிகளின் கட்டளைகளை ஆராய்ச்சி செய்ய முற்படாது உறுதியுடன் கண்மூடித்தனமாகப் பின்பற்றியும் நடக்கும் துருப்புகள்தான் வெற்றி பெற முடியும். அதுபோல் அரசியலிலும் எல்லோரும் தலைவர்களாக இருக்க முடியாது. சில அறிவாளிகள்தான் தலைவர்களாக இருக்க முடியும். ஏராளமான இதரர்கள் அவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பவர்களாயிருக்க வேண்டும். இந்த மூலாதாரமான உண்மையை அஸ்திவாரமாகக் கொண்டு நம் இயக்கமானது உருவடைய வேண்டும். எல்லையற்ற விவாதத்திற்கும் வாக்குவாதத்திற்கும் இடங்கொடுக்கும் முறைகளைத் தவிர்த்துவிட வேண்டியது அத்தியாவசியம். வெற்றி கிடைக்கும்வரை நம் கட்சியானது தன் கொள்கையில் அணுவளவும் விட்டுக் கொடுக்கக் கூடாது. தேசிய அபேதவாத ஜெர்மன் தொழிற் கட்சியின் 25 ஷரத்துகளும் அக்கட்சியின் அசைக்க முடியாத அஸ்திவாரமாக இருக்க வேண்டும். அந்த ஷரத்துகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதுதான் அங்கத்தினர்களின் கடமை. அவைகளை அணுவளவு ஆட்சேபிப்போரும் அங்கத்தினராகச் சேரக் கூடாது.



# 6. எங்கள் போராட்டத்தின் முதற் படலம்

**2580** (1920) பிப்ரவரி மாதம் 24ந் தேதி நடந்த எங்கள் கட்சி முதல் பொதுக்கூட்டத்தின் எதிரொலி அடங்குவதற்குள், நாங்கள் அடுத்த கூட்டத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தோம். அதற்கு முன் ஒரு சிறு கூட்டம் நடத்துவதாக இருந்தால்கூட நாங்கள் மிகவும் ஆலோசிப்பதும் கவலைப்படுவதும் வழக்கம். ஆனால் பிப்ரவரி மாதம் நடந்த கூட்டத்திற்குப் பின் வாரத்திற்கொருமுறை பிரமாண்டமான பொதுக்கூட்டமொன்றைக் கூட்டுவதெனத் தீர்மானித்தோம். மியூனிச்சிலுள்ள ஹாப்ரெள ஹாஸ் மண்டபம் தேசிய அபேதவாதிகளான எங்களுக்கு மிகுந்த ராசியுள்ளதாகத் தோன்றியது. ஏனெனில் அங்கு நடந்த ஒவ்வொரு கூட்டத்திற்கும் அதற்கு முந்திய கூட்டத்தைவிட அதிக ஜனங்கள் வந்ததுடன், பிரசங்கங்களையும் கவனமாகக் கேட்டு வந்தார்கள்.

யுத்தத்திற்கு யார் பொறுப்பாளி என்பது பற்றியும், சமாதான உடன்படிக்கைகள் பற்றியும் நாங்கள் பேசுவோம். வர்செயில்ஸ் உடன்படிக்கையைக் கண்டித்தால் மண்டபத்தில் கூக்குரல் கிளம்பும். பிரெஸ்ட் - லிடோவஸ்க்• உடன்படிக்கை மாத்திரம் நியாயமானதோவென்று ஜனங்கள் கேள்வி கேட்பார்கள். அவ்விதமாக சந்தடி அதிகமாகி, பிரசங்கி தமது முயற்சியைக் கைவிடும்படி நேரும். வர்செயில்ஸ் உடன்படிக்கை பெரும் அக்கிரமமென்பதையும், நம் தேசத்திற்கே அது அவமானமென்பதையும், அது நம் தேசத்தைப் பகற் கொள்ளையிடும் ஒரு திட்டமென்பதையும் ஜனங்கள் உணர்ந்து கொள்ளவில்லை. மார்க்ஸ் கட்சியினர் செய்த வேலையும், வெளி விரோதிகளின் விஷப் பிரசாரமும் நம் ஜனங்களின் பகுத்தறிவை அவ்வளவு தூரம் சீர்குலைத்துவிட்டன. அச்சீர்குலைவைத் தடுக்க ஜெர்மன் தலைவர்கள் எவ்வித முயற்சியுமெடுத்துக் கொள்ளவில்லை.

எனவே எங்கள் இயக்கம் வெற்றியடைய வேண்டுமாயின், சமாதான உடன்படிக்கைகளின் அக்கிரமத்தை ஜனங்கள் அறிந்து கொள்ளும்படி செய்ய வேண்டுமென்பதை நான் முற்றிலும் உணர்ந்தேன். சமாதான உடன்படிக்கைகள் ஜனநாயக வெற்றிக்கு அறிகுறிகளென்று ஜனங்கள் கருதினர். எனவே அத்தப்பெண்ணத்தை ஒழிக்க வேண்டியது அத்தியாவசியமாகியது. ஆகையால் மூலாதாரப் பிரச்னைகளையொட்டி ஜனங்களின் மனதில் பதிந்துள்ள விபரீத எண்ணங்களையகற்ற திட சங்கல்பம் செய்து கொண்டேன். ஜனங்களின் விருப்பையோ அல்லது வெறுப்பையோ சிறிதும் லட்சியம் செய்யாது தப்பெண்ணங்களை

ஒழிக்கப் போராடுவதென உறுதி கொண்டேன். தேசிய அபேதவாத ஜெர்மன் தொழிற்கட்சி பொது ஜனங்களின் வாலைப் பிடித்துக் கொண்டு திரிவதாக இருக்கக் கூடாது. பொது ஜனங்களை அது ஆக்கிரமித்து அவர்களுடைய அபிப்பிராயங்களை உருவாக்க வேண்டுமென்று தீர்மானம் செய்தோம். ஏனெனில் கோழைகள்தான் காற்றடித்த பக்கத்தில் செல்வார்கள். அதை எதிர்த்துச் செல்லும் தைரியம் அவர்களுக்கு ஏற்படாது. பொது ஜனங்களின் மனம் கோணுமோ என்பதற்காக அவர்கள் சிறந்த கொள்கைகளைக் கூட கைவிட்டு விடுவார்கள். தங்கள் கொள்கைகளைப் பொது ஜனங்கள் சரிவர அறிந்து கொள்ளாமல் எதிர்த்தாலும், காலக்கிரமத்தில் அவர்களின் தப்பபிப்பிராயத்தை மாற்ற முயற்சிக்க வேண்டுமேயன்றி, அதற்காக கொள்கைகளை விட்டுவிடக் கூடாதென்ற உறுதி அத்தகையோருக்கிருப்பதில்லை. ஆனால் ஒரு பெரும் தேசத்தை உத்தாரணம் செய்யக் கூடிய இயக்கத்தில் அத்தகைய கோழை ஒருவர் கூட சேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். பொது ஜனங்கள் யார் மீது ஆத்திரங் கொண்டு கற்களை விட்டெறிந்தார்களோ, அதே மகானை அந்த ஜனங்களின் சந்ததிகள் முழங்காலிட்டுப் பணிந்து பூஜிப்பதைப் பார்க்கிறோம். இதற்குச் சரித்திரத்தில் பல உதாரணங்கள் உள்ளன. மற்றும் ஆரம்பத்தில் எக்கொள்கைக்கு பொது ஜனங்களின் அறியாமை காரணமாக எதிர்ப்பு அதிகமாகின்றதோ, அக்கொள்கைதான் பின்னர் மகத்தான வெற்றி பெற்று நிரந்தரமாக ஸ்தாபிக்கப்படுகிறதென்பதற்கும் சரித்திரத்தில் உதாரணங்கள் காட்டலாம்.

அதுபோலவே நாங்களும் பொது ஜனங்களின் மனம் கோணாமல் நடக்க விரும்பவில்லை. பொது ஜனங்களின் அறியாமையைப் பட்டவர்த்தனமாகக் கண்டிக்கவே முற்பட்டோம். அப்போது நான் ஒரு முக்கிய பாடமும் கற்றுக் கொண்டேன். எதிரி உபயோகிக்கும் ஆயுதங்களை அவரது கையிலிருந்து பிடுங்கிவிட வேண்டுமென்பதே அப்பாடமாகும். அதாவது எதிரிகளின் ஆட்சேபனைகளை எல்லாம் நாமே கூட்டத்தில் எடுத்துக் கூறி, அவைகளுக்கெல்லாம் ஆணித்தரமாக பதிலளித்து விடுவது. இந்த யுக்தியால் எங்கள் கட்சி பலமடையவும், எதிரிகளின் பலம் குறையவும் ஆரம்பித்தது. இரண்டு வருஷ காலத்திற்குப் பின் நான் அக்கலையில் நிபுணணாகி விட்டேன்!

ஜெர்மனியின் பரம சத்துருக்களுடைய பிரசாரம் காரணமாக, வர்செயில்ஸ் உடன்படிக்கை சத்துருக்களுடைய பிரசாரம் காரணமாக, வர்செயில்ஸ் உடன்படிக்கை நேர்மையானதென்று ஜெர்மன் ஜனங்கள் கருதி வந்தார்கள். 'அக்கிரமமான' பிரெஸ்ட் - லிடோவஸ்க் உடன்படிக்கைக்குப் பிரதியாக வர்செயில்ஸ்

உடன்படிக்கை நம் தலையில் சுமத்தப்பட்டதென்று அவர்கள் நம்பினர். வர்செயில்ஸ் உடன்படிக்கை அநீதியென்று கூறுவது கூட பலருக்கும் உண்மையிலேயே வெறுப்பை உண்டுபண்ணியது. எனவே அந்த உடன்படிக்கையின் அநீதியான அம்சங்களை எல்லாம் நான் ஒவ்வொரு கூட்டத்திலும் திருப்பித் திருப்பிக் கூறி, அவ்விஷயமாக பாறை போல் கெட்டித்திருந்த ஜனங்களின் மனதை மாற்ற வேண்டியிருந்தது. அவ்விரு உடன்படிக்கைகளின் ஷரத்துகளையும் நான் ஒவ்வொன்றாக அலசி ஆராய்ந்து, பிரெஸ்ட் - லிடோவஸ்க் உடன்படிக்கையின் ஜீவகாருண்யத்தையும், வர்செயில்ஸ் உடன்படிக்கையின் மிருகத்தனத்தையும் எடுத்துக் காட்டியதன் பயனாக, ஜனங்கள் கொண்டிருந்த தப்பெண்ணம் ஒழிய இடமேற்பட்டது, அவர்களின் ஹிருதயத்திலும் மூளையிலும் உண்மை பதிந்து, எதிர்ப்பு குறைந்தது; பகைவர்களின் பொய்ப் பிரசாரத்தை அப்போதுதான் அவர்கள் உள்ளங்கை நெல்லிக்கனி போல் உணர்ந்து கொண்டனர். ‘உலக யுத்தத்திற்குக் காரணங்கள்’, ‘வர்செயில்ஸ் உடன்படிக்கையும் பிரெஸ்ட் - லிடோவஸ்க் உடன்படிக்கையும்’ என்ற இரு முக்கிய விஷயங்கள் பற்றியே நான் பல கூட்டங்களிலும் பேசினேன். அதன் பயனாக அவ்விஷயங்கள் பற்றி சந்தேகங்களும், தப்பெண்ணங்களும் ஒழியவும், தெளிவான, ஏகமனதான அபிப்பிராயம் உருவடையவும் இடமுண்டாயிற்று. மற்றும் அக்கூட்டங்களின் பயனாக எனது வாசாலக சக்தியும் அதிகமாயிற்று. ஜனங்களை என்னிஷ்டப்படி ஆட்டி வைக்கக் கூடியவாறு உருக்கமாகப் பேசுவதிலும், அதற்குற்ற அபிநயத்திலும் எனக்குப் பயிற்சி ஏற்பட்டது.

எங்கள் கட்சிப் பிரசாரத்திற்கு நாங்கள் துண்டுப் பிரசுரங்களைக் காட்டிலும் பிரசங்கங்களையே முக்கியமாகக் கருதினோம். ஜனங்களுடைய மனதில் மகத்தான புரட்சியை உண்டுபண்ணக் கூடியவை பேசும் வார்த்தைகளே ஒழிய எழுதும் வார்த்தைகளல்ல என்பதையும் உணர்ந்து கொண்டோம். தம் முன்னுள்ள ஜனங்கள் தாம் கூறுவதை எவ்வளவு தூரம் அறிந்து கொள்ளுகிறார்கள்; தம்முடைய பேச்சு எவ்வளவு தூரம் பலனைக் கொடுக்கிறது என்பதை எல்லாம் ஒரு பிரசங்கி நேரில் தெரிந்து கொண்டு அதற்குற்றவாறு தம்மைத் திருத்திக் கொள்ளலாம். பேச்சாளர்கள், குறிப்பிட்ட ஜனங்களிடையே நேரில் பேசுகின்றனர். எழுத்தாளர்களின் நிலைமை வேறு. அவர்கள் ஜனங்களை நேரில் பார்ப்பதில்லை. எனவே தாம் எழுதும் விஷயங்களையொட்டி ஜனங்களின் உணர்ச்சி எவ்விதமிருக்கிறதென்பதை அவர்கள் அறிந்து கொள்ள முடியாது. மற்றும் அபார வாசாலக சக்தியுள்ளவர்கள் அற்புதமாக எழுத முடியும். ஆனால் எழுத்தாளர்களோ, இடைவிடாத

பயிற்சியிலிருந்தாலன்றி ஜனங்களின் மனதை உருக்கும்படியாக பிரசங்கங்கள் செய்வது முடியாத காரியம். பிரசங்கங்கள் செய்வோர் தங்கள் முன் உட்கார்ந்து கொண்டுள்ள ஜனங்களின் முகக்குறிப்பிலிருந்து அவர்களுடைய மனோநிலைமையைத் தெரிந்து கொள்ளலாம். தாம் சொல்லுவது அவர்களுக்குப் புரியாவிடில் அதைப் பல்வேறு உதாரணங்களுடன் தெளிவாக எடுத்துக் கூறி இறுதியில் அவர்கள் புரிந்து கொள்ளும்படி செய்யலாம். எழுத்தைக் காட்டிலும் பேச்சின் மூலம்தான் ஜனங்களால் சீக்கிரமாக விஷயங்களை அறிந்து கொள்ள முடியும். குறிப்பிட்ட விஷயத்தை யாராவது அங்கீகரிக்க மறுத்தாலோ அல்லது ஆட்சேபித்தாலோ அவர்களுக்குத் திருப்தியேற்படும்படியான முறையில் விளக்கிக் கூறலாம். ஆனால் எழுத்தாளர்களுக்கு அத்தகைய வசதிகளில்லை.

பேச்சாளர்களின் வெற்றி, கூட்டம் நடக்கும் காலம், இடம் முதலியவைகளையும் பொறுத்திருக்கிறது. மாலையில் நடக்கும் கூட்டங்களைப் போல் காலையில் கூட்டங்கள் அவ்வளவு வெற்றிகரமாக நடப்பதில்லை. இது என்னுடைய சொந்த அனுபவம்.

உலகில் சரித்திரப் பிரசித்தி பெற்ற புரட்சிகளுக்கெல்லாம் பேச்சாளர்கள்தான் காரணஸ்தர்களேயன்றி எழுத்தாளர்களல்ல. பிரெஞ்சுப் புரட்சிக்குக் காரணஸ்தர்கள், பொது ஜனங்களின் மனதை ஆட்டி வைக்கும் சக்தி வாய்ந்த பேச்சாளர்கள்தான். ருஷியாவிலேற்பட்ட போல்ஷிவிக் புரட்சிக்கும் பேச்சாளர்களே காரணம். பாமர ஜனங்கள் கார்ல் மார்க்ஸ் எழுதியுள்ள நூலைப் படிப்பதில்லை. அவர்களுக்கு ஆவேசத்தை உண்டுபண்ணுவது கார்ல் மார்க்ஸின் உபதேசங்களுமல்ல. குட்டிப் பேச்சாளர்கள், பெரும் பேச்சாளர்கள் முதலிய சகலரும் பாமர ஜனங்களிடையே உண்டு பண்ணிய எல்லையற்ற துவேஷ உணர்ச்சியே ருஷியாவில் பீறிட்டுக் கொண்டு பெரும் புரட்சியாகியது. எனவே ஜனங்களை ஆட்டி வைப்பவர்கள் பேச்சாளர்களேயன்றி எழுத்தாளர்களல்ல. இறந்த் காலத்திலும் சரி, எதிர்காலத்திலும் சரி இது அசைக்க முடியாத ஓர் உண்மை.

பிரிட்டிஷ் மந்திரியாக இருந்த லாயிட் ஜார்ஜின் பிரசங்கங்கள் அறிவு ததும்புவனவாக இல்லை என்று ஒரு பிரகஸ்பதி ஜெர்மன் தேசீயப் பத்திரிகை ஒன்றில் விமர்சனம் செய்திருந்தார். அவரது கூற்றை ஆதாரமாகக் கொண்டு கவனிப்போமாயின், லாயிட் ஜார்ஜின் பிரசங்கங்களைக் காட்டிலும் ஜெர்மன் ராஜ தந்திரியான பெத்மான் - ஹால்வெக்கின் பிரசங்கங்கள் அறிவு செறிந்தவையாக இருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. ஆனால் லாயிட் ஜார்ஜின் அற்புதப் பிரசங்கங்கள் பாமர

ஜனங்களின் மனதைக் கொள்ளை கொள்ள வல்லவை என்பதை அந்த விமர்சகர் அறிந்து கொள்ளவில்லை. அந்த சக்தி ஹால்வெக்கின் பிரசங்கங்களுக்கில்லை. பண்டிதர்களும், பேராசிரியர்களும் புகழும் பிரசங்கங்களால் என்ன பலன்? அவை பாமர ஜனங்களின் மனதிலல்லவா ஆவேசத்தை உண்டு பண்ண வேண்டும்?

இந்த உண்மைகளையெல்லாம் நன்குணர்ந்து அவைகளை அனுஷ்டானத்திலும் கொண்டு வந்ததால் நம் இயக்கமானது சில வருஷங்களில் ஆச்சரியகரமான அபிவிருத்தியடைந்து, இன்று நம் தேசத்தின் உள்நாட்டு சத்துருக்கள், வெளிநாட்டு விரோதிகள் முதலியோரின் எதிர்ப்பிற்கும் பேராத்திரத்திற்கும் ஆளாகியிருக்கிறது.

எழுத்தாளர்களும் நமது இயக்கத்தின் அபிவிருத்தியில் மகத்தான பங்கெடுத்துக் கொண்டு உதவி செய்தனர். நம் இயக்கத்தை நடத்துவோருக்கு அரசியல் கல்வி போதித்தவர்கள் எழுத்தாளர்களே.

எந்த இயக்கமும் பலமடைய கூட்டங்கள், ஊர்வலங்கள் முதலிய ஆர்ப்பாட்டங்கள் அத்தியாவசியமானவை. அவைகளின் பயனாக இயக்கத்திற்கும் பாமர ஜனங்களுக்குமுள்ள தொடர்பு அதிக பலமடைகின்றது. அவைகளில் கலந்து கொள்வோர் சந்தேக வாதிகளாக இருப்பினும் பின்னர் அவர்களின் சந்தேகம் தெளிந்து, எந்த இயக்கத்திற்காக அவை நடக்கின்றனவோ அந்த இயக்கத்திற்குப் பூர்ண ஆதரவளிக்க அவர்கள் முற்படுவார்கள்.



## குறிப்புகள்

• பிரெஸ்ட் - லிடோவஸ்க் உடன்படிக்கை: 2578 (1918) மார்ச் மாதம் 3ந் தேதி ருஷியாவிற்கும், ஜெர்மனி ஆஸ்திரியா, பல்கேரியா, துருக்கி முதலிய நாடுகளுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கை. இது மேற்கு யுக்ரேனிலுள்ள பிரெஸ்ட் - லிடோவஸ்க் என்ற இடத்தில் கையெழுத்தாயிற்று. பொதுவுடைமைச் சுழலில் அகப்பட்டுத் தவித்துக் கொண்டிருந்த ருஷியா எப்படியாவது சமாதானம் செய்து கொள்ள முற்பட்டது. அதன்படி ருஷிய போலந்து, லிதுவேனியா, லட்வியா, எஸ்டோனியா, பால்டிக் கடலிலுள்ள சில தீவுகள் முதலியவைகளில் தனக்கிருந்த அரசுரிமையை ருஷியா கைவிட்டது. நஷ்ட ஈடாக 600 கோடி தங்க மார்க்கும் கொடுக்க ருஷியா இசைந்தது. பின்னர் ஜெர்மனி

மீது வஞ்ச புத்தி கொண்ட மேற்கத்தி நாடுகள் 2578 நவம்பர் 11ந் தேதி ஏற்பட்ட வர்செயில்ஸ் உடன்படிக்கையின் மூலம் பிரெஸ்ட் - லிடோவஸ்க் உடன்படிக்கையை ரத்து செய்தன. வர்செயில்ஸ் உடன்படிக்கை அநீதமானதென்று ஹிட்லர் கண்டித்தபோது அவரது விரோதிகள், ஜெர்மனிக்கு விரோதமாக பிரெஸ்ட் - லிடோவஸ்க் உடன்படிக்கையைச் சுட்டிக் காட்டுவது வழக்கமாக இருந்தது.

வர்செயில்ஸ் உடன்படிக்கை: சென்ற மகாயுத்தத்திற்குப் பின் 2579 (1919) ஜூன் மாதம் 28ந் தேதி "நேசதேச"ங்களுக்கும் ஜெர்மனிக்கும் ஏற்பட்ட உடன்படிக்கையாகும். இதன் ஷரத்தை அனுசரித்தே சர்வதேச சங்கம் அமைக்கப்பட்டது. அந்த உடன்படிக்கையின்படி ஜெர்மனியைச் சேர்ந்த பல்வேறு பிரதேசங்களையும் இதர நாடுகள் பிய்த்தெடுத்துக் கொண்டன. இதைத் தவிர ஜெர்மனி - ஆஸ்திரியா சம்பந்தமும் கத்தரிக்கப்பட்டது. ஜெர்மனி ஒரு லட்சம் துருப்புகளுக்கு மேல் வைத்துக் கொள்ளக் கூடாதென்றும் மற்றும் ராணுவ விமானங்கள், நீர்மூழ்கிகள், பெரும் பீரங்கிகள், டாங்கிகள் முதலியனவற்றை வைத்துக் கொள்ளக் கூடாதென்றும் தனது ஆயுதத் தொழிற்சாலைகளை எல்லாம் அழித்துவிட வேண்டுமென்றும் உத்தரவிடப்பட்டது. ரைன்லந்தை "நேசதேசங்கள்" 15 வருஷங்கள் வரை தங்களுடைய ஆதிக்கத்தில் வைத்துக் கொள்ள வேண்டுமென்பதும் உடன்படிக்கையில் ஒரு ஷரத்தாகும். ஜெர்மனியைச் சேர்ந்த ஸார் பிரதேசம் சர்வதேச நிர்வாகத்தில் எடுத்துக் கொள்ளப்பட்டது. 2595ல் (1935) சர்வஜன வாக்கின் மூலம் ஸார் பிரதேசத்தின் எதிர்காலத்தை நிர்ணயிப்பதென்றும் முடிவாயிற்று. ஜெர்மனிக்கு இழைக்கப்பட்ட அநீதிகளடங்கிய ஜாப்தா அத்துடன் முடிந்துவிடவில்லை. ஜெர்மன் நதிகளை சர்வதேசப் போக்குவரத்திற்கு உபயோகிக்கவும் முடிவாயிற்று. ஜெர்மன் காலனிகளும் பங்கு போட்டுக் கொள்ளப்பட்டன. மகாயுத்தம் ஏற்பட்டதற்கு ஜெர்மனிதான் முழுப் பொறுப்பாளி என்று அதன் மீது அபாண்டமான குற்றஞ்சாட்டி, அதன் மீது அபரிமிதமான நஷ்ட ஈட்டுத் தொகையும் சுமத்தப்பட்டது. அந்த அநீதியானது 2592ம் வருஷம் ரத்து செய்யப்பட்டது. 2590ல் ரைன்லாந்தும் காலி செய்யப்பட்டது. பின்னர் ஹர் ஹிட்லர் கொடிய வர்செயில்ஸ் உடன்படிக்கையைத் தாமே ரத்து செய்து, அந்த அநீதிக் களஞ்சியத்தை ஒழித்தார்.

லொகர்னோ உடன்படிக்கை: 2585 (1925) நவம்பர் மாதம் 15ந் தேதி, பிரான்ஸ், பிரிட்டன், ஜெர்மனி, இத்தாலி, பெல்ஜியம் முதலிய நாடுகளுக்குள் ஏற்பட்டதாகும். இதன்படி, ரைன் பிரதேசத்தில் ஜெர்மன் ராணுவமிருக்க அனுமதிக்கப்படவில்லை. இந்த அநீதமான உடன்படிக்கையை ஹர் ஹிட்லர் 2596ம் (1936) வருஷம் உதறித் தள்ளினார்.

# 7. செம்படைகளுடன் போராட்டம்

**2579,** 80, 81 (1919, 20, 21) வருஷங்களில் நடந்த நடுத்தர வகுப்பினரின் கூட்டங்கள் சிலவற்றிற்கு நான் சென்றிருந்தேன். நான் சிறுவனாக இருக்கும்போது விளக்கெண்ணெய் குடிக்க எனக்கு எவ்வித வேதனையேற்படுமோ, அதே வேதனைதான் அக்கூட்டங்களுக்குச் சென்றபோதெல்லாம் ஏற்பட்டது. விளக்கெண்ணெய் உடம்புக்கு நல்லதுதான், ஆனால் குடிப்பதற்குத்தான் நரக வேதனையாக இருக்கிறது! அதுபோலவே ஜெர்மன் ஜனங்களைக் கயிற்றினால் கட்டி பலாத்காரமாக அக்கூட்டங்களுக்கு இழுத்து வந்து, கதவைத் தாளிட்டு உள்ளே அடைத்து கூட்டம் முடியும் வரையில் ஒருவரும் தப்பியோடிவிடாது பாதுகாப்பது சாத்தியமாயின், அத்தகைய நடவடிக்கை, சில நூற்றுக்கணக்கான வருஷங்களிலாவது வெற்றிகரமான பலனைக் கொடுக்கலாம்! ஆனால் என் சம்பந்தப்பட்ட வரையில் அவ்விதம் வாழ என்னால் முடியாது. அந்நிலைமையில் ஒரு ஜெர்மானியனாக இருப்பதைக் கூட நான் விரும்பேன்! எனவே பிசாசு புனித தீர்த்தத்தைக் கண்டு ஓடுவது போல், களங்கமற்ற பாமர ஜனங்களும் அவ்வித கூட்டங்களைக் கண்டு ஓடுவதில் ஆச்சரியமெதுவுமில்லை.

பேசும் வார்த்தைகளைக் காட்டிலும் எழுதும் வார்த்தைகளே மகத்துவம் பொருந்தியவை என்பது நடுத்தர வகுப்பினரின் தத்துவம். அதையனுசரித்தே அக்கூட்டங்களுமிருந்தன. அப்போது ஜனநாயகவாதிகள், ஜெர்மன் தேசியவாதிகள், பவேரியா ஜனக்கட்சி முதலிய பல கட்சிகளின் கூட்டங்களுக்கும் செல்லுவேன். அக்கூட்டங்களுக்கு குறிப்பிட்ட பலரையும் தவிர புதிதாக எவரும் வருவதில்லை. அங்கு வருவோர் பெரும்பாலும் கட்சி அங்கத்தினர்களேயாவர். அது ஒரு மகத்தான புரட்சிக்குப் பின் கூடும் ஜனக்கூட்டமாக இராது. ஆனால் கொட்டாவி விடும் பேர்வழிகளடங்கிய ஒரு சீட்டுக் கச்சேரியாகவே தோன்றும். அங்கு அமைதிக்குச் சிறிதும் பங்கமேற்படாது. ஒரு கட்டுரையையோ அல்ல ஒரு வியாசத்தையோ வாசிப்பது போன்று மருந்திற்குக் கூட கிடைக்காது. உத்வேக உணர்ச்சி அக்கூட்டங்களில் அற்ப ஹாஸ்ய ரஸத்தையும் கொண்டு வந்து புகுத்துவார். அதற்காக மேடையிலிருப்போர் வாய்விட்டுச் சிரித்து தங்கள் கௌரவத்தைக் குறைத்துக் கொண்டு விடமாட்டார்கள். தளுக்காகவும், அடக்கமாகவும் சிரிப்பார்கள்!

மியூனிச்சிலுள்ள வாக்னர் ஹாலில் அத்தகைய

கூட்டமொன்று நடந்தது. லீப்ஸிக் யுத்த• வருஷாந்தரக் கொண்டாட்டத்தையொட்டியே அது கூட்டப்பட்டது. வயோதிகர்களான பண்டிதர்கள் தங்கள் பிரசங்கங்களை வாசித்தனர். மேடையில் மூவர் உட்கார்ந்திருந்தனர். வலதுபுறத்தில் உட்கார்ந்திருந்தவர் ஒற்றைக் கண்ணாடி தரித்த பேர்வழி. இடதுபுறத்திலிருந்தவரும் அப்படியேதான். நடுவில் உட்கார்ந்திருந்தவருக்குக் கண்ணாடி கிடையாது. மரண தண்டனை விதிக்கப் போகும் நீதிபதிகள் போன்றோ அல்லது ஞானஸ்நானம் செய்து வைக்கும் பாதிரிமார் போன்றோ அவர்கள் தோன்றினர். அவர்களுடைய பிரசங்கத்தினாலேற்பட்ட பலனோ சொல்லத் தேவையில்லை. முக்கால் மணி நேரத்திற்குப் பின் கூட்டத்திலிருந்தவர்கள் மெய் மறந்து நிசப்தமாக உட்கார்ந்திருந்தனர். யாராவது ஆடவரோ, பெண்ணோ மண்டபத்தை விட்டுச் செல்லும்போது ஏற்படும் சந்தடி, அரைத் தூக்கத்திலிருப்பவர்கள் கொட்டாவி விடும் சந்தடி, ஏவற்காரப் பெண்கள் நடமாடும் சந்தடி, இவைகளைத் தவிர வேறெவ்வித சப்தமும் அங்கு ஏற்படவில்லை. எனக்கு முன்புறம் மூன்று தொழிலாளர்கள் உட்கார்ந்து கொண்டிருந்தனர். அவர்கள் ஒரு வேளை வேடிக்கை பார்ப்பதற்காக வந்திருக்கலாம் அல்லது அவர்களின் கட்சியினரால் அனுப்பப்பட்டு வந்திருக்கலாம். அவர்கள் அடிக்கடி ஒருவரையொருவர் பார்த்து நகைத்தனர். பின்னர் அவர்கள் மண்டபத்தை விட்டு வெளியேறி விட்டார்கள். கடைசியில் வைபவம் முடிவடையும் தறுவாய்க்கு வந்தது. தலைவர் எழுந்து, "ஜெர்மன் சகோதர, சகோதரிகளே, நாம் இப்போது கேட்ட அற்புத பிரசங்கத்திற்காக உங்கள் சார்பிலும், என் சார்பிலும் பண்டிதர் ...............க்கு நன்றி கூறுகிறேன். அவரது பிரசங்கம் நம்மெல்லோர் மனதையும் உருக்கிவிட்டது. அன்னாரின் பிரசங்கத்தைப் பற்றி ஈண்டு விவாதிப்பது அபசாரமாகும். எனவே எல்லோரையும் எழுந்து தேசீய கீதம் பாடும்படி கேட்டுக் கொள்கிறேன்" என்றார். பின்னர்

---

## குறிப்பு

• *2473ம் (1813)* வருஷம் நடந்த லீப்ஸிக் யுத்தத்தில் ஜெர்மனி, நெப்போலியனைத் தோற்கடித்து மகத்தான வெற்றி பெற்றது. ஜெர்மனியில் பிரான்ஸ் ஆக்கிரமித்ததிற்கு அத்தோல்விதான் முற்றுப்புள்ளி வைத்து, அதை ஒழித்தது. பிரான்ஸின் ஆக்கிரமம் சுமார் 20 வருஷகாலம் நீடித்திருந்ததென்பது குறிப்பிடத்தக்கதாகும்! சென்ற மகா யுத்தத்திற்குப் பின்னரும், ஜெர்மானியர்கள், தங்களுடைய ஏக்கத்திற்கும் அபிலாஷைக்கும் அறிகுறியாக லீப்ஸிக் யுத்த வருஷாந்தர விழாவைக் கொண்டாட முற்பட்டனர்.

எல்லோரும் எழுந்து பாடினார்கள். கூட்டத்திலிருந்த பலருக்கும் அப்பாட்டு மனப்பாடமாகத் தெரியாதென்ற என்னுடைய எண்ணமானது உறுதிப்பட்டது! அதன்பின் கூட்டம் கலைந்து பீர் சாப்பிடுவதற்காகச் சிலரும், ஹோட்டலுக்கு மற்றும் சிலரும், நல்ல காற்று வாங்குவதற்காக மற்றவர்களும் அவசரம் அவசரமாக வெளியே சென்றனர். அப்போது எனக்கு ஏற்பட்ட உணர்ச்சி நல்ல காற்று வாங்குவதற்காக வெளியே ஓட வேண்டுமென்பதே! லட்சக்கணக்கான ப்ரஷ்யர்களும், ஜெர்மானியர்களும் நிகழ்த்திய வீரத்தனமான போரைக் கொண்டாடுவது அப்படித்தானா? இதெல்லாம் சைத்தானுக்குத்தான் அர்ப்பணம்!

ஆனால் தேசீய அபேதவாதிகளின் கூட்டங்கள் இதற்கு நேர்மாறாக இருந்தன. அங்கு தேசீய உணர்ச்சி பொங்கியெழும், தூக்கமோ, கொட்டாவியோ அக்கூட்டங்களை ஒருபோதும் அணுகவே அணுகாது.

ஆரம்பம் முதல் எங்கள் கூட்டங்களில் கண்டிப்பான ஒழுங்கை நிலை நிறுத்த வேண்டியதும், தலைவருக்குப் பூரண அதிகாரம் அளிக்க வேண்டியதும் அவசியமாயின. எல்லோருக்கும் நல்ல பிள்ளைகளாக நடந்து கொள்ள வேண்டுமென்பது எங்கள் நோக்கமல்ல. நாங்கள் கூறும் விஷயங்கள் எதிரிகளுக்குச் சவுக்கடி போலிருக்க வேண்டுமென்பதே எங்கள் கருத்து. செங்கொடியை ஆதரிக்கும் எதிரிகள் சாரை சாரையாக எங்கள் கூட்டங்களுக்கு வருவார்கள். எங்களை ஒரு வழியாக ஒழித்துவிட வேண்டுமென்ற திட சங்கல்பத்துடன் வருவார்கள். எங்கள் கதி மயிரிழையில் தொங்கிய சந்தர்ப்பங்களுமுண்டு. எனினும் கூட்டத் தலைவரின் உறுதியாலும் அவர்கள் தங்கள் அபீஷ்டத்தைப் பூர்த்தி செய்து கொள்ள முடியவில்லை.

மற்றும் எங்கள் சுவர் விளம்பரங்களை நாங்கள் சிவப்பு வர்ணத்தில் அச்சடித்தது எதிரிகளின் கவனத்தை அதிகமாக இழுத்தது. நாங்களும் மாறு வேஷம் பூண்ட மார்க்ஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள்தானென்று நடுத்தர வகுப்பினர் கருதினர். கூட்டங்களில் நாங்கள் "தேச சகோதர, சகோதரிகளே" என்று பிரசங்கங்களை ஆரம்பித்ததிலிருந்தும், நாங்கள் ஒருவரையொருவர் 'தோழரே'யென அழைத்துக் கொண்டதிலிருந்தும் நாங்கள் மார்க்ஸ் கட்சியினர்தானென்று அவர்கள் உறுதி செய்து கொண்டனர். எங்கள் உண்மையான நோக்கங்களையும், லட்சியங்களையும் அவர்கள் அறிந்து கொள்ள முடியாது தடுமாறுவதைக் கண்டு நாங்கள் வயிறு புண்ணாகச் சிரிப்பது வழக்கம். கூட்ட விளம்பரங்களை நாங்கள் சிவப்பு வர்ணத்தில் அச்சடித்ததற்குக் காரணம், எதிரிகளின் கவனத்தை ஈர்த்து அவர்களும் கூட்டங்களுக்கு வரும்படி செய்வதுதான்.

எங்கள் இயக்கத்தைத் தகர்ப்பதற்காக எதிரிகள் அடிக்கடி தங்கள் சூழ்ச்சிகளை மாற்றிக் கொண்டு வந்தனர். எங்கள் கூட்டங்களுக்கு வரும் விரோதிகளான தொழிலாளர்களும் கூட்டம் முடிந்து செல்லுகையில் நாங்கள் கூறும் வாதங்கள் ஓரளவு உண்மையேயென்ற அரைகுறை சமாதானத்துடன் செல்லுவார்கள். அடுத்த கூட்டத்தில் அவர்களும் எங்கள் நண்பர்களுடன் ஐக்கியமாகிவிடுவார்கள்! எனவே கூட்டத்தைக் கலைக்க வேண்டுமென்ற எதிரிகளின் சூழ்ச்சி வெற்றி பெறுவதில்லை. இவ்விதமாக எங்கள் இயக்கம் நாளுக்கு நாள் செல்வாக்கும், பலமும் அடைய ஆரம்பித்தது. எதிரிகளின் பத்திரிகைகள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக எங்களைத் தூற்றினவோ, அவ்வளவுக்கவ்வளவு அது எங்களுக்கு ஒரு சிறந்த விளம்பரமாயிற்று. எதிரிகள் எங்கள் விஷயத்தில் எப்படியாவது கவனம் செலுத்த வேண்டும் என்பதுதான் எங்களுடைய ஆர்வமும். எங்கள் கூட்டங்களைக் கலைக்க எதிரிகள் போடும் திட்டங்களை எல்லாம் அறிந்துவர உளவாளிகளையும் நியமித்தோம். அத்தகையோர் எதிர்க் கட்சியில் அங்கத்தினர்களாகச் சேர்ந்து அவைகளின் நடவடிக்கைகளை அறிந்து வந்து சொல்லுவார்கள். எங்கள் கூட்டங்களுக்கு ஆபத்தேற்படாமல் பாதுகாக்கும் பொறுப்பை நாங்கள் அதிகாரிகளிடம் ஒப்படைப்பதில்லை. அதிகாரிகளின் பாதுகாப்பை நாடினால் அது பொதுவாக கலகக்காரர்களுக்கே சாதகமாக முடிகின்றது. ஒரு கூட்டத்தைக் கலைக்க யாராவது சதி செய்தால், அத்தகையோரைக் கைது செய்வதுதான் நியாயம். ஆனால் போலீசாரோ அதை விட்டுவிட்டு கூட்டத்தையே தடுத்து விடுவது வழக்கமாயிருக்கிறது. "சட்டம், சமாதானத்தைப் பாதுகாக்க அவ்வாறு முன் ஜாக்கிரதையான முறைகளை எடுத்துக் கொள்வதாக" ப் போலீசார் கூறிவிடுவார்கள். அவ்விதம் கலகக்காரர்களின் நோக்கம் பூர்த்தியாகி கூட்டம் தடைபட்டு விடுகின்றது. எனவே சில விஷமிகள் சேர்ந்து கொண்டு, கண்ணியமானவர்களின் அரசியல் நடவடிக்கைகளை எச்சமயத்திலும் அவ்வாறு தடுத்துவிட முடியும்.

தவிர, எப்போதும் போலீஸ் பாதுகாப்பை நாடும் ஓர் இயக்கமானது பாமரர்களின் ஆதரவைப் பெறுவதென்பதும் முடியாத காரியம். தன்னைத்தான் பாதுகாத்துக் கொள்ளும் பலம் பொருந்திய ஓர் இயக்கம்தான் பாமர ஜனங்களின் பெருமித ஆதரவைப் பெறும். ஒரு கோழையைக் காட்டிலும் பலசாலியே ஒரு பெண்ணின் காதலைப் பெறுவான். அதுபோலவே, எப்போதும் போலீஸ் பாதுகாப்பை நாடி நிற்கும் ஒரு கோழை இயக்கத்தைக் காட்டிலும் வீரத்தனம் பொருந்திய ஓர் இயக்கமே பொது ஜனங்களின் ஆதரவைப் பெற முடியும். எனவே

கூட்டங்களில் அமைதிக்குப் பங்கமேற்படாமல் பாதுகாப்பதற்காக ஒரு படையை அமைக்க முற்பட்டோம்.

கூட்டங்களில் குறுக்கிட்டவர்களை நாங்கள் மண்டபத்திற்கு வெளியே தள்ளி விடுவோமென்பதை எதிரிகள் அறிந்து கொண்டனர். 15 அல்லது 16 தேசிய அபேதவாதிகள் சுமார் 800 எதிரிகளைக் கூட சமாளிக்கும்படி நேர்ந்ததுண்டு. அவர்களின் தொகை அதிகமென்பதற்காக நாங்கள் எங்களுடைய உயிர்களையும் பலி கொடுக்கத் தயாராயிருந்தோ். சிற்சில சமயங்களில் எங்கள் கட்சியைச் சேர்ந்த சிலர், போல்ஷிவிக் கட்சியினரடங்கிய, வெறி கொண்ட ஒரு பெருங்கூட்டத்தை எதிர்க்கும்படி நேர்ந்தது. சிறுபான்மையோரான எங்களை இறுதியில் அடக்கிவிடலாமென்பதை எதிரிகள் அறிவர். எனினும் அவர்களை அடக்குமுன் தங்களில் பலருடைய மண்டைகள் முதலில் நொறுங்கியே தீருமென்பதையும் அவர்கள் அறிவர். எனவே அத்தகைய விபரீதத்திற்கு அவர்கள் தயாராக இல்லை!

நாங்கள் கூட்டம் நடத்தும் ரீதி, மார்க்ஸ் கட்சியினருக்கு மிகுந்த ஆச்சரியத்தை உண்டுபண்ணியது. கூட்டத்திலுள்ள எதிரிகளுக்கு, அமைதியாக இருந்து பிரசங்கங்களைக் கேட்கும்படியும், காலவரையின்றி விவாதம் நடைபெறுமென்றும் நாங்கள் அறிவிப்பதில்லை. "இக்கூட்டத்திற்கு நாங்கள் எஜமானர்கள். எனவே யாராவது குறுக்கிட்டால் அவர்கள் உடனே சிறிதும் மரியாதையின்றி விரட்டியடிக்கப்படுவர். அத்தகைய சம்பவங்களுக்குப் பின்னர் நாங்கள் பொறுப்பாளியாக மாட்டோம்" என்று பட்டவர்த்தனமாகக் கூறிவிட்டே கூட்டத்தை ஆரம்பிப்போம். கூட்டத்தில் அமைதியைப் பாதுகாப்பதற்கு நன்கு பயிற்சி பெற்ற, ஒரு கட்டுக்கோப்பான படையையும் நாங்கள் தயாரித்திருந்தோம். அவர்களெல்லோரும் வீர வாலிபர்கள், அவர்களில் பலர் போர்க்களத்தில் அனுபவம் பெற்றவர்கள், பயங்கர நடவடிக்கைகளைப் பயங்கர நடவடிக்கைகளால் அடக்க முடியுமென்பதில் நம்பிக்கை உடையவர்கள். இவ்வுலகில் தைரியமும், திடசங்கல்பமும் உள்ளவர்கள்தான் வெற்றி பெற்றுள்ளனரென்பதையும், தாங்கள் மிகவும் உயர்ந்ததொரு கொள்கைக்காகப் போராடுவதால், அதற்காக கடைசித் துளி இரத்தத்தையும் அர்ப்பணம் செய்வது பொருந்துமென்பதையும் உணர்ந்தவர்கள்.

பலமின்றி அறிவினால் மாத்திரம் பலனேற்படாதென்றும், யுத்த தேவனின் பக்கத்தில்தான் சாந்தி தேவி வீற்றிருக்க முடியுமென்றும், எவ்வித மகத்தான சமாதான நடவடிக்கையும் பலாத்காரத்தினால் பாதுகாக்கப்பட வேண்டுமென்றும் நான் விவரித்துக் கூறும்போது அவ்விளைஞர்களின் கண்களிலிருந்து

உற்சாக ஒளி வீசும். எனவே, எங்கள் கூட்டத்தைக் கலைக்க எவ்வளவு பேர்கள் வந்திருந்தாலும் அந்த இளைஞர்கள் சிறிதும் அஞ்சாமல் தங்கள் கடமையைச் செய்து முடிப்பார்கள். எவ்வளவு படுகாயமேற்பட்டாலும் லட்சியம் செய்யமாட்டார்கள். எங்கள் இயக்கத்தின் புனித நோக்கம் அவர்களுக்கு எல்லையற்ற உத்வேகத்தைக் கொடுத்தது. நாளுக்கு நாள் அப்படை பெருகி 2581ல் (1921) நூற்றுக்கணக்கானவர்களடங்கிய பல கோஷ்டிகளாக உருப்பெற்றது. எங்கள் கூட்டங்களுக்கு வருவோரின் தொகை மிகவும் பெருகி வந்ததால், அப்படையும் பெருக வேண்டிய அவசியமேற்பட்டது.

கூட்டங்களில் சமாதானத்தை நிலைநிறுத்துவதற்காக அமைக்கப்பட்ட தற்காப்புப் படை ஸ்தாபனமானது மிகவும் கஷ்டமான ஒரு பிரச்னையைத் தீர்த்தது. அதுவரை எங்கள் இயக்கத்திற்கென பட்டயமோ, கொடியோ எதுமில்லை. அந்நிலைமை மிகுந்த அசௌகரியத்தை உண்டுபண்ணியது. எங்கள் கட்சி அங்கத்தினர்களுக்கு வெளிப்படையான அடையாளம் எதுவுமில்லை. எதிர்காலத்திலும் அவர்கள் அவ்விதமே இருந்து வருவது என்பது நினைக்க முடியாத விஷயம்.

நான் இளைஞனாக இருந்தபோதே அத்தகைய அடையாளத்தின் தத்துவம் எனக்குத் தெளிவாயிற்று. யுத்தத்திற்குப் பின் பர்லின் அரண்மனையின் முன்னிலையிலும், லஸ்ட் கார்ட்னிலும் நிகழ்ந்த மார்க்ஸ் கட்சியினர் கூட்டத்தில் எங்கும் சிவப்புக் கொடிகள், சிவப்பு கைப்பட்டயங்கள், சிவப்பு புஷ்பங்கள் மயமாக இருந்தன. சுமார் 1,20,000 ஜனங்களடங்கிய அக்கூட்டத்தின் பலத்திற்கு அது ஒரு வெளிப்படையான அறிகுறியாக விளங்கியது. அத்தகைய வெளிப்பகட்டு, சாதாரண மனிதனை எவ்வளவு சுலபமாக வசீகரிக்கிறது என்பதை நான் அப்போது உணர்ந்து கொள்வது சாத்தியமாயிற்று.

எங்கள் கட்சிக்கும் புதிய கொடியொன்றைச் சிருஷ்டிக்கத் தீர்மானித்தோம். அக்கொடியின் அமைப்பு, தோற்றம் முதலியவை பற்றி நாங்கள் பல நாட்கள் ஆலோசித்தோம். அவ்விஷயமாக பலரிடமிருந்தும் ஏராளமான யோசனைகள் வந்து குவிந்தன. புதிய கொடியானது எங்கள் போராட்டத்தின் தன்மையைக் குறிப்பதாகவும் அதே சமயத்தில் ஒரு பெரிய சுவர் விளம்பரத்திற்குற்ற முறையிலும் விளங்க வேண்டியது அவசியமெனக் கருதினோம். இதுபோன்ற அற்ப விஷயங்கள்தான் பொதுஜன உணர்ச்சியைப் பிரமாதமாகத் தூண்டிவிடக் கூடியவை என்பதை அனுபவம் உள்ளவர்கள் அறிவர். கண் கவர்ச்சியைக் கொடுக்கக் கூடிய ஓர் அடையாளமானது, இயக்கத்தில் ஜனங்களுக்குச் சிரத்தை உண்டுபண்ணக் கூடிய

முதல்படி என்பதற்கு எவ்வளவோ உதாரணங்கள் கூறலாம். எனவே எங்கள் கட்சிக்கு வெள்ளைக் கொடி அடையாளமாக இருக்க வேண்டுமென பலரும் கூறிய யோசனையை நாங்கள் நிராகரித்தோம். வெள்ளை, ஜனங்களின் கவனத்தை ஈர்க்கக் கூடிய ஒரு நிறமல்ல. அந்த நிறம் யுவதிகள் சங்கத்திற்குத்தான் தகுதியானதே அன்றி, புரட்சிகரமான ஓர் இயக்கத்திற்குற்றதல்ல. கருப்பு, வெள்ளை - நீலம், கருப்பு - சிவப்பு - தங்கம், கருப்பு - வெள்ளை - சிவப்பு முதலிய வர்ணக் கொடியையும் பல்வேறு காரணங்களால் நாங்கள் நிராகரிக்க நேர்ந்தது. நான் தலைவன் என்ற முறையில் அவ்விஷயமாக எனது யோசனையை வெளியிட விரும்பவில்லை. ஏனெனில் அதைப் போல் வேறு யாராவது யோசனை கூறலாமென்ற எண்ணத்துடனேயே நான் அதை வெளியிடவில்லை. அதற்கிணங்க, ஸ்டார்ன்பர்க்கைச் சேர்ந்த ஒரு பல் வைத்தியர் சற்றேறக் குறைய என் அபிப்பிராயத்தை அனுசரித்து ஓர் யோசனை கூறியிருந்தார். அவர் கூறியதில் ஒரே ஒரு தவறைத் தவிர வேறெதுவுமில்லை. அதாவது வெள்ளை வர்ணத்தைப் பின்னணியாக வைத்து வளைந்த ஓரங்களுடன் ஸ்வஸ்திகா கொடியை அவர் வரைந்திருந்தார். பல பரிசோதனைகளுக்குப் பின் நான் அக்கொடியின் இறுதியான தோற்றத்தை நிர்ணயம் செய்தேன். அதாவது ஒரு வெள்ளை மண்டலத்தின் மத்தியில் கருப்பு ஸ்வஸ்திகாவுடன் சிவப்பு நிறக் கொடியே நான் நிர்ணயித்ததாகும். அதன்பின் பல பரிசோதனைகளுக்குப் பிறகு கொடி, வெள்ளை மண்டலம், ஸ்வஸ்திகா இவைகளின் அளவையும் நிர்ணயம் செய்தேன். அவ்விதமே கைப்பட்டயமும் அமைக்க ஏற்பாடு செய்தேன்.

2580 (1920) கோடைகாலம் புதிய கொடி பகிரங்கமாகப் பறக்கவிடப் பட்டது. அதன் புதுமையும், இளமையான தோற்றமும் எங்கள் கட்சிக்கு முற்றிலும் பொருத்தமாயிருந்தன. அதற்குமுன் எவரும் அத்தகைய கொடியைப் பார்த்ததில்லை. அது சற்றேறக் குறைய ஜ்வாலையைக் கக்கும் ஒரு தீபம் போன்று தோற்றமளித்தது. அதைக் கண்டு எங்களுக்கு மிகுந்த ஆனந்தம் ஏற்பட்டது.

எங்கள் கட்சித் திட்டத்தின் உருவமே அக்கொடியென தேசீய அபேதவாதிகளான நாங்கள் கருதினோம். அந்த இயக்கத்தின் சமுதாய சீர்திருத்த ஆவலுக்கு சிவப்பு நிறம் சின்னமாக அமைந்தது. வெள்ளை நிறம் எங்களுடைய கல்மிஷமற்ற தேசீய எண்ணத்திறகும், ஸ்வஸ்திகா எங்களுடைய லட்சியமான யூதர் எதிர்ப்பு, வெற்றிக்காக ஆர்யர் போராட்டம் இவைகளுக்கும் சின்னங்களாக அமைந்தன.

எங்கள் கூட்டங்களில் ஜனங்களுக்குச் சிரத்தை அதிகமாகவே

வாரத்திற்கு இரு கூட்டங்கள் கூட்ட வேண்டிய அவசியமேற்பட்டது. எங்கள் விளம்பரங்களைச் சுற்றி ஜனங்கள் கூட ஆரம்பித்தனர். கூட்டம் நடக்கும் மண்டபங்களில் பதினாயிரக்கணக்கான ஜனங்கள் குழுமினர். மார்க்ஸ் கட்சியினரால் மோசம் போனவர்களெல்லோரும் மனம் மாறி ஜெர்மன் சாம்ராஜ்ய விடுதலைப் போராட்டத்திற்கு உதவியளிக்க உறுதிகொண்டு எங்கள் பக்கம் சேர்ந்தனர். மியூனிச் பொது ஜனங்கள் எங்களை நன்கு அறிந்து கொள்ள முற்பட்டனர். எங்கள் கட்சியைப் பற்றி ஜனங்கள் அடிக்கடி பிரஸ்தாபிக்கவும் ஆரம்பித்தனர். கட்சி அங்கத்தினர்கள், கட்சியை ஆதரிப்பவர்கள் முதலியோருடைய தொகையும் அதிகமாகிக் கொண்டே வந்தது. *2580- 81 (1920 -21)* மியூனிச்சில் எங்கள் கட்சியும் பலம் பொருந்திய ஒரு கட்சியாகியது.

அவ்வமயம் மியூனிச்சில் மார்க்ஸ் கட்சிகளைத் தவிர பெரும் கூட்டம் நடத்தக் கூடிய வேறொரு கட்சியுமில்லை. மியூனிச் கிண்டல் மண்டபத்தில் *5000* பேர்கள் உட்காரலாம். சில சமயங்களில் அதற்கு மேற்பட்ட ஜனங்களும் எங்கள் கூட்டங்களுக்கு வருவதுண்டு. க்ரோன் சர்க்கஸ் மண்டபம் என்ற மற்றொரு இடத்தில் அதுவரை கூட்டம் கூட்டுவதற்கு நாங்கள் துணியவில்லை.

*2581 (1921)* ஜனவரி மாதக் கடைசியில் மீண்டும் கலக்கத்தைக் கொடுக்கக் கூடிய ஒரு சம்பவம் ஜெர்மனியில் நிகழ்ந்தது. அதாவது பாரிஸ் ஒப்பந்தத்தின்படி ஜெர்மனி கண்மூடித்தனமாக *10,000* கோடி தங்க மார்க்குகள் கொடுப்பதாக ஒப்புக் கொண்டுவிட்டது. அந்த ஒப்பந்தமானது லண்டன் இறுதி எச்சரிக்கையின் மூலம் உறுதிப்படவுமிருந்தது. அதைக் கண்டிப்பதற்காக மியூனிச் கிண்டல் மண்டபத்தில் கூட்டம் கூடுவதென இறுதியாக நிர்ணயிக்கப்பட்டது. இதன் மத்தியில் நாட்கள் பல சென்றன. பெரிய கட்சிகளோ அந்த பயங்கர சம்பவத்தை முற்றிலும் அசட்டை செய்துவிட்டன. மியூனிச்சில் ஸ்தாபிக்கப்பட்ட பழைய காரியக் கமிட்டி ஒன்று, கூட்டம் கூடும் தேதியை ஒத்திப் போட்டுக் கொண்டே வந்தது.

அவ்விதம் காலங்கடத்தும் கோழைத்தனத்தைக் கண்டு பொறுமையிழந்து, என் சொந்தப் பொறுப்பில் கூட்டம் கூட்டுவதென்று தீர்மானித்தேன். பின்னர் அக்கூட்ட சம்பந்தமாக விளம்பரம் செய்ய ஏற்பாடு செய்துவிட்டு அடுத்த நாள், அதாவது பிப்ரவரி மாதம் 3ந் தேதி கூட்டம் நடத்துவதற்காக க்ரோன் சர்க்கஸ் மண்டபத்தையும் வாடகைக்குப் பேசி முடித்தேன்.

அந்நாட்களில் அது மிகவும் துணிச்சலான ஒரு செய்கை என்பதில் சந்தேகமில்லை. கூட்டத்திற்கு போதிய ஜனங்கள்

வராதிருந்து விடுவார்களோ என்ற கவலை ஒருபுறமும், எங்கு கூட்டம் கலைக்கப்படுமோ என்ற கவலை மற்றொரு புறமும் எங்களை வாட்டியது. அவ்வளவு பெரிய மண்டபத்தில் கூடும் ஜனங்களைச் சமாளிப்பதற்குற்ற தற்காப்புப் படையும் எங்களிடமில்லை. அக்கூட்டம் வெற்றிகரமாக நடைபெறாவிடில், பின்னர் எங்கள் நிலைமை சீர்பட வெகு காலமாகும். அதனால் எங்கள் விரோதிகளுக்கும் உற்சாகமேற்பட்டு விடும்.

கூட்ட சம்பந்தமான விளம்பரப் பிரசுரங்களை விநியோகம் செய்ய ஒரே ஒரு நாள்தான் அவகாசமிருந்தது. துரதிர்ஷ்டவசமாக, கூட்ட தினத்தன்று காலை மழையும் பெய்ய ஆரம்பித்தது. பலாத்காரமும், ரத்தக் களறியும் ஏற்படலாமென்ற ஒரு கூட்டத்திற்கு, மழையையும், பனியையும் கூட லட்சியம் செய்யாமல் யார் வருவார்கள்? கூட்டத்திற்கு போதிய ஜனங்கள் வராவிடில் எங்கள் விரோதிகளின் முன்னிலையில் நாங்கள் வெட்கமடையும் படியும் நேரும். எனவே அத்தகைய நிலைமையைத் தவிர்க்க வேண்டுமென்ற உறுதியுடன் நான் உடனே பல்வேறு துண்டுப் பிரசுரங்களை எழுதி அச்சடித்து மோட்டார் லாரிகளின் மூலம் விநியோகிக்க ஏற்பாடு செய்தேன். மார்க்ஸ் கட்சியைச் சேராத ஒரு கூட்டத்தினர், தங்கள் கட்சிக் கொடியுடன் மோட்டார் லாரிகளில் தெருக்களின் வழியாகச் சென்றது அதுதான் முதற்தடவையாகும்! அது மார்க்ஸ் கட்சியினருக்கு மிகுந்த ஆத்திரத்தை உண்டுபண்ணியது. ஏனெனில் அவ்விதம் அதுவரை மார்க்ஸ் கடசியினரின் ஏகபோக பாத்தியமாயிருந்து வந்ததல்லவா!

அன்று மாலை 7 மணிக்கு அந்த சர்க்கஸ் மண்டபத்தில் சில ஜனங்களே கூடியிருந்தனர் என்று எனக்கு டெலிபோன் மூலம் தகவல்கிடைத்தது. அதனால் நான் கலக்கமடைந்தேன். அந்த மண்டபம் மிகவும் பெரியதென்பதும், அங்கு ஏராளமானவர்கள் வந்தாலும் அவ்வளவு அதிக பேர்களிருப்பதாகத் தோன்றாதென்பதும் அப்போது என் மனதில் படவில்லை. மற்ற மண்டபங்களில் 1000 பேர்களிருந்தாலும் பிரமாத கூட்டங் கூடியிருப்பதாகத் தோன்றும். எனினும் பின்னர் சிறிது நேரத்திற்கெல்லாம் எனக்கு நம்பிக்கை அளிக்கக் கூடிய செய்தி கிடைத்தது. 7 மணிக்கு அந்த மண்டபத்தில் முக்கால் பாகம் நிறைந்து விட்டதாகத் தகவல் கிடைத்ததும் நான கூட்டத்திற்குப் புறப்பட்டுச் சென்றேன்.

நான் மண்டபத்திற்குப் போய்ச் சேர்ந்தபோது அங்கு வெளியிலும் கூட ஜனங்கள் நின்று கொண்டிருந்தனர். பல விரோதிகளும் அசம்பாவிதம் ஏற்படலாமென வெளியில் காத்துக் கொண்டிருந்தனர். மண்டபத்திற்குள் சென்றதும் எனக்கு பிரமாத சந்தோஷம் ஏற்பட்டது. சுமார் 5600 டிக்கெட்டுகளுக்கு

மேல் விற்பனையாயின. டிக்கெட்டு வாங்கிக் கொண்டு உள்ளே வந்தவர்கள், வேலையற்றோர், ஏழை மாணவர்கள் முதலியோர் உள்பட 6500 பேர்களுக்கு மேல் விஜயம் செய்திருந்தனர்.

"எதிர்காலத்தில் வாழ்வா அல்லது வீழ்வா" என்பதே அன்று நான் பிரசங்கத்திற்கு எடுத்துக் கொண்ட விஷயம். கூட்டத்திலிருந்தவர்கள் தேசத்தின் எதிர்காலப் பிரதிநிதிகளாதலால் எனக்கு மிகுந்த சந்தோஷம் ஏற்பட்டது. நான் இரண்டரை மணி நேரம் பேசினேன். நான் பேச ஆரம்பித்து அரைமணி நேரத்திற்குப் பின் அக்கூட்டம் மிகவும் வெற்றிகரமாக முடியப் போகிறதென்ற உணர்ச்சி எனக்கேற்பட்டது. அடிக்கடி ஜனங்கள் உற்சாகத்துடன் கரகோஷம் செய்தனர். ஒரு மணி நேரத்திற்குப் பின் கரகோஷம் நின்று நிசப்தம் நிலவியது. பிறகு இறுதியில் சகலரும் தேசிய கீதம் பாடி தங்கள் உணர்ச்சியைத் தெரிவித்தனர்.

கூட்டம் கலைந்து எல்லோரும் வெளியே செல்ல 20 நிமிஷ நேரமாயிற்று. அதன் பின்னர்தான் நான் பரம சந்தோஷத்துடன் மேடையை விட்டிறங்கி வீடு சென்றேன். அக்கூட்டத்தைப் புகைப்படம் எடுத்துப் பத்திரிகைகளும் பிரசுரித்தன. நடுத்தர வகுப்பைச் சேர்ந்த பத்திரிகைகள் கூட்ட நடவடிக்கைகளை விவரமாகக் குறிப்பிடாது மழுப்பியிருந்தன. அக்கூட்டத்தின் கர்த்தாக்களைப் பற்றியும் அப்பத்திரிகைகள் எதுவும் குறிப்பிடவில்லை.

அதன்பின் எனக்கு மிகுந்த தைரியமேற்பட்டதால் அந்த மண்டபத்தில் அடிக்கடி கூட்டங்கள் கூட்ட முற்பட்டேன். அக்கூட்டங்களும் வெற்றிகரமாகவே முடிந்தன. நாளுக்கு நாள் எங்களை ஆதரிப்பவர்களின் தொகையும், கட்சி அங்கத்தினர்களின் தொகையும் பிரமாதமாகப் பெருகிக் கொண்டே வந்தன.

எங்களுக்கு ஏற்பட்ட அவ்வெற்றி காரணமாக எங்கள் விரோதிகளுக்குத் தூக்கமேயில்லை! எங்கள் விஷயத்தில் அவர்கள் முதலில் மிரட்டலையும் பின்னர் மௌனத்தையும் உபயோகித்துப் பார்த்தார்கள். அவ்விரு ஆயுதங்களும் வீணாயின. எங்களுடைய முன்னேற்றத்தை அவர்களால் தடுக்க முடியவில்லை. கடைசியாக அவர்கள் தங்கள் நடவடிக்கைகளுக்கு எல்லாம் சிகரம் போன்ற ஒரு பயங்கர காரியத்தில் ஈடுபட்டனர். எங்கள் கட்சி அலுவல்களுக்கு முற்றுப்புள்ளி வைக்க உத்தேசித்து, அதற்காக ஓர் உண்மையான நாடகத்தையும் ஜோடித்தார்கள். அதாவது ஒருநாள் மாலையில் எர்ஹார்ட் ஆவிர் என்ற பார்லிமெண்டு அங்கத்தினர் மீது யாரோ ஒருவர் சரமாரியாக சுட்டதாயும், அபேதவாத ஜனநாயகத் தலைவர்களின் தைரியத்தினாலும், சமயோசித் புத்தியாலும் அவர் உயிர் தப்பினாரென்றும், அவரைக் கொல்ல முயற்சித்த கோழைகள் ஓட்டம் பிடித்ததாயும்

கூறப்பட்டது. எங்கள் இயக்கத்திற்கு விரோதமாக ஜனங்களின் உணர்ச்சியைத் தூண்டிவிடவே அந்த மாய நிகழ்ச்சியானது சித்தரிக்கப்பட்டது!

அவர்கள் எங்களை உண்மையாகவே தாக்குவதற்கு அந்த ஜோடனையானது ஒரு பூர்வாங்கமாகும். மியூனிச்சிலுள்ள மற்றொரு மண்டபத்தில் எங்கள் கூட்டமொன்று நடக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அக்கூட்டத்தை எப்படியாவது கலைத்தே தீருவதென எங்கள் விரோதிகள் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்களென்று எங்களுக்குத் தகவல் எட்டியது. 2581 (1921) நவம்பர் மாதம் 4ந் தேதி மாலை 6 மணிக்கு மேல்தான் அது சம்பந்தமான திட்டமான தகவல் எனக்குக் கிடைத்தது. எங்கள் கூட்டத்தைக் கலைப்பதற்காக எங்களுடைய விரோதிகள் ஏராளமான தொழிலாளர்களை அனுப்பத் தீர்மானித்திருப்பதாகத் தெரிய வந்தது. நாங்கள் அப்போது எங்களுடைய கட்சிக் காரியாலயத்தை புதிய இடத்திற்கு மாற்றிக் கொண்டிருந்ததாலும், புதிய இடத்தில் டெலிபோன் வசதிகளின்மையாலும் அத்தகவல் துரதிர்ஷ்ட வசமாக மிகவும் தாமதித்தே எங்களுக்குக் கிடைத்தது. அதன் பயனாக, அக்கூட்டத்திற்கு எங்கள் தற்காப்புப் படையினர்தான் வந்திருந்தனர். ஒரு மணி நேரத்திற்குள் போதிய படைகளைத் தருவிக்க டெலிபோன் வசதியுமில்லை. தவிர அதற்கு முந்திய பல கூட்டங்களிலும் அவ்விதம் எச்சரிக்கை கிடைத்தும், யாதொரு அசம்பாவிதமும் நேராமலிருந்ததுண்டு. 'முன்கூட்டி அறிவிக்கப்பட்ட புரட்சிகள் உண்மையாவதில்லை' என்ற பழமொழி அதுவரை எங்கள் விஷயத்தில் பொய்த்துப் போகவில்லை. அதனாலேயே அன்றும் போதிய அளவு பலமான முன்னேற்பாடுகள் செய்யப்படவில்லை. க்ரோன் சர்க்கஸ் மண்டபம் போன்ற பெரிய மண்டபத்தில் விஷமம் செய்வதுதான் விரோதிகளுக்கு சௌகரியமேயன்றி, ஹாப்ராவ் ஹவுஸ் மண்டபம் கலகம் செய்வதற்குத் தகுதியானதாக இருக்குமென நாங்கள் கருதவில்லை. இருந்தாலும் அக்கூட்டமானது எதிர்காலத்தில் எங்களுக்கு ஒரு சிறந்த படிப்பினையாயிற்று.

அன்று மாலை 7.45 மணிக்கு நான் கூட்டத்திற்குச் சென்றபோது, விரோதிகளின் உத்தேசமானது தெளிவாகிவிட்டது. ஏனெனில் அன்று மண்டபம் நிறைந்திருந்தது. உள்ளே இடமிராததால் போலீசார் வாசற்படியை அடைத்து விட்டனர். எங்கள் விரோதிகளோ முதலிலேயே ஏராளமாகக் கூட்டத்திற்கு வந்து மண்டபம் நிறைய உட்கார்ந்து விட்டனர். எனவே கட்சியை ஆதரிப்பவர்களில் பலரும் வெளியிலேயே இருக்கும்படி நேர்ந்துவிட்டது.

மெய்க்காவல் படையினரான ஒரு சிறு கோஷ்டியினர்

(45 அல்லது 46 பேர்கள்) மண்டபத்தின் வாயிலில் என்னை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். நான் வந்ததும் அச்சிறுவர்களிடம் கீழ்க்கண்டவாறு கூறினேன் : "நம் இயக்கத்தில், எவராலும் வளைக்கவோ முறிக்கவோ முடியாத உங்களுக்குள்ள பக்தி விசுவாசத்தை முதன்முதலாகக் காட்டுவதற்குற்ற சந்தர்ப்பம் இன்றுதான் உங்களுக்குக் கிடைத்திருக்கிறது. எனவே, நாம் இறந்து நம்முடைய பிரேதங்களை வெளியே கொண்டு போகும்படி நேர்ந்தாலொழிய, நம்மில் எவரும் இம்மண்டபத்தை விட்டு வெளியே செல்லக் கூடாது. நான் மண்டபத்திலேயேதான் இருக்கப் போகிறேன். உங்களில் ஒருவர்கூட என்னை விட்டுவிட்டுச் செல்ல மாட்டீர்களென்பதே எனது நம்பிக்கை. உங்களில் எவராவது கோழைத்தனமாக நடந்து கொள்வதை நான் கண்டால், நானே நேரில் வந்து உங்களுடைய பட்டயத்தைப் பிய்த்து எறிந்து விடுவேன். கூட்டத்தைக் கலைக்க அற்ப முயற்சி செய்யப்பட்டாலும் நீங்கள் பாய்ந்தெழ வேண்டும். சிறந்த தற்காப்பு, எதிரியைத் தாக்குவதுதானென்பதை நீங்களெல்லோரும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்."

இவ்வாறு நான் கூறி முடித்ததும் அவர்களெல்லோரும் நான் கூறியதை மனப்பூர்வமாக அங்கீகரிப்பதற்கு அறிகுறியாக கோஷங்கள் செய்தனர். சாதாரணமாக இருப்பதைக் காட்டிலும் அன்று அக்கோஷங்கள் மிக ஆக்ரோஷத்துடனும், பலாத்கார வேகத்துடனுமிருந்தன!

மண்டபத்தின் வழியாக செல்லுகையில் நிலைமையைக் கவனித்துக் கொண்டே சென்றேன். எங்களுடைய விரோதிகள் நெருக்கமாக உட்கார்ந்து கொண்டிருந்தனர். அவர்களுடைய பார்வை ஈட்டி போன்று என்னை ஊடுருவிப் பாய்ந்துவிடும் போல் தோன்றியது. அடங்கா ஆத்திரத்தினாலும், துவேஷத்தினாலும் சிவந்த, எண்ணிக்கையற்ற முகங்கள் என்னை நோக்கின. மற்றவர்கள் என்னைப் பார்த்து ஏளனம் செய்து கூச்சல் போட்டனர். இந்தப் பயல்களை இன்று ஒரு வழியாக முடித்துத்தான் தீருவது இன்று இவர்கள் தங்களுடைய குடல்களைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்ளட்டும் - இன்று இவர்களை நொறுக்கியே தீருவது என்பன போன்ற மற்றும் பலவித "கண்ணியமான" வார்த்தைகளை அவர்கள் உபயோகித்தனர். விரோதிகள் தங்கள் பக்கத்தில் அதிக பேர்களிருக்கிறார்களென்பதை அறிந்ததால் பிரமாத ஆர்ப்பாட்டங்கள் செய்தனர்.

இருந்தாலும் கூட்டத்தை ஆரம்பிக்க முடிந்தது. நானும் பேச ஆரம்பித்தேன். எனக்கு முன்புறத்திலும், இடதுபுறத்திலும் விரோதிகளைத் தவிர வேறு யாருமில்லை. பலர் நின்று கொண்டும் உட்கார்ந்து கொண்டுமிருந்தனர். வலதுபுறச் சுவரை அடுத்து

என் மேஜைக்கு அருகிலும் அவர்கள் நெருக்கமாக இருந்தனர். அவர்கள் ஒருவர் பின்னொருவராக பீர் வாங்கிக் குடித்துவிட்டு காலிப் புட்டிகளை மேஜைக்குக் கீழே போட்டு வைத்தனர். அவர்களில் பெரும்பாலோரும் திடசாலிகளான இளைஞர்கள். எனவே அக்கூட்டம் அமைதியாக முடிவடையப் போவதில்லை என்பதை நான் அறிந்து கொண்டேன். விரோதிகள் அடிக்கடி குறுக்கிட்டனர் எனினும், அதை எல்லாம் சமாளித்துக் கொண்டு சுமார் ஒன்றரை மணி நேரம் என்னால் பேச முடிந்தது. அதன்பின் இனி கூட்டத்தைச் சமாளிப்பது கஷ்டமில்லை என்ற உணர்ச்சியும் எனக்கேற்பட்டது. கலகக்காரர்களின் தலைவர்களும் அதையறிந்து கொண்டனர் என்று தோன்றியது. அவர்கள் அமைதியின்றி வெளியே செல்லுவதும், மீண்டும் உள்ளே வந்து தங்களுடைய சகாக்களுடன் பேசுவதுமாக இருந்தார்கள். அவ்வமயம் குறுக்கிட்ட ஒருவருக்கு நான் அளித்த பதிலின் தோரணையில் அற்பத் தவறு ஏற்பட்டுவிட்டது. அவ்வார்த்தைகள் என் வாயிலிருந்து வெளிக்கிளம்பிய அந்த க்ஷணத்திலேயே, ஆஹா, தவறு செய்துவிட்டோமென்பதை உணர்ந்தேன். அவ்வளவுதான், அத்தவறு காரணமாகக் கலகம் குபீரென பற்றிக் கொண்டது. சிலர் ஆத்திரத்துடன் கூச்சலிட்டனர். அப்போது திடீரென ஒருவர் தன் ஆசனத்திலிருந்து எழுந்து நின்று "சுதந்திரம்", "சுதந்திரம்" என்று கூச்சலிட்டார். உடனே "சுதந்திர வீரர்கள்" தங்கள் வேலையைச் செய்யத் துவங்கினர்!

சில நிமிஷ நேரத்திற்குள் மண்டபம் முழுதும் கூச்சல்களும், கீச்சுக் குரல்களும் பிரமாதமாகிவிட்டன. தலைக்கு மேல் தோட்டாக்கள் பறப்பது போல் பீர் புட்டிகள் பறந்தன, நாற்காலிகள் நொறுங்கின, ஜாடிகள் உடைந்தன, ஊளைகளும், கூச்சல்களும் காதை செவிடாக்கின. அது வெறி பிடித்தவர்களின் ஒரு கூட்டமாகியது. நான் இருந்த இடத்திலேயே நின்றுகொண்டு, என் பையன்களைக் கவனித்தேன். அவர்களில் ஒவ்வொருவரும் தங்கள் கடமையைச் சிறிதும் வழுவின்றி செய்து வந்தனர். விரோதிகளின் நடன தாண்டவம் ஆரம்பமான அந்த நிமிடமே நம் கட்சி சூறாவளிப் படையினர் அவர்களைத் தாக்க ஆரம்பித்தனர். 10 பேர்களடங்கிய கோஷ்டியாக அவர்கள் பிரிந்து விரோதிகளின் மீது ஓநாய்களைப் போல் விழுந்து அவர்களை இழுத்து மண்டபத்திற்கு வெளியில் கொண்டு போய் தள்ளினர். 5 நிமிஷத்திற்குள் அவர்களின் சரீரம் முழுதும் இரத்தம் வழிந்தது. அப்போதுதான் அவர்களின் உறுதியையும், வீரத்தனத்தையும் நான் அறிந்தேன். அதிலும் மிகவும் தைரியம் வாய்ந்த என் தோழர்களான மாரிஸும், ஹெஸ்ஸும் (இன்று என்னுடைய அந்தரங்கக் காரியதரிசியாக இருப்பவர்) மற்றும்

பலரும் கடுமையாகக் காயமடைந்தும்கூட, தாங்கள் கீழே விழும் வரையில் மீண்டும் மீண்டும் எதிரிகளைத் தாக்கினர். குழப்பமும் அடிதடியும் 20 நிமிஷ நேரம் வரை நீடித்தன. அதற்குள் எங்கள் விரோதிகளான 700 அல்லது 800 பேர்களும் மண்டபத்திற்கு வெளியே விரட்டப்பட்டும், தூக்கியெறியப்பட்டும் ஓடிவிட்டனர். எங்கள் படையைச் சேர்ந்த சுமார் 50 பேர்கள், நூற்றுக்கணக்கான எங்கள் விரோதிகளை அவ்விதம் விரட்டியது அற்புதமான ஒரு காரியமாகும். மண்டபத்தின் இடதுபுற ஓரத்தில் மாத்திரம் இன்னும் ஏராளமானவர்கள் எங்கள் படையினரை எதிர்த்துப் போரிட்டனர். அப்போது மண்டபத்தின் வாசற்படியிலிருந்து மேடைப்பக்கம் நோக்கி யாரோ இரண்டு தடவை சுட்டனர். பின்னர் மண்டபத்தின் பல பக்கங்களிலிருந்தும் கிளம்பிய துப்பாக்கி வேட்டுகள் காதைத் துளைத்தன. அக்காட்சி மிகுந்த ஆனந்தத்தைக் கொடுத்ததுடன், யுத்தகால நிகழ்ச்சிகளையும் ஞாபகப்படுத்தியது.

யார் சுட்டார்களென்பதை அப்போது அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. எனினும் நம் படையினர் மீண்டும் விரோதிகளை அத்யுக்ரமாக ஆரம்பித்து இறுதியில் சகல கலகக்காரர்களையும் மண்டபத்திற்கு வெளியே துரத்தியடித்துவிட்டனர். இச்சடங்குகளெல்லாம் முடிய சுமார் 25 நிமிஷ நேரமாயிற்று. அப்போது மண்டபத்தின் தோற்றம் ஏதோ ஒரு வெடிகுண்டு வீழ்ந்த இடம் போல் மிகவும் அலங்கோலமாக இருந்தது. என் தோழர்களில் பலர் கடுமையாகக் காயமடைந்ததால் அவர்களுக்குக் கட்டுக் கட்டியதுடன் மற்றும் பலரை ஆஸ்பத்திரிக்குத் தூக்கிச் செல்ல வேண்டியிருந்தது. இருந்தாலும் நாங்கள் மாத்திரம் மேடையை விட்டு அசையவில்லை. அக்கூட்டத்திற்குத் தலைமை வகித்த ஹர்மான் எஸ்ஸென், "கூட்டம் தொடர்ந்து நடைபெறும், பிரசங்கியும் மேற்கொண்டு தமது பேச்சைத் தொடர்ந்து செல்லுவார்" என்று அறிவித்தார். நானும் மேற்கொண்டு தொடர்ந்து பேசினேன்.

கடைசியில் கூட்டத்தை நாங்கள் முடித்தபின், ஒரு போலீஸ் அதிகாரி மிகப் பரபரப்புடன் மண்டபத்திற்குள் வந்து கைகளைப் பிரமாதமாக ஆட்டிக் கொண்டு "கூட்டம் முடிந்து விட்டதென"ப் பிரகடனம் செய்தார்! அந்த வேடிக்கைக் கூத்தைக் கண்டு நாங்கள் சிரிக்காமலிருக்க முடியவில்லை. அக்கூட்டத்தின் பயனாக நாங்கள் உண்மையான ஒரு பாடம் கற்றுக் கொண்டோம். எங்கள் விரோதிகளும் அன்று கற்ற பாடத்தைப் பின்னர் ஒருபோதும் மறக்கவில்லை!



# 8. கூட்டுக் கட்சி முறை உருப்படுமா?

**சா**தாரணமாக கூட்டுறவு சங்க முறையென்றால், ஒரே லட்சியமுள்ள பல சங்கங்களும் பரஸ்பரம் சம்பந்தம் வைத்துக் கொள்வதுதானென்று நம்மால் பொதுவாகக் கருதப்பட்டு வருகின்றது. அவ்விதம் சம்பந்தம் வைத்துக்கொண்டு குறிப்பிட்ட பொதுவான நடவடிக்கைகளெடுத்துக் கொள்வதன் மூலம் அவைகளின் லட்சியம் சுலபமாக நிறைவேறுவதற்கு வழியேற்படுமென்றும் கருதப்படுகிறது. பல சங்கங்கள் சேர்ந்து பரஸ்பரம் கூட்டுறவு முறையை ஏற்படுத்திக் கொண்டிருப்பதாகக் கேள்விப்படுவோருக்கு ஒருவித திருப்தியும் சமாதானமும் உண்டாகின்றன. பரஸ்பரமுள்ள அபிப்பிராய பேதம் ஒழியவும், ஐக்கிய பாவமேற்படவும் அதுதான் உற்ற வழியென்றும் அவர்கள் கருதுகின்றனர். பலவீனமான பல்வேறு சங்கங்களும் ஐக்கியமடைவதன் மூலம் பலமடைகின்றன என்பதும் அவர்களுடைய எண்ணம். அத்தகைய எண்ணம் பெரிதும் தவறாகும்.

ஒரே லட்சியத்தையடைய பல்வேறு சங்கங்கள் அவசியமில்லை என்பதுடன், அவ்விதமிருப்பது அனர்த்தத்தையும் உண்டுபண்ணும். ஒரு லட்சியத்திற்காக ஒரே இயக்கம்தான் போராட வேண்டும். அந்த லட்சியத்தை ஆதரிக்கும் சகலரும் அவ்வியக்கத்தில் சேர்ந்து அதற்கு பலத்தைக் கொடுக்க வேண்டும். நிகழ்காலத்திலுள்ள தீமையை ஒழிப்பதற்காகவோ அல்லது எதிர்காலத்தில் திட்டமான ஓர் ஒழுங்கு முறையை ஸ்தாபிப்பதற்காகவோதான் ஒரு கட்சியோ அல்லது சங்கமோ ஏற்படுகின்றது. எனவே அதன் லட்சியத்தை ஆதரிக்கும் சகலரும் அதில் சேருவதுதான் புத்திசாலித்தனமும், யோக்கியப் பொறுப்புமாகும்.

பெரும் பிரச்னைகளைத் தீர்க்க வேண்டுமென்ற ஆர்வமானது திடீரென்று ஏற்படும் விஷயமல்ல. அது வெகுகாலமாக கோடிக்கணக்கான ஜனங்களின் மனதில் உதயமாகி வளர்ந்து வருவதாகும். மகத்தான கஷ்டங்களிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள சக்தியற்ற தேசமானது புதிய பலம் பெறுவதென்பது முடியாத காரியம். விதியின் கிருபையால் அத்தகைய ஒரு தேசத்தில், ஜனங்களை மகத்தான கொடுமையிலிருந்து விடுவிக்கும் சக்தி வாய்ந்த ஒரு மகான் அவதரிக்கிறாரென்று வைத்துக் கொள்வோம். அவரது அவதாரமானது அத்தேச ஜனங்களின் ஜீவ சக்திக்கு சரியான ஓர் ருஜுவாகும். அத்தகைய ஜீவ சக்திவாய்ந்த ஜனங்களின் லட்சியமும் இறுதியில் நிறைவேறியே தீரும்.

மகத்தான பிரச்னைகளின் மூலாதாரமான ஓர் அம்ச மென்னவெனில், அப்பிரச்னைகளைத் தீர்க்கும் பொறுப்பை ஆயிரக்கணக்கானவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதுதான் இயற்கையின் கட்டளை என்று நினைப்போர் பலர். உண்மையிலேயே விதியானது பலருக்கு அவ்வாறு கட்டளையிடுவது உண்டு. ஆனால் அவர்களில் மிகுந்த பலமும், தைரியமுமுள்ளவரே இறுதியில் வெற்றி பெறுவார். எனினும் அவர்களில் யார் அதிக பலமும் யோக்கியதையுமுடையவர்களென்பதைப் பொது ஜனங்கள் நிர்ணயிக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள். அதனால்தான் ஒரே லட்சியத்திற்காகப் போராட வெவ்வேறு மனிதர்கள் வெவ்வேறு இயக்கங்களை ஆரம்பிக்கின்றார்கள். ஒரே லட்சியத்தை அடையும் நோக்கத்துடன் அவர்கள் வெவ்வேறு வழியாகச் செல்லும் காட்சி மிகவும் துக்ககரமானதாகும். குறிப்பிட்ட லட்சியத்தை அடைய தாங்கள் செல்லும் பாதைதான் சரியானதென்று ஒவ்வொருவரும் நினைத்துக் கொண்டு செல்லுவார்கள். பிறர் செல்லும் பாதையைப் பற்றி அவர்கள் சிறிதும் சிந்திக்க மாட்டார்கள். ஒரே லட்சியத்தை அடையும் நோக்கத்துடன் பல இயக்கங்கள், கட்சிகள், மதப் பிரிவுகள் முதலியன ஏற்படுவதற்கு அதுதான் காரணம். பல்வேறு சக்திகளும் பல்வேறு பாதைகளில் செல்லுவதன் மூலம் நிச்சயமாகவும், சீக்கிரமாகவும் லட்சியத்தை அடைய முடியுமென்று ஜனங்கள் கருதுகின்றனர். ஆனால் அது சரியன்று. தெளிவான, குறுக்கான, திட்டமான பாதையில் செல்லும் இயக்கத்தைத்தான் இயற்கையானது இறுதி லட்சியத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும். மற்ற இயக்கங்கள் தோல்வியடைந்தே தீரும்.

பலர் அறியாமை காரணமாக வெவ்வேறு பாதையில் செல்லுவதுண்டு. மற்றும் பலர் அவ்விதம் செல்லுவதற்கு, பொறாமை, அசூயை, பேராசை, பிறருடைய அபிப்பிராயம், கொள்கை முதலியவைகளைத் திருடி தன்னுடையவை என்று கூறிக் கொள்ளும் சுபாவம் முதலியவையே காரணம்.

தன் தேச ஜனங்களின் கஷ்டங்களை அறிந்து அதற்குற்ற பரிகார முறைகளை ஒருவர் கைக்கொண்டால், உடனே அற்பர்களும், ஆஷாடபூதிகளும் அத்தகையோரின் நடவடிக்கைகளைக் "காப்பி" அடிக்க ஆரம்பித்து விடுகின்றனர். வடையை வாயில் கவ்விக் கொண்டுள்ள ஒரு பட்சி எப்போது அயரப்போகிறது, தான் அதை எப்போது அபகரித்துக் கொள்ளலாமென்று காத்துக் கொண்டிருக்கும் மற்ற பட்சியைப் போலவே, மேலே குறிப்பிட்ட பிரகிருதிகளும் பிறருடைய கீர்த்தியைத் திருடுவதற்காகக் காத்துக் கொண்டிருப்பார்கள்!

ஒரு புதிய இயக்கம் ஆரம்பமாகி, அதன் சம்பந்தமான

திட்டம் வெளியானதும் தாங்களும் அதே லட்சியத்திற்காகவே போராடுவதாக அவர்கள் பிரகடனம் செய்வார்கள்! ஆனால் யோக்கியப் பொறுப்புடன் அவ்வியக்கத்தில் சேர அவர்கள் முன்வரமாட்டார்கள். அந்த இயக்கத்தின் திட்டத்தைத் திருடிக் கொண்டு தங்கள் சொந்தத்தில் புதிய கட்சி ஒன்றையே அமைக்க முற்படுவார்கள். அவ்வித நடவடிக்கை எடுத்துக் கொள்ள தாங்கள் வெகு காலமாக யோசித்து வருவதாயும் வெட்கமின்றி கூறுவார்கள். ஜனங்களிடையே ஒற்றுமை சீர்குலைவதற்கு அத்தகைய சமய சஞ்ஜீவிகள்தான் காரணஸ்தர்களாவர்.

2578 -79ல் (1918- 19) எங்கும் 'தேசபக்தர்'களடங்கிய பிரிவுகளும் கட்சிகளும் முளைக்க ஆரம்பித்தன. ஆனால் 2580ம் (1920) வருஷத்திற்குள் தேசீய அபேதவாத ஜெர்மன் தொழிற்கட்சிதான் முன்னணிக்கு வந்தது. மற்ற ஸ்இயக்கங்களைச் சேர்ந்த பலர், யோக்கியப் பொறுப்புடனும், தேசபக்தி உணர்ச்சியுடனும் அவ்வியக்கங்களைக் கலைத்து விட்டு யாதொரு நிபந்தனையுமின்றி எங்கள் கட்சியில் வந்து சேர்ந்தனர்.

அவர்களில் ஜூலியஸ் ஸ்டிரீச்சர்தான் விசேஷமாகக் குறிப்பிடுவதற்குரியவர். அப்போது அவர் நூரன்பர்க்கில் ஜெர்மன் அபேதவாதக் கட்சியைச் சேர்ந்தவராயிருந்தார். அவரது லட்சியமும் எங்களுடைய லட்சியம் போன்றதுதான். எங்களுடைய கட்சி பலமடைய ஆரம்பித்ததும் அவர் தம்முடைய கட்சியினரை அழைத்து தேசீய அபேதவாத ஜெர்மன் தொழிற்கட்சியில் சேர்ந்து பொதுஜன லட்சியத்திற்காக உழைக்கும்படி கேட்டுக் கொண்டார். அவ்விதம் அவர் தீர்மானித்தது மிகவும் கஷ்டமான ஒரு காரியமாயினும், அது அவரது சிறந்த யோக்கியப் பொறுப்பையே காட்டுகிறது.

அப்போது தனித்து நிற்க சக்தியற்ற சங்கங்களெல்லாம் சேர்ந்து கூட்டுறவு சங்க முறையிடம் அடைக்கலம் புக முற்பட்டன. அதாவது, 8 நொண்டிகள் சேர்ந்து ஒருவரையொருவர் தொத்திக் கொண்டு நின்றால், ஒரு பயில்வானைப் பணிய வைத்து விடலாமென்பது அவர்களுடைய எண்ணம் போலும்! அவர்களில் ஒருவர் பலசாலியாக இருந்தால்கூட மற்றவர்களுடைய பளு அவரைக் கீழே வீழ்த்திவிடுமென்பதை அவர்கள் உணரவில்லை.

கூட்டுமுறை பற்றி ஒரு விஷயத்தைத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். பலவீனமான பல சங்கங்கள் ஒன்று சேருவதன் மூலம் அவைகளுக்குப் பலமேற்பட்டு விடாது. உண்மையிலேயே பலமுள்ள ஒரு சங்கம் பலவீனமான மற்ற சங்கங்களுடன் சேருவதன் மூலம் தன் பலத்தையும் இழந்து விடுகின்றது. ஏனெனில் எப்போதுமே பெரும்பான்மையோர் கோழைகளாகவும், மூடர்களாகவுமே இருப்பார்கள் என்பது

அனுபவ பூர்வமாக அறிந்த விஷயம். அவ்வித கூட்டு முறையால் சங்க நிர்வாகத்தில் சிறந்தவர்களுக்கு இடமிராது. இயற்கையான வளர்ச்சிக்குக் கூட்டுமுறை ஒரு பரம விரோதியாகும். ஒருவேளை ஏதாவது விசேஷப் பிரச்னைகளைத் தீர்க்க வேண்டியதற்காக அவ்வித கூட்டுறவு உசிதமாக இருக்கலாமெனினும், அந்நிலைமையிலும் அது தற்காலிகமானதாகவே இருக்க வேண்டும். எந்த இயக்கமும் நிரந்தரமான கூட்டுறவு முறையால் வளர்ச்சி குன்றி வீழ்ச்சியுறுமேயொழிய, வெற்றி பெற முடியாது. இவ்வுலகில் கூட்டுறவு முறையால் எவ்வித பெரிய விஷயமும் சாதிக்கப்பட்டதில்லை. தனி நபர்கள்தான் மகத்தான பிரச்னைகளைத் தீர்ப்பதில் வெற்றி பெற்றிருக்கிறார்கள். கூட்டுறவு முறையாலேற்படும் வெற்றியில் எதிர்காலச் சீர்குலைவின் வித்தும் அடங்கியிருக்கும். உலகிலேற்பட்டுள்ள மகத்தான புரட்சிகளுக்குக் காரணம் தனி நபர்களேயன்றி கூட்டு ஸ்தாபனங்களல்ல.



# 9. சூறாவளிப்படையின் தத்துவம்

பழைய ஜெர்மன் ராஜ்யத்தின் பலமானது மூன்று தூண்களை ஆதாரமாகக் கொண்டிருந்தது. அவையாவன: முடியரசு சர்க்கார் முறை, சிவில் உத்தியோகம், ராணுவம். ஆனால் 2578ல் (1918) ஏற்பட்ட புரட்சியானது, சர்க்கார் முறையை ரத்து செய்து, ராணுவத்தைக் கலைத்து, சிவில் உத்தியோகங்களைக் கட்சி அரசியல் ஊழல்களின் ஆதிக்கத்தில் விட்டுவிட்டது. அவ்விதம் அரசாங்கத்தின் அதிகாரமானது தகர்க்கப்பட்டது.

எந்த அரசாங்க அதிகாரத்திற்கும் மூன்று முக்கிய அம்சங்கள்தான் அஸ்திவாரங்களாகும். அவையாவன: 1. பொது ஜன ஆதரவு, 2. சக்தி (ராணுவ பலம்), 3. சம்பிரதாயம். அரசாங்க அதிகாரத்தை ஸ்தாபிப்பதற்கு இன்றியமையாத முதல் அம்சம் பொதுஜன ஆதரவுதான். அந்த ஓர் அம்சத்தை மாத்திரம் ஆதாரமாகக் கொண்டு அரசாங்க அதிகாரத்தை நிலைநிறுத்திவிட முடியாது. மேலே குறிப்பிட்ட மூன்று அம்சங்களையும் அஸ்திவாரமாகக் கொண்டு அமையும் அரசாங்கம்தான் நீடித்திருக்க முடியும்.

எந்த தேசீய ஸ்தாபனமும் மூன்று முக்கிய பிரிவினரைக் கொண்டே உருவாகின்றது. மேதாவிகளும், ஒழுக்கமும், பொதுநல ஆர்வமும் உள்ளவர்களான உத்தமர்கள்: பிரமாதமான வீரத்தனமோ அல்லது கொடிய விபரீத புத்தியோ இல்லாத மத்தியமர்கள்: சுயநலமும், துர்ப்புத்தியும் நிறைந்த அதமர்கள். உத்தமர்களின் ஆதிக்கத்தில் தேசம் உன்னதமான ஸ்திதிக்கு வரும், மத்தியமர்களின் ஆதிக்கத்தில் பிரமாதமான பெருமைக்கோ அல்லது இழிவிற்கோ இடமின்றி தேச நிர்வாகம் சாதாரணமாக நடைபெற்று வரும். அதமர்களின் ஆதிக்கத்தில்தான் அது சீர்குலைந்து போகும். உத்தமர்களுக்கும் அதமர்களுக்கும் போராட்டம் ஏற்படும்போது, மத்தியமர்களின் செல்வாக்கு அதிகமாகும். அப்போராட்டத்தில் எப்பிரிவினர் வெற்றி பெறுகின்றார்களோ, அப்பிரிவினருடன்தான் மத்தியமர்கள் சேர்ந்து கொள்ளுவார்கள். உத்தமர்களையோ அல்லது அதமர்களையோ எதிர்த்து மத்தியமர்கள் ஒருபோதும் போராட மாட்டார்கள்.

சென்ற யுத்தத்திற்குப் பின் ஜெர்மனியில் அதமர்களின் ஆதிக்கம் அதிகரித்ததே புரட்சிக்குக் காரணம். ஏனெனில் 4 1/2 வருஷ காலம் நடந்த யுத்தத்தில் தேச பக்தியும், அஞ்சாநெஞ்சமுமுள்ள உத்தமர்கள் கொல்லப்பட்டும், அங்கஹீனர்களாகவும் போனார்கள். யுத்த அரசாங்கத்தில் அவர்களுடைய இரத்தம்தான்

ஆறாக ஓடியது. பல்வேறு யுத்த காரியங்களுக்கும் தொண்டர்கள் தேவை, தொண்டர்கள் தேவை என்று கதறியபோதெல்லாம் லட்சக்கணக்கான உத்தமர்களே மார்தட்டிக் கொண்டு முன்வந்தனர். பல்வேறு காரணங்களைக் கூறி வீடுகளில் பதுங்கிவிட்ட அதமர்களுக்குச் சிறிதும் சேதமேற்படவில்லை. போர்க்களத்தில் பலியாகியும், அங்கஹீனர்களாகியும் உத்தமர்களின் தொகை மிகவும் குறைந்துவிட்டதால் அதமர்களின் ஆதிக்கம் அதிகமாகியது.

2574ல் (1914) நம் ராணுவத்திலிருந்தவர்களுக்குச் சரிவரப் பயிற்சியளிக்கப்படவில்லை. இவ்விபரீதத்திற்கு, பொறுப்பற்ற நம் பார்லிமெண்டு அங்கத்தினர்களே காரணஸ்தர்கள். அதனால் லட்சக்கணக்கான உத்தமர்கள் பீரங்கிகளுக்கு இரையாக நேர்ந்தது. அதன் விளைவாக திராசினுடைய அதமர் தட்டின் பாரம் அதிகமாகித் தாழ்ந்தது, உத்தமர் தட்டு காலியாகி உயர நின்றது! யுத்தத்தில் உத்தமர்கள் அடியோடு பலியாயினர், மத்தியமர்களும் தங்கள் பங்கு இரத்தத்தைக் கொடுத்தனர். ஆனால் அதமர்களின் பிரிவிற்குத்தான் எள்ளளவும் சேதமும் ஏற்படவில்லை. அதற்கு மாறாக அவர்களின் பாதுகாக்கப்பட்ட அந்தக் கழிவு ஆத்துமாக்களே ஜெர்மனியிலேற்பட்ட புரட்சியின் கர்த்தாக்கள். உத்தமர்கள் போர்க்களத்தில் பலியாகி விட்டதால் அதமர்களைத் தட்டிப் பேச ஆளில்லை. அதனால் அவர்களின் ஆர்ப்பாட்டங்களும் அதிகமாயின. எனவே ஜெர்மனியில் ஏற்பட்ட புரட்சிக்கு உத்தமர்களோ அல்லது மத்தியமர்களோ, அதாவது சாதாரண ஜனங்களோ காரணஸ்தர்களல்ல.

போர்முனையிலிருந்து வீரர்கள் மகத்தான குருதி வெள்ளத்தை நேரில் கண்டவர்களாதலால் யுத்தம் முடிவதை வரவேற்றனர். தாங்கள் இனி தங்களுடைய பெண்டு பிள்ளைகளைக் காணலாமென அவர்கள் ஆனந்தமடைந்தனர். இருந்தாலும் புரட்சிக்கும் அவர்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. புரட்சியையும், புரட்சிக்குக் காரணஸ்தர்களையும் அவர்கள் வெறுத்தனர். அவர்கள் 4 1/2 வருஷ காலம் போர் முனையிலிருந்தவர்களாதலால், கழுதைப் புலிகளைப் போல் ஒருவரையொருவர் பிய்த்துக் கொள்ளும் கட்சிப் பூசல்காரர்களை மறந்து விட்டனர். எனவே புரட்சியை விரும்பியவர்கள் அதமர்களே ஒழிய வேறெவருமல்ல. மற்றும் ஜெர்மன் குடியரசைக் கொள்ளையிட வேண்டுமென்பதுதான் அவர்களின் உத்தேசமேயன்றி, கட்டுக்கோப்பான முறையில் அதைப் பலப்படுத்த வேண்டுமென்ற எண்ணம் அவர்களுக்கில்லை. புரட்சியை வெறுத்த ராணுவமும், பின்னர் தேசத்தில் சமாதானமும் ஒழுங்கும் நிலவுவதற்காக புரட்சியைப் பாதுகாக்கும்படி நேர்ந்தது! ராணுவத்தைச்

சேர்ந்தவர்கள் நல்லெண்ணத்துடன் அவ்விதம் செய்தார்களே அன்றி தேசத்துரோக எண்ணம் அவர்களுக்குச் சிறிதுமில்லை.

யுத்தத்திற்குப் பின் ஜெர்மனியிலேற்பட்ட புரட்சிக்கு மற்றொரு காரணம் யுத்த காலத்தில் நாம் செய்த ஒரு பெருந்தவறே. அதாவது அப்போது மரண தண்டனையை ரத்து செய்தது தவறாகும். எல்லோருமே தங்கள் உயிர்களைத் துச்சமாக மதித்து தேசத்தின் க்ஷேமத்திற்காகத் தங்கள் உயிர்களைப் பலிகொடுக்கும் வீரர்களாக இருக்கும் பட்சத்தில், ராணுவச் சட்டத்தில் மரண தண்டனை விதி சேர்க்கப்பட வேண்டிய அவசியமேயில்லை. போர்க்களத்திலிருந்து பயந்து ஓடி ஒளிந்து கொள்ளும் கோழைகளுக்காகவே மரண தண்டனை விதி ஏற்பட்டிருக்கிறது. தங்களுடைய உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக சமூகத்தின் க்ஷேமத்தைப் பலி கொடுக்கத் துணியும் பதர்கள் சிறைத் தண்டனை போன்ற எந்த சிட்சைக்கும் பயப்பட மாட்டார்கள். போர்க்களத்தைக் காட்டிலும் சிறை சௌக்கியமான இடமென்றும் அவர்கள் நினைப்பார்கள்! தன் உயிரையே பெரிதாகக் கருதும் கோழைகள் மரண தண்டனை ஒன்றிற்குத்தான் பயப்படுவார்கள். ஆனால் சென்ற யுத்தத்தின்போது மரண தண்டனை ரத்து செய்யப்பட்டதால், பல கோழைகள் போர்க்களத்திலிருந்து ஓடி, ஒன்று சேர்ந்து தேசத்தைச் சீர்குலைக்கும் புரட்சியை உருவாக்கி, அதை அமுலுக்குக் கொண்டு வந்துவிட்டனர்.

அப்போது ஒரே ஒரு ராணுவ அதிகாரி மனம் வைத்திருந்தாலும் கூட, தம்முடைய பிரிவுத் துருப்புக் கொண்டு மாத்திரம் அப்புரட்சியை நசுக்கியிருக்கலாம். அவருக்கு அவ்விஷயமாக ராணுவத்தின் ஏகோபித்த ஆதரவும் கிடைத்திருக்கும். அவ்வித அசம்பாவிதம் ஏதாவது நேர்ந்துவிடுமோவென்று பயந்தே யூத தந்திரிகள் புரட்சியின் வேகத்தை மிதப்படுத்தி ஒழுங்கென்றும், அமைதியென்றும் வேஷம் போட்டு வந்தார்கள். வெகு காலத்திய உத்தியோகஸ்தர்கள், ராணுவத் தலைவர்கள் முதலியோரையும் யூதர்கள் 'காக்காய் பிடித்து' அவர்களுடைய கண்களில் மண்ணைத் தூவி வந்தார்கள். புரட்சி பலப்பட்டு விட்டால் பின்னர் அவர்களை உதறித் தள்ளிவிடலாமென்றும் யூதர்கள் எண்ணினர். அப்பதர்களின் சூழ்ச்சி இறுதியில் அற்புதமாக வெற்றியுமடைந்தது!

இச்சந்தர்ப்பத்தில் சகலரும் ஒரு விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது ஜெர்மன் புரட்சியில் 10ல் 9 மடங்கு ஜனங்கள் கலந்து கொள்ளவில்லை. 10ல் 7 மடங்கு ஜனங்கள் அதை எதிர்த்தனர். 10ல் 6 மடங்கு ஜனங்கள் அதை வெறுத்தனர். அப்படியிருந்தும் கூட புரட்சி வெற்றியடைந்ததற்குக் காரணமென்ன என்பதைச் சகலரும் கவனிக்க வேண்டும்.

ஜெர்மன் புரட்சிக்கு மூல கர்த்தாக்கள் கடையர்களாகிய ஒரு சிறுபான்மையோரே. மார்க்ஸ் கட்சிகளைச் சேர்ந்த சகலரும் அச்சிறுபான்மையோரைப் பின்பற்றினர். அப்புரட்சி வெளித் தோற்றத்திற்கு மிதமானதாகத் தோன்றியதால், வெறிபிடித்த தீவிரவாதிகள் அதை எதிர்த்து பீரங்கிகள், வெடிகுண்டு முதலியவைகளால் தாக்க ஆரம்பித்து, பொதுக் கட்டிடங்களை எல்லாம் ஆக்கிரமித்துக் கொண்டு அட்டகாசம் செய்தனர். அத்தகைய பயங்கர நிலைமையை அடக்குவதற்காக புதிய ஆட்சிப் பிரதிநிதிகளும், பழைய ஆட்சிப் பிரதிநிதிகளும் ஒன்று சேரும்படி நேர்ந்தது. அதன் பயனாக புரட்சி பலமடைந்து குடியரசுக்கு விரோதமாக இருந்த எதிர்ப்பும் மறைந்தது. மார்க்ஸ் கட்சியினர் சந்தர்ப்பமேற்பட்டபோது ஆயுதங்களின் உதவியை நாட சிறிதும் தயங்கவில்லை. ஆனால் ஜெர்மனியின் க்ஷேமத்தில் கருத்துக் கொண்ட அறிவாளிகள், வார்த்தைகளாகிற ஆயுதத்தைத் தவிர வேறெதையும் உபயோகிக்கத் துணியாமல் மோசம் போனார்கள்.

குடியரசுப் பாதுகாப்புச் சட்டம் பிரேரேபிக்கப்பட்டபோது முதலில் பெரும்பாலோர் அதை ஆதரிக்கவில்லை. ஆனால் மார்க்ஸ் கட்சியைச் சேர்ந்த இரண்டு லட்சம் பேர்கள் தெருக்களில் செய்த ஆர்ப்பாட்டத்தைக் கண்டதும் நடுத்தர வகுப்பு "ராஜதந்திரிகள்" நடுநடுங்கிப் போய் தங்கள் விருப்பத்திற்கு விரோதமாக அச்சட்டத்தை ஆதரித்து ஓட்டுக் கொடுத்தனர். அவ்விதம் ஓட்டு கொடுக்காமலிருந்தால் பார்லிமெண்டிலிருந்து வெளியே வரும்போது தங்களுடைய மண்டைகள் மார்க்ஸ் கட்சியினரால் நொறுக்கப்பட்டு விடுமென்பது அவர்களுடைய பீதி. அவ்விதமாக புதிய அரசாங்கமானது வளர்ச்சி பெற ஆரம்பித்தது.

எதிர்ப்பை எல்லாம் தகர்த்து ஓர் அரசியல் லட்சியத்தை அமுலுக்குக் கொண்டு வருவதாயின், அதற்கு இரக்கமற்ற பலாத்காரம் அவசியமாகும். மார்க்ஸ் கட்சியினர் சம்பந்தப்பட்ட வரையில், அரசியல் நோக்கத்திற்கும் இரக்கமற்ற பலாத்காரத்திற்கும் பூர்ண ஒத்துழைப்பு இருந்தது. ஆனால் அவர்களை எதிர்த்த மற்ற தேசியக் கட்சியினரிடையே அவ்வித ஒத்துழைப்பு இல்லை.

மற்றும் எக்கட்சியும் புதிய மகத்தான ஒரு கொள்கையை ஆதாரமாகக் கொண்டிருந்தாலன்றி வெற்றி பெற முடியாது. பிரெஞ்சுப் புரட்சி, ருஷ்யப் புரட்சி, பாஸிஸ்டுப் புரட்சி முதலியவை அற்புதமாக வெற்றி பெற்றதற்கு அதுதான் காரணம். ஆனால் ஜெர்மனியில் அப்போதிருந்த கட்சிகளுக்கு அவ்வித சாகஸமில்லை. அந்நிலைமையில் தேசிய அபேதவாத ஜெர்மன் தொழிற்கட்சிதான் ஆரம்பம் முதல் ஒரு திட்டமான

லட்சியத்துடன் உருவடைய ஆரம்பித்தது. தங்கள் லட்சியத்தைப் பரப்ப ஜெர்மன் தொழிற்கட்சியினர் முதலிலிருந்தே பிரசாரக் கருவியை உபயோகிக்க முற்பட்டதுடன், அவசியம் நேர்ந்தபோது புஜபலத்தையும் பிரயோகிக்க ஆரம்பித்தனர். தங்கள் இயக்கத்தின் நோக்கத்தை அமுலுக்குக் கொண்டு வர எவ்விதத் தியாகமும் பெரிதல்ல என்றும் அவர்கள் கருதினர்.

2578 (1918) நவம்பர் மாதம் 9ந் தேதி ஜெர்மன் அரசாங்கம் மார்க்ஸ் கட்சியினரிடம் யாதொரு நிபந்தனையுமின்றி சரண் புகுந்தது! எனவே அது மறுநாளே அக்கட்சியை எதிர்க்க முற்படுமென எதிர்பார்ப்பது வீண் வேலை. மார்க்ஸ் கட்சியினரை எதிர்ப்பது தொழிலாளர்களை எதிர்ப்பதாகுமென நடுத்தர அந்தஸ்து மடையர்கள் கூறுகின்றனர். உண்மையில் அக்கட்சியினருக்கும் தொழிலாளர்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை.

எங்கள் கூட்டங்களில் அமைதிக்குப் பங்கமேற்படாமல் பாதுகாப்பதற்காக அமைக்கப்பட்ட படையானது நாளடைவில் ராணுவத் தன்மை பொருந்தியதாக மாறியது. ஆரம்பத்திலேயே நாங்கள் அப்படையைச் சிருஷ்டிக்காதிருந்தால், எங்களுடைய கூட்டங்களை விரோதிகள் கலைத்திருப்பர், எங்கள் கட்சியும் வளர்ச்சி பெற்றிருக்காது. உயர்ந்த கொள்கையை உபதேசிப்பவர்களை அடித்து ஒடுக்க முற்படும் அயோக்கியர்களை, ஆயுதத்தினால்தான் அடக்க முடியும். அப்படையின் தத்துவமும் அதுதான். உலகில் சில மகான்கள் யாருமறியாத அற்பப் பதர்களின் கையால் பலியுண்டிருப்பதற்கு சரித்திரத்தில் உதாரணங்கள் உள்ளன. எங்கள் கட்சி மெய்க்காவலர்கள் பலாத்காரத்தை இறுதியான ஒரு லட்சியமாகக் கருதவில்லை. உயர்ந்த கொள்கைகளும், நோக்கமுமுடைய தலைவர்களுக்கு விரோதிகளின் பலாத்காரத்தினால் ஆபத்தேற்படாமல் பாதுகாப்பதுதான் அவர்களுடைய கடமை. தேசத்தின் தற்காப்பிற்கு உத்தரவாதமளிக்க ஓர் அரசாங்கத்தைப் பாதுகாக்க வேண்டியது அவசியமில்லை என்பதும் மற்றும் தேசம், அரசாங்கம் இரண்டையும் அழிக்க முற்படுவோரிடமிருந்து தேசத்தைப் பாதுகாக்க வேண்டுமென்பதும் அவர்களின் கருத்து.

மியூனிச் சர்க்கஸ் மண்டபத்தில் நடந்த கூட்டத்தில் ஏற்பட்ட பெரும் கலகத்தை எங்கள் படையைச் சேர்ந்த சிலர் வீரத்தனமாக அடக்கி சமாளித்தது! அவர்களுக்கு என்றுமழியாத கீர்த்தியைக் கொடுத்தது. கட்சியின் பல்வேறு அம்சங்களான பத்திரிகைகள், பிரசாரம், கல்வி நிலையங்கள் முதலியவைகளைப் போன்றே எங்களுடைய சூறாவளிப் படையும் ஓர் அம்சமாக இருந்தது. அப்படை எவ்வளவு அவசியமென்பதை நாங்கள்

அனுபவபூர்வமாக அறிந்துகொண்டோம். தவிர ஜெர்மனியிலுள்ள மற்றபாகங்களிலும் நாங்கள் கூட்டங்கள் கூட்ட வேண்டியிருந்ததால் அப்படை அவசியமாகியது. எங்களால் ஆபத்துதானென்பதை மார்க்ஸ் கட்சியினர் நன்கு அறிந்து கொண்டதால், எங்கள் கூட்டங்களையொட்டி செய்யப்படும் பூர்வாங்க ஏற்பாடுகளை எல்லாம் சிதைக்க முற்பட்டனர். அதில் அவர்கள் வெற்றி பெறாததால் பின்னர் கூட்டத்தைக் கலைக்க முயற்சித்தனர். மார்க்ஸ் கட்சியினரால் மௌன சுவாமிகளாகச் செய்யப்பட்ட நடுத்தர அந்தஸ்துடையவர்களின் கட்சிகளும் மடத்தனமாக எங்களை எதிர்த்து வந்தன. எங்களுக்கு ஏதாவது அற்ப அசம்பாவிதம் ஏற்பட்டாலும் அக்கட்சிகளுக்கு அர்த்தமற்ற சந்தோஷமுண்டாகும்! மற்றும் அரசாங்க உத்தியோகஸ்தர்கள், போலீஸ் தலைவர்கள், மந்திரிகள் முதலிய பலரும் மார்க்ஸ் கட்சியினரின் தாஸர்களாக இருந்தனர். யூதர் பத்திரிகைகளின் அற்பத்தனமான புகழுரைக்கு ஆசைப்பட்டு அவர்கள் சிறிதும் வெட்கமின்றி நடந்து கொண்டனர். ஏற்கனவே போல்ஷிவிக் வெறியர்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றியவர்கள் யாரென்பதை அவர்கள் நன்றி கெட்டத்தனமாக மறந்துவிட்டனர். எனவே எங்களுடைய தற்காப்பிற்கான முறைகளை நாங்களே பலப்படுத்திக் கொள்ள வேண்டியிருந்தது! தீவிரமான பயிற்சியளித்து சூறாவளிப் படையின் சரீர பலத்தை அபிவிருத்தி செய்வதுடன், தேசீய அபேதவாதக் கொள்கையை அவர்கள் மனப்பூர்வமாக ஆதரிக்கும்படியும், மிகமிகக் கண்டிப்பான ஒழுங்கிற்குக் கட்டுப்படும்படியும் செய்ய வேண்டியிருந்தது.

வாரம் ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் பயிற்சியளிப்பதன் மூலம் உண்மையான சிப்பாய்களை உருவாக்கிவிட முடியாது. அதிலும் நவீன கால யுத்தத்திற்கு அபாரமான பயிற்சி வேண்டும். சாதாரணமான ஒருவர் சிறந்த சிப்பாயாக வேண்டுமாயின், குறைந்தபட்சம் இரண்டு வருஷ ராணுவப் பயிற்சியாவது பெற வேண்டும். நன்கு பயிற்சி பெறாதவர்களின் கதி என்னவாகுமென்பதை போர்க்களத்தில் நாங்கள் நேரில் பார்த்தோம். கண்டிப்பான ஒழுங்கின் கீழ் சுமார் 20 வாரங்கள் வரை சிறந்த பயிற்சி பெற்ற தொண்டர்கள்கூட போர்முனையில் கஷ்டங்களைச் சகித்து நிற்க முடியாது. பீரங்கிகளுக்கு இரையாயினர். ஆதலால் இளைஞர்களுக்கு நீண்ட காலம் தீவிரமான பயிற்சியளிக்கப் பட்டாலன்றி அவர்கள் சிறந்த சிப்பாய்களாக முடியாது.

சூறாவளிப் படையானது ரகசியமான ஒரு ஸ்தாபனமாக இருக்கக் கூடாதென்பதும் எங்களுடைய உத்தேசம். சட்ட விரோதமான காரியங்களைச் செய்வதற்காகத்தான் ரகசிய

ஸ்தாபனங்கள் அமைக்கப்படுகின்றன. அந்த ஸ்தாபனமானது பரந்த முறையில் வேலை செய்வதென்பது முடியாத காரியம். மற்றும் அத்தகைய ஸ்தாபனமானது போலீஸ் உளவாளிகளாலும், துரோகிகளாலும் சிதறடிக்கப்பட்டு விடும். தவிர, ரகசிய ஸ்தாபனத்தில் ஏராளமானவர்கள் இருப்பதென்பதும் முடியாத காரியம். எனவே நூற்றுக்கணக்கான சதிகாரர்களைக் காட்டிலும் லட்சக்கணக்கான பகிரங்க வீரர்களே இன்றியமையாதவர்களென்பது எங்கள் கொள்கை. நமது அலுவல்களெல்லாம் பகிரங்கமாக பிரமாண்ட கூட்டங்களின் மூலமே நடைபெற வேண்டும். ஓர் இயக்கம் வெற்றி பெற கத்தியும், துப்பாக்கியும், விஷ சீசாவும் உதவியளிக்கா. பாமர ஜனங்களின் ஆதரவைப் பெறுவதன் மூலம்தான் பெரும் இயக்கங்கள் வெற்றியடைவது சாத்தியம்.



மகா மேதாவியான, ஆனால் சைத்தான் குணமுள்ள ஒருவர் கொடுங்கோல் ஆட்சி புரியுமிடத்து, அவரைக் கொன்றுவிட்டால் அந்த ஆட்சி முறை ஒழிந்துவிடுமென்ற எண்ணத்துடன் ரகசிய ஸ்தாபனங்கள் வேலை செய்வதும் உண்டு. இதற்கும் சரித்திரத்தில் பல உதாரணங்கள் உள்ளன. *2579 - 80*ல் (*1919 - 20*) ஜெர்மனியிலும் அத்தகைய ஆபத்து ஏற்படுமோவென்ற பீதி நிலவியது. தங்கள் தேசத்தைச் சீர்குலைத்தவர்கள் மீது வஞ்சம் தீர்த்துக் கொள்வதன் மூலம் ஜனங்களின் துன்பத்தைத் தீர்க்கலாமென்ற எண்ணம் எல்லாம் வெறும் மடத்தனம். ஏனெனில் மார்க்ஸ் கட்சியினரின் வெற்றிக்கு எந்த ஒரு மேதாவியும் பொறுப்பாளியல்ல, நடுத்தர வகுப்பினரின் திறமையின்மையும், கோழைத்தனமுமே அதற்குக் காரணம். அதாவது ஒரு மேதாவி கூட இராத ஒரு புரட்சி இயக்கத்திற்கு அவர்கள் பணிந்து விட்டார்கள். அதுதான் தேசத்தின் துரதிர்ஷ்டமாகும்.

ஜெர்மனியில் ரகசியமாக வைக்கப்பட்டிருந்த ஆயுதக் கிடங்கைப் பகைவர்களுக்குக் காட்டிக் கொடுத்த ஒரு பாவியைச் சுட்டுக் கொன்றார்கள். ஆனால் ஒரு சாம்ராஜ்யத்தையே காட்டிக் கொடுத்த உயர்தர உத்தியோகஸ்தர்களுக்கு எவ்வித தண்டனையும் கிடைக்கவில்லை. பெரிய திருடர்களைச் சுதந்திரமாக விட்டுவிட்டு, சிறிய திருடர்களைத் தூக்கிலிடக் கூடாதென்பதே எனது அபிப்பிராயம். *2578* (*1918*) நவம்பர் மாதம் நடந்த துரோகத்திற்குக் காரணஸ்தர்களான ஆயிரக்கணக்கானவர்களை, ஒரு தேசீய நீதிச்சபை விசாரித்து தண்டனை விதிக்கும்படியான காலம் வரும். அத்தகைய உதாரணம் சகல துரோகிகளுக்கும் ஒரு முக்கிய படிப்பினையாக அமையுமென்பதில் சந்தேகமில்லை. யாதொரு பலனுமின்றி லட்சக்கணக்கானவர்களைப் பலிகொடுத்த துரோகிகளுக்கு சிட்சை விதித்தே தீரவேண்டும்.

நிற்க, சூறாவளிப் படைகள் எவ்வித ரகசிய நடவடிக்கைகளிலும் ஈடுபடக் கூடாதென நாங்கள் கட்டளையிட்டதுடன், அவர்களின் அணிவகுப்பு, கூட்டம் முதலியவைகளை எப்போதும் பகிரங்கமாகவே நடத்தி வந்தோம். அவர்களுக்குத் துப்பாக்கி சுடுவது போன்ற சாதாரணப் பயிற்சி அளிக்காது குத்துச்சண்டை, கஸரத்து முதலிய உயர்தர தேகப் பயிற்சி அளித்து வந்தோம். அப்படையினர் ஒரேவித உடையணியவும் ஏற்பாடு செய்தோம். பழைய ராணுவ உடையைப் போலின்றி அப்படைக்கு வேறு தினுசான உடையையே நிர்ணயித்தோம். 2582ம் (1922) வருஷத்திற்குள் அப்படையின் தொகை பிரமாதமாக வளர்ச்சி பெற்றது. அவ்வருஷம் நிகழ்ந்த சில சம்பவங்கள் சூறாவளிப் படையின் முக்கியத்துவத்தைப் பன்மடங்கு அதிகப்படுத்தின. அதாவது, குடியரசுப் பாதுகாப்புச் சட்டத்தைக் கண்டித்து பிரமாண்டமான கூட்டமொன்று நடத்தினோம். 2582ம் (1922) வருஷம் கோடைகாலத்தில் அக்கூட்டம் நடந்தது. தேச பக்தர்களடங்கிய பல சங்கங்கள் அதில் கலந்து கொண்டன. சூறாவளிப் படையினரில் 600 பேர்கள் ஊர்வலமாக அணிவகுத்துச் சென்றனர். எங்கள் கட்சியைச் சேர்ந்த இதரர்களும் சென்றனர். எங்களைத் தடுக்க மார்க்ஸ் கட்சியினர் செய்த முயற்சி பலிக்கவில்லை. எங்கள் சூறாவளிப் படையினர் எதிரிகளை, மண்டையுடைந்து இரத்தம் வழிய ஓடும்படி செய்துவிட்டனர். கூட்டம் நடக்குமிடத்திற்கு நாங்கள் கொடிகளுடன் பாண்டு வாத்தியம் முழங்கச் சென்றபோது ஜனங்களுக்கு ஏற்பட்ட உற்சாகம் எல்லை மீறியது. சுமார் 60,000 ஜனங்களடங்கிய அக்கூட்டத்தில் பேசும் பாக்கியமும் கௌரவமும் கிடைத்தவர்களில் நானும் ஒருவன். அக்கூட்டம் மிகவும் வெற்றிகரமாக முடிந்ததுடன், தெருக்களில் அணிவகுத்து ஊர்வலம் செல்லுவது சர்வதேசத் துரோகிகள், தேசத்தின் விரோதிகள் முதலியோருக்கு ஏகபோக பாத்திய உரிமையல்ல என்பதும், மற்றவர்களுக்கும் அவ்வுரிமை உண்டென்பதும் நிச்சயமாயிற்று. அவ்வெற்றி காரணமாக, சில வாரங்களுக்குள் சூறாவளிப் படையில் மேற்கொண்டு ஏராளமானவர்கள் சேர்ந்தனர்.

2582 (1922) அக்டோபர் மாதம் கோபர்க்கில் ஜெர்மன் தினம் கொண்டாடுவதென்று ஜனக்கட்சிகள் தீர்மானித்தன. அதில் பங்கெடுத்துக் கொள்ளும்படி எனக்கும் அழைப்பு அனுப்பியிருந்தார்கள். நான் 800 சூறாவளிப் படையுடன் புறப்படத் தீர்மானித்தேன். மற்றவிடங்களிலுள்ள சூறாவளிப் படைகளுக்கும் கோபர்க்கிற்கு வரும்படி உத்தரவிடப்பட்டது. அவர்களெல்லோரும் மியூனிச்சிலிருந்து கோபர்க் வர பிரத்தியேக

ரயில் வண்டிகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. பல இடங்களிலும் சூறாவளிப் படையினரை ஏற்றிச் செல்லுவதற்காக பிரத்தியேக ரயில் வண்டிகள் நின்றது மிகுந்த பரபரப்பை உண்டுபண்ணியது. அதற்கு முன் பலரும் எங்கள் கொடியைப் பார்த்ததில்லை. அக்கொடி அவர்கள் மனதில் ஆழ்ந்த உணர்ச்சியை எழுப்பியது.

ஜெர்மன் தினக் கொண்டாட்ட கமிட்டியார் கோபர்க் ஸ்டேஷனில் எங்களை வரவேற்றனர். நாங்கள் நகருக்குள் கொடிகளை ஏந்திக் கொண்டும், பாண்டு வாத்தியங்களை வாசித்துக் கொண்டும் அணிவகுத்துச் செல்ல வேண்டாமென்றும், அவ்விதம் செல்லுவதை சுயேச்சை, பொதுவுடைமைக் கட்சிகள் விரும்பவில்லை என்றும் அக்கமிட்டியினர் எங்களிடம் கூறினர். ஆனால் நாங்கள் அந்த நிபந்தனைகளை அறவே நிராகரித்துவிட்டு, கொடிகளுடனும் பாண்டு வாத்தியம் முழங்கவும் நகருக்குள் அணிவகுத்துச் சென்றோம்.

ஸ்டேஷனுக்கு வெளியே நாங்கள் வந்ததும் ஆயிரக்கணக்கான ஜனங்களடங்கிய வெறிபிடித்த ஒரு கூட்டமானது "கொள்ளைக்காரர்கள்" என்றும், "அயோக்கியர்கள்" என்றும் எங்களை நோக்கிக் கூச்சலிட்டது. சூறாவளிப் படையினரோ சாந்தமாக இருந்தனர். முதலில் அவர்கள் அக்கூச்சலை சட்டை செய்யவில்லை. போலீசாரோ கலங்கினர். எங்களுக்கென ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த ஜாகைகளுக்கு போலீசார் எங்களை அழைத்துச் செல்லாது, நகரின் மத்தியிலுள்ள மற்றோரிடத்திற்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அப்போது இருபுறங்களிலும் ஜனங்கள் கூச்சலிட்டுக் கொண்டே எங்களைப் பின்தொடர்ந்து வந்தனர். நாங்கள் குறிப்பிட்ட மண்டபத்திற்குள் சென்றதும் ஜனங்களும் உள்ளே வர முயற்சித்தனர். அவர்களைத் தடுப்பதற்காக போலீசார் கதவை மூடி விட்டதால், நான் சூறாவளிப் படையினரை அணிவகுத்து நிற்கும்படி கூறி, சிறிதும் தாமதமின்றி கதவைத் திறந்துவிடுமாறு போலீசாரைக் கேட்டுக் கொண்டேன். அவர்கள் நீண்ட நேரம் தயங்கியபின் கதவைத் திறந்தனர். நாங்கள் வந்த வழியே எங்களுடைய ஜாகைகளைச் நோக்கிச் சென்றோம். ஜனக்கூட்டத்தின் கூக்குரல்களைச் சூறாவளிப் படையினர் லட்சியம் செய்யாததால், அபேதவாதம், சமத்துவம், சகோதரத்துவம் முதலிய உயர்ந்த தத்துவங்களின் "பிரதிநிதி"களான அவ்வெறியர்கள் கற்களை வீசியெறிய முற்பட்டனர்! அவ்வளவுதான், அதற்கு மேல் பொறுமையாயிருக்க எங்களால் முடியவில்லை. சூறாவளிப் படையினர் அக்கூட்டத்தில் பாய்ந்து நாலா புறங்களிலுமிருந்தவர்களை 15 நிமிஷ நேரம் வரை நையப் புடைக்கவே கூட்டம் கலைந்து எல்லோரும்

ஓட ஆரம்பித்தனர். சிறிது நேரத்திற்கெல்லாம் தெருவில் ஒரு பொதுவுடைமைக்காரர்கள்கூட காணக்கிடைக்கவில்லை!

அன்றிரவு தேசிய அபேதவாதிகளைப் பொதுவுடைமைக் காரர்கள் தனித்தனியாகத் தாக்குகிறார்களென்று சூறாவளிப் படையினருக்குத் தெரிந்ததும், அவர்கள் விரோதிகளை எல்லாம் உதைத்து இருந்த இடம் தெரியாமல் விரட்டிவிட்டார்கள். கோபர்க்கில் பல வருஷங்களாக அட்டகாசம் செய்து வந்த பொதுவுடைமைக்காரர்களின் பயங்கர இயக்கம் அவ்விதம் ஒரே நாளில் தகர்க்கப்பட்டது!

பின்னர் மார்க்ஸ் கட்சியினரும், யூதர்களும் தங்கள் சம்பிரதாயத்திற்கிணங்க எங்கள் மீது பொய்ப் புகார்களைக் கூறி துண்டுப் பிரசுரங்களும் அச்சிட்டு விநியோகம் செய்தனர். மறுநாள் எங்களைக் கண்டித்து ஒரு பிரமாண்ட கூட்டம் நடைபெறப் போவதாயும், அதற்கு ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் விஜயம் செய்வார்களென்றும் அறிவிக்கப்பட்டது. அக்கூட்டத்தை வேடிக்கை பார்க்க நாங்களும் சென்றோம். ஆனால் ஏற்கெனவே அறிவிக்கப்பட்டிருந்தபடி யாரும் ஆயிரக்கணக்கில் அக்கூட்டத்திற்கு வரவில்லை, நூற்றுக்கணக்கில்தான் வந்திருந்தனர். கூட்டம் கூடியிருந்த சதுக்கத்திற்குள் நாங்கள் பிரவேசித்தபோது பெரும்பாலோர் மௌனமாக இருந்தனர். சிலர் ஓடிவிட்டனர். எங்கள் சமாச்சாரமறியாத, நகருக்கு வெளியிலிருந்து வந்திருந்த சிலர் மாத்திரம் கலகமுண்டாக்க முயன்றனர். ஆனால் சூறாவளிப் படையினரின் முஷ்டிகள் வேலை செய்ய ஆரம்பிக்கவே, அவர்களெல்லோரும் ஓட்டம் பிடித்தனர். அதுவரை பொதுவுடைமைக் காரர்களின் அட்டகாசத்திற்குப் பயந்து வந்த அந்நகர ஜனங்களுக்கு அச்சம்பவமானது தைரியத்தைக் கொடுத்தது. எனவே அவர்கள் எங்களைப் பகிரங்கமாக வரவேற்றதுடன், நாங்கள் திரும்பிச் செல்லுகையில் வழிநெடுக நின்றுகொண்டு சந்தோஷ ஆரவாரமும் செய்தனர்!

நாங்கள் மியூனிச்சிற்குத் திரும்பிச் செல்லுவதற்காக ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்ததும் எங்களுடைய ரயில் வண்டி புறப்படப் போவதில்லை என்று ரயில்வே உத்தியோகஸ்தர்கள் அறிவித்தனர். பொதுவுடைமைக்காரர்களை எல்லாம் கைது செய்து ரயில் வண்டியிலேற்றி நாங்களே அதைவிட்டுக் கொண்டு செல்வோமென்றும், அதனால் எங்கள் உயிர் போயினும் விண்ணுலகிற்கு நாங்கள் தனியாக செல்லாது பொதுவுடைமைச் "சகோதரர்களுடன்" சேர்ந்து செல்லுவதன் மூலம் எங்கள் ஆத்துமா ஆறுதலடையுமென்றும் நான் கூறவே, அதிகாரிகள் மறுமொழி எதுவும் சொல்லாது குறித்த நேரத்திற்கு வண்டி புறப்படும்படி செய்தனர்! நாங்கள் எல்லோரும் மறுநாள்

காலை மியூனிச்சிற்கு சௌக்கியமாக வந்து சேர்ந்தோம். அந்நாட்களில் ஜனங்கள் தங்களைத் தாங்களேதான் பாதுகாத்துக் கொள்ள வேண்டியிருந்ததே ஒழிய, அதிகாரிகளுக்கு அக்கவலை எதுவுமில்லை. எது எப்படியாயினும் நாங்கள் கோபர்க் நகர் சென்றதன் பயனாக, அங்கு சகல பிரஜைகளுக்கும் சம உரிமை உண்டென்ற நியதி மீண்டும் நிலைநிறுத்தப்பட்டது. சூறாவளிப் படையின் முன் தங்கள் ஆர்ப்பாட்டங்கள் பலிக்காதென்பதைப் பொதுவுடைமைக்காரர்களும் உணர்ந்து கொண்டனர். அதிலிருந்து எங்கள் படையினருக்கு சுய நம்பிக்கையும் அதிகமாயிற்று. கண்ணியமுள்ள சில பத்திரிகைகளைத் தவிர மற்றவை எல்லாம் எங்கள் நடவடிக்கைகளைக் கண்டித்தன. ஏனெனில் விரோதிகளிடம் அடிவாங்க நாங்கள் மறுத்துவிட்டோமல்லவா! கோபர்க் சம்பவத்திலிருந்து சூறாவளிப் படையில் மேற்கொண்டு ஏராளமானவர்கள் சேர ஆரம்பித்தனர். அதன் பயனாக, 2583 (1923) ஜனவரி மாதம் நடந்த எங்கள் கட்சி காங்கிரஸ் கொடியேற்ற வைபவத்தில் அப்படையைச் சேர்ந்த 6000 பேர்கள் கலந்து கொண்டனர். அவர்களுக்குத் தனியுடை இருப்பது எவ்வளவு நன்மையென்பதும் கோபர்க் சம்பவத்திலிருந்து நிதர்சனமாயிற்று. இல்லாவிடில் விரோதிகளுக்கும் எங்கள் படையினருக்கும் வித்தியாசம் தெரியாமல் பெரும் விபரீதம் நேர்ந்திருக்கும்.

கோபர்க்கில் நாங்கள் பெற்ற அனுபவம் காரணமாக மற்றும் எந்தெந்த இடங்களில் பொதுவுடைமைக்காரர்கள் மற்றவர் கூட்டங்கள் கூடுவதைத் தடுத்து வந்தார்களோ, அங்கெல்லாம் சென்று அவர்களின் ஆர்ப்பாட்டங்களை ஒழிக்க முற்பட்டோம். அதனால் பவேரியாவில் பொதுவுடைமைக்காரர்களின் கோட்டைகளெனப் பிரசித்தி பெற்ற பலவிடங்களும் ஒன்றன் பின் ஒன்றாக எங்கள் கட்சிப் பிரசாரத்தினால் தகர்க்கப்பட்டன. அவ்விதம் சகலருக்கும் கூட்டங்கள் கூட உரிமை உண்டு என்பதை ஸ்தாபிக்க உறுதி கொண்டோம். அதன் பயனாக சூறாவளிப் படை நாளுக்குநாள் செல்வாக்கும், அனுபவமும் பெற்று பலமடைந்தது.

2583 (1923) மார்ச் மாதம் வரை எங்கள் இயக்கம் வளர்ச்சி படைந்து வந்தது. எனவே அப்போது அதன் வெளியமைப்பில் சில மாறுதல்களைச் செய்ய வேண்டிய அவசியமேற்பட்டது.

அவ்வருஷ ஆரம்பத்தில் பிரெஞ்சுக்காரர்கள் ரூர் பிரதேசத்தை ஆக்கிரமித்துக் கொண்டனர். அது எங்களுக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கவில்லை. அதற்கு மாறாக, இனியாவது ஜெர்மனி கோழைத்தனமான தன் கொள்கையை உதறித் தள்ளிவிட்டு, தற்காப்பு சங்கங்களுக்கு தங்கள் கடமைகளைச் செய்ய சந்தர்ப்பமளிக்குமென்றும், பல ஆயிரக்கணக்கான

இளங்காளைகளடங்கிய சூறாவளிப் படைக்கும் அந்த தேசியத் தொண்டில் பங்கெடுத்துக் கொள்ளச் சந்தர்ப்பமளிக்குமென்றும் நம்பினோம். எனவே அவ்வருஷ மத்தியில் அப்படை ஒரே ராணுவ ஸ்தாபனமாக மாற்றப்பட்டது. அவ்விதம் மாற்றியதுதான் பின்னர் நிகழ்ந்த சம்பவங்களுக்குக் காரணம். அவ்வருஷக் கடைசியில் சூறாவளிப் படையை ஜெர்மன் சர்க்கார் கலைத்துவிட்டனர். அது, எங்கள் இயக்கம் சம்பந்தப்பட்ட வரையில் பயங்கரமான ஒரு நிகழ்ச்சியே எனினும், அவ்விதம் கலைத்தால்தான் பின்னர் ஒழுங்கான முறையில் எங்கள் இயக்கத்தைப் புனருத்தாரணம் செய்வது சாத்தியமாயிற்று.

*2585*ம் *(1925)* வருஷம் ஜெர்மன் தேசிய அபேதவாதத் தொழிற்கட்சியும், சூறாவளிப் படையும் மீண்டும் அமைக்கப்பட்டன. தேசிய அபேதவாதக் கொள்கையை ஸ்தாபிப்பதற்கான போராட்டத்திற்கு உதவியாக சூறாவளிப் படையில் ஒரு லட்சம் பேர்களைச் சேர்க்க வேண்டுமெனத் தீர்மானித்தோம்.





## 10. பகைவர்களின் பாதகப் பிரசாரம்

**2580**ல் (1920) இளம் பருவத்திலிருந்த எங்கள் கட்சி ஒரு முக்கியப் பிரச்னையை நிர்ணயித்துக் கொள்ள வேண்டிய அவசியமேற்பட்டது. யுத்த காலத்தில் வட ஜெர்மனிக்கும் தெற்கு ஜெர்மனிக்கும் பரஸ்பரம் துவேஷத்தை உண்டுபண்ணி பிளவை அதிகமாக்க பிரிட்டனும், பிரான்சும் பிரசாரம் செய்து வந்தன. அவ்வித நோக்கங்கொண்ட துண்டுப் பிரசுரங்கள் முதன்முதலாக 2585ம் (1925) வருஷம் பிரிட்டிஷாராலும், பிரெஞ்சுக்காரர்களாலும் ஜெர்மனியில் போடப்பட்டன. அதிலிருந்து அப்பிரசார தந்திரமானது வெட்கங்கெட்ட முறையில் இடைவிடாது அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. தெற்கு ஜெர்மானியர்களுக்கும் வடக்கு ஜெர்மானியர்களுக்கும் பரஸ்பரம் துவேஷத்தையும், விரோதத்தையும் வளர்ப்பதே அதன் நோக்கம். சிறிது காலத்திற்குள் அந்த நோக்கம் பூர்த்தியடையவும் ஆரம்பித்தது! அத்தகைய துஷ்டப் பிரசாரத்தைத் தடுக்க பவேரிய சர்க்காரிலும், ராணுவத்திலுமுள்ள உயர்தர அதிகாரிகள் எவ்வித முயற்சியுமெடுத்துக் கொள்ளவில்லை. சில மடையர்கள் அத்தகைய விரோத பாவத்தை வரவேற்கவும் ஆரம்பித்தனர்! ஆனால் அவர்கள் காட்டிய அலட்சிய புத்திக்குற்றவாறு பின்னர் அவர்கள் வஞ்சமும் தீர்க்கப்பட்டனர். ப்ரஷ்யாதான் யுத்தத்திற்குப் பொறுப்பாளி என்றே பிரசாரம் நடந்தது. அதன் விளைவாக ப்ரஷ்யாவின் பலம் குன்றியது. அதனால் ப்ரஷ்யா மாத்திரம் பாதிக்கப்படவில்லை, ஜெர்மனி முழுதுமே பாதிக்கப்பட்டது, ஜெர்மன் ராஜ்யம் முழுவதுமே சீர்குலைந்தது.

பகைவர்களின் பிரசாரம் காரணமாக பவேரியாவுக்கும் ப்ரஷ்யாவுக்கும் பரஸ்பரம் சச்சரவு ஏற்பட்டது யூதர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாக முடிந்தது. யூத வர்த்தகர்கள் அப்போது ஜெர்மனியைக் கொள்ளையிட்டு வந்தார்கள். அந்தச் சச்சரவையொட்டி ஜனங்களின் கவனம் சென்றால்தான், தங்கள் கொள்ளையை அவர்கள் கவனிக்காமலிருப்பார்களென்பது யூதர்களின் எண்ணம். அவ்விரு பிரதேசங்களும் சச்சரவிடுவது யூதர்களுக்கு மன அமைதியையும், ஆனந்தத்தையும் கொடுத்தது!

2579ம் (1919) வருஷம் மியூனிச்சில் நடந்த கூட்டங்களிலெல்லாம் "ப்ரஷ்யா ஒழிக", "ப்ரஷ்யர்கள் வீழ்க", "ப்ரஷ்யா மீது போர் தொடருங்கள்" என்ற கோஷங்களே அதிகமாக இருந்தன. அத்தகைய கூட்டங்களில், அவ்வெறியர்களின் மடத்தனத்தைத் தடுக்க முற்படுவோர் உயிருடன் வெளியேறுவது கஷ்டமான காரியமாகும். எனினும் அத்தகைய கூட்டங்களால்

எங்களிடையே உறுதியும், ஒற்றுமையும் பன்மடங்கு அதிகமாயின. பவேரியாவுக்கு விரோதமாக ப்ரஷ்யாவையும், ப்ரஷ்யாவுக்கு விரோதமாக பவேரியாவையும் தூண்டிவிடும் கைங்கர்யத்தில் யூதர்களுக்கெல்லாம் 'திலகமாக' விளங்கியவர் கர்ட் ஈஸ்னர் என்பவரே. அவரது மரணத்திற்குப் பின்னர் மற்றவர்கள் அந்த கைங்கர்யத்திற்குப் பாதகமே ஏற்படாமல் கவனித்து வந்தனர்!

அவ்வித நிலைமையில் ஒரு நண்பருடன் நான் அத்தகைய மடத்தனத்தைக் கண்டிக்க ஆரம்பித்தேன். மியூனிச்சில் நடந்த கூட்டமொன்றில் நான் அவ்விதம் கண்டித்தபோது ஜனங்கள் ஆவேசங் கொண்டு கூச்சலிட்டு எங்களைக் கொன்றுவிடுவதாக பயமுறுத்தினர்.

*2579ல் (1919)* அடிக்கடி நிகழ்ந்து வந்த அத்தகைய சம்பவங்கள் *2580ல் (1920)* அதிக பலாத்காரத்துடன் நிகழ ஆரம்பித்தன. மியூனிச்சைச் சேர்ந்த வாக்னர் மண்டபத்தில் நடந்த கூட்டமொன்று எனக்கு இன்றும் ஞாபகத்திலிருக்கிறது. அங்கு என் கட்சியினர் மிகவும் கடுமையாகத் தாக்கப்பட்டனர். பலர் படுகாயமடைந்தனர், குற்றுயிராக வெளியிலும் தூக்கியெறியப்பட்டனர். இருந்தாலும் நாங்கள் எங்களுடைய முயற்சியைக் கைவிடாததுடன், உள்நாட்டுச் சச்சரவாகிற மடத்தனத்தை ஒழிப்பது ஒரு புனிதமான கடமை என்றும் கருத முற்பட்டோம். ஜெர்மானியர்களே பரஸ்பரம் சச்சரவிட்டுக் கொள்வதால் எல்லா ஜெர்மானியர்களுக்கும் அழிவைத் தவிர வேறொன்றுமில்லை என்பதையும், ஜெர்மனியின் உண்மையான சத்துரு யூதர்கள்தானென்பதையும் ஜனங்கள் உணர்ந்து கொள்ளும்படி செய்வது சாத்தியமானதாகத் தோன்றவில்லை. பின்னர் அவ்விஷயத்தில் நாங்கள் ஓரளவு வெற்றி பெற்று வருகையில், மகா தந்திரசாலிகளான யூதர்கள் கத்தோலிக்கர்களுக்கும் ப்ராடஸ்டண்டுகளுக்கும் சச்சரவை மூட்டி இரு பிரிவினரும் அடித்துக் கொள்ளும்படி செய்துவிட்டனர். ஆர்ய வர்க்கத்தையே அடியோடு அழித்து நாட்டைக் கொள்ளையிட முயற்சித்து வரும் யூதர் கூட்டத்தை நசுக்க முற்படாமல், அவ்விரு பிரிவினரும் தங்களுக்குள்ளேயே சச்சரவிட்டு வந்த துரதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வது? மதச் சண்டைக்கு எல்லையே இல்லை என்பதையும், தேச பக்தர்களின் சக்தி சிதறுண்டு போகும்படி செய்ய மதச் சண்டைதான் உற்ற கருவி என்பதையும் யூதர்கள் நன்கறிந்தே அப்பூசலைக் கிளப்பிவிட்டனர்! எனவே அச்சண்டைக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டியதும் தேசீய அபேதவாதக் கட்சியின் கடமையாயிற்று. மற்றும் சமஷ்டியின் கீழ் ஜெர்மனி பல கூறுகளாகப் பிரிந்திருப்பதையும் எங்கள் கட்சியினர் விரும்பவில்லை. அவ்விதம் பிரிந்திருப்பது அர்த்தமற்ற ஒரு விஷயமென்பதையும், அத்தகைய நிலைமை தாய்நாட்டின்

ஏகோபித்த பலத்தை மிகவும் குறைத்து விடுமென்பதையும் எங்கள் கட்சியினர் உணர்ந்து கொண்டனர்.

2578ம் (1918) வருஷம் வரையில் யூதர்களுக்கு விரோதமாக கட்டுக்கோப்பான உணர்ச்சி எதுவும் ஜனங்களிடையே உண்டாகவில்லை. அதற்குப் பின்னர்தான் அவ்வுணர்ச்சி சிறிது சிறிதாகப் பெருக ஆரம்பித்தது. அந்த உணர்ச்சியை அடியோடு நசுக்கிவிட வேண்டுமென்பதற்காகவே யூதர்கள் மதப் பூசலைக் கிளறிவிட்டனர். அவ்விவாதத்தில் ஜனங்களை இழுத்துவிட்டவர்கள் தேசத்திற்குத் துரோகமாக பெரும் குற்றம் செய்தவர்களாவர். அவர்கள் அவ்விதம் செய்த பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்வதும் முடியாத காரியம். அவ்விரு பிரிவினரும் அடித்துக்கொண்டு வருகையில் யூதர்கள் உள்ளூர நகைத்து வந்தனர். அதே சமயம் அவ்விரு பிரிவினருடைய வாழ்வின் அஸ்திவாரத்தையும் யூதப் புல்லுருவிகள் அரித்து அழித்து வந்தன.

யூத இரத்தக் கலப்பால் நம் ஜனங்கள் எவ்வளவு தூரம் பாழாகி விட்டனரென்பதைப் பாருங்கள். பல நூற்றாண்டுகள் கஷ்டப்பட்டே அந்த விஷத்தை அகற்ற முடியும். ஒருவேளை அதை அகற்றவே முடியாமல் போனாலும் போகலாம். அவ்விதமாக, ஒன்றுமறியாத சாதுக்களான நம் கட்டழகிகளை யூதர்கள் கெடுத்து வருகின்றனர். அந்த அழகிகள் இழந்து வரும் பொக்கிஷத்தை இனி மீண்டும் பெறுவதென்பது இவ்வுலகில் ஒருபோதும் முடியாத காரியம்.

மத விஷயங்களில் சகிப்புத்தன்மை வேண்டும். அதன் மூலம்தான் தேசம் பெருமையடைய முடியும். தேசம் பெருமையடைவதன் மூலம் மத விஷயங்களிலும் சமரசமேற்படும். எனவே மதப் பூசல்களை உண்டுபண்ணி தேசீய இயக்கத்தை நசுக்க முற்படுவோர், சர்வதேச பொதுவுடைமைக்காரர்களைக் காட்டிலும் நமக்கு பரம வைரிகளாவர்.

2583ம் (1923) வருஷம் வரை எங்கள் இயக்கத்திற்கு அத்தகைய தர்க்கவாதங்களில் எவ்வித சம்பந்தமும் ஏற்படாவண்ணம் பாதுகாப்பதில் நாங்கள் வெற்றி பெற்றோம். அதன் பயனாக, எங்கள் இயக்கத்தைச் சேர்ந்த ஒரு தீவிர கத்தோலிக்கர் மற்றொரு தீவிர ப்ராடஸ்டண்ட் பிரிவினருடன் தங்கள் மனச்சாட்சிக்குச் சிறிதும் முரணின்றி தோளோடு தோள் நிற்க முடிந்தது. இவ்விதமாக குறுகிய மத எல்லைகள், மாகாண எல்லைகள் முதலியவைகளை ஒழித்து ஓர் ஐக்கிய ஜெர்மனியை அமைப்பதில் எங்கள் இயக்கம் மிகுந்த சிரத்தை கொண்டது.



# 11. பிரசாரமும் ஸ்தாபனமும்

**2584**ம் (1921) வருஷம், பல விதங்களிலும் எனக்கு விசேஷ முக்கியத்துவம் பொருந்திய ஒரு வருஷமாகும். ஜெர்மன் தொழிற் கட்சியில் நான் பிரவேசித்ததும் பிரசாரம் மிகவும் முக்கியமான ஓர் அம்சமென்பதை உணர்ந்து அதன் நிர்வாகத்தை நானே ஏற்றுக் கொண்டேன். முதலில் ஸ்தாபன அமைப்பு பற்றி மூளையை உடைத்துக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. பிரசாரத்தின் மூலம் முதலில் கொள்கைகளைப் பரப்புவதுதான் முக்கியம். ஸ்தாபனமானது ஜீவ சக்தியுடன் விளங்க வேண்டுமாயின், அது அதன் கொள்கைகளில் தீவிர பற்றுதலும், உறுதியும் கொண்டவர்களடங்கியதாக இருக்க வேண்டும். இல்லாவிடில் எந்த ஸ்தாபனமும் உயிரற்றதாகிவிடும். பிரசார பலத்துடன் ஏற்படும் ஸ்தாபனத்தின் அஸ்திவாரம்தான் பலமுள்ளதாக இருக்கும். இல்லாவிடில் கொள்கையில் அந்தரங்க சுத்தியில்லாதவர்கள் ஸ்தாபனத்தில் சேர்ந்து தாங்களும் அதை முன்னுக்குக் கொண்டு வர மாட்டார்கள், முன்னுக்குக் கொண்டு வரக் கூடிய சக்தியுடையவர்களுக்கும், பொறாமை காரணமாக இடங்கொடுக்க மாட்டார்கள். அத்தகைய கடையர்கள் அந்த இயக்கம் உருப்படுவதென்பது முடியாத காரியம். எதிர்காலத்தில் சிறந்த தலைவர்களாக வர சக்தியும், திறமையும் உடையவர்களையும், பிரசாரத்தின் மூலமாகத்தான் அறிந்து கொள்ள முடியும். யாருமறியாத சாதாரண நபர்கள், உயர்ந்த தலைவர்களாக வரக்கூடிய ஆற்றல் படைத்திருப்பார்கள். பல்வேறு பிரச்னைகளையும் தனிமையில் அலசி ஆராய்ச்சி செய்யும் திறமையுள்ளவர்களுக்கு ஒரு ஸ்தாபனத்தை அமைக்கும் ஆற்றல் பொதுவாக இருப்பதில்லை. ஒரு ஸ்தாபனத்தை உருவாக்குவோர், மானிடரின் இயற்கை சுபாவம், குற்றங்குறைகள் முதலியவைகளை அறிந்து கொண்டு அதற்குற்றவாறு நடந்துகொள்ள வேண்டும். தலைவராக இருப்போருக்கு, பெரும் ஜனக் கூட்டத்தின் மனதையுருக்கி அவர்களையெல்லாம் ஆட்டி வைக்கும் சக்தியிருக்க வேண்டும். அத்தகைய சக்தி இராதவர்களுக்கு, உயர்ந்த கொள்கைகளைப் பாமர ஜனங்கள் அறிந்துகொள்ளும்படி செய்வது முடியாத காரியமாகி விடும். ஆனால் மேலே குறிப்பிட்ட பல்வேறு குணாதிசயங்களும் ஒருவருக்கிருக்குமாயின், அவரைத்தான் அபூர்வமான ஒரு மேதாவியெனலாம்.

ஓர் இயக்கத்திற்குச் சீடர்களைச் சேர்ப்பது பிரசாரகரின் கடமை. அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுப்பது அமைப்பாளரின் கடமை.

ஓர் இயக்கத்தின் கொள்கைகளை அறிந்து அங்கீகரிப்பவர்தான் சீடர். அக்கொள்கைகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வருவதற்காகப் போராடுபவர்தான் அங்கத்தினர். அவ்விதம் பத்து சீடர்களிடையிலிருந்து இரண்டு அங்கத்தினர்களைத்தான் தேர்ந்தெடுக்க முடியும். எனினும் ஓர் அரசியல் தத்துவத்தைப் பெரும்பான்மையோர் நன்கு அறிந்து கொண்டாலேயே, அது வெற்றியடைய ஹேதுவுண்டு. அதை அமுலுக்குக் கொண்டு வருவதற்குற்ற திறமையும், தைரியமுமுள்ளவர்கள் சிறுபான்மையோராகத்தான் இருக்க முடியும். எனவே பிரசாரகர் இடைவிடாது சீடர்களைச் சேர்த்துவர வேண்டும். அவர்களிடையிருந்து தகுந்த யோக்கியதையுடைய அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியது இயக்கத்தை உருவாக்குவோரின் கடமை. சீடர்களின் திறமை, அறிவு, ஒழுக்கம் முதலியவை பற்றிப் பிரசாரகர் கவனிக்க வேண்டிய அவசியமே இல்லை. ஆனால் அங்கத்தினர்கள் அத்தகைய குணமுடையவர்களா என்பதை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். தங்கள் அபிப்பிராயத்திற்கு எவ்வளவு அதிக பேர்களை மாற்ற முடியுமோ, அவ்வளவு அதிக பேர்களை மாற்றுவதே பிரசாரகர் கடமை. ஏராளமானவர்கள் ஒரு கொள்கையில் நம்பிக்கை வைக்கும்படி செய்வதில் பிரசாரகர் வெற்றியடைந்து விட்டால், பின்னர் அதை சிலர் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்துவிட முடியும். பிரசார வேலை முதல் தரமாக நடக்கும் பட்சத்தில் ஸ்தாபனமானது சிறிதாகவே இருக்கும். எவ்வளவுக்கெவ்வளவு அதிக பேர்கள் சீடர்களாக இருக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அந்த ஸ்தாபனம் சிறியதாகத்தானிருக்கும். பிரசாரம் சரிவர நடைபெறாத ஸ்தாபனம்தான் பெரிதாக இருக்கும். ஸ்தாபனத்தின் உயர்வு தாழ்வை நிர்ணயிக்க இதுதான் சரியான சோதனை. உலக முக்கியத்துவம் வாய்ந்த பெரிய புரட்சி இயக்கமாயின், அதன் கொள்கையைப் பிரசாரத்தின் மூலம் வெளிநாடுகளுக்கும் பரப்ப வேண்டும்.

அங்கத்தினர்களுக்குள் ஒற்றுமைக் குறைவோ அல்லது அபிப்பிராய பேதமோ ஏற்படாமலும் இயக்கத்தின் 'போர்' வேகம் குறையாமலும் கவனித்துக் கொள்ள வேண்டியது ஸ்தாபன அமைப்பாளரின் இன்றியமையாத கடமை. அவர் அடிக்கடி இயக்கத்திற்குப் புதிய உணர்ச்சியும், புதிய பலமும் உண்டாகும்படி செய்து வர வேண்டும். அங்கத்தினர்களின் தொகை எல்லையின்றி அதிகமாக வேண்டுமென்ற அவசியமில்லை. அத்தொகை அதிகமாகாமலிருப்பதுதான் நன்மை பயக்கும். திட்டத்திற்கு மீறி பெரியதாகும் ஸ்தாபனங்களின் உத்வேகம் குறைய ஹேதுவுண்டு. ஒரு கொள்கையின் புரட்சித்தன்மை அதிகமாக இருப்பதற்குற்ற

வாறு, அந்த ஸ்தாபன அங்கத்தினர்களின் ஊக்கமும், உத்வேகமும் அதிகமாக இருந்துவரும். ஏனெனில் அப்புரட்சித் தன்மையானது கோழைகளையும், அற்பர்களையும் பயமுறுத்தி அருகில் நெருங்காதவாறு செய்துவிடும். தைரியசாலிகளுக்கும், ஊக்கமுள்ளவர்களுக்கும்தான் அவ்வியக்கம் வசீகரமானதாகத் தோன்றும்.

கடுமையான போராட்டமின்றி திடீரென வெற்றி பெறும் இயக்கத்தில் கோழைகளும் அயோக்கியர்களும் சேர்ந்து இறுதியில் அதைக் குட்டிச்சுவராக்கிவிடுவார்கள். மிகவும் கடுமையான போராட்டத்தின் மீது முன்னேறும் இயக்கத்திலிருந்து கோழைகள், சுயநலமிகள் முதலியோர் ஓடிவிடுவார்கள். எனவே ஓர் இயக்கம் வெற்றியடைந்தவுடன், அங்கத்தினர்கள் சேர்ப்பதை நிறுத்திவிட வேண்டும். தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அதுதான் ஒரு சிறந்த வழி. அதன் பின் எவரையும் நன்கு சோதனை செய்த பின்னரேயே அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இயக்கத்திற்கு ஆதி கர்த்தாக்கள் யாரோ அவர்கள்தான், இயக்கத்தின் மூலம் ஜெயித்த உயர் பதவிகளை வகிக்க வேண்டும். கட்சியின் கொள்கையானது புதிய அரசாங்கத்தின் கொள்கையாகவும், அஸ்திவாரமாகவும் அமையும் வரையில் அம்முறைகளைத் தொடர்ந்து அனுஷ்டித்து வர வேண்டும்.

எங்கள் கட்சிப் பிரசார டைரக்டர் என்ற ஹோதாவில் நான், எங்கள் இயக்கம் பிரமாத வளர்ச்சி பெறுவதற்குற்ற முறைகளை எடுத்துக் கொண்டு வந்ததுடன் மாத்திரமின்றி, சோதனையில் தேறும் முதல் தரமானவர்களைத் தவிர வேறு எவரும் எங்கள் ஸ்தாபனத்திற்குள் புகுந்து விடாமலும் ஜாக்கிரதையாகக் கவனித்து வந்தேன். எங்களுடைய வெகு தீவிரமான கொள்கைகளையும், பிரசாரத்தையும் கண்டு கோழைகளும், தடுமாற்றவாதிகளும் பதுங்கினர். எனினும் அவர்கள் எங்களை எதிர்க்கவில்லை. ஒருவேளை அவர்கள் எங்கள் கொள்கைகளை அங்கீகரிப்பதாயும், எனினும் தாங்கள் எங்கள் கட்சியில் அங்கத்தினர்களாகச் சேர முடியாதென்றும், அவ்விதம் சேர்ந்தால் தாங்கள் மிகுந்த கண்டனத்திற்கும், ஆபத்திற்கும் ஆளாக வேண்டியிருக்குமென்றும், எனவே கட்சியில் தீவிர பங்கெடுத்துக் கொள்ள தற்காலிகமாக தாங்கள் விரும்பவில்லை என்றும் என்னிடம் ஆயிரக்கணக்கானவர்கள் உறுதி கூறினர். அவர்கள் அவ்விதம் சேராமலிருந்ததும் நன்மைதான். ஏனெனில் திரிகாரண சுத்தியாக எங்கள் கொள்கைகளை அங்கீகரித்து அவைகளை அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரத் தயாராயிருப்பவர்கள் கட்சியில் சேர்ந்தால்தான் அது ஜீவசக்தியுடன் விளங்க முடியும். எங்களுடைய பிரசாரத்தின்

வேகத்தைக் கண்டு பலரும் பிரமித்தார்கள். எங்கள் கட்சியில் சேர்ந்தால் மகத்தான தியாகத்திற்கும், துன்பத்திற்கும் உள்ளாக வேண்டியிருக்கும் என்பதை உணர்ந்தார்கள். அப்படியிருந்தும் எங்கள் முறைகள்தான் சரியானவை என கோடிக்கணக்கான ஜனங்கள் அந்தரங்கத்தில் திருப்தியடைந்ததுடன், மனதிற்குள் நாங்கள் வெற்றி பெறவும் பிரார்த்தித்தனர்!

*2581 (1921)* ஆகஸ்டு மாதம் 1ந் தேதியிலிருந்து கட்சியின் சகல நிர்வாகத்தையும் நானே ஏற்றுக் கொண்டேன். எனக்கு அவ்விதம் அதிகாரமளித்து கட்சிக் கூட்டத்தில் ஏகமனதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது. சிறந்த குணங்கள் படைத்த சகலரும் எனக்குப் பக்கபலமாக நின்றனர். ஸ்தாபனத்தை உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் நான் பல பழைய வழக்கங்களை எல்லாம் ஒழித்துவிட்டு புதிய விதிகளை அமுலுக்குக் கொண்டு வந்தேன்.

எங்கள் கட்சியில் நிர்வாகக் கமிட்டியினர், பொக்கிஷதாரர், உதவி பொக்கிஷதாரர், காரியதரிசி, உதவிக் காரியதரிசி, தலைவர், உபதலைவர் என்றெல்லாம் இருந்தனர். அதாவது எங்கள் கமிட்டி ஒரு 'குட்டி' பார்லிமெண்டாகவே இருந்தது! பார்லிமெண்டு முறையையே அடியோடு ஒழிப்பதற்காக ஏற்பட்ட ஒரு கமிட்டியின் நிர்வாகம் பார்லிமெண்டு அம்சங்களையே ஆதாரமாகக் கொண்டு நடந்து வருவதென்பது ஒரு வேடிக்கையான விஷயமல்லவா? எனவே அவ்விபரீத நிலைமையை உடனே மாற்ற வேண்டியது அத்தியாவசியமாயிற்று. இல்லாவிடில் கட்சி செய்யும் எத்தீர்மானத்திற்கும் குறிப்பிட்ட யார் பொறுப்பாளியெனக் கூற முடியாது. எல்லாம் வோட்டுகளின் மூலம் முடிவு செய்யப்பட்டு வந்தன. பிரசார டைரக்டர் என்று ஒருவரைத் தேர்ந்தெடுத்த பின் பிரசார சம்பந்தமாக பொக்கிஷதாரர்களும், கமிட்டிகளும், ஏன் சட்டாம் பிள்ளைகளாக இருக்க வேண்டும்? அவர்களுடைய வேலை பொது நிர்வாகமேயன்றி, பிரசாரத்தில் அவர்கள் தலையிட நான் அனுமதிக்கவில்லை. அதுபோலவேயே நானும் அவர்களுடைய நிர்வாக விஷயங்களில் தலையிடவில்லை.

புதிய விதிகளின்படி நான் கட்சித் தலைவனாக வந்ததும் மடத்தனமான பல முறைகளையும் சிறிதும் தாமதியாது ஒழிக்க முற்பட்டேன். பெரும்பான்மையான வோட்டுகளின் மூலம் முடிவு செய்வதென்ற முறையும் ரத்து செய்யப்பட்டு, ஒருவருக்கே முழுப் பொறுப்பையும் அளிக்கும் முறை அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது. அதாவது இயக்க சம்பந்தமான முழுப் பொறுப்பும் தலைவரைச் சார்ந்தது. கட்சி நிர்வாக அலுவல்களை அவர்தான் கமிட்டி அங்கத்தினர்களுக்குப் பகிர்ந்தளிக்க வேண்டும். விசேஷ திறமை தேவையான அலுவல்களுக்கு உற்றவர்களைத் தேர்ந்தெடுப்பதும் தலைவருடைய பொறுப்புதான். அவ்விதம்

தேர்ந்தெடுக்கப்பட்டவருக்கு அந்தத் துறையில் பூர்ண அதிகாரமுண்டு. எனினும் பொதுவாக எல்லாவற்றையும் மேற்பார்வையிடும் அதிகாரம் தலைவருக்கிருப்பதால், மற்ற சகலரும் அவருக்கு மாத்திரம் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். அம்முறையைச் சிறிது சிறிதாகத்தான் அமுலுக்குக் கொண்டு வர முடியும். ஏனெனில் எவரும் சகல நிர்வாகத்திற்கும் முழுப் பொறுப்பை ஏற்றுக் கொள்வதென்பது கஷ்டமான காரியமே. எங்கள் இயக்கத்தின் 'குட்டி' பார்லிமெண்டு முறையை ஒழித்தே தீர வேண்டுமென நான் திட சங்கல்பம் செய்து கொண்டேன். ஒரு ஸ்தாபனம் சம்பந்தப்பட்டவரையில் அதை அமுலுக்குக் கொண்டு வந்து விட்டால், பின்னர் ஒரு தேச ஆட்சி முறையிலும் அதை அமுலுக்குக் கொண்டு வருவது சுலபமாகி விடும். அக்கொள்கையை அனுசரித்து எங்கள் கட்சியையும் மாற்றியமைக்க வேண்டியது அவசியமாயிற்று. எங்கள் கட்சியின் பல்வேறு பிரிவுகளிலும் அக்கொள்கை அமுலுக்கு வந்தது. ஒவ்வொரு பிரிவையொட்டியும் அதன் தலைவரே பூர்ண பொறுப்பாளி என்ற நியதி அனுஷ்டானத்திற்கு வரவே, கட்சிக்குப் புதிய பலமேற்பட ஆரம்பித்தது.

2581ம் ('1921) வருஷம் ஆகஸ்டு மாதம் ஸ்தாபிக்கப்பட்ட எங்கள் கட்சியில் அப்போது ஆறு அங்கத்தினர்கள் தானிருந்தனர். கட்சிக்கு தலைமைக் காரியாலயமோ, அதிகாரிகளோ, திட்டமோ, முத்திரையோ, அச்சடித்த பிரசுரங்கங்களோ எதுவுமில்லை. அப்போதைக்கப்போது ஒரு ஹோட்டலில் கமிட்டிக் கூட்டம் நடக்கும். ஆனால் அவ்வித நிலைமையே நீடித்து வருவது முடியாத காரியமல்லவா? அவ்விஷயமாக நான் கவனம் செலுத்த ஆரம்பித்தேன். கட்சியின் உபயோகத்திற்காக ஓர் அறை இருக்க வேண்டுமென்று தீர்மானித்து மியூனிச்சிலுள்ள* பல ஹோட்டல்களுக்கும் சென்று பார்த்தேன். கடைசியாக ஒரு பழைய ஹோட்டலிலுள்ள சிறு அறையொன்றை வாடகைக்குப் பேசி முடித்தேன். அந்த அறையில் போதிய வெளிச்சமில்லை. நடுப்பகலில் கூட அங்கு வெளிச்சம் மங்கலாகத்தானிருக்கும்.

---

*'மியூனிக்' என்று வழங்கப்படுகிறதெனினும், சாதாரணமாக தமிழ் பத்திரிகா உலகில் 'மியூனிச்' என்பதே சகஜமாக இருந்து வருவதால், 'மேன் காம்ப்' முழுதும் 'மியூனிச்' என்றே குறிப்பிடப்பட்டிருக்கிறது. மற்றும் இந்த நூலில் காணப்படும் பல்வேறு பெயர்களும் ஆங்கில உச்சரிப்பை ஆதாரமாகக் கொண்டு குறிப்பிடப்பட்டிருக்கின்றன. ஜெர்மனியில் ஜெர்மானியர்கள் அப்பெயர்களை எவ்விதம் உச்சரிக்கிறார்களென்று அனுஷ்டான அசாத்தியமான ஆராய்ச்சியில் மொழி பெயர்ப்பாளர் ஈடுபட விரும்பவில்லை!

அதற்கு மாத வாடகை 15 மார்க்குகள். அப்போது அது எங்களுக்கு ஒரு பெரும் தொகையாகவே தோன்றியது. பின்னர் அந்த அறைக்கு மின்சார விளக்கு போடவும், டெலிபோன் அமைக்கவும் ஏற்பாடு செய்தோம். பிறகு மேஜை, நாற்காலிகள் முதலிய மற்றும் சில மரச்சாமான்களைக் கடனாக வாங்கி வந்தோம். அப்போது வாரத்திற்கு ஒரு தடவை கமிட்டிக் கூட்டம் போதாதெனத் தோன்றியது. சம்பள அதிகாரியொருவரை நியமித்தாலன்றி இயக்கத்தின் தற்காலிக அலுவல்களை ஒழுங்காகக் கவனிப்பது முடியாத காரியமென்றும் தோன்றியது.

எங்கள் கட்சியிலோ அங்கத்தினர்களின் தொகை மிகக் குறைவு. எனவே வெகு குறைந்த சம்பளத்துடன் திருப்தியடையக் கூடியவரைக் கண்டுபிடிப்பது கஷ்டமாக இருந்தது. கடைசியில் ஒரு சிப்பாய் அவ்விதம் வேலை பார்க்க இசைந்தார். அவர் என்னுடைய யுத்தகாலத் தோழரான ஷுஸ்லர் என்பவரே. முதலில் அவர் எங்களுடைய புதிய காரியாலயத்தில் மாலை 6 மணியிலிருந்து 8 மணி வரையில் வேலை செய்து வந்தார். பின்னர் 5 மணியிலிருந்து 8 மணி வரையில் வேலை செய்து வந்தார். அதன்பின் அவர் மத்தியானம் முழுவதும் காரியாலயத்தில் வேலை செய்யத் தொடங்கினார். சில நாட்கள் சென்றபின் அவர் காலையிலிருந்து இரவு வெகுநேரம் வரை உழைப்பாளி, கண்ணியமானவர், யோக்கியப் பொறுப்புள்ளவர், இயக்கத்தில் அந்தரங்க விசுவாசமும், பற்றுதலுமுடையவர். அவர் தம்முடைய சொந்த 'டைப்ரைட்டரை'யும் காரியாலய அலுவல்களுக்காக உபயோகித்து வந்தார். பின்னர் பல தவணைகளாகப் பணம் கொடுப்பதென்ற நிபந்தனையின் மீது அதை விலைக்கு வாங்கினோம். எங்கள் கட்சி தஸ்தாவேஜுகளையும், ரிஜிஸ்தர்களையும் ஜாக்கிரதையாய் வைத்துக் கொள்வதற்காக ஒரு சிறிய இரும்புப் பெட்டியும் வாங்க வேண்டியிருந்தது. அது பணத்தை வைத்துக் கொள்வதற்காகவல்ல. ஏனெனில் அப்போது கட்சிக்குச் சொந்தமாகப் பணமெதுவுமில்லை. அப்போது கட்சி நிர்வாகத்திற்குப் போதிய பணமிராததுடன், நான் அடிக்கடி என் சொந்தப் பணத்தையும் கட்சிக்காக செலவழிக்க வேண்டியிருந்தது.

அவ்விதமாக பதினெட்டு மாதங்கள் கழிந்தன. அதன் பின்னர்தான் கட்சிக் காரியாலயத்தை ஒரு பெரிய இடத்திற்கு மாற்ற வேண்டிய அவசியமேற்பட்டது. அதாவது ஒரு ஹோட்டலில் மூன்று சிறிய அறைகளையும், ஒரு பெரிய அறையையும் வாடகைக்குப் பேசி அங்கு காரியாலயத்தை மாற்றினோம். பெரிய ஓரிடத்தை நாங்கள் அமர்த்திக் கொண்டது எங்களுக்கு மிக ஆச்சரியமான ஒரு விஷயமாகத் தோன்றியது. 2583 (1923) நவம்பர் மாதக் கடைசி வரையில் நாங்கள் அவ்விடத்திலேயே இருந்து வந்தோம்.

2580 (1920) டிசம்பர் மாதம் நாங்கள், "வால்கிஷர் பியோபாக்டர்" என்ற பத்திரிகையை வாங்கினோம். அதன் பெயருக்கிணங்க அது ஜனங்களுக்காகவே உழைத்து வந்தது. அதை நாங்கள் எங்களுடைய கட்சிக்காக வாங்கினோம். முதலில் அது வாரம் இருமுறையாக வெளிவந்தது. ஆனால் 2588ம் (1928) வருஷ ஆரம்பத்தில் அது ஒரு தினசரியாக மாறியது. அதே வருஷம் ஆகஸ்டு மாத இறுதியில் அதன் உருவமும் பெரிதாக்கப்பட்டது. ஆரம்பத்தில், எனக்கு பத்திரிகைத் தொழிலில் அனுபவமிராததால் பல கஷ்டங்களுக்குள்ளாக வேண்டியிருந்தது. இருந்தாலும் அதன் பயனாக நான் பல பாடங்கள் கற்றுக் கொண்டேன். சகல பத்திரிகைகளும் யூதர்களின் கையிலிருந்த அச்சமயத்தில், ஒரே ஒரு முக்கிய பத்திரிகைதான் ஜனங்களின் உரிமைகளைப் பாதுகாக்க முற்பட்டது.

"வால்கிஷர் பியோபாக்டர்" பத்திரிகையில் அடங்கியிருந்த விஷயங்கள் அபூர்வமாக இருப்பினும், அதன் நிர்வாகம் சரிவர நடைபெறவில்லை. அது பொது ஜனப் பத்திரிகையானதால் அதன் நிர்வாகத்திற்குப் பொது ஜனங்கள்தான் உதவி புரிய வேண்டுமென்ற ஒரு தவறான எண்ணம் அப்போது நிலவி வந்தது. அதன் நிர்வாக ஊழல்களைச் சரிப்படுத்த, தேச பக்தர்களான பொது ஜனங்களுடைய சந்தாக்களை எதிர்பார்ப்பது அயோக்கியத்தனமென்பதை பலர் உணர்ந்து கொள்ளவில்லை. எனவே நான் சிறிதும் தாமதமின்றி அந்த ஊழலைச் சீர்திருத்த முற்பட்டேன். அவ்விஷயமாக அதிர்ஷ்டம் என் பக்கமிருந்தது. ஒரு பத்திரிகைக்கு மாத்திரமல்ல, கட்சிக்கும் நிர்வாக மானேஜராக இருந்த ஒருவருடைய உதவி எனக்குக் கிடைத்தது. அவரது பெயர் மார்க்ஸ் அமான். 2574ம் (1914) வருஷ யுத்தத்தின்போது அவரை நான் அறிமுகம் செய்து கொண்டேன்! அவர் அப்போது எனக்கு மேலதிகாரியாக இருந்தார். இப்போது அவர் எங்கள் கட்சியின் நிர்வாக மானேஜராக இருந்து வருகிறார். யுத்தத்தின்போது 4 வருஷ காலம் வரை நான் அவரது அசாதாரண திறமையையும், சுறுசுறுப்பையும், கண்டிப்பையும், களங்கமற்ற மனச்சாட்சியையும் நேரில் பார்த்தவன். 2581ம் (1921) வருஷம் ஒரு நாள் நான் அவரைத் தற்செயலாகச் சந்திக்க நேர்ந்தபோது, எங்கள் கட்சியின் நிர்வாக மானேஜராக இருக்குமாறு கேட்டுக் கொண்டேன். அவ்வமயம் எங்கள் இயக்கம் மிகவும் நெருக்கடியான நிலைமையைச் சமாளிக்க வேண்டியிருந்தது. கட்சி அதிகாரிகளில் பலர் அதிருப்திகரமான முறையில் நடந்து கொண்டனர். முக்கியமாக ஒருவரிடம் நான் பெற்ற அனுபவம் மிகுந்த வேதனையைக் கொடுத்தது. அமான் அப்போது ஒரு நல்ல உத்தியோகத்திலிருந்தார். வெகு நேரம் தயங்கிய பின்னரே அவர் எனது வேண்டுகோளுக்கிணங்கினார்.

திறமையற்ற கமிட்டிகளின் தயவில் தாம் வேலை பார்க்க முடியாதென்றும், ஒருவர்தான் தமக்கு எஜமானராயிருக்க வேண்டுமென்றும், அவர் ஒரு நிபந்தனையும் விதித்தார். அவர் நிர்வாக மானேஜராக வந்ததிலிருந்து கட்சியின் நிலைமை அபாரமாக அபிவிருத்தி அடைய ஆரம்பித்தது. மிகுந்த திறமையானது அதிருப்தியையும், பொறாமையையும் தூண்டிவிடுவது வாழ்க்கையில் வழக்கமல்லவா? அதுபோலவே அவர் பலருடைய பொறாமைக்கும் ஆளாக வேண்டியிருந்தது. 2582 (1922)லிருந்து கட்சியின் பல்வேறு பிரிவுகளிலும் கண்டிப்பான விதிகள் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டன. பண வரவு செலவு நிர்வாகம் சிறந்த வர்த்தக ஸ்தாபனங்கள் போன்று மிகவும் கண்டிப்பாக நடத்தப்பட்டது. அதன் காரணமாக கட்சியின் பொருளாதார நிலைமையும் அபிவிருத்தியடைந்தது. நல்ல திறமைசாலிகளே கட்சி நிர்வாகிகளாக நியமிக்கப்பட்டனர். கட்சியிடம் ஒருவர் எவ்வளவு விசுவாசமுடையவராயினும் திறமையின்றி அவர் முக்கிய பதவிக்கு வர முடியாது. திறமையற்றவர் பதவிக்கு ஆசைப்படுவது, கட்சிக்கு விரோதமாகச் செய்யும் ஒரு பாவமென்றும் கருதப்பட்டது.

புதிய நிர்வாக மானேஜர் வெகு திறமையுடன் தமது பதவியை வகித்து வந்தார். உண்மையான திறமையும், உழைப்புமுள்ளவர்களைத் தவிர வேறெவரையும், அவருக்கு எவ்வித செல்வாக்கிருப்பினும், அமான் முக்கிய பதவிகளில் நியமிப்பதில்லை. தேச நிர்வாகத்திலுள்ள ஊழல்களைக் களைவதற்காகப் போராடும் கட்சி, முதலில் தன் சொந்த நிர்வாகத்தில் எவ்வித ஊழலுமிராமற் பாதுகாத்துக் கொள்ள வேண்டியது அத்தியாவசியமல்லவா? எனவே அவரது அபார திறமையினால் கட்சி நிர்வாகமும், பத்திரிகையின் நிர்வாகமும் சிறந்து விளங்கின. தேசம் முழுதும் பொருளாதார கஷ்டமேற்பட்டு பல வர்த்தக ஸ்தாபனங்களும், பத்திரிகைகளும் முறிந்தபோது கூட எங்கள் கட்சி நிலைமையும், பத்திரிகையின் நிலைமையும் திருப்திகரமாகவே இருந்து வந்தன. அதன் பயனாக அப்பத்திரிகையும் இதர சிறந்த பத்திரிகைகளுள் ஒன்றாக விளங்கியது. அவர்து நிர்வாக சாமர்த்தியம் காரணமாக கட்சியின் நிதி நிலைமை திருப்திகரமாக இருந்தது. எவ்வளவோ கஷ்டங்களேற்பட்டும்கூட, எங்கள் இயக்கத்திற்குக் கடன் வராமல் அவர் பார்த்துக் கொண்டார். எவராயிருந்தாலும், மார்க்ஸ் அமானை அவரது கடமையிலிருந்து அணுவளவும் வழுவும்படி செய்ய முடியாது. இயக்கத்தின் அபிவிருத்திக்காக உழைப்பதில் அந்தரங்க ஆர்வமுடையவர்கள்தான், அவரது நிர்வாகத்தின் கீழ் பதவிகளை வகிக்க முடியும் உழைப்பில் ஆர்வமின்றி வெறும்

பதவி மோகம் மாத்திரம் மார்க்ஸ் அமானை அணுக முடியாது. அவர் அவ்விதம் மிகவும் கண்டிப்பாக இருந்ததால், முதலில் பலவிதத் தப்பெண்ணங்கள் ஏற்பட்டவெனினும், அவரது கண்டிப்பான நிர்வாகமானது பின்னர் இயக்கத்திற்கு மிகுந்த பலத்தை உண்டுபண்ணியது.

அதன்பின், கட்சியின் தலைவன் என்ற ஹோதாவில் நான் சில முக்கிய சீர்திருத்தங்களைச் செய்தேன். அதாவது கமிட்டியைச் சேர்ந்த சில அங்கத்தினர்கள் கட்சி நிர்வாகம் சம்பந்தப்பட்ட நுணுக்கமான விஷயங்களில் தலையிடுவதை நிறுத்தியதுடன், அவர்கள் அனாவசியமான கண்டனங்களில் ஈடுபடுவதற்கும் முற்றுப்புள்ளி வைத்தேன். ஏனெனில், கட்சி நிர்வாக விஷயங்களில் அறிவிலிகள் அடிக்கடி தலையிட்டுத் தொல்லை விளைவித்து வந்தால், சாமர்த்தியசாலிகள் எவ்வேலையும் செய்ய முன்வரமாட்டார்கள். அந்த அறிவிலிகள் தங்களுக்கு எல்லாம் தெரிந்தது போல் பாசாங்கு செய்வதுடன் நில்லாமல், பிரமாதமான திட்டங்களையும், கொள்கைகளையும், முறைகளையும் கூட வகுக்க ஆரம்பித்து விடுவார்கள்! ஆனால் அத்தகைய "புத்திசாலிகள்", தேசீய அபேதவாதக் கொள்கைக்கு நேர்மாறானவர்கள். ஆகையால் அத்தகையோர் தொல்லையெதுவும் விளைவிக்காமல் பாதுகாக்க வேண்டியதும் எனது கடமையாயிற்று. மற்றும் பொறுப்பான வேலைகளைச் செய்து வருவோரை அடிக்கடி கண்காணித்து அவர் மீது புகார் கூறும் பதர்களுக்கும் சிறிதும் இடங்கொடுக்காமலிருக்க வேண்டியதும் அவசியமாயிற்று.

அதாவது ஒழுங்காகத் தங்கள் கடமைகளைச் செய்வோர் மீது அனாவசியமாகக் குற்றம் காண்பது, பிறருடைய அலுவல்களில் தலையிடுவது போன்ற விபரீதங்களை கட்சிக்குள் நாங்கள் அணுகவிடவில்லை. அவ்விதம் குற்றம் காண்போர், கோட் சொல்லுவோர் முதலியோருக்கு உண்மையான வேலைகள் கொடுக்க ஆரம்பித்து விட்டால், அவர்கள் மௌனமாக நழுவிவிடுவார்களென்பதையும் அனுபவபூர்வமாக அறிந்து கொண்டோம். உதாரணமாக, பார்லிமெண்டு அங்கத்தினர்களுக்கு இப்போது பேச்சு வேலைதான் பிரமாதமாக இருந்து வருகிறது. அதை விடுத்து, அவர்களுக்கு உண்மையான, பொறுப்பான வேலை ஏதாவது கொடுக்கும் பட்சத்தில், அவர்கள் எவ்வளவு வேகமாக ஓட்டம் பிடிப்பார்கள் தெரியுமா!

சொந்த வாழ்க்கையைப் போல் இயக்கத்திலும் ஒவ்வொரு பிரிவின் தலைவர் பதவியையும் வகிக்க மிகவும் சிறந்த, மிகுந்த யோக்கியப் பொறுப்புள்ள, அபார சாமர்த்திய சாலிகளான

நபர்களைக் கண்டுபிடிக்கும் வரையில் நாம் சோர்வடையக் கூடாதென்றே நான் இடைவிடாது கூறி வந்துள்ளேன். அத்தகையோர் பதவிக்கு வந்ததும் அவருக்கு பூர்ண பொறுப்பும், சுதந்திரமும், அதிகாரமும் அளிக்க வேண்டும். இரண்டு வருஷங்களுக்கு முன் நான் அவ்வபிப்பிராயத்தைப் பெரிதும் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வந்ததன் பயனாக, இன்று இயக்கத்தின் உயர்தர நிர்வாகம் சம்பந்தப்பட்ட வரையிலாவது எனது அபிப்பிராயங்கள் அங்கீகரிக்கப்பட்டுள்ளன.

அம்முறைகளெல்லாம் எவ்வளவு தூரம் வெற்றியைக் கொடுத்தன என்பது *2583 (1923)* நவம்பர் மாதம் 9ந் தேதி நன்கு வெளியாயிற்று. நான்கு ஆண்டுகளுக்கு முன் நான் கட்சியில் சேர்ந்தபோது கட்சிக்குச் சொந்தமாக ஒரு "ரப்பர் ஸ்டாம்பு" கூட இல்லை. ஆனால் 2583 (1923) நவம்பர் 9ந் தேதி எங்கள் கட்சி சர்க்காரால் கலைக்கப்பட்டபோது, 1,70,000 தங்க மார்க்குகளுக்கு மேல் பெறுமானமுள்ள கட்சி சொத்துக்களும் பறிமுதல் செய்யப்பட்டன!





# 12. தொழிலாளர் சங்கப் பிரச்னை

எங்கள் இயக்கம் வெகு துரிதமாக வளர்ச்சி பெறவே 2582ல் (1922) ஒரு முக்கியப் பிரச்னையையொட்டி எங்கள் நிலைமை என்னவென்பதை நிர்ணயம் செய்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தமேற்பட்டது. அப்பிரச்னை இன்றுகூட பூர்ணமாகத் தீர்ந்தபாடில்லை.

எங்கள் இயக்கமானது பரந்த முறையில் பாமர ஜனங்களின் மனதைக் கவர்வதற்குற்ற துரிதமும், சுலபமுமான ஒரு வழியைக் கண்டுபிடிக்க நாங்கள் முயற்சித்து வருகையில், அடிக்கடி சிலர் ஓர் ஆட்சேபனையை எழுப்பி வந்தனர். அதாவது தொழிலாளரின் அலுவல்களையும் பொருளாதார சம்பந்தமான நலன்களையும் கவனிப்பதற்கான ஓர் அரசியல் ஸ்தாபனமானது, நம் கொள்கைகளுக்கு வேறான கொள்கையுடையவர்களால் நடத்தப்பட்டு வரும் வரையில், தொழிலாளர்கள் ஒருபோதும் நம்மைச் சாரமாட்டார்களென்பதே அந்த ஆட்சேபனை. அது மிகவும் ஆழ்ந்த கருத்துள்ள ஓர் ஆட்சேபனை என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் தொழிலாளர் சங்கமானது தொழிலாளர்களுடைய நலன்களைக் காப்பாற்றுவதுடன், அவர்களுக்கு நிரந்தரமாக வேலை கிடைக்கவும் உத்தரவாதம் அளிக்கின்றது. பெரும்பாலான தொழிலாளர்களும் அச்சங்கங்களில் அங்கம் வகிக்கின்றனர். தொழிலாளர் சம்பள நிர்ணயப் போராட்டங்களிலும் அவை வெற்றி பெற்றுள்ளன. மற்றும் பல விதங்களிலும் அவைகளால் தொழிலாளர்கள் நன்மை அடைந்துள்ளனர்.

இப்பிரச்னையைப் பற்றி முதலாளிகளுடன் விவாதிப்பதென்பது முடியாத காரியம். தொழிலாளர்கள் ஒன்று சேரும் ஸ்தாபனம் என்பதையும் தங்கள் நலன்களுக்கு விரோதமானதென்று நினைக்கும் குணமுள்ள முதலாளிகளுடன் அதைப் பற்றிப் பேசுவதால் என்ன பலன்? சாதாரண மானிட உரிமைகளைக் கூட மறுக்கும் முதலாளிகள் உள்ளவரை தொழிலாளர்கள் தங்கள் நலன்களைப் பாதுகாத்துக் கொள்வதற்குற்ற நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டுதான் தீரவேண்டும். தவிர, சமுதாய அநீதிகளுக்குப் பரிகாரமேற்படாவிடில் அது சமுதாய அமைப்பையே சீர்குலைத்துவிடும். எனவே தொழிலாளர்களின் நலன்களைப் பாதுகாக்க அவர்களுக்கென ஒரு தனி ஸ்தாபனம் இருந்து தீரவேண்டும் என்றே நான் நினைத்தேன். 2582 (1922) வரை என்னுடைய பொதுவான அபிப்பிராயம் அதுதான். எனினும் அப்பிரச்னையையொட்டி அனுஷ்டான சாத்தியமான

ஏதாவதொரு முடிவிற்கு வரவேண்டியது அவசியமெனத் தோன்றியது. அவ்விதம் ஒரு முடிவிற்கு வரும் விஷயமாக கீழ்க்கண்ட கேள்விகள் எழுந்தன.

1. தொழிலாளர் சங்கங்கள் அவசியமானவையா?

2. ஜெர்மன் தேசிய அபேதவாதத் தொழிற்கட்சி, தொழிலாளர் சங்க முறையை ஆதாரமாகக் கொண்டு நடைபெற வேண்டுமா, அல்லது அங்கத்தினர்கள் ஏதாவதொரு விதத்தில் தொழிலாளர் சங்க நடவடிக்கைகளில் கலந்து கொள்ளலாமா?

3. தேசிய அபேதவாதத் தொழிலாளர் சங்கத்தின் அமைப்பு எவ்விதமிருப்பது? அவ்விஷயமாக நமது கடமைகளும், லட்சியமும் என்ன?

4. அத்தகைய லட்சியம் நிறைவேறும் விதத்தில் நாம் எவ்வாறு தொழிலாளர் சங்கங்களை அமைப்பது?

தற்போதுள்ள நிலைமையில் தொழிலாளர் சங்கங்கள் அவசியமானவையே. அவைகளை ரத்து செய்வதென்பது முடியாத காரியம். தேசத்தின் பொருளாதார வாழ்க்கையில் அச்சங்கங்கள் மிகவும் முக்கிய ஸ்தாபனங்களுமாகும். மற்றும் எதிர்கால பொருளாதார மகா சபைக்கு (பார்லிமெண்டு) தொழிலாளர் சங்கம் அஸ்திவாரக் கற்கள் போன்றது.

இரண்டாவது கேள்விக்குப் பதிலளிப்பது மிகவும் சுலபம். தொழிலாளர் சங்கம் இன்றியமையாததாயின், பின்னர் அவ்விஷயமாக தேசிய அபேதவாதக் கட்சியினர் தங்கள் நிலைமையை நிர்ணயித்துக் கொள்ள வேண்டியதவசியம். ஆனால் எவ்விதம் நிர்ணயிப்பதென்பதுதான் மிகக் கஷ்டமான காரியம்.

தேசிய அபேதவாத ஜன அரசாங்கத்தை ஸ்தாபிப்பதே எங்கள் இயக்கத்தின் நோக்கம். அந்த அரசாங்கத்தின் கீழ் எதிர்காலத்தில் அமைக்கப்படும் எந்த ஸ்தாபனமும் அவ்வியக்கத்தை ஆணி வேராகக் கொண்டே உருவாக வேண்டும். ஆகையால் அந்த இயக்கமானது சொந்தமாக தொழிலாளர் சங்கக் கொள்கையை வகுத்துக் கொள்ள வேண்டியது அவசியம். அப்படியானால்தான் முதலாளிகள் - தொழிலாளிகளின் பரஸ்பர ஒத்துழைப்பை ஆதாரமாகக் கொண்ட தேசிய சமுதாயத்தை அமைப்பது சாத்தியமாகும். நம் இயக்கத்தின் அஸ்திவாரம் வெளிப்பகட்டல்ல, ஆழ்ந்த சிறப்பாகிற ஆணிவேரே. தொழிலாளர் சங்கக் கொள்கை விஷயத்தில் நமது நிலைமையை நிர்ணயிப்பதுடன் எதிர்கால தேசிய அபேதவாத அரசாங்கத்திற்குற்றவாறு அச்சங்கத்தைச் சேர்ந்தவர்களுக்கு கல்வியுமளிக்க வேண்டும்.

தேசிய அபேதவாதத் தொழிலாளர் சங்கம் வர்க்கப் போராட்டத்திற்கான ஒரு கருவியாக இருக்கக் கூடாது. பல்வேறு

தொழில்களுக்கும் உத்தியோகங்களுக்கும் பிரதிநிதித்துவம் வகிக்கும் ஒரு ஸ்தாபனமாக இருக்க வேண்டுமென்பதே மூன்றாவது கேள்விக்கு விடை. தேசிய அபேதவாத அரசாங்கத்தில் வர்க்கப் பிரிவினைக்கு இடமில்லை. தேசத்தைச் சேர்ந்த சகலருக்கும் முற்றிலும் சமத்துவ உரிமையளிப்பதே அவ்வியக்கத்தின் மூலாதார தத்துவம். தேச க்ஷேமத்தையும், பொருளாதார வாழ்க்கையையும் சீர்குலைக்க யூதர்களும் மார்க்ஸ் கட்சியினரும் தொழிலாளர் சங்கத்தை ஒரு கருவியாக உபயோகித்து வருவது போல், தேசிய அபேதவாதக் கட்சியினர் உபயோகிப்பதென்பது கனவிலும் கருத முடியாத விஷயம். மற்றும் தேசிய உற்பத்தியைச் சீர்குலைப்பதற்காக வேலை நிறுத்த ஆயுதம் உபயோகிக்கப்படும் விபரீதத்தையும் தேசிய அபேதவாதக் கட்சியினர் ஒழித்துவிட வேண்டும். தேசிய உற்பத்தி சீர்குலைந்தால் இறுதியில் அது தொழிலாளர்களை மாத்திரமல்ல, தேசத்திலுள்ள சகல பிரஜைகளையுமே பாதிக்கும்.

தேசிய அபேதவாத முதலாளிகள், தங்களுடைய பொருளாதார சுபிட்சமானது, தொழிலாளர்களிடையே நிலவும் சமாதானத்தையும், சந்தோஷத்தையுமே பொறுத்திருக்கிறதென்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். தொழிலாளர்கள் விஷயத்தில் அதிக நிர்ப்பந்தங்கள் விதிப்பதைக் காட்டிலும் அவர்களுக்கு அதிக சுதந்திரமளிப்பதன் மூலமே அவர்களுடைய உற்பத்தி சக்தி அதிகமாகிறதென்பது அனுபவபூர்வமான ஓர் உண்மையாகும். தேசிய அபேதவாத முதலாளிகளும் சரி, தொழிலாளர்களும் சரி, தேசிய சமூகத்தின் பிரதிநிதிகளாவர். தேசிய அபேதவாத அரசாங்கத்தின் கீழ் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் ஏற்படும் தகராறுகளை தலைமைப் பொருளாதார ஸ்தாபனம் விசாரித்து முதலாவதாக தேசத்தின் பொதுவான க்ஷேமத்திற்கும், இரண்டாவதாக அவ்விரு சாராருடைய உரிமைகளுக்கும் நலன்களுக்கும் பாதகமின்றி முடிவு செய்ய வேண்டும்.

தேசிய அபேதவாதக் கட்சியின் லட்சியத்தை ஆதாரமாகக் கொண்டு தொழிலாளர் சங்கங்களை அமைப்பதென்பதே நான்காவது கேள்வி. அவ்விதம் அமைக்க இம்முறைகளைக் கைக்கொள்ளலாம். 1. நாம் தொழிலாளர் சங்கங்களை அமைத்து, மார்க்ஸ் கட்சியினரால் ஸ்தாபிக்கப்பட்டுள்ள தொழிலாளர் சங்கங்களை பின்னர் எதிர்த்துப் போராடலாம். 2. அல்லது நாம் மார்க்ஸ் கட்சித் தொழிலாளர் சங்கத்தில் புகுந்து, அவைகளை நம் வழிக்கு மாற்ற முற்படலாம். ஆனால், நமது நிதி நிலைமை திருப்திகரமாயிராததால் நாமே தொழிலாளர் சங்கங்களை அமைப்பதென்பது முடியாத காரியம். நிதி பலமிருந்தால்தான் தொழிலாளர்களுக்கு பலமளிக்க முடியும். பண வசதியில்லாத

சங்கம் தொழிலாளர்களுக்கு உதவியளிக்க முடியாது. எனவே, அத்தகைய சங்கத்தில் எவரும் சேர முன்வர மாட்டார்கள். மற்றும் அச்சங்கமானது, வேலை செய்ய பயந்து வீண் பொழுதுபோக்கும் சோம்பேறிகளுக்குப் புகலிடமாக இருக்கக் கூடாது. அதைச் சிறந்த முறையில் நடத்துவதற்குற்ற யோக்கியதையுடைய ஒருவர் கூட அப்போது எங்கள் கட்சியில் இல்லை. தேசீய அபேதவாதத் தொழிலாளர் சங்கத்தை அமைப்பதற்குப் பூர்வாங்கமாக மார்க்ஸ் கட்சித் தொழிலாளர் சங்கத்தை வீழ்த்தக் கூடிய ஒருவர் தேசத்திலேயே ஒரு மகா புருஷராக இருக்க வேண்டும். எதிர்கால சந்ததிகள் பார்த்து வணங்குவதற்காக, அத்தகைய தலைவருக்கு ரீஜன்ஸ்பர்க்கிலுள்ள வல்ஹலா மண்டபத்தில் ஒரு சிலையைக் கூட பிரதிஷ்டை செய்வது தகும். எனினும் அந்த பீடத்திற்கு யோக்கியதையுடைய ஒருவர் கூட எனக்குத் தெரிந்த வரையில் இல்லை. ஏனெனில் மார்க்ஸ் கட்சித் தொழிலாளர் சங்கத்தை நடத்துவோர் நடுத்தரமான திறமை வாய்ந்தவர்களே என்றாலும், அந்த ஸ்தாபனமானது வெகு காலத்திற்கு முன் அமைக்கப்பட்டு ராக்ஷச பலம் பெற்றிருக்கிறது. அத்தகைய ஒரு ஸ்தாபனத்தை எதிர்த்து நிற்கக் கூடிய ஒருவர் மகா சூரராக இருக்க வேண்டும். அவ்விதமின்றி அரைகுறையான எதிர்ப்பில் ஈடுபடுவதைக் காட்டிலும் பேசாமலிருந்து விடுவதுதான் நன்மையாகும்.

மேலும், அன்றும் சரி, இன்றும் சரி, என் மனதில் ஒரு திட நம்பிக்கையானது வேரூன்றியிருக்கிறது. அதாவது, ஒருவர் மகத்தான அரசியல் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கும்போது, ஆரம்பகாலத்தில் பொருளாதாரப் பிரச்னைகளையும் அதில் கொண்டு வந்து கலப்பது பெரும் தவறென்பதேயாகும். ஏனெனில் அவ்வாறு கலக்கும் பட்சத்தில், அரசியல் போராட்டத்திற்காக நாம் உபயோகிக்க வேண்டிய சக்திகளை எல்லாம் பொருளாதார போராட்டமானது சிதறடிக்க ஆரம்பித்துவிடும்.

தேசீய அபேதவாத இயக்கமானது, இன்றைய போராட்டத்தின் முதற்படலத்திலேயே இருந்து வருகிறது. அது தனது கொள்கைகளை இனிமேல்தான் உருவாக்கி அபிவிருத்தி செய்ய வேண்டும். அதற்கு, இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் தங்களுடைய முழு சக்தியையும் உபயோகிக்க வேண்டியவர்களாயிருக்கிறார்கள். பொருளாதாரப் பிரச்னைகளில் ஜனங்கள் எல்லை மீறி கவனம் செலுத்துவதன் மூலம், அவர்களுடைய சக்தி சிதறுண்டு போய்விடுகிறதென்பது நாம் இன்று அனுபவபூர்வமாக அறிந்து வரும் விஷயமாகும்.

அரசியல் போராட்டத்தில் நமது முழு கவனத்தையும் செலுத்தி, முழு சக்தியையும் உபயோகிக்கும் பட்சத்தில், மற்ற சகல பிரச்னைகளையும் நாம் சுலபமாகத் தீர்த்துவிட முடியும். நாம் அரசியல் அதிகாரத்தைப் பெறும் வரையில், அப்பிரச்னைகளைத்

திருப்திகரமாகத் தீர்க்க முடியாது. இவைகளை எல்லாம் சிந்தித்துப் பார்த்ததன் பயனாக, எங்களுடைய சொந்த தொழிலாளர் சங்கங்களை ஸ்தாபிப்பது உசிதமெனத் தோன்றவில்லை.

அடுத்தபடியாக பாக்கியிருப்பது இரண்டே வழிகள்தான். அவையாவன: *1.* தொழிலாளர் சங்கங்களிலுள்ள எங்கள் கட்சி அங்கத்தினர்களிடம் அச்சங்கத்தை விட்டுவிடும்படி கூறுவது. *2.* அல்லது தற்காலிகமாக சங்கத்திலிருந்து கொண்டே அதில் எவ்வளவு நாசகரமான காரியங்களைச் செய்ய முடியுமோ, அவ்வளவு தூரம் செய்வது. பொதுவாக மேலே குறிப்பிட்ட காரணங்களையும், தொழிலாளர்களின் க்ஷேமத்தையும் மனதிற்கொண்டு, இரண்டாவது முறையையே கையாளும்படி நான் சிபாரிசு செய்தேன்.



# 13. வெளிநாட்டுக் கொள்கையும் வர்செயில்ஸ் விபரீதமும்

ஜெர்மனியின் வெளிநாட்டு சம்பந்தமான விஷயங்கள் அதிருப்திகரமாக நிர்வகிக்கப்பட்டு வந்தன. 2578ம் (1918) வருஷப் புரட்சிக்குப் பின் அந்நிலைமை படுமோசமாகியது. யுத்தத்திற்கு முன் நம்முடைய அரசியல் கொள்கைகளின் குழப்பமான நிலைமைக்கு நமது தவறான ராஜதந்திர முறையே காரணம். ஆனால் யுத்தத்திற்குப் பின் அத்தகைய நிலைமைக்கு அயோக்கியத்தனமான நோக்கங்களே காரணம். புரட்சியின் மூலம் நாசகரமான தங்களுடைய நோக்கத்தைப் பூர்த்தி செய்தவர்கள், புரட்சிக்குப் பின்னரும் அதே நோக்கத்துடனிருந்து வருவது இயற்கையே. சுதந்திர ஜெர்மனியின் புனருத்தாரணத்திற்கான எவ்வித ஒப்பந்தங்களையும் அவர்கள் செய்து கொள்ள விரும்பவில்லை. ஜெர்மனி எப்போதும் பிற நாடுகளின் தயவிலிருந்து வரவேண்டுமென்பதே அவர்களுடைய அந்தரங்க நோக்கம். பிற நாடுகளை லட்சியம் செய்ய வேண்டிய அவசியமிராத முறையில் ஜெர்மனியின் வெளிநாட்டுக் கொள்கையை வகுப்பதன் மூலம் ஏற்படக் கூடிய செல்வாக்கு, உள்நாட்டு அரசியலிலும் பிரதிபலித்து, சர்க்காரில் தங்கள் எதேச்சதிகாரத்திற்கு எங்கு ஆபத்து வந்துவிடுமோ என்பதே அவர்களுடைய கவலை. 2578 (1918) லிருந்து ஜெர்மன் சர்க்கார் நடவடிக்கைகள் சிறிதும் வழுவின்றி ஜெர்மனியின் நலன்களுக்கு முரணாகவே இருந்து வந்திருக்கின்றன!

ஜெர்மன் தேசீய அபேதவாதத் தொழிற்கட்சி மிகச் சிறியதாகவும், யாருமறியாத ஒரு சங்கமாகவுமிருந்தபோது, ஜெர்மனியின் வெளிநாட்டுக் கொள்கை சம்பந்தமான பிரச்னைகளை, கட்சி அங்கத்தினர்களில் பலரும் இரண்டாம் பட்சமாகவே கருதினர். மற்றும் வெளிநாட்டு சம்பந்த விஷயமாக தேசத்தின் சுதந்திரமானது கடவுளாலோ அல்லது பூமியிலுள்ள ஏதாவதொரு வல்லரசாலோ நன்கொடையாக அளிக்கப்படுவதல்ல, நம்முடைய சொந்த சக்தியால் பெற வேண்டிய ஒரு பலன் என்ற கொள்கையை எங்கள் கட்சி எப்போதுமே பிரகடனம் செய்து வந்திருக்கிறது. நம் தேச வீழ்ச்சிக்கான காரணங்களை நாம் முதலாவதாக வேரறுக்க வேண்டும். அந்த வீழ்ச்சியினால் லாபமடைந்து வருவோரையும் ஒழிக்க வேண்டும், பின்னர்தான் வெளிநாட்டு சம்பந்தமான நிர்வாகத்தில் நம்முடைய சுதந்திரத்தின் புனருத்தாரணப் போராட்டத்தை நாம் ஆரம்பிக்க முடியும். முதலில் நாங்கள்

உள்நாட்டுச் சீர்திருத்தப் பிரச்னைகளையொட்டியே எங்கள் முழு கவனத்தையும் செலுத்த விரும்பினோம். எனினும் எங்கள் கட்சி நன்கு வளர்ச்சி பெற்றபின், வெளிநாட்டுக் கொள்கை விஷயமாகவும் எங்கள் நிலைமையை நிர்ணயிக்க முற்பட்டோம். வெளிநாடுகளுக்கும் நமக்குமுள்ள சம்பந்தம் பற்றிய அரசியல் ஞானம் ஜனங்களுக்கில்லை. எனவே எம்முறைகளை ஆதாரமாகக் கொண்டு வெளிநாடுகளுடன் நமக்குள்ள சம்பந்தமானது அபிவிருத்தியடைய வேண்டுமென்பது பற்றி, எங்கள் இயக்கத்தின் பல பிரிவுகளையும் சேர்ந்த தலைவர்களுக்கும் பாமர ஜனங்களுக்கும் கற்பிக்க வேண்டியது அவசியமாயிற்று.

இப்பிரச்னை இறுதியான ஓர் லட்சியமல்ல. ஜனங்களின் க்ஷேமம்தான் இறுதியான லட்சியம். வெளிநாட்டு சம்பந்தமாகக் கைக்கொள்ள முற்படும் ஒரு குறிப்பிட்ட முறையை, அதனால் ஜனங்களுக்குச் சாதகமேற்படுமா என்பதை மாத்திரமே முக்கியமாகக் கொண்டு முடிவு செய்ய வேண்டும். கட்சி, அரசியல், மத விஷயம், ஜீவகாருண்யக் கொள்கைகள் முதலியன எதுவும் அதில் வந்து குறுக்கிடக் கூடாது.

யுத்தத்திற்கு முன், நம் ஜனங்கள், குழந்தைகள் முதலியோரின் வாழ்க்கைக்கு அவசியமான சாதனங்கள் கிடைக்கக் கூடிய விதத்தில் ஜெர்மனியின் வெளிநாட்டுக் கொள்கை வகுக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அவ்விதம் வகுக்கப்படவில்லை. இன்று நாம் கவனம் செலுத்த வேண்டிய விஷயம் அதுதான். யுத்தத்திற்கு முன் அத்தகைய கொள்கையை அமுலுக்குக் கொண்டு வரக் கூடியவாறு நம் அரசாங்கமானது பலம் பொருந்தியதாகவும், சுதந்திரமுள்ளதாகவும் இருந்தது. ஆனால் இன்றோ நாம் மீண்டும் பலத்துடனும் சுயேச்சையுடனும் கூடிய ஓர் அரசாங்கத்தைப் புதிதாக அமைக்க வேண்டியிருக்கிறது. அதை அமைத்த பின்னர்தான் ஜனங்களின் எதிர்கால வாழ்விற்கு உத்தரிவாதமளிக்கக் கூடிய வெளிநாட்டுக் கொள்கையை, நாம் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வர முடியும். அதாவது இழந்த சுதந்திரத்தை நாளை மீண்டும் பெறக் கூடிய விதத்தில் இன்று ஜெர்மன் வெளிநாட்டுக் கொள்கை வகுக்கப்பட வேண்டும்.

இச்சந்தர்ப்பத்தில் நாம் ஒரு மூலாதாரமான தத்துவத்தை மனதில் இறுத்திக் கொள்ள வேண்டியதவசியம். அதாவது ஒரு தேசம் தான் இழந்த சுதந்திரத்தை மீண்டும் பெறுவதற்கு இழந்த பிரதேசங்களையும் மீண்டும் பெற்றுத்தான் தீர வேண்டுமென்பதில்லை. ஆனால், பகைவர்களின் கையிலிருந்து தப்பிய எஞ்சியுள்ள ஒரு சிறு பாகம், அது எவ்வளவு சிறிதாயினும் சரி, தன் ஜன சமூகம் முழுவதற்கும் பொதுவான உத்வேகத்தை

உண்டுபண்ணக் கூடிய அளவுதான் சுதந்திரத்தை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும். பின்னர் பரந்த தேசத்தின் சுதந்திரத்தையே மீண்டும் போரில் ஜெயித்து அடையக் கூடிய ராணுவ பலம் பெறுவதற்கான மார்க்கத்தையும் சீர்படுத்திக் கொள்ள வேண்டும். அவ்விதம் செய்யுமாயின், இழந்த சுதந்திரத்தையும், பிரதேசங்களையும் மீண்டும் பெறுவது சாத்தியமாகிவிடும்.

தங்கள் தேசமானது எங்கு சிதறுண்டு பல கூறுகளாக்கப்பட்டு விடுமோவென்று பயந்து கொண்டு 10 கோடி ஜனங்கள் அடிமை நுகத்தடியைச் சகித்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும், தன் பிரதேசங்களை எல்லாம் இழந்து ஒரே ஒரு சிறுபாகத்தின் பூர்ண சுதந்திரத்தையாவது நிலைநிறுத்திக் கொள்வதுதான் மேன்மையாகும். ஆனால் அந்தச் சிறுபாகமானது சோர்வடைந்து விடக்கூடாது. தன் தேச ஜனங்களின் ஆத்துமார்த்த, கலாசார வாழ்க்கையின் ஐக்கிய பாவத்தை அது இடைவிடாது பிரகடனம் செய்து வருவதுடன், அநீதியின் கீழ் அல்லல்பட்டு வரும் பாகங்கள் எவ்வளவு கூக்குரலிட்டுக் கண்டித்தாலும் யாதொரு பலனுமேற்படாது. கூறாக்கப்பட்ட பிரதேசங்களை மீண்டும் ஒரு தாய்நாட்டின் கீழ் கொண்டு வருவதற்குக் கத்தி பலத்தைத் தவிர வேறு வழியெதுவுமில்லை. அவ்விதம் கத்தி பலத்தை உருவாக்குவதுதான் ஒரு தேசீய சர்க்காரின் உள்நாட்டுக் கொள்கையாக இருக்க வேண்டும். அவ்விதம் உருவாக்குவதற்கான வழியையும், கத்திகளை ஏந்துவதற்கான ஆட்களையும் தயாரிப்பதுதான் வெளிநாட்டுக் கொள்கையாகும்.

ஜெர்மனியின் தவறான வெளிநாட்டுக் கொள்கையே சென்ற மகா யுத்தத்தில் வந்து முடிந்தது. நம் ஜனங்களுக்கு அவசியமான உணவுப் பொருள்கள் கிடைப்பதற்குற்ற மற்ற வழிகளையெல்லாம் விட்டுவிட்டு, எது மிகவும் பாதகமான முறையோ அதுதான் எடுத்துக் கொள்ளப்பட்டது. அதாவது ஐரோப்பாவில் புதிய பிரதேசங்களை ஆக்கிரமிக்கும் சிறந்த முறையை விட்டுவிட்டு மிகத் தவறான காலனி, வர்த்தக விஸ்தரிப்பு முறையைக் கைக்கொண்டனர். மற்றொரு விபரீதம் என்னவெனில், அம்முறையைக் கைக்கொண்டால் யுத்தத்தைத் தவிர்க்கலாம் என அவர்கள் நினைத்ததே! ஏககாலத்தில் பல ஆசனங்களில் உட்காருவோர் ஒன்றிலும் உட்கார முடியாது கீழே விழுவது போல், ஜெர்மனியும் மகாயுத்தத்தில் மாட்டிக் கொண்டது.

ஐரோப்பாவில் புதிய பிரதேசங்களை ஆக்கிரமித்துக் கொள்வதில் ஈடுபட்டிருந்தால் அதன் பலம் அதிகமாகி, மேற்கொண்டு காலனி விஸ்தரிப்பிற்கும் வசதியேற்பட்டிருக்கும். அவ்வித முறையை அனுஷ்டிப்பதற்கு ஒன்று இங்கிலாந்தின் நட்பு அவசியம். அல்லது அபாரமான ராணுவ பலம்

அவசியம். ராணுவ பலத்தைப் பெருக்குவதற்காக கலாசார அபிவிருத்தி முறைகளைக் கூட நிறுத்தி வைக்கலாம். எந்த தேசமாயினும் அதன் கலாசார முக்கியத்துவமானது அரசியல் சுதந்திரத்தையே பொறுத்திருக்கிறது. சுதந்திரமுள்ள தேசம் தன் கலாசார நாகரிகத்தை அபிவிருத்தி செய்து கொள்வது சுலபம். ஆனால் சுதந்திரத்தைப் பறிகொடுத்துவிட்டு, கலாசாரங்களைக் கட்டிக்கொண்டு அழுவதால் அணுவளவு பலனுமேற்படாது. கிரீஸ், இத்தாலி போன்ற தேசங்களே இதற்கு உதாரணம். அவைகள் அரசியல் சுதந்திரம் பெற்ற பின்தான் தங்களுடைய கலாசாரங்களைச் சுலபமாக அபிவிருத்தி செய்து கொள்ள முடிந்தது.

சென்ற யுத்தத்திற்கு முன், ஜெர்மன் நிர்வாகிகள் ஐரோப்பாவில் புதிய பிரதேசங்களை ஆக்கிரமிப்பதற்கான எத்திட்டத்தையும் நிராகரித்துவிட்டனர். அப்போது இங்கிலாந்துடன் ஒப்பந்தம் செய்து கொள்வதும் சாத்தியமாக இருந்தது. ஆனால் நம் நிர்வாகிகள் காலனி, வர்த்தக விஸ்தரிப்புக் கொள்கையில் ஈடுபட்டு இங்கிலாந்தையும் விரோதித்துக் கொண்டதுடன், ருஷியாவின் ஆதரவையும் நாட முற்படவில்லை. துரதிர்ஷ்டம் வாய்ந்த ஹாப்ஸ்பர்க் குடும்பத்தைத் தவிர மற்ற சகலராலும் ஜெர்மன் நிர்வாகிகள் கைவிடப்பட்டு இறுதியாக யுத்தத்தில் தடுமாறி விழுந்தனர்.

நமது வெளிநாட்டுக் கொள்கையானது புத்திசாலித்தனமான ஓர் முறையை ஆதாரமாகக் கொண்டிருக்கவில்லை. இன்று ஐரோப்பாவிலுள்ள பல்வேறு வல்லரசுகளுக்குமுள்ள பரஸ்பர சம்பந்தத்தைப் பாரபட்சமின்றி ஆராய்வோமாயின் கீழ்க்கண்ட விஷயங்கள் தெரிய வரும்.

ஐரோப்பிய நாடுகளுக்குள் பரஸ்பரம் விரோத பாவத்தை நிலைநிறுத்துவதே இங்கிலாந்தின் லட்சியமாக இருந்து வருகிறது. ஐரோப்பா கண்டத்தின் சென்ற முன்னூறு வருஷ சரித்திரமானது, இங்கிலாந்தின் அத்தகைய முயற்சியினாலேயே நிர்ணயிக்கப்பட்டு வந்திருக்கிறது. ஐரோப்பிய நாடுகள் ஐக்கியமடைந்து விட்டால் தனக்கு ஆபத்து நேரக் கூடுமென்பதும் பின்னர் பிரிட்டனின் உலக ஆதிக்கக் கொள்கைக்குப் பாதகமேற்படுமென்பதும் இங்கிலாந்தின் கவலையாகும். மற்றும் ஐரோப்பாவில் மற்ற வல்லரசுகளைவிட எந்த ஒரு வல்லரசும் மேல் ஸ்தானத்திற்கு வந்துவிடாமலிருப்பதற்குற்ற சகல நடவடிக்கைகளையும் எடுத்துக் கொள்வதே. எலிஸபெத் ராணியின் ஆட்சிக் காலத்திலிருந்து பிரிட்டிஷ் ராஜதந்திரிகளின் சம்பிரதாய முறையாக இருந்து வருகிறது. அவசியமாயின், பிரிட்டன் அத்தகைய ஆதிக்கத்தை ராணுவ பலத்தைக் கொண்டு

தகர்க்கவும் தயங்காது. இங்கிலாந்தின் கஷ்டம் அதிகமான போதெல்லாம் ஐரோப்பிய வல்லரசுகளிடையே அரசியல் பிளவுகளை உண்டுபண்ணும் விஷயமாக அதன் முயற்சியும் அதிகமாகியே வந்திருக்கிறது. மற்றும் வட அமெரிக்கக் காலனிகள் அரசியல் சுதந்திரம் பெற்றதிலிருந்து, இங்கிலாந்து அத்தந்திரத்தை பலப்படுத்திக் கொள்ள வேண்டியது அதிக அவசியமாகியது. அக்கொள்கைகளை அனுசரித்தே அது வல்லரசுகளாகச் செய்தது. பிறகு அது பிரான்ஸின் பலம் பெருகிவிடாமல் தடுக்கவும் தன் சக்தி முழுவதையும் உபயோகித்தது. இங்கிலாந்து அஞ்சக் கூடிய நிலைமையிலிருந்த பிரான்ஸின் முதல்தர ராணுவ பலமும் அதனுடன் அழிக்கப்பட்டது.

ஜெர்மனி விஷயத்தில் பிரிட்டிஷ் ராஜதந்திரிகளின் நிலைமை மிகவும் மெதுவாகவே மாற ஆரம்பித்தது. ஜெர்மனியின் தேசிய ஐக்கிய பாவமேற்படாத வரையில் அதனால் இங்கிலாந்திற்கு ஆபத்து எதுவுமில்லை என அவர்கள் கருதினர். தவிர, இங்கிலாந்தில் பொது ஜனங்களின் அபிப்பிராயத்தைத் திடீரென மாற்றுவதென்பதும் முடியாத காரியம். பிரசாரத்தின் மூலம்தான் சிறிது சிறிதாக மாற்றமுடியும். அப்படியானால்தான் பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் தங்களுடைய நோக்கத்தைப் பூர்த்தி செய்து கொள்வதற்குத் தகுதியாக பொதுஜன உணர்ச்சியாகிற ஆயுதத்தை உருவாக்க முடியும்.

*2530 - 31 (1870-71)* லிருந்தே ஜெர்மனி விஷயத்தில் இங்கிலாந்தின் நிலைமையானது மாறத் தொடங்கி விட்டது. அரசியல் துறையிலும் வர்த்தகத் துறையிலும் ஜெர்மனியை உலக முக்கியத்துவம் வாய்ந்த ஒரு வல்லரசாக இங்கிலாந்து கருதியது. கைத்தொழில் துறையிலும் ஜெர்மனி அபார அபிவிருத்தியடைந்ததால், இரு தேசங்களும் ஒரே துறையில் சமமான பலத்துடன் ஒன்றுக்கொன்று போட்டி போட ஆரம்பித்தன. வர்த்தகத்தின் மூலம் உலகில் சமாதான ஆக்கிரமிப்பை அமுலுக்குக் கொண்டு வருவதுதான் அரசியல் ஞானத்தின் உன்னத பீடமென நம் நிர்வாகிகள் அப்போது கருதினர். அதன் விளைவாகத்தான் ஆங்கிலேய ராஜதந்திரிகள் நமக்கு விரோதமாக எதிர்ப்புக் கொள்கையில் ஈடுபட்டனர். அக்கொள்கையை அமுலுக்குக் கொண்டு வருவதற்காக அவர்கள் நிச்சயமான ராணுவ முக்கியத்துவம் பொருந்திய தேசங்களுடன் நட்பு கொண்டனர். ஆனால் ஜெர்மனியில் புரட்சி ஏற்பட்டதும், இங்கிலாந்தின் பயம் அடியோடு தணிந்து, ஜெர்மனியின் உலக ஆதிக்கத்திற்கு இனி இடமில்லை என்ற ஆறுதலும் அதற்கேற்பட்டது.

எனினும் ஐரோப்பிய பூகோள படத்திலிருந்து ஜெர்மனியை

அடியோடு துடைத்து விடுவது இங்கிலாந்தின் நலனுக்கேற்றதல்ல. ஓர் ஐரோப்பிய வல்லரசின் ஆதிக்கத்தைத் தகர்க்க பிரிட்டிஷ் சாம்ராஜ்யமானது 4 1/2 வருஷகாலம் போராடியது. இறுதியில் ஜெர்மனி தோல்வியடைந்ததுடன், உள்நாட்டுப் புரட்சியும் ஏற்பட்டுச் சீர்குலைந்தது. அதன் விளைவாக ஜெர்மனி மறைந்து, ஐரோப்பா கண்டத்தில் பிரான்ஸ் முதல்தர வல்லரசாகியது.

அந்த யுத்தத்தின்போது இங்கிலாந்து ஜெர்மனிக்கு விரோதமாக தன் ஜனங்களின் மிருக உணர்ச்சிகளையும் மாச்சரியங்களையும் தூண்டி விடுவதற்காகச் செய்த பிரசாரம் மலை போன்றதாகும். ஆனால் ஜெர்மனியின் காலனி, பொருளாதார வர்த்தக பலம் அழிக்கப்பட்டதுடன், இங்கிலாந்தின் யுத்த நோக்கங்களும் பூர்த்தியாயின. அதற்கு மேல் ஜெர்மனியின் வீழ்ச்சியை பிரிட்டன் விரும்பவில்லை. ஏனெனில், ஜெர்மனி அடியோடு மறைந்து போவதன் மூலம் இங்கிலாந்தின் விரோதிகள்தான் பலமடைவர். இருந்தாலும் இங்கிலாந்து தன் வெளிநாட்டுக் கொள்கையைத் திடீரென மாற்றிக் கொள்ள முடியாததற்கு பிரிட்டிஷ் பொது ஜன அபிப்பிராயம் ஒரு காரணமென்பதுடன், மற்றொரு காரணமுமிருந்தது. அதாவது மற்ற ஐரோப்பிய வல்லரசுகளின் ராணுவ பலமும், பிரிட்டன் தன் வெளிநாட்டுக் கொள்கையை மாற்றிக் கொள்ள முடியாததற்கு ஒரு காரணம். சமாதான சமரசப் பேச்சுகளை நடத்தும் அதிகாரத்தை பிரான்ஸ் தன் கையிலெடுத்துக் கொண்டது. ஜெர்மனியோ, உள்நாட்டு யுத்தத்தால் சிதைவுற்று, எந்த தேசம் என்ன நிபந்தனை விதித்தாலும் அதற்கு அடிபணியத் தயாராயிருப்பதாகப் பிரகடனம் செய்தது! அதாவது ஜெர்மனியின் ராஜதந்திரிகள் அவ்வாறு பிரகடனம் செய்தனர். உலகில் தற்காப்பு உணர்ச்சியை இழக்கும் ஒரு தேசம், அடிமையாகி ஒரு காலனியின் கதிக்குள்ளாவதைத் தவிர வேறு வழி எதுவும் இல்லையல்லவா?

பிரான்ஸ் முதல்தர வல்லரசாக வருவதை பிரிட்டனால் சகிக்க முடியவில்லை. எனவே பிரான்ஸ் அவ்விதம் வராமல் தடுக்க இங்கிலாந்து சங்கல்பம் செய்து கொண்டது. அதனால்தான் இங்கிலாந்து, பிரான்ஸின் மண்ணாசையில் பங்கு கொள்ள முற்பட்டது.

ஐரோப்பாவில் எந்த வல்லரசுக்கும் முதல்தர ஆதிக்கம் ஏற்பட்டுவிடக் கூடாதென்பது, இன்றும் சரி, என்றும் சரி, இங்கிலாந்தின் உறுதியான சங்கல்பம். ஜெர்மானியர்களிடையே ஐக்கியபாவமேற்பட்டு, ஜெர்மனி சகல ஜெர்மானியர்களுமடங்கிய ஒரு வல்லரசாக உருவாவதை, இன்றும் சரி, என்றும் சரி, பிரான்ஸ் தடுத்தே தீரும். அப்படியானால்தான் அது ரைன் நதியின் இடது கரையை ஆர்ஜிதம் செய்து கொண்டு, ஐரோப்பாவில் தனக்குப்

பாதுகாப்பை ஏற்படுத்திக் கொள்ள முடியும்.

இவ்விஷயங்களை எல்லாம் ஆலோசிக்கும்போது ஜெர்மனி இங்கிலாந்தைத் தவிர வேறெந்த வல்லரசுடனும் ஒப்பந்தம் செய்து கொள்ள வழியிருப்பதாகத் தோன்றவில்லை. இன்றுள்ள நிலைமையில் ஜெர்மனி அழிவது இங்கிலாந்தின் க்ஷேமத்திற்குற்றதல்ல என்பதை நாம் கவனிக்க வேண்டும். அதற்கு மாறாக, பிரான்ஸின் எல்லையற்ற மண்ணாசையை அடக்கவே இனி பிரிட்டிஷார் முயற்சித்து வருவர். எப்போதும் பழைய வருத்தங்களை மனதில் வைத்துக்கொண்டு ஒப்பந்தம் செய்து கொள்வதோ அல்லது செய்து கொள்ளாமலிருப்பதோ தவறு. ஒப்பந்தம் செய்துகொள்வது இரு தேசங்களின் பொதுவான வெற்றி, க்ஷேமம், லாபம் முதலியவைகளைப் பொறுத்த விஷயம். அவ்வித லாபமின்றி, பரஸ்பர நல்லெண்ணத்தினால் மாத்திரம் ஒப்பந்தமேற்படுவது முடியாத காரியம்.

ஜெர்மனியிடம் ஏதாவதொரு தேச ராஜ தந்திரி நட்புப் பாராட்டுவதைக் கொண்டு, நம் தேச ஜனங்களின் க்ஷேமத்திற்குற்ற ஒரு கொள்கையை அவர் ஆதரிப்பாரென நம்பிவிடக் கூடாது. பிரிட்டிஷார் அமெரிக்கர் முதலிய மற்றெந்த தேசத்தினரும் அப்படித்தான். அதுதான் மானிடரின் இயற்கை சுபாவம். பிற தேசத்தின் கொள்கையானது தங்கள் தேசநலனுக்கு முரணாக இராமலிருந்தால்தான், அத்தகையோர் அதை ஆதரிப்பர். முதலில் தங்கள் தேச நலன், பிற தேசத்தினிடம் அனுதாபமென்பது இரண்டாம் பட்சமான விஷயம்தான்.

இறுதியாக நாம் ஒரு விஷயத்தைத் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். அதாவது இன்றும், என்றும் பிரான்ஸ் ஜெர்மனியின் ஜன்ம விரோதியாகவே இருந்துவரும். பிரெஞ்சு அரசாங்கம் ஜனநாயகமாயினும், குடியரசாயினும், பொதுவுடைமையாயினும் அல்லது மற்றெந்த ஆட்சியை ஆதாரமாகக் கொண்டிருப்பினும் அதன் வெளிநாட்டுக் கொள்கையானது ஜெர்மனிக்கு விரோதமானதாகவே இருக்கும். ஜெர்மனியின் ஒற்றுமையைக் குலைப்பதன் மூலமும், ரைன் எல்லையில் பிரதேசங்களை ஆர்ஜிதம் செய்து கொண்டு தன் நிலைமையைப் பலப்படுத்திக் கொள்வதே பிரான்ஸின் கொள்கையாக இருந்து வரும்.

ஜெர்மனி ஓர் உலக வல்லரசாகிவிடுவதை இங்கிலாந்து விரும்பவில்லை. ஆனால் ஜெர்மனி என்ற ஒரு வல்லரசே இருக்கக் கூடாதென்பதுதான் பிரான்சின் விருப்பம். ஜெர்மனி சம்பந்தப்பட்ட வரையில் இங்கிலாந்திற்கும் பிரான்ஸுக்குமுள்ள வித்தியாசம் அதுதான். அது அற்ப சொற்பமான வித்தியாசமல்ல. ஜெர்மனி ஓர் உலக வல்லரசாக வேண்டுமென்பதற்காக இன்று நாம் போராடவில்லை. நம் தேசம் வாழவேண்டும், நம்மிடையே

ஒற்றுமை நிலவ வேண்டும், நம் குழந்தைகளுக்கு உணவு வேண்டும், இவற்றிற்காகவே போராடுகிறோம். இந்நிலையில் நமக்கு ஐரோப்பாவில் இரண்டே நாடுகள்தான் நேச தேசங்களாக இருக்க முடியும். அவை இங்கிலாந்தும் இத்தாலியுமே.

பிரான்ஸின் ராணுவ ஆதிக்கமானது இங்கிலாந்தின் கழுத்திற்குக் கத்தியாக வந்து முடியும். இத்தாலியின் எதிர்காலமானது மத்திய தரைக் கடல் பிரதேசத்தைச் சுற்றிலுமுள்ள அரசியல் நிலைமையையே பொறுத்ததாக இருக்கும். ஐரோப்பாவில் பிரான்ஸுக்கு ஆதிக்கமேற்படுவது இத்தாலியின் எதிர்கால க்ஷேமத்திற்கு உகந்ததல்ல. ஆனால் இங்கிலாந்து, இத்தாலி இவ்விரு நாடுகளின் இயற்கை நலன்கள் ஜெர்மனியின் வாழ்விற்கு முரணானவையல்ல, அதற்கு மாறாக அவை ஜெர்மனியின் நலன்களை அனுசரித்தவையே.

ஆனால் இன்றுள்ள ஜெர்மனியுடன் எந்த நாடும் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ளுவது சாத்தியமா? பல வருஷங்களாக மகா துக்ககரமான தங்களுடைய திறமையின்மையையும், கோழைத்தனத்தையும் காட்டி வந்துள்ள தலைவர்களடங்கிய ஓர் அரசாங்கத்துடன் எந்த தேசந்தான் ஒப்பந்தம் செய்து கொள்ள முன்வரும்? தங்கள் வாழ்வையே சீர்படுத்திக் கொள்ள சக்தியற்ற ஒரு தேசத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு மற்றொரு தேசம் என்ன பலனையடைய முடியும்? வெளிநாடுகளிடம் அடிபணிந்து பல்லைக் காட்டியும், உள்நாட்டில் தேசிய உணர்ச்சி சூன்யமாயும் இருந்துவரும் ஒரு நாட்டுடன் மற்றொரு நாடு ஒப்பந்தம் செய்து கொள்வது எதற்காக? இருப்பதற்கா அல்லது இறப்பதற்கா? மார்க்ஸ் கட்சி உபதேசங்களால் கண்ணிழந்து தவிக்கும் ஜனங்களடங்கிய ஒரு தேசத்துடன், தன் சொந்த ஜனங்களுடைய நலன்களுக்கே துரோகம் செய்யும் ஒரு தேசத்துடன், மற்றெந்த தேசந்தான் உறவு கொண்டாட முன்வரும்? அத்தகைய தேசத்துடன் சேர்ந்து பொது க்ஷேமத்திற்காகவும், நலன்களுக்காகவும் போராடுவது சாத்தியமா? அவ்வித ஒரு தேசத்துடன் செய்து கொள்ளப்படும் ஒப்பந்தத்தை வேறெந்த நாடாவது மதிக்குமா? எனவே சுயமதிப்புள்ள எந்த வல்லரசும் இன்றைய ஜெர்மனியுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள விரும்பாது.

இரண்டாவதாக, நமக்குப் பகையாக இருந்து வந்த நாடுகள் நம்மைக் கொள்ளைக்காரர்களென்றும், கொடியர்களென்றும் பல வருஷங்களாகப் பிரசாரம் செய்து வந்திருப்பதால், திடீரென நாம் நல்லவர்களாகி விட்டோமென அவை தங்கள் ஜனங்களிடம் கூறுவதென்பதும் முடியாத காரியம்!

மூன்றாவதாக, ஒரு முக்கிய விஷயத்தில் நாம் கவனம் செலுத்த வேண்டியதவசியம். ஏனெனில் ஐரோப்பாவில்

ஏற்படக்கூடிய எதிர்கால ஒப்பந்தங்களையொட்டி இவ்விஷயம் முக்கியமானதாகும். அதாவது அரசியல் ரீதியாகக் கவனிக்குமிடத்து, ஜெர்மனிக்கு மேற்கொண்டு அழிவேற்படுவது பிரிட்டிஷ் நலனுக்குற்றதல்ல. ஆனால் ஜெர்மனி அழிவது, சர்வதேச நாணய 'நிர்வாக' கர்த்தாக்களான யூதர்களின் நலனுக்கு இன்றியமையாததாகும். பொருளாதாரத் துறையில் ஜெர்மனி அடியோடு அழிய வேண்டும். அரசியல் துறையில் அது பரிபூரண அடிமையாக இருக்க வேண்டும். இதுதான் யூதர்களின் அபிலாஷை. வெளிநாட்டின் உதவியின்றி, யூதர்கள் ஜெர்மனிக்கு விரோதமாக எங்கு எதிர்ப்பு ஏற்பட்டாலும், அதற்குக் காரணஸ்தர் யூதக் கிளர்ச்சிக்காரராகவே இருப்பர். அதனால்தான் சமாதான காலத்திலும் சரி, யுத்த காலத்திலும் சரி, யூதர் - மார்க்ஸ் கட்சிப் பத்திரிகைகள் ஜெர்மனிக்கு விரோதமாக இடைவிடாது துவேஷ உணர்ச்சியைத் தூண்டிவிட்டுக் கொண்டே வந்தன. பல தேசங்களும், தங்கள் சொந்த ஜனங்களின் உண்மையான நலன்களுக்கு முரணாக இருந்தும்கூட, தங்களுடைய் நடுநிலைமைக் கொள்கையைக் காற்றில் பறக்கவிட்டு, ஜெர்மனிக்கு விரோதமாக ஒன்று சேர்ந்தன.

ஜெர்மனியில் தேசீய உணர்ச்சியை நசுக்கி, பின்னர் உலக ஆக்கிரமத்தில் ஈடுபட வேண்டுமென்பதே யூதர்களின் நோக்கம். அவர்களிடம் நம் தேசமும், ஜனங்களும் இரையாகிவிடும் பட்சத்தில், பின்னர் உலகம் முழுவதும் அந்த ராக்ஷசர்களின் ஆதிக்கமேற்படுவது வெகு சுலபம். அதற்கு மாறாக, அவர்களுடைய பிடியிலிருந்து நம் தேசம் விடுதலை பெறுமாயின், பின்னர் உலகையே பீடிக்கும் ஒரு பெரும் ஆபத்து தவிர்க்கப்பட்டு விடும்.

யூதர்கள் ஒவ்வொரு நாட்டிலும் ஜெர்மனி மீது துவேஷம் உண்டாகும்படி தூண்டி வருகிறார்கள். இங்கிலாந்திலிருந்தும், இத்தாலியிலும் அவர்களின் முயற்சி வெற்றி பெறவில்லை. ஆனால் பிரான்ஸில் அவர்களுடைய முயற்சி வெற்றி பெற்றிருப்பதால் பிரான்ஸ் இன்றும், என்றும் ஜெர்மனியின் ஜன்ம சத்துருவாகி இருந்து வருவதைத் தவிர வேறு வழியில்லை. யுத்தத்திற்குப் பின் ஜெர்மனியின் வெளிநாட்டுக் கொள்கையும் யூதர்களின் நோக்கத்திற்கு உகந்தாற்போல் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றது. பிரான்ஸிடம் ஜெர்மன் தலைவர்கள் வாலைக் குழைத்து பல்லைக் காட்டிப் பணிந்து வருகின்றார்கள். நிற்க, கடவுளின் சந்நிதானத்தில் நின்றுகொண்டு கதறுவதாலோ, அல்லது சர்வதேச சங்கத்தில் நம்பிக்கை வைப்பதாலோ, ஜெர்மனி தான் இழந்த பிரதேசங்களை மீண்டும் பெற முடியாது. ஆயுத பலத்தினால் மாத்திரமே அவைகளை மீண்டும் பெற முடியும். எனினும் ஆயுதத்தைக் கையிலேந்த யார் தயாராயிருக்கிறார்கள்

என்பதே இப்போது கேள்வியாகும். பார்லிமெண்டு பிருகஸ்பதிகள் எவ்வளவு கூக்குரலிட்டாலும், தெற்கு டைரலையோ* அல்லது மற்ற பிரதேசங்களையோ திரும்பப் பெற்றுவிட முடியாது. இதை, பார்லிமெண்டு அங்கத்தினர்களும் அந்தரங்கத்தில் அறிவர். இப்போது அவர்கள் தீட்ட வேண்டியது தங்களுடைய நாக்குகளையல்ல, நாக்குகளைத் தீட்டுவதால் இழந்த இடங்களை மறுபடியும் பெற முடியாது. அதற்குக் கத்திகளைத் தீட்டியாக வேண்டும், ரத்தத்தையும் சிந்தியாக வேண்டும்.

ஜெர்மனி சென்ற யுத்தத்திற்கு முன் செய்த தவறுகளை மீண்டும் செய்துவிடக் கூடாது. அதாவது முழு உலகையும் தனக்கு விரோதியாக்கிக் கொண்டுவிடக் கூடாது. முதலில் தனக்கு பரம விரோதி யாரென்பதை நன்கு அறிந்துகொண்டு, அந்த விரோதியைத் தோற்கடிக்கத் தன் முழு பலத்தையும் உபயோகிக்க வேண்டும். இழந்த மாகாணங்களை மீண்டும் பெறுவதற்குப் பூர்வாங்கமாக தாய்நாட்டின் அரசியல் சுதந்திரத்தையும், பலத்தையும் புனருத்தாரணம் செய்ய வேண்டும். புத்திசாலித்தனமான ஒப்பந்தங்கள் செய்து கொள்வதன் மூலம் அத்தகைய சுதந்திரத்தை, சாத்தியமானதாகச் செய்து கொள்ள வேண்டும்.

வர்செயில்ஸ் உடன்படிக்கையை, மீண்டும் ஜெர்மானியர்கள் துடித்தெழும்படியான ஒரு சாட்டையைப் போல் உபயோகித்திருந்தால், இன்று ஜெர்மன் ஜனங்களின் நிலைமை முற்றிலும் வேறுவிதமாக இருக்கும். ஆனால் ஜெர்மன் அரசாங்கம் அதை அவ்விதம் உபயோகிக்கத் தவறிவிட்டது. வர்செயில்ஸ் உடன்படிக்கை ஜெர்மனியைக் கொள்ளையிடும் ஒரு கருவி, அதனால் நம் நாட்டிற்கேற்பட்ட அவமானம் சகிக்க முடியாது. அந்த உடன்படிக்கையின் ஒவ்வோர் அம்சத்தையும் கொண்டு ஜனங்களின் மனதில் கோபாக்கினியைத் தூண்டி, அதன் மூலம் ஜனங்களின் மனதில் ஏகோபித்த உறுதியாகிற ஓர் எஃகு ஈட்டியை உருவாக்கியிருக்கலாம். உற்ற பிரசாரத்தின் மூலம், உணர்ச்சியற்ற கோழையையும் குதித்தெழும்படி செய்திருக்கலாம். ஆனால் அத்தகைய அபூர்வமான சந்தர்ப்பங்களெல்லாம் நழுவவிடப்பட்டன. ஜனங்கள் சோர்வடைந்து சகிக்க முடியாத நஷ்டத்திற்கும், அவமானத்திற்கும் உட்பட்டு வருகையில்,

---

*தெற்கு டைரல் சென்ற மகா யுத்தத்திற்கு முன் ஆஸ்திரியாவிற்குச் சொந்தமாயிருந்தது. 2579ல் அதை இத்தாலி இணைத்துக் கொண்டது. பின்னர் இத்தாலியிடம் தமக்குள்ள நட்பை அனுஷ்டானபூர்வமாகத் தெரிவிப்பதற்காக ஹர் ஹிட்லர் அப்பிரதேசத்தில் ஜெர்மானியர்களுக்குள்ள உரிமையை விட்டுவிட்டார்.

அரசாங்கம் கையைக் கட்டிக் கொண்டு வாளாவிருந்தது. சாட்டையடிபட்டும் எஜமானன் கையை நக்கும் ஒரு நாயைப் போல் உலகம், இன்று ஜனங்களை மதிப்பதில் ஆச்சரியமென்ன இருக்கிறது? எட்டு வருஷ காலமாக நசுக்கப்பட்டுக் கிடந்த நம் ஜனங்களிடையே, இன்று சுதந்திர மூச்சு ஓடுகிறதாவென்பதே சந்தேகமாக இருக்கிறது! நம் நாடு பிற நாடுகளுடன் ஒப்பந்தம் செய்து கொள்வதாயின், தன் கௌரவத்தை மீண்டும் நிலைநிறுத்த வேண்டும்; தேச ஜனங்களின் ஏகோபித்த அபிப்பிராயத்தைப் பிரதிபலிக்கும் அதிகாரத்துடன் கூடிய ஓர் அரசாங்கம் ஏற்பட வேண்டும்.

ஜெர்மனிக்கு விரோதமாக நடந்த கடுமையான பிரசாரத்தினால் ஜெர்மனி மீது துவேஷங்கொண்டுள்ள நாடுகளின் மனதை மாற்றுவது, அத்தகைய நாடுகளுடன் ஒப்பந்தம் செய்து கொள்வதற்கு அனுகூலமாய் இருக்கும். அவ்விதம் மனதை மாற்ற வேண்டுமாயின், ஜெர்மன் அரசாங்கமும், ஜனங்களும் ஐக்கிய பாவத்துடன் அம்முயற்சியில் ஈடுபட வேண்டும். பொது நலன்களுக்காகப் போராடுவதற்குற்ற பலம் பொருந்திய ஒரு நாட்டுடன்தான் இதர நாடுகள் ஒப்பந்தம் செய்துகொள்ள முன்வருமேயன்றி, உள்நாட்டுப் புரட்சியினாலும், கோழைத்தனத்தினாலும் சீர்குலைந்து சோர்வுற்றுக் கிடக்கும் ஒரு நாட்டுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள எந்த நாடும் உற்சாகம் கொள்ளாது. மற்றும் காரணமின்றி பிற நாடுகளைக் கண்டித்துக் கூக்குரலிடும் வழக்கத்தையும், கூட்டம் போடும் வழக்கத்தையும், வாய் வீச்சுத் தலைவர்கள் கைவிட்டுவிட வேண்டியதும் அவசியம்.

இவ்விஷயமாகவும் தேசீய அபேதவாதக் கட்சியினர் நிறைவேற்ற வேண்டிய ஒரு கடமையுள்ளது. அதாவது சிறிய விஷயங்களை விட்டுவிட்டுப் பெரிய விஷயங்களில் கவனம் செலுத்தும்படி நம் ஜனங்களுக்குக் கற்பிக்க வேண்டும். முதல்தர முக்கியத்துவமற்ற விஷயங்களில் அவர்கள் தங்களுடைய சக்தியை வீணாக்கக் கூடாது. நம் ஜனங்களின் வாழ்விற்காக நாம் ஒருநாள் போராட வேண்டியிருக்கும் என்பதையும், நாம் அவ்விதம் வாழ முடியாது நம்மைக் கொள்ளையிட்டு வரும் வல்லரசைத் தவிர வேறெவரும் நமக்கு விரோதியல்ல என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது.

மகத்தான பல சுமைகளை நாம் தாங்கும்படி நேரலாம். எனினும் அதற்காக நாம் பகுத்தறிவிற்கு முரணாக நடந்து கொள்வதோ, உலகத்தை எல்லாம் எதிர்த்துக் கூக்குரலிடுவதோ கூடாது. அவ்விதம் செய்வதை விடுத்து, மகத்தான விரோதிக்கெதிராக நம்முடைய முழு சக்தியையும் உபயோகிக்க வேண்டும். மற்றும் நம் தேசத்தை விற்று, துரோகம் செய்தவர்களை வழிக்குக் கொண்டு

வராதிருக்கும் வரையில், உலகத்திலுள்ள மற்ற நாடுகளின் மீது புகார் கூற ஜெர்மானியர்களுக்கு உரிமையில்லை. அவ்விதமின்றி இங்கிலாந்து மீதும் இத்தாலி மீதும் நீண்ட தூர வாய் பீரங்கிப் பிரயோகம் செய்வது அர்த்தமற்ற காரியம். நாம் இங்கிலாந்துடன் ஒப்பந்தம் செய்து கொள்ளக் கூடாது. ஏனெனில் அது நம்முடைய காலனிகளைக் கொள்ளையிட்டது. இத்தாலியுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளக் கூடாது, அது தெற்கு டைரலைக் கைப்பற்றிக் கொண்டது. போலந்துடனும், செக்கோஸ்லோவியாவுடனும் ஒப்பந்தம் செய்து கொள்ளக் கூடாது. இவ்விதம் கூறிக்கொண்டே போனால் மீதியிருப்பது பிரான்ஸ்தான். பிரான்ஸோ மற்றும் பல பிரதேசங்களுடன் அல்ஸேஸ், லாரெயின் முதலியவைகளை நம்மிடமிருந்து கொள்ளையிட்டது. ஆகவே பிரான்ஸுடன் ஜெர்மனி ஒப்பந்தம் செய்து கொள்ளலாமென யாராவது கூறுவாராயின் ஒன்று அவர் மடையராக இருக்க வேண்டும், அல்லது ஓர் அயோக்கிய சிகாமணியாக இருக்க வேண்டும்.

இதுவரை நம் விரோதிகளாயிருந்திருப்பினும், எதிர்காலத்தில் நம்முடன் ஐக்கிய பாவமுள்ள நலன்களை உடைய நாடுகளில், நம் விஷயமாக பொதுஜன உணர்ச்சியை மாற்ற வேண்டும்.

ஜெர்மனியை அடியோடு அழித்துவிட பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் விரும்பவில்லை. ஆனால் பிரிட்டனிலுள்ள யூதர் கூட்டமோ, ஜெர்மனி அழிய வேண்டுமென விரும்புகிறது. அவ்விதமாக பிரிட்டிஷ் ராஜதந்திரிகளுக்கும் யூதர் கூட்டத்திற்கும் உள்ளூர தகராறு இருந்து வருகிறது. இறுதியில் யார் வெற்றி பெறுவார்களென்பது பற்றி அதற்குள் எதுவும் கூறுவதற்கில்லை. ஆனால் இத்தாலியில் யூதர்களின் சூழ்ச்சி பலிக்கவில்லை. யூதர் ஆதிக்கத்தை வளர்க்கக் கூடிய விபரீத சங்கங்களையும் இத்தாலியர்கள் தடுத்துவிட்டனர்.

பிரிட்டிஷ் ராஜதந்திரிகளுக்கும் யூதர்களுக்குமுள்ள தகராறு சென்ற யுத்தத்திற்குப் பின் நிதர்சனமாகத் தெரிந்தது. அதாவது நிப்பொனியப் பிரச்னை விஷயமாக பிரிட்டிஷ் ராஜதந்திரிகளின் போக்கு ஒருவிதமாக இருந்தது, ஆனால் பிரிட்டிஷ் பத்திரிகைகளின் போக்கோ அதற்கு நேர்மாறாக இருந்தது.

யுத்தம் நின்றதும் அமெரிக்காவிற்கும் நிப்பொனுக்குமுள்ள பழைய விரோதம் மீண்டும் தலைகாட்ட ஆரம்பித்தது. சர்வதேச பொருளாதார, அரசியல் துறைகளில் அமெரிக்காவின் செல்வாக்கு அதிகமாகி வந்தது, இங்கிலாந்துக்குப் பொறாமையையும், கலக்கத்தையும் உண்டுபண்ணியது. அதாவது தாயின் ஸ்தானத்தில் மகள் (அமெரிக்கா) உலகத்தின் புதிய எஜமானியாகி வருவது போல் தோன்றியது!

நிப்பொனுடன் பிரிட்டன் ஒப்பந்தம் செய்து கொள்ளுவதையும் யூதப் பத்திரிகைகள் எதிர்த்தன. பொதுஜன அபிப்பிராயத்தைத் தங்கள் நோக்கத்திற்கிணங்க உருவகப்படுத்துவதில் யூதர்கள் பலே சூரர்களாக இருந்து வருகிறார்கள். பழைய ஏற்பாட்டில்* குறிப்பிட்டுள்ள கட்டளைப்படி உலகிலுள்ள மற்ற நாடுகளை எல்லாம் தாங்கள் பட்சணம் செய்துவிட முடியுமென்பது பெரிய யூதத் தலைவர்களின் நம்பிக்கை. ஒரே ஒரு தேசம், தன் சொந்த பலத்தையும் பெருமையையும் இழந்து விடாதிருந்தால்கூட, மற்றக் கொடுமைகளைப் போல யூதர் கொடுமையும் அதற்கு அடங்கியே தீர வேண்டியிருக்கும்.

ஐரோப்பிய தேசங்களிலெல்லாம் ரத்தக் கலப்பை உண்டுபண்ணி அவைகளைத் தங்களிஷ்டப்படி ஆட்டி வைக்க முடியுமென்பதையும், ஆனால் நிப்பொன் போன்ற தேசிய உணர்ச்சியுள்ள ஆசியா நாட்டிடம் தங்கள் சூழ்ச்சி பலிக்காதென்பதையும் யூதர்கள் அறிவர். இன்று யூதர்கள் ஜெர்மானியர் போன்றும், ஆங்கிலேயர் போன்றும், அமெரிக்கர் போன்றும், பிரெஞ்சுக்காரர் போன்றும் வேஷம் போட முடியும். ஆனால் நிப்பொனியரைப் போல் வேஷம் போட முடியாது. அதனால்தான் அவர்கள் மற்ற நாடுகளைத் தூண்டி வருகின்றனர். இன்று இங்கிலாந்தில் யூதர்களின் போக்கானது, அத்தேச சர்க்காருக்கு விரோதமாக இருந்து வருகிறது. உலக ஆபத்தான யூதப் பூண்டிற்கு எதிராக அங்கும் போராட்டம் ஆரம்பமாகும் ஒரு காலம் வருமென்பதில் சந்தேகமில்லை.

தேசிய அபேதவாதக் கட்சியினர் எதிர்காலத்தில் சமாளிக்க வேண்டிய கடமை மகத்தானதாகும். நம் தேசத்தில் நமக்கு ஜன்ம விரோதி யாரென்பதை நாம் தெரிந்து கொண்டுள்ளோம். அவரை எதிர்த்து நாம் செய்யும் போராட்டமானது, மற்ற நாடுகளுக்கு வழிகாட்டக்கூடிய ஒரு கலங்கரை விளக்காக இருக்க வேண்டும்.

ஆகையால், பகுத்தறிவு நமக்கு உற்ற துணையாகவும், மனோபலம் நமது சக்தியாகவும் இருக்குமாக, நமது தெய்வீகமான கடமையானது நமக்கு மனோ உறுதியை அளிக்குமாக, நமது தளரா நம்பிக்கையானது நமக்குச் சிறந்த பாதுகாப்பாய் அமையுமாக.



*கிறிஸ்துவ வேதமான பைபிள், பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு என இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பழைய ஏற்பாட்டில் காணப்படும் உண்மையையே ஹிட்லர் குறிப்பிட்டுள்ளார்.

# 14. கிழக்கு ஐரோப்பாவில் ஜெர்மனியின் கொள்கை

ருஷியா விஷயமாக ஜெர்மனியின் நிலைமை பற்றி நான் பிரத்தியேகமாகப் பரிசீலனை செய்வதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. 1. ஜெர்மனியின் வெளிநாட்டுக் கொள்கையை நிர்ணயிக்கும் விஷயத்தில் அதுதான் மிகவும் முக்கிய அம்சமாக இருக்கும். 2. அவ்விஷயமாக முடிவு செய்யப்படும் பிரச்னைதான். தெளிவாக சிந்திக்கவும், சரியான முறையில் நடந்து கொள்ளவும் தேசீய அபேதவாத இயக்கத்திற்குள்ள அரசியல் திறமையைச் சோதிக்கும் ஓர் உறைகல்லாக இருக்கும்.

தேசத்திலுள்ள ஜனங்களின் வாழ்க்கைக்குப் பாதுகாப்பளிப்பதே ஜன அரசாங்கத்தின் வெளிநாட்டுக் கொள்கையாக இருக்க வேண்டுமென்பதை முதலில் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். அத்தேச ஜனத்தொகைக்குற்றவாறு அதன் விஸ்தீரணமும், வசதிகளுமிருக்க வேண்டும். அதாவது ஜனங்களின் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான சகல சாதனங்களும் அத்தேசத்திலேயே உற்பத்தியாக வேண்டும். அவ்விதம் வசதியிராத நிலைமையானது பல நூற்றுக்கணக்கான வருஷங்களோ அல்லது ஆயிரம் வருஷங்களோ நீடித்து வந்திருப்பினும் அது ஆரோக்கியமற்ற, அதிருப்திகரமான ஒரு நிலைமைதான். அதன் காரணமாக ஒரு நாட்டின் ஜனங்கள் சீக்கிரமாகவோ அல்லது காலங்கடந்தோ, வளர்ச்சி குன்றும்படியோ அல்லது அழியும்படியோ நேர்ந்தே தீரும். எனவே ஜனங்களின் சுதந்திர வாழ்விற்குப் போதிய அளவு பிரதேசமிருக்க வேண்டியது அத்தியாவசியம்.

உணவுப் பொருள்கள், மூலப் பொருள்கள், இவைகளின் உற்பத்தியை ஆதாரமாகக் கொண்டு கவனித்தாலும், ஒரு தேசத்தின் விஸ்தீர்ணம் மிகவும் முக்கியத்துவம் பொருந்தியதாகும். தங்கள் தேசீய எல்லைக்குள் உற்பத்தியாகும் சாதனங்களைக் கொண்டு தங்கள் வாழ்க்கையை நடத்தலாம் என்ற நிலைமை ஏற்பட்டபின்தான், அவர்கள் அப்பிரதேசத்தை எவ்விதம் பாதுகாத்துக் கொள்வதென்பது பற்றி ஆலோசிக்க வேண்டும். ஒரு தேசத்தின் பாதுகாப்பு, அதன் அரசியல் பலத்தையும், அரசியல் பலமானது ராணுவ பலத்தையுமே பொறுத்திருக்கிறது.

ஜெர்மனி ஓர் உலக வல்லரசாக இருப்பதன் மூலம்தான் அதன் எதிர்கால வாழ்க்கைக்கு உத்தரவாதமேற்படும். சற்றேறக்குறைய இரண்டாயிரம் வருஷங்களாக ஜெர்மனியின் தற்காப்பு

விஷயமானது உலக சரித்திரத்தில் இடம் பெற்று வந்திருக்கிறது. 2574 - 78ல் (1914 - 18) நடந்த யுத்தம், இவ்வுலகில் தாங்கள் வாழவேண்டும் என்பதற்காக ஜெர்மன் ஜனங்கள் ஈடுபட்டபோது அது ஓர் உலக வல்லரசாக இருந்து வந்திருக்குமாயின், யுத்தம் நமக்குச் சாதகமாக முடிந்திருக்கும்.

ஜெர்மனி இன்று ஓர் உலக வல்லரசல்ல. தற்போதைய ராணுவ பலவீனத்தை அது சீர்படுத்திக் கொள்ளலாமெனினும், அப்போதும் கூட அது ஓர் உலக வல்லரசாக முடியாது. ஜனத் தொகைக்கும் தேச விஸ்தீர்ணத்திற்கும் இவ்வளவு வித்தியாசமுள்ள ஒரு தேசத்திற்கு உலகில் என்ன முக்கியத்துவம் இருக்க முடியும்? பல தேசங்கள் பெரிய கண்டங்களையே ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும்போது, மிகச் சிறிய தேசமான ஜெர்மனி ஒரு உலக வல்லரசாக விளங்குவது எவ்வாறு சாத்தியம்?

உலக வல்லரசுகளென கூறப்படும் மற்ற நாடுகளுடன் ஒப்பிடும்போது, ஜெர்மனியின் விஸ்தீர்ணம் மிகக் குறைவு. உதாரணமாக, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் விஸ்தீர்ணம் உலகில் நான்கில் ஒரு மடங்கு இருக்கிறது. அமெரிக்கா, ருஷியா, சீனா முதலியனவும் பிரமாண்டமானவை. அந்நாடுகளில் சில ஜெர்மனியைப் போல் பத்து மடங்கிற்கு மேலும் பெரியவை. பிரான்ஸும் பெரிய சாம்ராஜ்யமே. பிரான்ஸ், தன் சாம்ராஜ்யத்திலிருந்து நிற மனிதர்களையும் துருப்புகளாகச் சேர்த்து வருவதால், கூடிய சீக்கிரம் ஐரோப்பிய பூமியில் ஓர் ஆப்பிரிக்க ராஜ்யம் ஏற்பட்டாலும் ஏற்படலாம். தற்போதைய முறையை பிரான்ஸ் தொடர்ந்து அனுஷ்டித்து வருமாயின், அடுத்த முந்நூறு வருஷங்களில், பிரெஞ்சு இரத்தமே மறைந்து பிரெஞ் சுக்காரர்கள் ஐரோப்பிய ஆப்பிரிக்களர்களாகி விடுவார்கள். பின்னர் ரைனிலிருந்து காங்கோ வரையில் அவர்களுடைய சாம்ராஜ்யம் பலமடைந்துவிடும். ஆனால் பழைய ஜெர்மனி அனுஷ்டித்து வந்த காலனி கொள்கையோ முற்றிலும் வேறாகும்.

2000 வருஷங்களுக்கு முன் ஜெர்மன் ஜனத்தொகைக்கும் தேச விஸ்தீர்ணத்திற்கும் திருப்தியற்ற வித்தியாசமிருந்தது. இன்றைய நிலைமையும் அவ்விதமேதான் இருக்கிறது. நம் தேச விஸ்தீர்ணம், ஜனத்தொகை இவைகளுக்குச் சிறிதும் சம்பந்தமோ, பொருத்தமோ இல்லை. இவ்வுண்மையை உணர்ந்து அதற்குற்றவாறு நடந்து கொண்டாலன்றி, நம் இயக்கத்திற்கு எதிர்காலத்தில் பெருமை கிடைக்காது. ஜனங்களுக்குத் தொண்டு செய்யும் தெய்வீகமான கடமையில், தேசீய அபேதவாத இயக்கமானது தன் முழு கவனத்தையும் செலுத்தி வந்ததென்ற பெருமையை நம் தேச சரித்திரத்தை எழுதும் எதிர்கால சரித்திராசிரியர்கள் நமக்கு அளிக்க வேண்டுமாயின், மற்ற தேசங்களுடன் ஜெர்மனியை

ஒப்பிட்டுப் பார்த்து, நம் தேசத்தின் உண்மை நிலைமையை தேசீய அபேதவாதக் கட்சியினர் உணர்ந்து கொள்ள வேண்டும். எல்லைக் கட்டுப்பாடே இன்று நம் தேசத்தின் சாபக்கேடாக இருந்து வருகின்றது. துருப்பிடித்துப் போன சம்பிரதாயத்தையும், எண்ணங்களையும் மறந்தும் நம் இயக்கமானது தைரியத்துடன் நம் தேசீய சக்திகளை உருவாக்கி, புதிய பிரதேசங்களையும் ஆக்கிரமிக்க முற்பட வேண்டும்.

ஜனத்தொகைக்குற்றவாறு தேச எல்லையை விஸ்தரிக்க நம் இயக்கம் முயற்சிக்க வேண்டும். நம் ஜீவனத்திற்கோ அல்லது அரசியல் பலத்திற்கோ அதுதான் முக்கியம். ஆஹா! நமது புராதனப் பெருமை என்ன, இன்றுள்ள மோசமான நிலைமை என்ன? நாம் மீண்டும் பெருமையுடன் விளங்க வேண்டுமாயின், இப் பூவுலகிலேயே நாம்தான் உயர்ந்த வர்க்கத்தினரென்ற உண்மையை மறந்துவிடக் கூடாது. அவ்வுணர்ச்சி ஜெர்மன் ஜனங்களிடையே பூர்ணமாக ஏற்படும்படி செய்ய வேண்டியதும் நமது மகத்தான கடமை. உயர்ந்த ஜாதி நாய்கள், குதிரைகள், பூனைகள் இவைகளின் உற்பத்தியில் மாத்திரம் ஜெர்மன் ஜனங்கள் சிரத்தை காட்டுவது போதாது; தங்கள் குலத்தின் இரத்தம் பரிசுத்தமாக இருந்துவரும் விஷயத்திலும் சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

இதுவரை ஜெர்மனி அனுஷ்டித்து வந்துள்ள வெளிநாட்டுக் கொள்கை, லட்சியம் மற்றும் பிரயோஜனமின்றியுமிருந்து வந்திருக்கிறது. அக்கொள்கை படுதோல்வி அடைந்ததே அப்புகாரை நிதர்சனமாக நிரூபித்திருக்கின்றது.

ஜெர்மனியின் பலம் சம்பந்தப்பட்ட வரையில், வெறும் தோற்றங்களைக் கண்டு நாம் மயங்கிவிடக் கூடாது. நம் தேசத்தை மற்ற நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். அவ்விதம் பார்க்குமிடத்து, விஸ்தீர்ணத்தில் மாத்திரமல்ல, ஜனத்தொகையில் கூட ஜெர்மனி மிகவும் பின்தங்கிவிட்டது. தைரியத்தில், உலகிலுள்ள வேறெவரும் ஜெர்மன் ஜனங்களை மிஞ்ச முடியவில்லை என்பது உண்மையே. மற்றும் தங்கள் வாழ்விற்காக மற்றெந்த தேசத்தையும் காட்டிலும் ஜெர்மனி அதிக இரத்தம் சிந்தியிருக்கிறதென்பதும் உண்மையே. அப்படியிருந்தும் நம் தோல்விக்குக் காரணமென்ன? நம் தைரியமானது உற்ற வழியில் உபயோகிக்கப்படாததுதான்.

சென்ற ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாக ஜெர்மனி பல்வேறு அரசியல் மாறுபாடுகளுக்குள்ளாகி இருக்கிறது, எண்ணிக்கையற்ற யுத்தங்களுக்கும் ஆளாகியிருக்கிறது. அவைகளால் ஏற்பட்ட நிரந்தரமான பலன் என்னவென்பதை ஆராய்வோமாயின், மூன்றே மூன்று அரசியல் நிகழ்ச்சிகளைத் தவிர வேறெதுவுமில்லை என்பது தெரிய வரும்.

1. கிழக்கு எல்லை ஸ்தாபனம்.*

2. எல்பிக்குக் கிழக்கேயுள்ள பிரதேசத்தை ஆக்கிரமித்து ஸ்தாபித்தது.

3. பிராண்டன்பர்க் - ப்ரஷ்ய ஸ்தாபனம். இந்த ராஜ்ய ஸ்தாபன கர்த்தாக்கள் ஜெர்மன் சக்ரவர்த்திகளே. அதுதான் புதிய ஜெர்மனிக்கு ஒரு முன்மாதிரியாக அமைந்தது.

ஜெர்மன் வெளிநாட்டுக் கொள்கையின் மகத்தான வெற்றிகளே முதலில் கூறப்பட்ட இரண்டு நிகழ்ச்சிகள். அவை நிகழ்ந்திராவிடில், இன்று உலகில் ஜெர்மானியர் இருக்குமிடமே தெரியாது. ஜனத்தொகை பெருகுவதற்குற்றவாறு தேச விஸ்தீர்ணத்தையும் பெருக்க வெற்றிகரமாக நடந்த முயற்சிகள் அவைதான். ஆனால் அச்சம்பவங்களில் உண்மையான கருத்தை ஜெர்மன் சரித்திராசிரியர்கள் அறிந்து கொள்ளவேயில்லை.

மூன்றாவதாக, மகத்தான ப்ரஷ்ய ராஜ்ய அமைப்பேயாகும். ஜெர்மன் ராணுவத்தில் தேசீயப் பாதுகாப்பு உணர்ச்சியையுண்டு பண்ணியது ப்ரஷ்ய ராஜ்யம்தான்.

தேசீய அபேதவாதிகளின் வெளிநாட்டுக் கொள்கையானது, ஜனத்தொகைக்குற்றவாறு புதிய பிரதேசங்களை ஆர்ஜிதம் செய்து கொள்வதாக இருக்க வேண்டும். ஜெர்மனி எதிர்காலத்தில் தலைதூக்க வேண்டுமாயின், 2574ம் (1914) வருஷம் ஜெர்மனிக்குச் சொந்தமாக இருந்த எல்லைகள் சிறிதும் ஏற்றவையல்ல. அவைகளால் அப்போது ஜெர்மனியைக் காப்பாற்ற முடியவில்லை. எதிர்காலத்திலும் அவைகளால் ஜெர்மனியின் தற்காப்பிற்கு எவ்வித உத்தரவாதமுமேற்பட முடியாது. ராணுவ ரீதியாகவும் அந்த எல்லைகளால் ஜெர்மனிக்கு எத்தகைய நன்மையுமில்லை.

இவ்வுலகில் ஜெர்மன் ஜனங்களின் வாழ்விற்கு அவசியமான பிரதேசங்களை ஆர்ஜிதம் செய்து கொள்வதே தேசீய அபேத வாதிகளின் வெளிநாட்டுக் கொள்கையாக இருக்க வேண்டும். அதை நிறைவேற்றுவதற்காக மாத்திரம்தான் நம் ஜனங்கள் மீண்டும் இரத்தம் சிந்துவது கடவுளுக்கும், நம் சந்ததிகளுக்கும் நியாயமாகத் தோன்றும். தினசரி ஜீவனத்திற்குப் போராடும் உத்தியோகத்திற்காக

---

*'கிழக்கு எல்லை' என்று ஹர் ஹிட்லர் குறிப்பிடுவது திட்டமாகக் கூறுமிடத்து ஜெர்மன் ஆஸ்திரியாதான். ஜெர்மன் சாம்ராஜ்யத்துடன் ஜெர்மன் ஆஸ்திரியாவை ஐக்கியப்படுத்த வேண்டுமென்ற பிஸ்மார்க்கின் கனவு இறுதியில் கனவாகவே முடிந்தது. எனினும் அக்கனவை அனுஷ்டானத்தில் கொண்டு வந்து, அப்பிரதேசத்தை ஜெர்மனியுடன் ஐக்கியப்படுத்திய பெருமை ஹர் ஹிட்லருக்கே உரியதாகும். அவ்விதமாக ஜெர்மன் தேச பக்தர்கள், ராஜதந்திரிகள் முதலியோரின் வெகுகாலத்திய அபிலாஷை ஹிட்லரால் நிறைவேற்றப்பட்டது.

நாம் இவ்வுலகில் கடவுளால் அனுப்பப்பட்டிருக்கிறோம். நமக்கு எதுவும் நன்கொடை அளிக்கப்படுவது இல்லை, நமது சொந்த அறிவையும் தைரியத்தையும் கொண்டே நாம் இப்பூமியில் வாழ வேண்டியவர்களாக இருக்கிறோம். இப்போது ஒவ்வொருவரும் இரத்தம் சிந்துவது எதிர்காலத்தில் ஆயிரம் பேர்களுடைய வாழ்க்கைக்கு உத்தரவாதமாகின்றது என்ற நியாயத்தை நம் சந்ததிகளின் முன்னிலையில் நாம் சமர்ப்பிக்க வேண்டும். ஒரு காலத்தில் ஜெர்மன் விவசாயிகள் தங்களுடைய திடகாத்திரமுள்ள பிள்ளைகளை ஊட்டி வளர்க்கக் கூடிய ஒரு பிரதேசத்திற்காக, இன்றுள்ள விவசாயிகளின் புதல்வர்கள் இரத்தம் சிந்துவது நியாயம்தான். அவ்விதம் பலி கொடுக்கும் ராஜதந்திரிகளை, தற்போதுள்ளவர்கள் தூற்றித் துன்பத்திற்குள்ளாக்கலாம் என்றாலும், அந்த ராஜதந்திரிகள் நிரபராதிகளென்றே நம் சந்ததிகள் தீர்ப்புக் கூறுவர்!

புதிய பிரதேசங்களை ஆக்கிரமிப்பது மனிதனின் புனிதமான தர்மத்தை மீறுவதாகுமென சில தேசீயக் கிறுக்கர்கள் கூறுகின்றனர். அவர்கள் அவ்வாறு கூறுவதென் அந்தரங்கமென்ன என்பதை அறிந்து கொள்வது அசாத்தியமான விஷயம்! ஆனால் அத்தகையோர் உண்டாக்கும் குழப்பத்தினால் நம் எதிரிகள் பலனடைகின்றனர் என்பதில் மாத்திரம் சந்தேகமில்லை. அத்தகைய கிறுக்கர்கள் தேசத்திற்குள் இருந்துகொண்டே தேசத்தின் பலம் குன்றும்படி செய்கின்றனர். கடவுள் கடாட்சம் காரணமாகவோ, புனித உரிமை காரணமாகவோ இவ்வுலகில் ஒருவருக்கும், சொந்தமாக ஒரு சதுர கெஜம் கூட நிலமோ, மண்ணோ கிடையாது. ஜெர்மன் எல்லைகள் தற்செயலாகவும், பல்வேறு சமயங்களிலுமேற்பட்ட அரசியல் போராட்டங்கள் காரணமாகவும் அமைக்கப்பட்டனவே அன்றி வேறொன்றுமில்லை. மற்ற தேச எல்லைகள் சம்பந்தமாகவும் அதே நியதிதான் உண்மை. ஒரு தேசத்தின் பூகோள அமைப்பு மாற்ற முடியாதென்றும், மாற்றத் தகாதென்றும் கோழைகள்தான் கூறுவர். தேச எல்லைகளை நிர்ணயிப்பவர் மானிடரே. அவைகளை மாற்றவும் மானிடருக்கு உரிமையுண்டு.

நிற்க, ஒரு தேசம் பரந்த விஸ்தீர்ணமுள்ள பிரதேசமொன்றை ஆர்ஜிதம் செய்து கொண்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்பிரதேசம் நிரந்தரமாக அதற்குச் சொந்தமாயிருந்து வர வேண்டுமென்ற நியதி எதுவுமில்லை. மற்றவர்களைப் பணியச் செய்வதற்குற்ற பலம் அதற்கிருந்து வரும் வரையில்தான், அப்பிரதேசத்தை அந்த தேசமானது வைத்துக் கொண்டிருக்க முடியும். ஒரு சிறிய பிரதேசத்திற்குள் ஜெர்மன் ஜனங்கள் சிறைபட்டு அவர்களின் எதிர்கால வாழ்க்கை துக்ககரமாக இருக்குமாயின்,

அதற்குக் காரணம் கடவுளின் கட்டளையல்ல. அதற்குப் பணிந்து கிடக்க மறுப்பது கடவுளின் விதிகளை மீறுவதாகாது. ஏனெனில், ஜெர்மனியைக் காட்டிலும் அதிகப்பிரதேசங்களை அளிப்பதாக கடவுள் மற்ற தேசங்களுக்கு வாக்குக் கொடுத்திருக்கின்றாரா? இல்லை. இன்று நாம் வாழும் பிரதேசம் நம் முன்னோர்களுக்குக் கடவுளால் நன்கொடையாகக் கொடுக்கப்பட்டதல்ல. அவர்கள் தங்களுடைய உயிரையும் லட்சியம் செய்யாமல் போரிட்டு ஜெயித்ததாகும். அதுபோலவே, எதிர்காலத்திலும் ஜெர்மன் ஜனங்கள், மற்ற தேச ஜனங்களின் தயவினால் பிரதேசங்களைப் பெற்று, அவைகளின் மூலம் வாழ்க்கைக்கு வகை தேடிக் கொள்ள முடியாது. வெற்றிகரமான கத்தியைக் கொண்டுதான் நாம் புதிய பிரதேசங்களைப் பெறுவது சாத்தியமாகும்.

பிரான்ஸுடன் இன்று நமது நிலைமையை ஒழுங்கு செய்து கொண்டிருக்கிறோம். வெளிநாட்டுக் கொள்கை சம்பந்தப் பட்ட வரையில் நமது பொதுவான நோக்கங்கள் அத்துடன் நின்று விடுவதாயின், நாம் அவ்விஷயமாக வெற்றி பெற முடியாது. ஐரோப்பாவில் நம் ஜனங்களின் வாழ்க்கைக்கு, புதிய பிரதேசங்களை ஆக்கிரமித்துக் கொள்ள வேண்டியது அவசியம். காலனிகளை ஆர்ஜிதம் செய்து கொள்வதால் அப்பிரச்னையைத் தீர்த்துக் கொண்டு விட முடியாது. மற்றும் அர்த்தமற்ற வீண் உணர்ச்சிகளுக்கும், சர்வதேச பக்திக்கும் இடங்கொடுக்கக் கூடாது. அதாவது நாம் அமைக்கும் படைகள், "ஏழைகளான சிறிய நாடுகளை"ப் பாதுகாக்கும் போலீஸ் படைகளாக இருக்கக் கூடாது, ஜெர்மன் தேசத்தைப் பாதுகாக்கும் வீரர்களடங்கிய படைகளாகவே இருக்க வேண்டும்.

தேசிய அபேதவாதிகளான நாம், இன்னும் மேற்கொண்டு தீவிரமாகச் செல்ல வேண்டியவர்களாயிருக்கிறோம். ஒரு பெரிய தேசமானது, புதிய பிரதேசங்களை ஆக்கிரமித்தாலன்றி பாதாளத்தில் போக வேண்டியிருக்கும் என்ற நிலைமை ஏற்படும்போது, புதிய பிரதேசங்களை ஆக்கிரமித்துக் கொள்ள வேண்டியது இன்றியமையாத ஒரு கடமையாகின்றது. அதிலும் நவீன உலகிற்குக் கலாசார உருவளித்த ஜெர்மனி விஷயத்தில் அது முற்றிலும் உண்மை. ஒன்று ஜெர்மனி ஓர் உலக வல்லரசாக வேண்டும் அல்லது அது புவியில் இராமலேயே மறைந்துவிட வேண்டும். ஆனால் அது ஓர் உலக வல்லரசாக வேண்டுமாயின், புதிய பிரதேசங்களைப் பெற வேண்டியது அவசியம். அப்போதுதான் அதற்கு முக்கியத்துவமேற்படுவதுடன், அதன் ஜனங்களின் வாழ்விற்கும் வகையுண்டாகும். இதை அனுசரித்தே. யுத்தத்திற்கு முன் ஜெர்மனியால் அனுஷ்டிக்கப்பட்டு வந்த வெளிநாட்டுக் கொள்கைக்கு தேசீய அபேதவாதிகளான நாம்

முற்றுப்புள்ளி வைத்திருக்கிறோம், மற்றும் ஐரோப்பாவிற்கு மேற்கேயும், தெற்கேயும் ஜெர்மனி இடைவிடாது அணிவகுத்துச் செல்வதையும் நிறுத்தி, கிழக்கேயுள்ள பிரதேசங்களின் விஷயத்தில் கண்ணோட்டம் செலுத்தி வருகின்றோம், ஜெர்மனியின் காலனி வர்த்தக விஸ்தரிப்புக் கொள்கைக்கும் இறுதியாக முட்டுக்கட்டை போட்டு, பிரதேச ஆக்கிரமிப்புக் கொள்கையையும் கைக்கொள்ள முற்பட்டுள்ளோம்.

ஐரோப்பாவில் புதிய பிரதேசங்களை ஆக்கிரமிக்க வேண்டுமென நாம் கூறுகையில், முக்கியமாக ருஷியாவையும், அதன் கீழுள்ள எல்லை நாடுகளையுமே மனதிற்கொள்ள வேண்டும். விதியானது நமக்கு அப்பக்கமாகத்தான் வழிகாட்டுவதுபோல் தோன்றுகிறது. ருஷியாவில் பலம் குறைந்துவிட்டது. ருஷிய அரசாங்கத்தைச் சிருஷ்டித்த, - ருஷிய ஜனங்களின் வாழ்விற்கு உத்தரவாதமளித்து வந்த அறிவாளிகளைப் பொதுவுடைமையானது நசுக்கிவிட்டது. ருஷியா அங்குள்ள ஸ்லேவிய வகுப்பினரின் அரசியல் ஆக்கத் திறமையால் அமைக்கப்படவில்லை. ஆனால் கீழ்த்தரமான ஒரு வர்க்கத்தினரிடையே அரசாங்கத்தை அமைக்கும் விஷயத்தில் ஜெர்மானியருக்குள்ள திறமைக்கு ருஷியா ஓர் அற்புத உதாரணமாக விளங்கியது. உலகம் முழுதும் அவ்விதம் பலம் பொருந்திய சாம்ராஜ்யங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இப்போது ருஷியாவில் ஜெர்மன் அம்சம் மறைந்து, அதன் ஸ்தானத்தில் யூதர் ஆதிக்கமேற்பட்டு விட்டது. ருஷ்யர்கள், தங்களுடைய சொந்த பலத்தினால் எவ்விதம் யூதர்களின் ஆதிக்கத்தை உதறித்தள்ள முடியாதோ, அதுபோலவே பிரமாண்டமான தேசத்தை யூதர்களும் நீண்டகாலம் உருவாக்கி வைத்துக் கொண்டிருக்க முடியாது. யூதர்களிடம் ஆக்கும் தன்மையில்லை, அழுக வைக்கும் தன்மைதானிருக்கிறது. கிழக்கேயுள்ள இந்த மகத்தான சாம்ராஜ்யமும் இன்று பழுத்து அழுகக் கூடிய நிலைமையிலிருந்து வருகின்றது. ருஷியாவில் யூதர்களின் ஆதிக்கம் முடிவடைவதுடன், ருஷிய அரசாங்கத்தின் ஆயுளும் முடிவடைந்துவிடும்.

ஜெர்மனியின் எதிர்கால லட்சியமானது, மகா அலெக்ஸாண்டரின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி திக்விஜய சாமர்த்தியத்தைக் காட்டுவதாக இருக்கக் கூடாது. ஜெர்மானியரின் உழவு கலப்பையுடன் கூடிய உழைப்பையே ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டும். தேவையான உழு நிலத்திற்கு ஜெர்மன் கத்தி வழி செய்யும். ஆனால் அத்தகைய கொள்கைகளை யூதர்கள் வெகு கடுமையாக எதிர்ப்பார்களென்பது இயற்கையே. ஏனெனில் அக்கொள்கையின் விளைவாக, அவர்களுடைய எதிர்காலம் என்னவாகும் என்பதை அவர்கள் அறிவர்.

யூதர்கள் எதிர்ப்பதிலிருந்தே அக்கொள்கைதான் முற்றிலும் சரியானதென்பதை தேசியவாதிகள் உணர்ந்து கொள்ளலாம். அப்படியிருந்தும் அதற்கு மாறாக ஜெர்மன் தேசியக் கட்சியினரும், இதர் தேசிய வட்டாரங்களும் கிழக்குத் திசை விஸ்தரிப்புக் கொள்கையை எதிர்க்கின்றனர். அவர்கள் தங்களுடைய எதிர்ப்பிற்கு ஆதாரமாக பிஸ்மார்க்கின் பெயரையும் கொண்டு வருகின்றார்கள்! ருஷியாவுடன் ஜெர்மனிக்குத் திருப்திகரமான சம்பந்தமிருந்து வரவேண்டிய அவசியத்தை பிஸ்மார்க் வற்புறுத்தி இருப்பதாக அவர்கள் கூறுகின்றனர். ஓரளவு அது உண்மையே. இத்தாலியுடனும் ஜெர்மனிக்குத் திருப்திகரமான சம்பந்தமிருந்து வரவேண்டிய அவசியத்தை அவர் வற்புறுத்தியுள்ளார் என்பதை தேசியக் கட்சியினர் மறந்து விடுகின்றனர். அதே ஹர்வான் பிஸ்மார்க்தான் இத்தாலியுடன் ஓர் ஒப்பந்தமும் செய்து கொண்டார். அவ்விதம் ஒப்பந்தம் செய்து கொள்வதன் மூலம் ஆஸ்திரியாவுடன் சுலபமாகக் கணக்கைத் தீர்த்துக் கொள்ளலாமென்பது அவரது உத்தேசம். ஆனால் என் அக்கொள்கை இப்போது அனுஷ்டிக்கப்படவில்லை. இன்றுள்ள இத்தாலி அன்றைய இத்தாலி அல்லவென்று அவர்கள் பதில் கூறலாம். நல்லது, அப்படியானால் அவர்களுக்கு ஒரு விஷயத்தை ஞாபகமூட்டுகிறேன். அதாவது, "கண்ணியம் பொருந்திய கனவான்களே, இன்றுள்ள ருஷியா அன்றிருந்த ருஷியா அல்ல, எவ்வித நிலைமையிலும் தமது கொள்கை நிரந்தரமாக அனுஷ்டிக்கப்பட வேண்டுமென்ற உத்தேசத்துடன் பிஸ்மார்க் அவ்விதம் கூறவில்லை, பிஸ்மார்க் அன்று என்ன செய்தாரென்பது இப்போது கேள்வியல்ல; அவர் இன்றிருந்தால் என்ன செய்வாரென்பதே கேள்வி. இக்கேள்விக்குப் பதிலளிப்பது மிக்வும் சுலபம். அவர் மிகுந்த அரசியல் திறமை வாய்ந்தவராதலால், மறைந்தொழியப் போகும் ஓர் அரசாங்கத்துடன் நட்புக் கொள்வதை ஒருபோதும் அனுமதிக்கமாட்டார்" என்பதுதான். மற்றும் அன்று ஜெர்மனிக்கு நன்மை அளித்திருக்கக் கூடிய ஒரு விஷயம் இன்று தீங்கை உண்டுபண்ணலாம்.

*2580- 81ல் (1920 - 21)* எங்கள் இயக்கம் சிறிது சிறிதாக வளர்ச்சி அடைந்து அரசியல் வானத்தில் தோன்றியபோது, ஜெர்மனியின் விடுதலைக்காகப் பல்வேறு இயக்கங்கள் இங்குமங்கும் ஸ்தாபிக்கப்பட்டன. மற்ற தேசங்களிலுள்ள விடுதலை இயக்கங்களுடனும் சம்பந்தம் வைத்துக் கொள்ள வேண்டுமென பலரும் எங்கள் கட்சியை அணுகினர். அப்போது, 'ஒடுக்கப்பட்ட தேசங்களின் சங்கமம்' என்ற ஒரு சங்கமும் பிரமாதமாக விளம்பரம் செய்யப்பட்டு வந்தது. அதில் பெரிதும் பால்கன் நாடுகள், எகிப்து, இந்தியா முதலிய தேசங்களின்

பிரதிநிதிகளே அடங்கியிருந்தனர். அவர்களெல்லோரும் பொது ஜனங்களின் ஆதரவற்ற வேஷதாரிகளென்பதே எப்போதும் என்னுடைய எண்ணம். தேசியவாதிகளான பல ஜெர்மானியர்கள் அவர்களை நம்பினர். ஏதோ சில இந்திய அல்லது எகிப்திய "பிரதிநிதிகளெ'ன்றே கருதினர்! அவர்களில் பெரும்பாலோருக்கும் எவ்வித ஆதரவுமில்லை என்பதையும், அவர்களுடன் எவ்வித ஒப்பந்தமும் செய்துகொள்ள முடியாதென்பதையும் மற்றும் அவர்களுடன் விவாதிக்கும் நேரம் வியர்த்தமென்பதையும் தேசியவாதிகள் உணர்ந்து கொள்ளவில்லை. அவர்கள் உண்மையான பிரதிநிதிகளாகவே இருந்தாலும் கூட அவர்களுடன் செய்து கொள்ளும் ஒப்பந்தமானது நிச்சயமாக ஆபத்தை உண்டுபண்ணாவிடினும் வியர்த்தமாகுமென்றே நான் நினைத்தேன். உலகிலுள்ள மகத்தான ராணுவ, கைத்தொழில் நாடுகள் தீவிர ஆக்கிரமிப்பு நோக்கத்துடன் ஒன்று சேர்ந்து வருகையில், ஜெர்மனி மாத்திரம் சக்தியற்ற சில கிழட்டு நாடுகளை ஒன்று சேர்த்துக் கொண்டு அவ்வல்லரசுகளை எதிர்த்து நிற்க முயற்சித்தது. அத்தகைய தவறான வெளிநாட்டுக் கொள்கை காரணமாகவே ஜெர்மனி, பிரமாத கஷ்ட நஷ்டங்களுக்குள்ளாக வேண்டியிருந்தது. ஆயினுமென்ன? அவ்வளவு கஷ்டநஷ்டங்களுக்கு உள்ளாகியும்கூட, கனவு உலகில் சஞ்சரிக்கும் நம் பிரகிருதிகளுக்குப் புத்தி வரவில்லை. அவர்கள் மீண்டும் அதே தவறையே செய்து வருவது வெட்கக் கேடாக இருப்பது மாத்திரமல்ல, ஆபத்தானதுமாகும். மிகவும் சக்தி பொருந்திய, வெற்றியுடன் திகழும் நாடுகளை, "ஒடுக்கப்பட்ட நாடுகளடங்கிய சங்க"த்தின் மூலம் ஆயுத பரிகரணத்தை அனுஷ்டிக்கும்படி செய்வது வெட்கக் கேடும், ஆபத்துமாகுமென்பதில் சந்தேகமென்ன? ஏனெனில் அவ்வித முயற்சியின் காரணமாக, ஜெர்மானியர்கள் உண்மையான விஷயங்களை விட்டுவிட்டு, வீண் நம்பிக்கையும் மயக்கமும் கொண்டலையும்படி நேருகிறது. உண்மையில், ஜெர்மனியின் இன்றைய நிலைமை, வெள்ளத்தில் மூழ்குபவன் தன்னருகில் மிதக்கும் எவ்வித துரும்பையும் உதவிக்குப் பிடித்துக் கொள்வது போன்றே இருக்கிறது!

*2580-81*ல் *(1920 -21)* தேசியவாதிகளில் சிலர் கொண்ட சிறுபிள்ளைத்தனமான, அர்த்தமற்ற நம்பிக்கை எனக்கு நன்கு ஞாபகத்திலிருக்கிறது. அதாவது இந்தியாவில் ஆங்கிலேயர்கள் வீழ்ச்சியடையும் காலம் நெருங்கி விட்டதென்பதே அவர்களுடைய நம்பிக்கை. அப்போது சில ஆசியாக்கார வேஷதாரிகள் தங்களை "இந்திய விடுதலை வீரர்கள்" என்று கூறிக்கொண்டு ஐரோப்பா முழுவதும் சஞ்சரித்து வந்தனர். இந்தியாவை மூல

ஸ்தானமாகக் கொண்ட பிரிட்டிஷ் உலக சாம்ராஜ்யம், அங்கு சீர்குலையும் தறுவாயிலிருக்கிறதென, ஐரோப்பிய ஜனங்கள் நம்பும்படியும் அவர்கள் செய்துவிட்டனர். தங்களுடைய கூற்று எவ்வளவு மடத்தனமானதென்பதைப் பற்றி அவர்கள் சிந்திக்க வில்லை. பிரிட்டன் இந்தியாவை இழந்துவிட்டால், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு அந்திமகாலம் வந்துவிடுமென அவர்கள் எதிர்பார்ப்பதிலிருந்தே, இந்தியா இங்கிலாந்திற்கு மிகவும் முக்கியமானதென்பதை அவர்கள் ஒப்புக் கொள்கின்றனர் என்பது தெரிகிறது.

மிகவும் முக்கியமான இப்பிரச்னையின் ஆழ்ந்த மர்மங்கள் ஜெர்மன் தேசிய தீர்க்கதரிசிகளுக்கு மாத்திரமல்ல, பிரிட்டிஷ் ராஜ தந்திரிகளுக்கும் தெரிந்துதானிருக்க வேண்டும். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு இந்தியா எவ்வளவு அத்தியா வசியமானதென்பதை இங்கிலாந்திலுள்ளவர்கள் போதிய அளவு உணர்ந்து கொள்ளவில்லை என்று நினைப்பது சிறுபிள்ளைத்தனமாகும். இந்தியாவைத் தன் பிடியிலிருந்து நழுவவிடாமல் பாதுகாக்க இங்கிலாந்து தன் முழு சக்தியையும் உபயோகித்தே தீரும். அவ்விதமின்றி அது இந்தியாவை இழந்துவிடுமென நம்புவது சரித்திர ஞான சூன்யத்தையே காட்டுவதாகும். அந்த நம்பிக்கையிலிருந்து மற்றொரு விஷயமும் வெளியாகின்றது. அதாவது இங்கிலாந்து தனது சாம்ராஜ்யத்தை எவ்விதம் நிர்வகித்து வருகிறதென்பது பற்றி ஜெர்மனியில் நிலவி வரும் பூர்ண அறியாமையையே அது நிரூபிக்கின்றது. இந்திய நிர்வாக விஷயத்தில் இங்கிலாந்து தனது வர்க்கச் சீர்குலைவிற்கு இடங்கொடுத்தாலொழிய, (இந்தியா சம்பந்தப்பட்ட வரையில் இக்கேள்வி எழுவதற்கேயில்லை), அல்லது மிகவும் சக்தி பொருந்திய ஒரு சத்துருவின் கத்தியால் ஜெயிக்கப்பட்டாலொழிய, அது இந்தியாவை ஒருநாளும் இழக்காது. எனினும் இந்தியாவிலேற்படும் எழுச்சிகளால் இங்கிலாந்தை ஜெயித்துவிட முடியாது. இங்கிலாந்தைப் பணிய வைப்பது எவ்வளவு கடினமென்பதை, ஜெர்மானியர்களாகிய நாம் அனுபவபூர்வமாக அறிந்து கொண்டுள்ளோம். இவை எல்லாம் ஒருபுறமிருக்க, இந்தியா மற்றெந்த ஒரு நாட்டின் ஆதிக்கத்திலிருப்பதைவிட, பிரிட்டிஷ் ஆதிக்கத்திலிருப்பதையே ஒரு ஜெர்மானியன் என்ற ஹோதாவில் நான் விரும்புவேன்.

எகிப்தில் இங்கிலாந்திற்கு விரோதமாகப் பிரமாத எழுச்சி ஏற்படுமென நம்புவதும் வீண் பிரமையே. அப்படியே ஏற்பட்டாலும் பிரிட்டிஷ் துருப்புகளின் பீரங்கிகளும், வெடிகுண்டுகளும் வெகு சீக்கிரத்தில் அத்தகைய எழுச்சிக்கு முற்றுப்புள்ளி வைத்துவிடும்.

சக்தி பொருந்திய ஒரு தேசமானது தன் வாழ்வை நிலைநிறுத்த,

அவசியமாயின் கடைசித் துளி வரை இரத்தம் சிந்துவதென உறுதிகொள்ளும் பட்சத்தில், நொண்டிகளும் சப்பாணிகளுமடங்கிய ஒரு கூட்டம் அதைத் தாக்குவதென்பது முடியாத காரியம். கீழ்த்தர வர்க்கத்தினரடங்கிய "தாழ்த்தப்பட்ட தேசங்களு" டன் நம் விதியை இணைக்க நான் ஒருபோதும் முற்பட முடியாது. இன்று நாம் ருஷியா விஷயத்திலும் இதே மனோபாவத்துடன் தானிருக்க வேண்டும். ஜெர்மன் ஆட்சி வர்க்கத்தின் சம்பந்தம் இன்று ருஷியாவிற்கில்லை. ஜெர்மனியின் சுதந்திரப் போராட்டத்தில் அது நம் நேச தேசமாக இருப்பதென்பது சாத்தியமில்லை. மற்றும் மேற்கு ஐரோப்பாவிற்கு விரோதமாகவோ, ஒருவேளை அதன் காரணமாக அகில உலகிற்கும் விரோதமாகவோ ஜெர்மனியும் ருஷியாவும் ஒன்று சேர்ந்து போராடுவதென்பது நமக்கு மகத்தான ஆபத்தாக முடியும். அத்தகைய போராட்டம் ருஷிய எல்லையிலல்ல, ஜெர்மன் எல்லையிலேயே நடைபெற வேண்டியிருக்கும். ருஷியாவிடமிருந்து ஜெர்மனி சிறிதும் பிரயோஜனகரமான உதவி பெற முடியாது. தவிர, தற்போதுள்ள நிலைமையில் நாம் மேற்கு ஐரோப்பாவை எதிர்த்து நின்று நம் எல்லைகளைப் பாதுகாப்பதென்பதும் முடியாத காரியம். நம் விரோதிகள் நம்முடைய கைத்தொழில் பிரதேசங்களின் மீது தங்கள் முழு கவனத்தையும் செலுத்துவார்கள். ஜெர்மனி அவைகளைப் பாதுகாக்க முடியாது கைவிடும்படி நேரும். மற்றும் ஜெர்மனிக்கும் ருஷியாவிற்கும் மத்தியில் போல்ஷிவிக் ராஜ்யமுமிருக்கிறது. அது முற்றிலும் பிரெஞ்சுக்காரர்களின் கையிலிருக்கிறது. ஜெர்மனியும் ருஷியாவும் சேர்ந்து மேற்கு ஐரோப்பாவை எதிர்த்து யுத்தம் செய்வதாயின், முதல் ருஷிய சிப்பாய் ஜெர்மனிக்கு வருமுன் போலந்தை வீழ்த்தியாக வேண்டும். எனவே, நமக்கு சென்ற யுத்தத்தைக் காட்டிலும் அதிக பயங்கரமான நிலைமையே ஏற்படும். எதிர்கால மோட்டார் படைகளை எதிர்த்து நிற்கவும் நம்மிடம் சாதனமில்லை. அடுத்த யுத்தத்தில் மோட்டார் படைகளின் ஆதிக்கம்தான் அதிக உக்ரமாக இருக்கும். இந்த முக்கியத் துறையில் மிகவும் வெட்கக் கேடான விதமாக நம் தேசம் பிற்போக்கடைந்திருக்கிறது. ஜெர்மனியிடம் அற்பமாக இருக்கும் அப்படைகளையும் அது ருஷியாவுக்கு உதவியாக அனுப்ப வேண்டியிருக்கும். மோட்டார் பீரங்கி வண்டிகளை உற்பத்தி செய்யக் கூடிய ஒரு தொழிற்சாலை கூட ருஷியாவில் இல்லை. இந்நிலைமையில் அத்தகைய போராட்டம் வெறும் படுகளமாகவே முடியும். அதன் விளைவாக ஜெர்மன் இளைஞர்கள் சென்ற யுத்தத்தைக் காட்டிலும் அதிக இரத்தம் சிந்தும்படி நேரும். யுத்தத்தின் முடிவும் நாசகரமாகவே இருக்கும். ஒரு வேளை எதிர்பாராத ஓர் அற்புதம்

நிகழ்ந்து ஜெர்மனி அடியோடு அழியாவிட்டாலும், ஜெர்மனியின் இரத்தம் அடியோடு உறிஞ்சப்பட்டுவிடுமென்பதில் மாத்திரம் சந்தேகமில்லை.

ருஷியாவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு, பின்னர் யுத்தத்திற்கான சகல முஸ்தீப்புகளையும் செய்து வரலாமென்றும் கூற இடமுண்டு. ஆனால் அவ்விதம் கூறுவது அர்த்தமற்ற விஷயம். யுத்தம் தொடருவதாக இருந்தாலன்றி, ஒப்பந்தம் செய்து கொள்ளுவதால் எவ்வித பலனுமில்லை. சமீபத்தில் யுத்தம் செய்ய வேண்டுமென்ற நோக்கமின்றி இரு நாடுகளும் ஒப்பந்தம் செய்து கொள்ளுவது, மற்ற நாடுகளுக்கு ஓர் எச்சரிக்கையாக முடியும். பின்னர் நம்முடைய யுத்த முஸ்தீப்புகளைப் பூர்த்தி செய்யும் வரையில் 10 வருஷ காலத்திற்கு இங்கிலாந்தும், பிரான்ஸூம் காத்துக் கொண்டிரா! அத்தகைய ஒப்பந்தம் செய்து கொண்டவுடனேயே ஜெர்மனி மீது சண்டமாருதம் கிளம்பிவிடும். ருஷியாவுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளுவது புதிய யுத்தத்திற்கான ஓர் அறிகுறியாகும். அதன் பலன் ஜெர்மனியின் அதோகதிதான்.

மற்றும் தற்போது ருஷியாவில் அதிகாரம் வகித்து வருகிறவர்களுக்கு, யோக்கியப் பொறுப்புள்ள ஒப்பந்தமென்றாலே என்னவென்பது தெரியாது. தெரிந்தாலும் கூட, அவர்கள் அதன்படி உண்மையாக நடந்துகொள்ள மாட்டார்கள். இன்று ருஷியாவை ஆட்சிபுரிந்து வருவோர் இரத்தக் கறை படிந்த கொடியர்களென்பதையும், மானிட வர்க்கத்தின் கடையர்கள் என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. ஏதோ துக்ககரமான சம்பவங்கள் காரணமாக அவர்கள் ஒரு மகத்தான தேசத்தையே வீழ்த்தி, அதை இழிவுபடுத்தி இரத்த வெறியைத் தவிர வேறெவ்வித காரணமுமின்றி, கல்வியறிவுள்ள லட்சக்கணக்கான மக்களை அடியோடு ஒழித்துவிட்டனர்.

சென்ற பத்து வருஷங்களாக அவர்கள் புரிந்து வரும் காட்டு மிராண்டித்தனமான கொடுங்கோன்மைக்கு சரித்திரத்திலேயே உதாரணமில்லை. அவர்கள் மிருகத்தனமான கொடுங்குணமும், தந்திரம், புளுகுவதில் அபார திறமையும் வாய்க்கப் பெற்றவர்கள் என்பதையும் நாம் மறந்துவிடக் கூடாது. இன்று ருஷியாவில் யூதர்கள் ஜெர்மனியை ஒரு நேச தேசமாகக் கருதவில்லை, ருஷியாவைப் போல் வீழ்ச்சியுறப் போகும் விதியுள்ள ஒரு தேசமாகவே எண்ணரி வருகின்றனர். தன்னை நாசம் செய்யும் நோக்கமுடைய ஒருவருடன் யாராவது ஒப்பந்தம் செய்து கொள்ளுவாரா! மற்றும் உடன்படிக்கையைத் தங்களிஷ்டப்படி உதறித் தள்ளிவிடும் பேர்வழிகளுடன் எவராவது ஒப்பந்தம் செய்து கொள்ளுவாரா! அவர்கள் கண்ணியமும், அந்தரங்க

சுத்தியுமுள்ளவர்களாக இப்புவியில் சஞ்சரிக்கவில்லை, பொய், வஞ்சகம், திருட்டு, கொள்ளை முதலியவைகளின் பிரதிநிதிகளாகவே நடமாடி வருகின்றனர். அத்தகைய உதிரமுறிஞ் சிகளை நம்புவோர், தன்னைச் சூழ்ந்து கொள்ளும் புல்லுருவிப் படர் கொடியை நம்பும் மரம் போன்றவர்களேயாவர்!

ருஷியா எவ்வித ஆபத்திற்குப் பலியாயிற்றோ, அதே ஆபத்து இன்று ஜெர்மனியின் தலைக்குமேல் தொங்கி வருகின்றது. பொதுவுடைமை மிருகத்தைப் பழக்கிவிடலாமென நினைப்பது மடத்தனமாகும். தாங்கள் உலகத்தின் கொடுங்கோலர்களாக வரவேண்டுமென்பதுதான் யூதர்களின் அபிலாஷை. ஆங்கிலோ அமெரிக்கர்களுக்கும் உலகை ஆட்சி புரிய வேண்டுமென்ற அபிலாஷை இருக்கின்றது. அதைப் பூர்த்தி செய்துகொள்ள அவர்கள் தங்களுடைய சம்பிரதாய ஆயுதங்களை உபயோகிக்கின்றனர். அதுபோலவே, யூதர்களும் தங்களுடைய சம்பிரதாய ஆயுதங்களை உபயோகித்து வருகின்றனர். யூதர்கள், பல தேசங்களிலும் புகுந்து உள்ளிருந்துகொண்டே அவைகளைக் குடைந்து விடுகின்றனர். பொய், அவதூறு, விஷமப் பிரசாரம், உருக்குலைத்தல் இவைதான் யூதர்களின் சம்பிரதாய ஆயுதங்கள், தங்களுடைய பகைவர்கள் அடியோடு ஒழியும் வரையில் அவர்கள் அந்த ஆயுதங்களை உபயோகித்து வருவார்கள். அவை யூதர்களின் பிறவிக் குணங்களாதலால், அவைகளை மாற்றுவதென்பதும் முடியாத காரியம். யூதரின் சரீரத்தில் உயிர் உள்ளளவும் அக்குணங்களும் இருந்தேதான் தீரும். உலகிலுள்ள மற்றெந்த தேசத்தினரையும் காட்டிலும் அவர்கள்தான் தங்கள் வர்க்கத்தின் இரத்தத்தில் சிறிதும் கலப்பேற்படாமல் பாதுகாத்து வருகின்றனர். அதனால் அவர்களுடைய ஜன்ம குணங்களும் மிகக் கூர்மையாக இருந்து வருகின்றன! தங்களைக் காட்டிலும் அதிக பலம் பொருந்திய ஒரு சக்தி தங்களை எதிர்க்கும் வரையில், அவர்கள் (யூதர்கள்) தங்களுடைய கோர லட்சியத்தை நோக்கிச் சென்றே தீருவார்கள்.

ருஷியப் பொதுவுடைமைக்கு அடுத்த போர்க்களம் ஜெர்மனிதான். அந்த சர்வதேச ஸர்ப்பத்தினிடமிருந்து நம் தேசத்தை விடுவிப்பதும், நம் இரத்தம் அசுத்தமடையாமல் பாதுகாப்பதும் சுலபமான விஷயமல்ல. நமது எதிர்கால க்ஷேமத்தின் ஜன்ம சத்துருவை எஜமானராகக் கொண்டிருக்கும் ஒரு தேசத்துடன், நாம் நட்புக் கொள்வது பெரும் மடத்தனம். நாமே அவ்விஷப் பிடிக்கு ஆளாகிவிட்டால் அதிலிருந்து நாம் நமது ஜனங்கள்ள எவ்விதம் விடுவிக்க முடியும்? பொதுவுடைமை ராஜ்யம் நியாயமானதென நாமே அங்கீகரித்துவிட்டால், பொதுவுடைமை மானிட வர்க்கத்திற்கே விரோதமான ஒரு

கொடுமையென்று ஜெர்மன் தொழிலாளர்களுக்கு எவ்விதம் எடுத்துக் கூற முடியும்? உலகையே பொதுவுடைமை மயமாக்கும் யூதர்களை எதிர்த்துப் போராட வேண்டுமாயின், ருஷியா விஷயத்தில் நமது நிலைமை என்ன என்பதை நாம் சந்தேகமறப் பிரகடனம் செய்துவிட வேண்டும். கொள்ளைக்காரனை ஒழிக்க கொள்ளைத் தலைவனின் உதவியை நாடினால் நமது முயற்சி உருப்படுமா!

வெளிநாடுகளுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளும் விஷயமாக பழைய ஜெர்மன் அரசாங்கத்தின் மீது ஒரு முக்கிய புகாருக்கு இடமுண்டு. அதாவது எப்படியாவது உலக சமாதானத்தைப் பாதுகாக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் அது ஒரு சமயம் இப்படியும் ஒரு சமயம் அப்படியும் ஊசலாடி வந்தது. ஒரு தேசத் துடனும் அதன் சம்பந்தம் திருப்திகரமாக இல்லை. எனினும் ஜெர்மனி மீது ஒரே ஒரு புகாருக்கு மாத்திரம் சிறிதும் இடமில்லை. அதாவது அது (பழைய ஜெர்மனி) அதிர்ஷ்டவசமாக ருஷியாவின் உண்மைச் சொரூபத்தை அறிந்து கொண்டதால், அதனுடன் திருப்திகரமான சம்பந்தத்தைத் தொடர்ந்து வரவேயில்லை.

ஜெர்மனி மடத்தனமான காலனி விஸ்தரிப்புக் கொள் கையையும், கடற்படைக் கொள்கையையும் உதறித் தள்ளிவிட்டு, ருஷியாவுக்கு எதிராக இங்கிலாந்துடன் ஒப்பந்தம் செய்து கொள்வது எவ்வளவோ பிரயோஜனமாக இருக்குமென யுத்தத்திற்குமுன் நினைத்தேன். அப்போது ருஷியா மமதை கொண்டு அடிக்கடி ஜெர்மனியை மிரட்டி வந்ததென்பதை நான் மறக்கவில்லை. மற்றும் ஜெர்மனிக்கு மனக்கொதிப்பை உண்டுபண்ணும் பல நடவடிக்கைகளிலும் ருஷியா ஈடுபட்டு வந்ததையும் நான் மறக்க முடியாது. ருஷியப் பத்திரிகைகள் நம்மைக் காட்டிலும் பிரான்ஸிடமே அதிக ஆதரவு காட்டி வந்தன என்பதும் என் மனதை விட்டகலவில்லை. அப்படியெல்லாம் இருந்தும்கூட, யுத்தத்திற்கு முன் நாம் மற்றொரு வழியையும் பின்பற்றியிருக்கலாம். அதாவது நாம் ருஷியாவின் ஆதரவைப் பெற்று இங்கிலாந்திற்கு விரோதமாகத் திரும்பியிருக்கலாம்.

ஆனால் இன்றுள்ள நிலைமை முற்றிலும் வேறு. இன்று நாம் ருஷியாவுடன் சேர்ந்து கொள்வதென்பது சாத்தியமல்ல. இன்று உலகிலுள்ள பெரிய வல்லரசுகளெல்லாம் ஒன்று சேர்ந்து வருவது நமக்கு ஓர் எச்சரிக்கையாகும். நம் ஜனங்கள் வீண் கனவுகளை எல்லாம் விட்டுவிட்டு உண்மை நிலைமையை உணர்ந்து கொள்ள வேண்டும். பழைய ஜெர்மனி மீண்டும் வெற்றிகரமாக முன்னணிக்கு வருவது நம் கையிலேயே இருக்கின்றது. ஆகையால் தேசிய அபேதவாத இயக்கத்தினர் கனவுகளையும், கற்பனைகளையும் உதறித் தள்ளி, பகுத்தறிவுடன்

நடந்துகொள்ளும் பட்சத்தில், 2578ம் (1918) வருஷத்திய மகத்தான உற்பாதமே, நம் தேசத்தின் எதிர்கால க்ஷேமத்திற்கு எல்லையற்ற ஒரு வரப்பிரசாதமாக முடியும். அப்படிப் பிணையிலிருந்து நம் தேசம் அதன் வெளிநாட்டுக் கொள்கையைப் புதிய முறையில் அமைத்துக் கொள்ளலாம். உள்நாட்டில் பலமுள்ள ஜெர்மனிதான் வெளிநாட்டுக் கொள்கையையும் திருப்திகரமான முறையில் வகுக்க முடியும். அப்படியானால்தான் ஜெர்மனி என்றும் பிரயோஜனகரமாக இருக்கக் கூடிய ஓர் அரசியல் சாஸனத்தை அமைத்துக் கொள்ள முடியும். வெளியுலக விஷயத்தில் ஜெர்மனி அனுஷ்டிக்க வேண்டிய விதிகளடங்கிய அரசியல் சாஸனம், கீழ்க்கண்ட விவரங்களை ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டும்.

ஐரோப்பாவில் இரண்டு பெரிய வல்லரசுகளேற்படும்படி ஒருபோதும் விட்டு விடக் கூடாது. ஜெர்மனி மீது கண்ணோட்டத்துடன், ஜெர்மன் எல்லையில் மற்றொரு ராணுவ வல்லரசை உருவாக்குவதற்கான முயற்சி நடைபெறுமாயின், ராணுவ முறைகளுள்பட சகல முறைகளையும் உபயோகித்து அதைத் தடுப்பதும், அத்தகைய வல்லரசு ஏற்பட்டால் அதை நசுக்குவதும் ஜெர்மனியின் ஓர் உரிமை மாத்திரமல்ல, கடமையுமாகும். நம் தேசத்தின் பலம் காலனிகளை அஸ்திவாரமாகக் கொண்டில்லை என்பதையும், ஐரோப்பாவிலுள்ள நம் சொந்த எல்லையையே அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறதென்பதையும் நாம் உணர்ந்து கொள்ள வேண்டும். நம் குலத்தில் உதித்த ஒவ்வொருவருக்கும் சொந்தமாக ஒரு துண்டு நிலமாவது கொடுக்கக் கூடிய நிலைமையில் ஜெர்மனி இருந்தாலன்றி, அது ஆபத்திலிருந்து விடுபட்டதாகக் கருதமுடியாது. இவ்வுலகில் சகல உரிமைகளையும் காட்டிலும் மிகமிகப் புனிதமான உரிமை, தான் வேளாண்மை செய்ய விரும்பும் பூமியில் மனிதனுக்குள்ள உரிமைதான். மிகமிகப் புனிதமான தியாகம் அத்தகைய உரிமைக்காக இரத்தம் சிந்துவதுதான்.

ஏற்கனவே குறிப்பிட்டுள்ள ஒரு விஷயத்தை மீண்டுமொரு முறை வற்புறுத்திக் கூறாமல் இந்த அத்தியாயத்தை முடிக்க நான் விரும்பவில்லை. அதாவது இத்தாலியுடனும், இங்கிலாந்துடனும், ஜெர்மனி ஒப்பந்தம் செய்து கொள்ளுவதுதான் பிரயோஜனகரமாக இருக்கும். அத்தகைய ஒப்பந்தமானது ராணுவ ரீதியாகவும் ஜெர்மனிக்கு முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும். அவ்வித ஒப்பந்தத்தை பிரான்ஸ் எதிர்க்குமென்றாலும், அது யுத்தம் தொடரக் கூடிய நிலைமையிலிராது. அதன் பயனாக ஜெர்மனிக்கும் அவகாசமேற்படும். பிரான்ஸுடன் கணக்கு வழக்குகளைத் தீர்த்துக் கொள்ளுவதற்கான முஸ்தீப்புகளை அது எப்போது யாதொரு தடையுமின்றி செய்து வரமுடியும்.

ஜெர்மனி மீது திடீரென படையெடுக்கப் படலாமென்ற பீதியும் அவ்வொப்பந்தத்தின் காரணமாக தீர்ந்துவிடும். நம் ஜனங்களின் ஜன்ம விரோதியான பிரான்ஸை ஒதுக்கி வைப்பதற்கு அதுதான் உற்றவழி. கொள்கைகளை முக்கியமாகக் கொண்டு நம் இயக்கமானது திட்டமான முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்.

அவ்வித ஒப்பந்தத்தின் பயனாக ஜெர்மனி தற்போதைய அதிருப்திகரமான ராணுவ தந்திர நிலைமையிலிருந்து விடுதலையடையும். மற்றும் அந்த ஒப்பந்தத்தினால் அதற்கு ஓர்புறம் பலமான பாதுகாப்பு ஏற்படுவதுடன், மற்றொருபுறம் அது தனக்கு வேண்டிய உணவுப் பொருட்களையும் மூலப் பொருட்களையும் இறக்குமதி செய்ய முடியும். இவையெல்லாவற்றையும் காட்டிலும் மற்றொரு முக்கிய சாதகமும் உண்டு. அத்தகைய ஓர் ஒப்பந்தத்தில், யந்திரத் தொழில் திறமையுள்ள நாடுகளும் கலந்து கொள்ளுமாதலால், பரஸ்பரம் மிகுந்த பலனேற்படும்.

இதுவரை ஜெர்மனியின் நேச தேசங்கள் அதன் பொருளாதார இரத்தத்தை உறிஞ்சும் பிசாசுகளாகவே இருந்து வந்துள்ளன. ஆனால் மேலே குறிப்பிட்ட ஒப்பந்தத்தின் மூலம் எதிர்காலத்தில் அந்த துன்பமிராது. அதற்கு மாறாக, ஒப்பந்த நாடுகள் நம்முடைய யந்திர சாதனங்களைப் பூர்த்தி செய்வதற்கும் உதவியாக இருக்கும்.

இறுதியாக மற்றோர் உண்மையையும் நாம் மறந்துவிடக் கூடாது. அதாவது, பிரஸ்தாப ஒப்பந்தத்தின் மூலம் நாம் நட்புக் கொள்ளும் நாடுகள், சென்ற யுத்தத்தில் ஜெர்மனி நேசங்கொண்ட அழுகிய பிணங்களைப் போன்ற நாடுகளாக இரா.

அவ்வித ஒப்பந்தம் செய்து கொள்ளுவதில் எவ்வளவோ கஷ்டங்களும், இடையூறுகளுமேற்படும். ஆனால் அவைகளை நாம் லட்சியம் செய்யக் கூடாது. திறமையுடனும், தைரியத்துடனும் அவைகளைச் சமாளித்து வெற்றி பெற வேண்டும். சென்ற பல வருஷங்களாக நாம் அனுஷ்டித்து வந்த விபரீத வெளிநாட்டுக் கொள்கையே நமது பரிதாபகரமான நிலைமைக்குக் காரணம். எனவே அதை அறவே ஒழித்துவிட்டு, திட்டமான லட்சியத்தை நோக்கி வழுவின்றியும், உறுதியுடனும் முன்செல்ல வேண்டும்.

ஜெர்மன் ஜனங்களுக்கு அவசியமான பிரதேசங்களை கிழக்கே ஆர்ஜிதம் செய்து கொள்ளுவதே ஜெர்மனியின் லட்சியமாக இருக்க வேண்டும். அதை முக்கியமாகக் கொண்டுதான் நம் வெளிநாட்டுக் கொள்கையும் வகுக்கப்பட வேண்டும். அக்கொள்கையை நாம் நிறைவேற்றுவதற்கு இடையூறாக இருப்பது பிரான்ஸ்தான். ஆகையால் ஐரோப்பாவில் பிரான்ஸின் ஆதிக்கத்தை ஒழிக்க நாம் எத்தகைய தியாகம் செய்யவும் தயங்கக் கூடாது. பிரான்ஸின் பேராசையை வெறுக்கும் சகல ஐரோப்பிய

நாடுகளுடனும் நாம் நட்புக் கொள்ள வேண்டும். அவ்விதம் நட்புக் கொள்ளுவதில் எவ்வளவு கஷ்டங்களிருப்பினும், அவைகளை எல்லாம் தகர்த்தெறிய சகல தியாகங்களும் செய்து, இறுதியில் வெற்றி பெற வேண்டும். மூல ரணம் ஆற வழிசெய்துவிட்டால், பின்னர் சில்லறை ரணங்களை ஆற்றுவது சுலபமாகிவிடும்.

ஆம், நமது உள்நாட்டு விரோதிகள் நமக்கு விரோதமாகக் கூக்குரலிட்டு ஆவேசங்கொள்ளலாம், ஆத்திரமடையலாம். எனினும் தேசிய அபேதவாதிகளான நாம் அதற்குப் பயந்து நமது ஆழ்ந்த கொள்கையை வலியுறுத்தாது விட்டுவிட முடியாது. அதற்கு விரோதமாக வெறிபிடித்த யூதர்கள் வெகுஜன அபிப்பிராய வெள்ளத்தின் வேகத்தைத் தூண்டிவிடுவர். அந்த வெள்ளத்தின் அலைகள் பிரமாதமாக கர்ஜிக்கும், நம்மீது சீறியும் விழும். இருந்தாலும் பொதுஜன அபிப்பிராய வெள்ளம் போகும் பக்கம் செல்லுவோர் அதிக கவனத்தை இழுப்பதில்லை, அதை எதிர்ப்பவர்கள்தான் கூக்குரலையும் கோபத்தையும் சமாளிக்கும்படி நேருகிறது. இன்று நாம் ஆற்றிலுள்ள ஒரு பாறை போலிருந்து வருகிறோம். இன்னும் சில வருஷங்களில் விதியானது நம்மை ஓர் அணைக்கட்டு போலாக்கலாம். பின்னர் பொதுஜன வெள்ளத்தின் வேகம் குறையும், அதைப் புதிய வழியிலும் செலுத்த முடியும். அத்தகைய கடமையை நாம் நிறைவேற்ற வேண்டுமென்பது தான் கடவுளின் கட்டளை. நமது இயக்கமானது நிர்ணயமான, உறுதியான ஓர் அரசியல் திட்டத்தின் பிரதிநிதி ஸ்தாபனமென்பதை இதர உலகமானது உணர்ந்து கொள்ளும்படி செய்ய வேண்டியது அவசியம்.

நாம் தவிர்க்கவும், தப்பவும் முடியாத அவசியம்தான் நமது வெளிநாட்டுக் கொள்கையை நிர்ணயிக்கின்றதென்ற உண்மையை நாம் அறிந்து கொள்வதன் மூலம் நமக்கு மன உறுதியும், தைரியமும் ஏற்படும். பகைப் பத்திரிகைகள் நம் மீது செய்யும் பீரங்கிப் பிரயோகத்தையும், நாம் விடாப்பிடியாக இருக்கக் கூடாதென்றும், ஆங்காங்கு சிறிதளவு விட்டுக் கொடுக்க வேண்டுமென்றும், சிற்சில சமயங்களில் மற்றவர்களுடன் நாமும் சேர்ந்து ஊளையிட வேண்டுமென்றும் நமக்கு ரகசியமாக துர்ப்போதனை செய்வோரையும் உறுதியுடன் சமாளித்து நிற்க அத்தகைய தைரியம் நமக்கு வேண்டியது அத்தியாவசியமாகும்.



## 15. தற்காப்பு உரிமை

**2578** (1918) நவம்பர் மாதம் நாம் ஆயுதங்களைக் கீழே வைத்தபோது, சிறிது சிறிதாக நம்மைப் பூர்ண அடிமைத் தனத்தில் ஆழ்த்தக் கூடிய ஒரு கொள்கை அனுஷ்டிக்கப்பட்டு வந்தது. முற்றிலும் நிர்ப்பந்தமின்றி ஆயுதங்களைக் கீழே வைக்கும் நாடுகள், மீண்டும் ஆயுதங்களைக் கைக்கொண்டு தங்கள் விதியை மாற்றிக் கொள்வதைக் காட்டிலும் மகத்தான அவமதிப்புகளுக்கும், தண்டக் கடன்களுக்கும் உட்படுவதையே மேலென்று நினைக்கும். இதற்குச் சரித்திரத்தில் உதாரணங்கள் உள.

வெற்றி பெற்ற புத்தசாலியொருவன், தோல்வியடைந்தவனிடமிருந்து சிறியதாகவே தன் தண்டத்தை வற்புறுத்திப் பெறுவான். தங்களுடைய ஒழுக்க பலத்தையெல்லாம் இழந்த ஜனங்கள் விஷயத்தில், விட்டுவிட்டுக் கொடுமையிழைத்தால், அதற்காக அவர்கள் ஆயுதங்களெடுக்க முற்படமாட்டார்கள் என்பதை வெற்றி பெற்ற புத்திசாலிகள் அறிந்து கொள்ளுவர். அவர்கள் ஏககாலத்தில் தங்கள் நிபந்தனைகளை எல்லாம் வற்புறுத்த மாட்டார்கள். ஒவ்வொரு நிபந்தனையாக வற்புறுத்தும் பட்சத்தில், தோல்வியடைந்த நாடு அந்த ஒரு காரணத்திற்காக ஆயுதமெடுக்க விரும்பாதல்லவா! இவ்வுண்மையை கிளாஸ் விட்ஸ்* என்ற அறிஞர் அற்புதமாக விளக்கியுள்ளார். கோழைத்தனமாகப் பணிவதன் மூலமேற்படும் வெட்கக்கேடான களங்கத்தை ஒருநாளும் அகற்ற முடியாது. அவ்விதம் ஒரு தேசத்தின் இரத்தத்தில் பாயும் விஷம் தலைமுறை தலைமுறையாக இருந்தே தீரும். அது பிற்கால சந்ததிகளின் பலத்தைச் சீர்குலைத்துவிடும். ஆனால் ஒரு தேசம் இரத்தம் சிந்தியும், கௌரவமாகவும் போராடியபின் அது தன் சுதந்திரத்தை இழந்தாலும் கூட, அதன் ஜீவ சக்தியிலிருந்து ஒருநாள் ஒரு புதிய விருக்ஷமானது யாராலும் அசைக்க முடியாத உறுதியான ஆணிவேர்களுடன் உண்டாகிவிடும்.

கௌரவ உணர்ச்சியையும், ஒழுக்க பலத்தையும் அடியோடு இழந்த ஒரு தேசமானது அத்தத்துவத்தின் உயர்வை அறிந்து கொள்ள முடியாது. ஆனால் அத்தகைய நிலைமை காரணமாக

---

*கார்ல் வான் கிளாஸ்விட்ஸ் 2440ல் (1780) பிறந்து 2491ல் (1831) காலமானார். அவர் ஒரு பிரபல ப்ரஷ்ய தளபதி. சிறந்த எழுத்தாளரும் கூட. ராணுவ விஷயங்கள் பற்றி அவர் அரிய நூல்கள் எழுதியுள்ளார். சென்ற மகா யுத்தத்தின்போது பிரிட்டன் முதலிய நாடுகள், அவரது நூல்களை ஆதாரமாகக் கொண்டுதான் தங்கள் பிரசாரத்தை நடத்தின.

மனம் புழுங்கும். ஒரு தேசம் ஒரு நாளும் அடியோடு வீழ்ச்சியுறாது. அதை மறப்பவர்கள்தான் வீழ்ச்சியடைவார்கள். கோழைத்தனமான பணிவிற்குப் பொறுப்பாளிகள், திடீரென தங்கள் நிலைமையை மாற்றிக் கொண்டு, பகுத்தறிவையும், அனுபவத்தையும் ஆதாரமாகக் கொண்ட வழியைப் பின்பற்றுவார்களென்று எதிர்பார்ப்பது முடியாத காரியம். அதற்கும் மாறாக அவர்கள் அக்கொள்கையை எதிர்க்கவே முற்படுவார்கள். இதற்குப் பரிகாரமென்னவெனில், ஒன்று அடிமைத்தனத்திற்கு அடிபணிவதென்பது ஜனங்களுக்கு வழக்கமாகிவிட வேண்டும், அல்லது தேசத்திலுள்ள அறிஞர்கள் முன்னணிக்கு வந்து, அபகீர்த்தியும் ஊழலும் நிறைந்த ஆட்சியினரிடமிருந்து அதிகாரத்தைப் பலாத்காரமாகக் கைப்பற்றிவிட வேண்டும். வெற்றி பெற்றவர்கள், தாங்கள் வெற்றியடைந்த இடத்திலுள்ள அடிமைப் பிரியர்களுக்கு, மற்ற அடிமைகளை நாட்டாண்மை செய்யும் அதிகாரத்தை ஒப்புவிப்பார்கள். அதனால் அடிமைப் பிரியர்கள் உச்சி குளிர்ந்து தங்கள் அதிகாரத்தைத் தங்களுடைய சொந்த ஜனங்களுக்குப் பிரதிகூலமாகவே உபயோகிப்பார்கள். கொடிய ஹிருதயம் படைத்த அன்னியரைக் காட்டிலும் அதிக கொடுமையாக அவர்கள் தங்கள் சொந்த ஜனங்களை நடத்துவார்கள்.

*2578*ம் (*1918*) வருஷத்திற்குப் பின் ஜெர்மனியில் நிகழ்ந்த சம்பவங்களைக் கவனிப்போமாயின், வலுவில் தாங்களாகப் பணிந்து நடப்பதன் மூலம் வெற்றி பெற்றவரின் தயவைச் சம்பாதிக்கலாமென்ற நம்பிக்கையானது, மகத்தான ஆபத்திற்குக் காரணமாயிருந்ததை அறிந்து கொள்ளலாம். யுத்தத்திற்குப் பின் நமது விதியானது யூதர்களின் கையிலிருந்தது. அப்போது நிலவி வந்த நிலைமையை ஜெர்மன் தலைவர்கள் சரிவர அறிந்து கொள்ளாததுதான் நம்முடைய துரதிர்ஷ்டத்திற்குக் காரணமென்று கூறுவது முடியாத காரியம். அதற்கு மாறாக, நம் ஜனங்கள் வேண்டுமென்றே அழிவு மார்க்கத்தில் செலுத்தப்பட்டார்கள். இவ்விஷயத்தை நாம் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்வோமாயின், நம் தேசத்தின் வெளிநாட்டுக் கொள்கை மடத்தனமானதல்ல என்பதும், உலக எஜமானர்களாக வேண்டுமென்ற யூதர்களின் ஆசைக்கிணங்க நிதானமாகவும், அமைதியாகவும், தீர்க்காலோசனையுடனும் வகுக்கப்பட்டுள்ள ஒரு சதி திட்டத்தை ஆதாரமாகக் கொண்டதென்பதும் தெரியவரும்!

*2466* (*1806*)லிருந்து *2473* (*1813*) வரை ப்ரஷ்யா உருக்குலையும் நிலையிலிருந்தது. எனினும் தேசத்தின் ஜீவசக்தியைப் புதுப்பிக்கவும், மீண்டும் உறுதியுடன் போராடுவதற்கான

உத்வேகத்தை உண்டுபண்ணவும் அக்காலம் போதுமானதாக இருந்தது. ஆனால், 2578 (1918)லிருந்து இன்றுவரை அதே காலமாகிவிட்டதெனினும், அதை நாம் சரிவர பயன்படுத்திக் கொள்ளவில்லை. அதற்கு மாறாக நம் தேசத்தின் ஜீவசக்தியானது உறிஞ்சப்படவும் நாம் இடங்கொடுத்து விட்டோம்.

2578 (1918) நவம்பர் மாதத்திலிருந்து 7 வருஷங்களுக்குப் பின் லொகார்னோ உடன்படிக்கை கையெழுத்தாயிற்று. வெட்கக் கேடான அந்த சமாதான உடன்படிக்கை கையெழுத்தானதிலிருந்து, நம் விஷயத்தில் அடிக்கடி புதிது புதிதாகக் கொடிய அடக்குமுறைகள் கையாளப்பட்டன. நம் எதிரியின் அத்தகைய நடவடிக்கைக்கு முற்றுப்புள்ளி வைக்கக் கூடிய தைரியமும், சக்தியும் நம் ஜனங்களிடமில்லை. பகைவரும் புத்திசாலிகளானதால் ஒரே சமயத்தில் எல்லா நிபந்தனைகளையும் விதிப்பதில்லை. குறிப்பிட்ட ஒரு சமயம் எந்த ஒரு நிர்ப்பந்தத்திற்கு நாம் உடன்பட முடியுமெனத் தோன்றுகிறதோ, அத்துடன் மாத்திரம் நின்று வந்தார்கள். பொது ஜனங்களின் உணர்ச்சி திடீரென பீறிட்டெழும் படியான காரியமெதையும் செய்ய அவர்கள் துணிவதில்லை. அவ்விதம் நாளடைவில் நிர்ப்பந்தத்திற்கு மேல் நிர்ப்பந்தமாக அடுக்கப்பட்டு வந்தன. அவையெல்லாம் சகிக்கப்பட்டு வந்ததால், ஒரே ஒரு நிர்ப்பந்தத்தையொட்டி மாத்திரம் கொதித்தெழுவதும் நியாயமானதாகத் தோன்றவில்லை. கிளாஸ்விட்ஸ் கூறியிருப்பது போல், இன்று ஜெர்மன் சமூக சரித்திரத்தில் அவ்விதம் கொஞ்சம் கொஞ்சமாக விஷம் செலுத்தப்பட்டு வருகிறது. கழுத்தைச் சுற்றிக் கட்டப்பட்ட பளுவு, அவ்வாறாக நாளுக்குநாள் அதிகமாகி தேச விடுதலைக்கே வகையிராமல் போய்விடலாம். பிறகு ஜெர்மனி அடிமை வாழ்வைத் தொடர்ந்து வருவதைத் தவிர வேறு கதியிராது.

ஆயுத பரிகரணம், கொடுமை, பொருளாதாரக் கொள்ளை முதலியன ஒன்றன்பின் ஒன்றாக வந்து நம்மை நிர்க்கதியாக்கின. அதன் காரணமாக டாஸ் திட்டத்தை ஒரு வரப்பிரசாதமாகவும், லொகார்னோ உடன்படிக்கையை ஒரு மகத்தான வெற்றியாகவும் கருதும்படியான மனோநிலைமையும் ஜனங்களிடையே உண்டாயிற்று! எனினும் அவ்வளவு துன்பத்திற்கிடையிலும் ஒரே ஒரு மகத்தான நன்மையை நாம் குறிப்பிடலாம். அதாவது மனிதர்களைத்தான் மண்டியர்களாக்கிவிட முடியுமேயன்றி, கடவுளுக்கு லஞ்சம் கொடுத்து அவரை ஏமாற்றிவிட முடியாது. அத்திட்டத்திற்கும், உடன்படிக்கைக்கும் ஆண்டவனின் ஆசீர்வாதம் கிடைக்கவில்லை. அதன் காரணமாக துன்பமும், கவலையும் நம் ஜனங்களின் இடைவிடாத நண்பர்களாயிருந்து

வந்துள்ளன. சொல்லொணா மனோவேதனையும், மிகுந்த விசுவாசத்துடன் நம்மைப் பிரியாதிருந்து வந்தது! எனினும் விதி பாரபட்சம் காட்டாதல்லவா? கௌரவத்தின் மகிமையை நாம் அறிந்து கொள்ளாததால், உணவை நாடும் சுதந்திரத்தின் மதிப்பையாவது அறிந்து கொள்ள அது நமக்குக் கற்றுக் கொடுத்தது. உணவிற்காகக் கதற இப்போது நம் தேசம் கற்றுக் கொண்டு விட்டதால், ஒருநாள் அது சுதந்திரத்திற்காகவும் பிரார்த்திக்கக் கற்றுக் கொள்ளலாம்.

2578ம் (1918) வருஷத்திற்குப் பின் ஏற்பட்ட நம் தேசத்தின் வீழ்ச்சி மிகவும் துக்ககரமானது. அப்படியிருந்தும் அவ்வமயம்தான் நம் விரோதிகள் நம்மைப் பலவிதத்திலும் துன்பத்திற்குள்ளாக்கினர். நம் சர்க்காரின் திறமையின்மை பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. ஒருவித சாமர்த்தியமுற்ற பேர்வழிகள் திடீரென ராஜதந்திரிகளாகி, உயர்ந்த பீடத்திலிருந்து சாதாரண ஜனங்களுக்கு உபதேசம் செய்யத் தொடங்கினர். அத்தகையோரின் திறமையின்மையை எடுத்துக் காட்டும் துணிச்சலுடையவர்கள் மீது, அந்த ராஜதந்திரிகள் தங்களுடைய கோபத்தை எல்லாம் செலுத்தி அவர்களைத் துன்புறுத்தினார்கள், இன்றும் துன்புறுத்தி வருகிறார்கள். தங்களுடைய தவறுகளை மறுக்க முடியாத நிலைமை ஏற்பட்டாலும், அவர்கள் அதற்கு ஏதாவது சாக்குச் சொல்லி தப்பித்துக் கொள்ள முற்படுவார்களே ஒழிய, தங்கள் தவறை மாத்திரம் ஒருநாளும் ஒப்புக் கொள்ளுவதில்லை.

ஜெர்மனியைப் பிளந்து, அது பற்பல சில பிரதேசங்களாக சிதறும்படி செய்ய வேண்டுமென்பதே பிரான்ஸின் நோக்கம். யுத்தத்திற்குப் பின்னரும் கூட அது அந்த நோக்கத்தைக் கைவிடவில்லை. பாரிஸிலுள்ளவர்கள் முதலில் நம்பியது போல், ஜெர்மன் பூமியில் யுத்தம் நடந்திருக்குமாயின் பிரான்ஸின் யுத்த நோக்கங்கள் பூர்த்தியாகியிருக்கும். உலக யுத்தமானது மற்ற விடங்களில் நடைபெறாமல் ஜெர்மனியில், உதாரணமாக ரூரிலோ, மெயினிலோ, எல்பியிலோ, லீப்ஸிக்கிலோ நடந்திருக்குமாயின், ஜெர்மனியின் அழிவு பூர்த்தியாகியிருக்கலாம். ஆனால் ஜெர்மனிக்கு வெளியிலேயே யுத்தம் நடந்தது நம் தேசத்தின் அதிர்ஷ்டமே. அதனால்தான் யுத்தத்தில் நம் நண்பர்களும், சகோதரர்களும் சிந்திய இரத்தம் வீண் போகவில்லை.

2578 (1918) நவம்பர் மாதம் ஜெர்மனி, மின்னல் வேகம் போன்று திடீரென வீழ்ச்சியுற்றது. அந்த உற்பாதம் ஜெர்மனியில் நிகழ்ந்தபோது ஜெர்மன் துருப்புகளோ பகைவர் தேச மத்தியிலிருந்தன. அப்போது பிரான்ஸின் மனதை ஆட்டிக் கொண்டிருந்த ஒரே எண்ணம், எவ்விதம் ஜெர்மனியைப் பலகூறுகளாக்குவதென்பல்ல. பிரான்ஸிலிருந்தும்,

பெல்ஜியத்திலிருந்தும் ஜெர்மன் துருப்புகளை எவ்வளவு துரிதமாக வெளியேற்ற முடியுமோ அவ்வளவு துரிதமாக வெளியேற்ற வேண்டுமென்பதே பிரான்ஸின் பெரும் பிரச்னையாக இருந்தது. யுத்தத்தை நிறுத்துவதற்கு முதற்படியாக பாரிஸ் சர்க்கார் செய்ய வேண்டியிருந்த முதல் காரியம், ஜெர்மன் துருப்புகளை நிராயுதபாணிகளாக்கி, சாத்தியமாயின், அவர்களை ஜெர்மனிக்கு மீண்டும் திரும்பிச் சென்றுவிடும்படி செய்வதே. அவ்வாறு செய்தாலன்றி தன்னுடைய மூல யுத்த நோக்கங்களை நிறைவேற்றும் விஷயத்தில் பிரான்ஸ் கவனம் செலுத்த முடியாதல்லவா? இங்கிலாந்து சம்பந்தப்பட்ட வரையில், ஜெர்மனியின் காலனிகளையும், வர்த்தக ஆதிக்கத்தையும் அழித்து அதை இரண்டாந்தர ஓர் வல்லரசாகச் செய்ததுடன் இங்கிலாந்திற்கு உண்மையான வெற்றி கிடைத்துவிட்டது. ஜெர்மனியை அடியோடு துடைத்துவிடுவது இங்கிலாந்தின் நலனுக்கு ஏற்றதல்ல. ஐரோப்பாவில் பிரான்ஸுக்குப் போட்டியாக ஒரு நாடு இருந்துவர வேண்டுமென்பதே இங்கிலாந்தின் நோக்கம். யுத்தத்தினாலேற்பட்ட பாதையில் தொடர்ந்து சென்று சமாதான முறைகளால் தனது கொள்கையைப் பூர்த்தி செய்து கொள்வதைத் தவிர பிரான்ஸுக்கு வேறு வழியிராமற் போயிற்று.

சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் ஜெர்மனியைச் சீர்குலைக்கும் முயற்சியைத் தொடர்ந்து நிறைவேற்றுவதே பிரான்ஸின் கொள்கை. சமாதானமானது போரின் தொடர்ச்சியேயென கிளெமன் ஷோ* அப்போது கூறியதன் தத்துவமும் அதுதான். ஒருபுறம் ஜெர்மனி விஷயத்தில் அது ஆயுதபரிகரணத்தை வற்புறுத்தியது. மற்றொருபுறம் பொருளாதார தண்டங்களைச் சுமத்தியது. அவைகளின் பயனாக ஜெர்மனி நாளாவட்டத்தில் துண்டு துண்டாகிவிடுமென பாரிஸில் நம்பிக்கை நிலவியது. எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக ஜெர்மானியர்கள் தங்கள் தேசீய கௌரவ உணர்ச்சியை இழந்தனரோ, அவ்வளவுக்கவ்வளவு அதிகமாக அவர்களின் அரசியல் அழிவிற்கான பொருளாதார நிர்ப்பந்தங்களையும் பிரான்ஸுக்கு ஜெர்மனி மீது சுமத்த முடிந்தது. அக்கொள்கை நீடித்திருக்கும் பட்சத்தில், 10 அல்லது 20 வருஷ காலம்

---

* ஜார்ஜஸ் பெஞ்ஜமின் கிளெமன்ஷோ 2501ல் (1841) ஜனனமானார். 2589ல் (1929) காலமானார். சிறந்த பிரெஞ்சு ராஜதந்திரி. சென்ற மகா யுத்தத்தின்போது பிரான்ஸில் மிகுந்த செல்வாக்குடன் விளங்கியவர். 2577ல் (1917) பிரெஞ்சு பிரதம மந்திரி பதவிக்கு வந்தவர். 2579ம் (1919) வருஷம் பாரிஸில் நடந்த சமாதான மகா நாட்டிற்குத் தலைமை வகித்தவர்.

எவ்வளவு கட்டுக்கோப்பான தேசமும் தகர்ந்துவிடுமென்பதில் சந்தேகமில்லை. அவ்விதம் நீடித்திருந்தால் பிரான்ஸின் யுத்த நோக்கங்களும் நிச்சயமாகப் பூர்த்தி பெற்றிருக்கும்.

அவ்வித நிர்ப்பந்தங்களைச் சமாளித்து நிற்க, ஜெர்மனிக்கு இரண்டே வழிகள்தான் இருந்தன. ஒன்று, ஜெர்மனிக்கு சகல நிர்ப்பந்தங்களையும் அஞ்சா நெஞ்சத்துடன் சகித்து வருவதன் மூலம் நாளடைவில் பிரெஞ்சு உறுதியின் முனை மழுங்கிவிடும்படி செய்யலாம், அல்லது ஏதாவது ஒரு கொடிய அடக்குமுறையைக் காரணமாகக் கொண்டு, ஜெர்மன் அரசாங்கமாகிற கப்பலைப் பகைவர்கள் மீது மோதி அவர்கள் நிலைகுலையும்படி செய்யலாம். என்றாவது ஒருநாள் அத்தகைய தவிர்க்க முடியாத சம்பவம் நிகழ்ந்துதான் தீரப் போகிறது. அதன் விளைவாக, ஒன்று வாழ்வு அல்லது வீழ்ச்சி என்ற கோர யுத்தத்தில் ஜெர்மனி இறங்கும்படியே நேரும். அத்தகைய ஒரு போராட்டத்திலிருந்து ஜெர்மனி உயிருடன் வெளிவருவதென்பது, ஒரே ஒரு விஷயத்தையே பொறுத்திருக்கிறது. அதாவது அவ்வித இரண்டாவது யுத்தத்தில் பிரான்ஸ் தனித்து நிற்கும்படி செய்துவிட வேண்டும். உலக அமைதியைக் குலைத்து வரும் ஒரு பிரான்ஸை எதிர்த்து மாத்திரம் ஜெர்மனி போராட வேண்டுமேயன்றி, அது முன்போல் உலக நாடுகளையெல்லாம் விரோதித்துக் கொண்டுவிடக் கூடாது.

என்றிருந்தாலும் இரண்டாவது முறையை ஜெர்மனி கைக்கொண்டு அதைச் சாதகமாகவோ அல்லது பாதகமாகவோ இறுதி வரை நிறைவேற்றியே தீர வேண்டியிருக்கும். பிரான்ஸ் நம் விஷயத்தில் அதன் நோக்கத்தைத் தானாக வலுவில் மாறிக் கொண்டுவிடாது. ஏனெனில், நான் ஒரு பிரெஞ்சுக்காரனாயிருந்து, ஜெர்மனியின் பெருமையிலும் க்ஷேமத்திலும் எனக்கு இப்போது எவ்வளவு சிரத்தையிருக்கிறதோ, அவ்வளவு சிரத்தை பிரான்ஸ் விஷயத்திலும் இருக்குமாயின் நானும் ஒரு கிளெமன்ஷோவைப் போன்றே நடந்து கொள்ளுவேன்.

பிரான்ஸ் சம்பந்தப்பட்ட வரையில் ஜெர்மனி தற்காப்பு முறைககளை மாத்திரமே அனுஷ்டித்து வருமாயின் அது ஒவ்வொரு பிரதேசமாக இழக்கும்படியே நேரும். ஆகையால் இருப்பதா அல்லது இறப்பதா என்ற ஓர் யுத்தத்தில் ஈடுபட்டால்தான் அந்த மற்ற பிரெஞ்சு - ஜெர்மன் தகராறை ஒரு முடிவிற்குக் கொண்டு வரலாம். மற்றும் பிரான்ஸை அடக்கினாலன்றி ஜெர்மானியர் முன்னேற வழியில்லை. இன்று ஐரோப்பாவில் 8 கோடி ஜெர்மானியர்கள் இருக்கின்றனர். இன்னும் 100 வருஷங்களுக்குள் இக்கண்டத்தில் 25 கோடி ஜெர்மானியர் வசிக்க வேண்டும், அவர்கள் மற்றொரு கண்டத்திலுள்ள தொழிற்சாலைகளில் கூலிகளாக அடைபட்டுக் கிடக்கக்

கூடாது. தங்கள் வாழ்க்கைக்குப் போதுமான பூமியையுடைய விவசாயிகளாகவும் தொழிலாளர்களாகவும் திகழ வேண்டும். அப்படியானால்தான் நமது வெளிநாட்டுக் கொள்கை சிறந்த முறையில் அனுஷ்டிக்கப்பட்டு வந்துள்ளதென்று எதிர்காலத்தில் கருதப்படும்.

*2582 (1922)* டிசம்பர் மாதம் ஜெர்மனிக்கும், பிரான்ஸுக்கும் இடையே நிலைமை பீதியை உண்டுபண்ணத் தொடங்கியது. ஜெர்மனியை ஒடுக்குவதற்கான பரந்த முறைகளை பிரான்ஸ் வகுத்து வந்தது. முதலில் அரசியல் நிர்ப்பந்தத்தைப் பிரயோகிக்க வேண்டும், அடுத்து பொருளாதாரக் கொள்கையில் ஈடுபட வேண்டும், இதுதான் பிரான்ஸின் நோக்கம். ஜெர்மனியின் ஹிருதய ஸ்தானத்தைத் தாக்கினால்தான், "அடங்காப்பிடாரி" களான ஜெர்மானியர்களைத் தங்களுடைய கொடுமைக்கு அடிபணியும்படி செய்ய முடியுமென பிரான்ஸ் நம்பியது. ரூர் ஜில்லாவை ஆக்கிரமித்துக் கொண்டால் ஜெர்மனியின் கௌரவமும், பெருமையும் இறுதியாகச் சிதைந்துவிடுமென்றும், பின்னர் அதன் தலையில் எத்தகைய கடுமையான பொருளாதார நிபந்தனைகளையும் சுமத்த முடியுமென்றும் பிரான்ஸில் நம்பிக்கை நிலவியது. ரூர் பிரதேசம் ஆக்கிரமிக்கப்பட்டதன் மூலம் மீண்டும் விதியானது ஜெர்மனிக்கு உதவியாகக் கைகொடுக்க முற்பட்டு, ஜெர்மன் ஜனங்களைத் தட்டி எழுப்பியது. ஒரு மகத்தான துரதிர்ஷ்டமென்று தோன்றும் அச்சம்பவத்தில், ஜெர்மனியின் துயரம் அடியோடு தொலைவதற்கான உற்சாகத்தை அளிக்கக் கூடிய அம்சங்களும் அடங்கியிருந்தன.

பிரான்ஸின் அச்செய்கையானது பிரிட்டனுக்கும், இத்தாலிக்கும் மிகுந்த அதிருப்தியை உண்டுபண்ணியது. ஐரோப்பாவிலேயே மிகவும் முக்கியமான இரும்பு, நிலக்கரி சுரங்கங்கள் அவ்விதமாக ஒரு தேசத்தின் ஆதிக்கத்தில் வந்துவிட்டன. அதன் பயனாக பிரான்ஸ் எத்தகைய போட்டியையும் எதிர்த்து நின்று சமாளித்து, அரசியல், வர்த்தகத் துறைகளில் தன் பலத்தைப் பெருக்கிக் கொள்ளவும் வழியேற்பட்டது. தவிர ரூர் நிலக்கரிச் சுரங்கங்களை பிரான்ஸ் ஆக்கிரமித்துக் கொண்டது, யுத்தத்தில் இங்கிலாந்து பெற்ற வெற்றிகளையெல்லாம் சூன்யமாக்கிவிட்டது. உண்மையில் வெற்றி பெற்றவர் பிரான்ஸின் பிரதிநிதியான மார்ஷல் போக்கேயொழிய பிரிட்டிஷ் ராஜதந்திரிகளல்ல என்ற நிலைமையும் ஏற்பட்டது. அவ்வாறாக நேற்று நேச தேசங்களாக இருந்தவை நாளை சத்துருக்களாகலாமென்று தோன்றியது. எனினும் நிலைமை வேறுவிதமானதற்குக் காரணம் என்னவெனில், ஜெர்மனியின் தலைவராக ஒருவர் என்வர் பாஷா• இராமல், ஒரு கியூனோ இருந்ததுதான்.

இருந்தாலும் பிரான்ஸ் ரூர் பிரதேசத்தை ஆக்கிரமித்தது, ஜெர்மனிக்கு எதிர்காலத்தில் நன்மையளிக்கக் கூடிய மகத்தான சந்தர்ப்பங்களை உண்டுபண்ணியது. ஜெர்மன் வெளிநாட்டுக் கொள்கை சம்பந்தப்பட்ட வரையில் மாத்திரமல்ல, உள்நாட்டு அரசியல் எதிர்கால சம்பந்தமாகவும் பிரமாத சந்தர்ப்பங்கள் கிடைக்க ஹேதுவாயிற்று. புளுகுணிப் பத்திரிகைகளின் இடைவிடாத பிரசாரம் காரணமாக, பிரான்ஸ் முன்னேற்றத்தையும், சுதந்திரத்தையும் பாதுகாக்கும் ஒரு தேசமென நம் ஜனங்களில் பலரும் நினைத்து வந்தனர். ஆனால் பிரான்ஸின் ஆக்கிரமமானது அவர்களுடைய மயக்கத்தைத் தெளிய வைத்தது. ஜெர்மன் தொழிலாளர்களிடையே இருந்து வந்த சர்வதேச ஒற்றுமை என்ற கனவானது *2574ம் (1914)* வருஷம் திடீரென மறைந்தது. நிரந்தரமான போராட்டம் நிலவிவரும் இந்த உலகிற்கு, அதாவது ஒருவர் மற்றொருவரைச் சுரண்டி ஜீவிப்பதையும், பலவீனமுள்ளவர்களின் மரணம்தான் பலம் பொருந்தியவர்களின் வாழ்க்கை என்பதையும் ஆதாரமாகக் கொண்ட இவ்வுலகிற்கு அவர்கள் மீண்டும் கொண்டுவரப்பட்டார்கள். அதே சம்பவம்தான் *2583ம் (1923)* ஆண்டிலுமேற்பட்டது. முதலில் பிரெஞ்சு சர்க்கார் தயங்கிக் கொண்டும், ஜாக்கிரதையாகவும் தென் ஜெர்மனியிலுள்ள நிலக்கரிப் பிரதேசங்களில் பிரவேசித்ததன் மூலம் தங்களுடைய மிரட்டல்களை அமுலுக்குக் கொண்டு வந்தனர். அப்போதே நம் ஜனங்கள் தங்களுடைய போக்கையும், நடவடிக்கையையும் மாற்றிக் கொண்டிருப்பார்களாயின், நெப்போலியனுக்கு மாஸ்கோவில் என்ன கதி நேர்ந்ததோ, அதே கதி ரூர் பிரதேசத்திலும் பிரான்ஸுக்கு நேர்ந்திருக்கும். அப்போது இரண்டே வழிகள் தானிருந்தன. ஒன்று அந்த அக்கிரமத்தையொட்டியும் எத்தகைய நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளாமல் நடப்பது நடக்கட்டும் என்றிருந்து விடலாம், அல்லது ஜெர்மன் ஜனங்களிடையே மகத்தான கொதிப்பும் எழுச்சியும் உண்டாகும்படி செய்யலாம். முடிவற்ற பயங்கர நிலைமைக்குட்படுவதைக் காட்டிலும் தற்காலிக பயங்கர நிலைமையை எதிர்த்து நின்று சமாளிக்கும்படியான உறுதி ஜெர்மன் ஜனங்களுக்கேற்படும்படி செய்திருக்கலாம். ஆனால் அப்போது ஜெர்மன் பிரதம மந்திரியாக இருந்த கியூனோ அவ்விரண்டுமின்றி மூன்றாவது வழியொன்றைக் கண்டுபிடித்தார். அதற்காக ஜெர்மன் அரசியல் கட்சிகள் அவரைப் புகழவும் முற்பட்டன!

மேலே குறிப்பிடப்பட்ட இரண்டாவது வழியைப் பற்றி நான் சுருக்கமாகச் சில விஷயங்களைக் கூற விரும்புகிறேன். ரூர் பிரதேசத்தை பிரான்ஸ் ஆக்கிரமித்துக் கொண்டதன்

மூலம் வர்செயில்ஸ் உடன்படிக்கைக்கு அது முற்றிலும் முரணாக நடந்து கொண்டது. அதனால் பிரான்ஸ் மீது பல நாடுகளுக்கும், குறிப்பாக இங்கிலாந்துக்கும் இத்தாலிக்கும் விரோத பாவமேற்பட்டது. பிரான்ஸின் ஆக்கிரமிப்புக் கொள்கையை அந்நாடுகள் ஆதரிக்க வில்லை. ஆரம்பத்தில் நாம் பிரான்ஸை ஆயுத பலம் கொண்டு எதிர்க்கமுடிந்திராதென்றாலும், அதற்கான பலத்தைப் பெறுவதற்குற்ற முயற்சியையாவது எடுத்துக் கொண்டிருக்க வேண்டும். பிரான்ஸ் எப்போது வர்செயில்ஸ் உடன்படிக்கையை மீற ஆரம்பித்ததோ, அப்போதே நாமும் அதை மீறி நம் பலத்தைப் பெருக்கிக் கொள்ள முற்பட்டிருக்க வேண்டும். சமரசப் பேச்சு நடத்துவதற்கும் ஆயுத பலம்தான் பூர்வாங்கமான ஒரு முக்கிய அம்சமாகும். அந்த அம்சமிராததால்தான் 2578ம் (1918) ஆண்டிற்குப் பின் நடந்த சமரசப் பேச்சுகளெல்லாம் வெறும் கேலிக்கூத்தாக முடிந்தன. அந்த சமரசப் பேச்சுகளில் கலந்து விவாதிக்க ஜெர்மன் பிரதிநிதிகள் அனுமதிக்கப்பட்டார்களெனினும், அவைகளின் பயனாக ஏற்படும் முடிவுகளில் அவர்களுக்குச் சிறிதும் பங்கில்லை. ஏனெனில் எவ்வித முடிவிற்கும் ஜெர்மன் பிரதிநிதிகள் பணிந்து கொடுத்தனர். அதை எதிர்த்து நிமிர்ந்து நிற்பதற்குற்ற போதிய ஆயுத பலமும் அவர்களுக்கில்லை. அதனால்தான் மிகவும் சாதாரண திறமையுள்ள பிறநாட்டுப் பிரதிநிதிகளைக் கூட, ஜெர்மன் பிரதிநிதிகள் சமாளித்து நிற்க முடியவில்லை.

2583ல் (1923) பிரான்ஸ் ரூர் பிரதேசத்தின் மீது படையெடுத்தபோது, ஜெர்மனி அச்சந்தர்ப்பத்தை தன்னுடைய ராணுவ பலத்தைப் புனருத்தாரணம் செய்யும் விஷயமாக உபயோகப்படுத்திக் கொண்டிருக்கலாம். இருந்தாலும் அதற்குப் பூர்வாங்கமாக ஜெர்மனி தான் இழந்துள்ள ஆத்துமார்த்த ஆயுதங்களை மீண்டும் பெற வேண்டும், தன் மனோபலத்தையும் மீண்டும் பெற வேண்டும், தேசிய பலத்தின் முக்கிய அம்சமான அதை அழித்தவர்களை எல்லாம் ஒழித்துவிட வேண்டும்.

2574 -75ல் (1914 -15) நாம் மார்க்ஸ் ஸர்ப்பத்தைக் காலால் மிதித்து ஒழிக்கத் தவறியதால்தான், 2578ல் (1923) நமக்குக் கிடைத்த சந்தர்ப்பத்தையும் கைநழுவ விட்டுவிட்டோம். நம் தேசத்தைத் துரோகம் செய்த, நம் ஜனங்களைக் கொலை செய்த மார்க்ஸ் கட்சியினரை ஒழிக்கத் தவறிய பாவத்திற்காகவே நாம் இப்போது பிராயச்சித்தம் செயப வேண்டியிருக்கிறது. ஐந்து ஆண்டுகளுக்கு முன் உள்நாட்டில் அனர்த்தத்தை உண்டுபண்ணியதன் மூலம் போர்க்களத்தில் ஜெர்மனியின் எதிர்ப்பைத் தகர்த்த பேர்வழிகளை எதிர்த்துப் போராடாமல், பிரெஞ்சு ஆக்கிரமிப்பைச் சமாளிக்க முற்படுவது முற்றிலும் மடத்தனமாகும். போரில் பலியான

20 லட்சம் ஜெர்மானியர்களைப் படிகளாக உபயோகித்து சர்க்கார் உத்தியோக மாடிகளிலேறிய துரோகிகள், திடீரென ஜெர்மன் சுதந்திர வீரர்களாகத் திகழ்வார்களென பலர் எதிர்பார்த்ததும் நம்ப முடியாத ஒரு மடத்தனம். கழுதைப் புலியானது எவ்விதம் செத்தழுகிய பிணத்தை விட்டகலாதோ, அதுபோலவே மார்க்ஸ் வாதிகள் தங்கள் சம்பிரதாய குணமான தேசத் துரோகத்தைக் கைவிட மாட்டார்கள். ஏராளமான தொழிலாளர்கள் ஜெர்மனிக்காக தங்கள் இரத்தத்தைச் சிந்தவில்லையா என்பது மூடத்தனமான கேள்வி. ஆம், ஜெர்மன் தொழிலாளர்கள் உயிரைக் கொடுத்தார்களென்பது உண்மையே. ஆனால் அவர்கள் சர்வதேச மார்க்ஸ் வாதிகளல்ல. 2574ம் (1914) வருஷம் ஜெர்மன் தொழிலாளர் சமூகமானது உண்மையிலேயே மார்க்ஸ்வாதிகளடங்கியதாக இருந்திருக்குமாயின், மூன்றே வார காலத்திற்குள் யுத்தம் முடிந்திருக்கும். முதல் ஜெர்மன் சிப்பாய் தன் எல்லைக்கப்பால் அடியெடுத்து வைக்குமுன்னரேயே ஜெர்மனி உருக்குலைந்து போயிருக்கும். ஜெர்மன் ஜனங்கள் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்தியது, மார்க்ஸ் வாதமானது ஆழ்ந்து பதிந்துவிடவில்லை என்பதையே காட்டியது. எனினும் யுத்தம் தொடர்ந்து செல்லச் செல்ல ஜெர்மன் சிப்பாய்களும், தொழிலாளர்களும் மார்க்ஸ் தலைவர்களின் வலையில் விழ ஆரம்பித்தனர். அவ்விதம் அந்த வலையில் விழுந்தவர்களின் உதவியையெல்லாம் தேசம் இழந்தது. போர்க்களத்தில் லட்சக்கணக்கான சிறந்த ஜெர்மன் தொழிலாளர்கள் விஷப் புகைக்கு இரையாயினரல்லவா? நம் தேசத்தைச் சீர்குலைத்து வந்த 12 அல்லது 15 ஆயிரம் யூதர்களையும், யுத்தம் ஆரம்பமான உடனேயோ அல்லது யுத்தம் தொடர்ந்து நடந்து வந்தபோதோ, விஷப்புகைக்குட்படும்படி வற்புறுத்தியிருந்தால், லட்சக்கணக்கான ஜெர்மன் தொழிலாளர்களின் உயிர்த் தியாகம் வீணாகியிராது. அதற்கு மாறாக, 15 ஆயிரம் பேர்களையும் உற்ற சமயத்தில் ஒழித்திருந்தால், எதிர்காலத்தில் ஜெர்மனிக்கு இன்றியமையாத லட்சக்கணக்கான உத்தமர்கள் ரட்சிக்கப்பட்டிருக்கலாம். நம் நடுத்தர வகுப்பினரின் கண்களிலோ, போர்க்களத்தில் பலியான லட்சக்கணக்கானவர்களைக் குறித்து ஒரு சொட்டு நீர்கூட வரவில்லை. ஆனால் பொதுஜன துரோகிகளும், பேராசைக்காரர்களும், கொள்ளைக்காரர்களுமான 10 அல்லது 12 ஆயிரம் பேர்களை ஒரு புனித தேசீய பொக்கிஷங்களாக அவர்கள் கருதி, அத்தகையோருக்கு எவ்வித பாதகமும் நேரக்கூடாதென்று பிரகடனமும் செய்தனர்! இவர்களின் மனோபலமின்மையையும், கோழைத்தனத்தையும், காலில் விழுந்து பல்லைக் காட்டும் பேடித்தனத்தையும் குறித்து என்ன

சொல்லுவது? அத்தகையோர் பாதாளத்தில் விழுவதைத் தவிர வேறு வழியில்லை. எனினும் அவர்கள் தங்களுடன் ஒரு தேசம் முழுவதையும் பாதாளத்திற்கிழுப்பதுதான் மகத்தான துரதிர்ஷ்டமாகும்.

2583ம் (1923) வருஷத்திய நிலைமை 2578ல் (1918) ஏற்பட்ட நிலைமை போன்றே இருந்தது. எவ்வித எதிர்ப்பு முறையைக் கைக்கொள்ளுவதாயினும், அதற்குப் பூர்வாங்கமாக தேசத்திலிருந்து மார்க்ஸ் விஷத்தை ஒழித்தாக வேண்டும். அத்தகைய நிலைமையில் 'சட்டம்' என்றும், 'சமாதானம்' என்றும் ஜபித்துக் கொண்டிருப்பதால் அது சீர்பட்டு விடாது. வெளியாரோ நம் தாய்நாட்டைத் தகர்க்க முற்பட்டு வருகின்றனர். உள்நாட்டிலோ எங்கணும் துரோகிகளின் சூழ்ச்சி தாண்டவமாடி வருகின்றது. அந்நிலைமையில் ஓர் உண்மையான தேசிய சர்க்கார் என்ன செய்ய வேண்டும்? அமைதியின்மையை வரவேற்று, தேசத்தின் ஜன்ம விரோதிகளான மார்க்ஸ்வாதிகளை இறுதியாக ஒழித்துவிட அச்சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டும். முன் ஜாக்கிரதையான அவ்வழியை விட்டுவிட்டு, எவ்வித எதிர்ப்பு முறையையும் கைக்கொள்ளுவது மடத்தனமாகவே முடியும்.

மார்க்ஸ்வாதிகளிடம் கணக்கைத் தீர்த்துக் கொள்ளுவதென்பது ரகசிய நடவடிக்கை மூலம் முடியாத காரியம். அல்லது அழுகிய மனம் படைத்த ஒரு மந்திரியால் வகுக்கப்படும் ஏதாவதொரு திட்டத்தின் மூலமும் அதைச் சாதித்துவிட முடியாது. வாழ்க்கையின் அழிவற்ற நியதியான இடைவிடாப் போராட்டத்தினால்தான் அது சாத்தியமாகும். இரத்த வெள்ளமோடிய பயங்கர உள்நாட்டு யுத்தங்களிலிருந்து ஆரோக்கியமும் உறுதியும் கொண்ட ஒரு தேசமானது ஜனித்திருப்பதற்குப் பல உதாரணங்களுண்டென்பதை நாம் மறந்துவிடக் கூடாது. செயற்கை சமாதானத்தைப் பாதுகாப்பதில் ஆர்வங்கொண்ட தேசங்கள், அழுகி அதோகதியாகும் நிலைமையை அடைந்ததற்கும் பல உதாரணங்களுண்டு. ஒரு தேசத்தின் விதியை நளினமாக மாற்றிவிட முடியாது. நம் தேச இரத்தத்தை உறிஞ்சிக் கொழுத்து வந்த விரியன் பாம்புகளை 2583ம் (1923) வருஷத்திலேயே நாம் அடியோடு ஒழித்திருக்க வேண்டும். அவ்விதம் ஒழிப்பதுதான், தீவிர எதிர்ப்பிற்கு இன்றியமையாத முதற்படியாகும்.

அப்போதே நான் தொண்டைத் தண்ணீர் வற்ற அவ்விவரங்களை "தேசியவாதிகளுக்கு" இடைவிடாது வியக்தமாக எடுத்துக் கூறி வந்தேன். 2574ல் (1914) நாம் செய்த தவறுகளையே மீண்டும் செய்வோமாயின், 2878ல் (1918) என்ன கதி நேர்ந்ததோ அதே

கதிதான் நேருமென்பதையும் எடுத்துக் கூறினேன். ஆனால் அது செவிடன் காதில் சங்கு ஊதிய கதையாக முடிந்தது. ராணுவப் படையில் தலைவர் உள்பட பலரும் தங்களுக்கு எல்லாம் தெரியுமென நினைத்து வந்தனர். அதன் பயனாக இறுதியில் சரித்திரத்திலேயே இராதவாறு அவ்வளவு இழிவான முறையில் நம் தேசம் சரணடைய நேர்ந்தது.

அப்போது நான் ஒரு விஷயத்தைச் சிறிதும் சந்தேகமின்றி திட்டமாக உணர்ந்து கொண்டேன். அதாவது ஜெர்மன் நடுத்தர வகுப்பினர் செய்ய வேண்டிய காரியமெல்லாம் முடிந்துவிட்டதென்றும், அதற்கு மேல் எவ்வித நடவடிக்கையையும் நிறைவேற்ற அவர்கள் தகுதியற்றவர்களென்றும் உணர்ந்தேன். மற்றும் சகல நடுத்தரக் கட்சிகளும் போட்டி உணர்ச்சியின் மீது மார்க்ஸ் கட்சியை எதிர்த்துப் போராடுகின்றனவேயொழிய, அதை மனப்பூர்வமாக அழிக்க அவைகள் விரும்பவில்லையென்ற உண்மையையும் தெரிந்து கொண்டேன். தங்கள் தேசத்தின் அழிவைக் குறித்தே அக்கட்சியினர் வெகு காலமாக உதவி செய்து பழக்கமடைந்து வந்திருக்கிறார்கள். தேசத்தின் சவச்சடங்கு விருந்தில் தங்களுக்கு இடம் கிடைக்க வேண்டுமென்ற ஒரு கவலையைத் தவிர அவர்களுக்கு வேறெவ்வித கவலையுமில்லை! அவர்கள் "போராடி" வந்ததும் அதற்காகத்தான்.

அப்போது இத்தாலியில் உள்நாட்டுக் கலகங்களை அடக்க முஸோலினி கைக்கொண்ட முறைகள் எனக்கு மிகுந்த ஆச்சரியத்தைக் கொடுத்தன என்பதை பகிரங்கமாக ஒப்புக் கொள்ளுகிறேன். இத்தாலியின் உள்நாட்டுப் பகைவர்களை ஒழிக்கும் விஷயமாக அவர் எவ்வித முறையுமெடுத்துக் கொள்ளத் தயங்கவில்லை. மார்க்ஸ் கட்சியினருடன் சமாதானம் செய்து கொள்ளவும் அவர் விரும்பவில்லை. மகாவிபரீதமான மார்க்ஸ் கொள்கையிலிருந்தும் தம் தேசத்தை மீட்கவே அவர் உறுதி கொண்டார். உலகிலேயே மிகச் சிறந்தவர்களில் அவரும் ஒருவராக விளங்குவதற்கு அவரது அந்த அற்புத தீர்மானம்தான் காரணம். அவருடன் ஜெர்மன் ராஜதந்திரிகளை ஒப்பிடுவது மலையுடன் மடுவை ஒப்பிடுவதாகும். அப்படி இருந்தும் பரிதாபகரமான அந்த அனாமதேயப் பேர்வழிகள், தங்களைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிக சிறப்பு வாய்ந்த முஸோலினியைக் கண்டிக்கும் கர்வத்தையும், அசட்டுத் துணிச்சலையும் என்னவென்று சொல்லுவது? அதிலும் ஐம்பதே வருஷங்களுக்கு முன் ஒரு பிஸ்மார்க்கைத் தலைவராகக் கொண்டிருந்த ஒரு தேசத்தில் அத்தகைய விபரீதம் நிகழ்வதைக் காட்டிலும் துக்ககரமான விஷயம் வேறென்ன இருக்க முடியும்?

*2583ல் (1923)* ஜெர்மன் நடுத்தர வகுப்பினர் மார்க்ஸ்

கட்சியினரிடம் காட்டிய அன்பு காரணமாக, பிரான்ஸை எதிர்த்து நிற்பதென்பது அசாத்தியமாயிற்று. நம்மிடையிலேயே ஒரு பயங்கர சத்துரு இருந்து வருகையில், பிரான்ஸை எதிர்த்துப் போராட நினைப்பது முற்றிலும் மடத்தனமாகும். அந்நிலைமையில் நாம் செய்ய சாத்தியமானது என்னவெனில், ஜெர்மன் தேசியவாதிகளை ஓரளவாவது திருப்தி செய்வதற்காகவும், பொது ஜனங்களின் மனக் கொதிப்பைத் தவிர்ப்பதற்காகவும் ஒரு பகட்டுப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கலாம். வெளியிலுள்ள பகைவர்களை எதிர்த்து நிற்குமுன் உள்நாட்டு விரோதிகளை அல்லவா ஒழிக்க வேண்டும். இல்லாவிடில், யுத்தத்தின் முதல் நாளன்றே வெற்றி கிடைக்காவிடில் ஜெர்மனிக்கு மகத்தான ஆபத்தேற்பட்டு விடும். உள்நாட்டு சத்துருக்களிடமிருந்து விடுதலை அடையாத ஒரு தேசத்தின் எதிர்ப்பைத் தகர்த்து, எதிரிகளுக்கு நிச்சயமான வெற்றி கிடைக்கும்படி செய்ய ஒரே ஒரு தோல்வி போதுமானது. ரூர் பிரதேசத்தை பிரான்ஸ் ஆக்கிரமித்தவுடன், உள்நாட்டில் மார்க்ஸ் இயக்கத்தை அறவே களைய முற்பட்டிருப்போமாயின் நாம் வெற்றி பெற்றிருக்க முடியும். ஜெர்மனியின் தற்போதைய சத்துருக்களும், எதிர்கால சத்துருக்களுமான மார்க்ஸ் கட்சியினரிடமிருந்து ஜெர்மனியை விடுவித்து விட்டால், பின்னர் அதை மீண்டும் நசுக்க உலகிலுள்ள எந்த சக்தியாலும் முடியாது. ஜெர்மனியில் என்று மார்க்ஸ் கட்சியின் ஆதிக்கம் ஒழிகின்றதோ அன்றே, ஜெர்மனியைக் கட்டியுள்ள சங்கிலியும் நிரந்தரமாகவும், சுக்கு நூறாகவும் உடைந்துவிடும். ஏனெனில் சரித்திரத்திலேயே ஒருபோதும் ஜெர்மன் வெளி விரோதிகளால் ஜெயிக்கப்பட்டதில்லை. தம் தவறுகளாலும், உள்நாட்டு விரோதிகளாலும்தான் தோல்வியடைந்திருக்கிறது.

அவ்வமயம் அத்தகைய வீரத்தனமான நடவடிக்கையில் ஈடுபடுவதென்று தீர்மானிக்கும் சக்தி சர்க்காருக்கில்லை. எனினும் சர்க்கார் முதலில் கூறப்பட்ட முறையையாவது கைக்கொண்டிருக்கலாம். அதாவது நடக்கிறபடி நடக்கட்டுமென்று, எதுவும் செய்யாமலாவது இருந்திருக்கலாம்.

அந்த சமயம் ஹிர் கியூனோ ஜெர்மன் 'தலைவராக' வாய்த்தது பெரும் துரதிர்ஷ்டமாகும். அவர் ஒரு ராஜதந்திரியுமல்ல, பிறவியிலோ அல்லது வயிற்றுப் பிழைப்பு காரணமாகவோ ஓர் அரசியல்வாதியுமல்ல. வர்த்தகத் துறையில் அனுபவமுள்ளவர், அவ்வளவுதான். அரசியலை அவர் ஒரு வியாபாரமாக நினைத்துக் கொண்டு அதற்குற்றவாறு நடந்து கொண்டது ஜெர்மனிக்கு ஒரு சாபக்கேடேயாகும். "ரூரை பிரான்ஸ் ஆக்கிரமித்துக் கொள்கிறது. ரூரில் என்ன இருக்கிறது? நிலக்கரி. நிலக்கரிக்காகத்தான்

பிரான்ஸ் ரூர் பிரதேசத்தை ஆக்கிரமித்துக் கொள்கிறது" என்ற மகத்தான ரகசியத்தை கியூனோ கண்டுபிடித்தார்! நிலக்கரி வியாபாரத்தில் லாபம் கிடைக்காவிடில் அங்கிருந்து பிரெஞ்சுக்காரர்கள் வெளியேறிவிடுவார்கள் என்றும் அவர் கருதினார். அந்த அபார ராஜதந்திரியின் அறிவு அவ்வாறு கொழுத்துவிட்டது! அவரது அபார திறமையைக் கண்டு சொக்கிப் போன சாம்பிராணிகளுமுண்டு!

நிலக்கரிப் பிரதேசங்களில் வேலை நிறுத்தம் ஏற்படும்படி செய்து விட்டால், பிரெஞ்சுக்காரர்களுக்கு நஷ்டமுண்டாகும் என்ற 'அற்புத' ரகசியமும் கியூனோவின் மூளையில் உதயமாயிற்று! முதலில் தொழிலாளர்களல்லவா வேலை நிறுத்தம் செய்ய வேண்டும்? அதற்காக ஹர் கியூனோ கோஷ்டியினர் மார்க்ஸ் கட்சியினரின் உதவியை நாடினர். மார்க்ஸ் கட்சியினருக்கும் தொழிலாளர்களுக்கும் எவ்வித வேற்றுமையும் இல்லை என்பதே அவர்களுடைய அபிப்பிராயம். அவ்வாறாக மார்க்ஸ் கட்சியினருக்கும் தங்களுக்குமுள்ள வேற்றுமை மறைந்து ஜெர்மனியின் ஐக்கியத்திற்காக வழியைத் தாங்கள் கண்டுபிடித்து விட்டதாக ஹர் கியூனோ கோஷ்டியினர் ஆனந்தம் கொண்டனர். கியூனோவின் 'மேதாவித்தனத்'தைக் கண்டு அக்கட்சி அரசியல்வாதிகள் சந்தோஷ சாகரத்தில் மூழ்கிவிட்டனர் என்றே சொல்லலாம்! தேசத் துரோகிகளான மார்க்ஸ் கட்சியினரும் அவர்களின் உறவைச் சிறிதும் தாமதமின்றி அங்கீகரித்தனர். ஏனெனில், ஜெர்மனியின் ஐக்கியத்திற்காக, மார்க்ஸ் தலைவர்களின் உதவி ஹர் கியூனோவுக்குத் தேவையாக இருந்தது; மார்க்ஸ் கட்சியினருக்கோ, ஹர் கியூனோவின் பணம் தேவையாக இருந்தது. இருசாராரும் பரஸ்பரம் லாபகரமான அவ்வியாபாரத்தில் ஈடுபட்டனர். தேசிய வேஷதாரிகளும், சர்வ தேசக் கொள்ளைக்காரர்களுமான மார்க்ஸ் கட்சியினரின் உதவி கொண்டு, ஜெர்மனியில் 'ஐக்கிய'மேற்பட்டது. மார்க்ஸ் கட்சியினருக்கோ, அரசாங்கத்தின் பணத்தைக் கொண்டு தங்கள் கைங்கர்யத்தை, அதாவது தேசத்தின் பொருளாதார முறையைத் தகர்க்கும் கைங்கர்யத்தைத் தொடர்ந்து நடத்தி வர வசதியேற்பட்டது!

வெறும் பிரார்த்தனைகளால் ஒரு தேசம் விடுதலை பெற்றுவிடாது என்பதைச் சகலருமறிவர். அதுபோலவே, வேலை நிறுத்தத்தினாலும் ஒரு தேசம் ஒற்றுமையடைந்து விடுதலை பெற்றுவிட முடியாது. அச்சமயம் வேலை நிறுத்தத்தைத் தொடர்ந்து வர சர்க்கார் உதவியளித்ததற்குப் பதிலாக, ஒவ்வொரு ஜெர்மானியரின் வேலை நேரத்தையும் இரண்டு மணி நேரமாக அதிகப்படுத்தியிருந்தால் எவ்வளவோ நன்மையேற்பட்டிருக்கும்.

தேசங்கள் வேலை செய்ய மறுப்பதன் மூலம் சுதந்திரம் பெறுவதில்லை, தியாகங்கள் செய்வதன் மூலம்தான் சுதந்திரம் பெறுகின்றது.

தேசிய அபேதவாதிகள் கண்டிப்பான முறைகளைக் கைக்கொள்ள வேண்டியது அத்தியாவசியமாயிற்று. அதனாலேயே அப்போது என்னைப் பல 'தேசபக்தர்'களும் கண்டிக்க ஆரம்பித்தனர். அவர்களுடைய 'தேசபக்தி' மடத்தனமும், பகட்டும் கலந்த ஒரு கதம்பமே. அப்போது உண்டான கூக்குரல்களில் அவர்களும் பங்கெடுத்துக் கொண்டதற்குக் காரணமென்னவெனில், தாங்களும் தேசியவாதிகள் என்று காட்டிக் கொள்ள வேண்டுமென்பதுதான். திடீரென அவ்விதம் காட்டிக் கொள்ளச் சந்தர்ப்பம் கிடைத்தது அவர்களுக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணியது. ஆபத்து ஏதுமின்றி தேசியவாதிகளெனக் காட்டிக் கொள்ளும் சந்தர்ப்பத்தை அவர்கள் இழப்பார்களா! வெறுக்கத்தக்க இத்தகைய 'ஐக்கிய கோஷ்டி' மிகவும் வெட்கக் கேடான கூற்றுகளில் ஒன்றென்றே நான் கருதினேன். எனது அபிப்பிராயம் முற்றிலும் சரியென்பது பின்னர் நிகழ்ந்த சம்பவங்களின் மூலம் ருஜுவாயிற்று.

கியூனோ அளித்த உதவித் தொகைகளால் தொழிலாளர் சங்கங்கள் தங்களுடைய பொக்கிஷங்களை நிரப்பிக் கொண்டவுடனேயே, சிறிதும் தாமதமின்றி சிவப்புக் கழுதைப் புலிகள் (மார்க்ஸ் கட்சியினர்) தேசிய ஆட்டுமந்தைத் தொழுவத்திலிருந்து பியத்துக் கொண்டு, எப்போதும் போல் தங்கள் சுய ரூபத்தைக் காட்ட ஆரம்பித்தன. சாத்வீகமான எதிர்ப்பையும், உயிரற்ற வெறுப்பு தற்காப்பு முறையையும் தீவிர ஆக்கிரமிப்பு உருவாக மாற்ற வேண்டியது அவசியமென்ற நிலைமையேற்பட்ட அந்த விநாடியே, அப்பாதகர்கள் அவ்வாறு துரோகம் செய்தனர். அதைக்கண்டு ஹர் கியூனோவின் புத்தி மயக்கமும் தெளிந்தது. ஜெர்மனிக்கு அந்த அனுபவம் ஒரு சிறந்த படிப்பினையாயிற்று. அதே சமயம் ஜெர்மனியின் ஒரு மகத்தான நம்பிக்கையும் சிதறுண்டு போயிற்று.

அவ்வருஷம் ஜூலை மாதம் வரையில், பல அதிகாரிகளும், நிலைமை அவ்வளவு தூரம் மானக்கேடாக முடியுமென நம்பவேயில்லை. மமதை கொண்ட பிரான்ஸின் அந்த ஆக்கிரமமானது, ஜெர்மன் சரித்திரத்தில் ஒரு புதிய சகாப்தத்தை உண்டுபண்ணுமென்றும், அதற்குற்ற அவசியமான முறைகள் கைக்கொள்ளப்படுமென்றும் அவர்கள், பகிரங்கமாக இராவிடினும் ரகசியமாகவாவது நம்பி வந்தனர். அத்தகைய அவமதிப்பையொட்டி ஜெர்மன் சர்க்கார் தலையிடுமென்றே எங்கள் கட்சியிலும் பலர் நிச்சயமாகக் கருதினர். அத்தகைய

நிச்சயமான அபிப்பிராயம் காரணமாக எண்ணிக்கையற்ற இளைஞர்கள் தீவிரமான பயிற்சியில் ஈடுபட்டனர். ஆனால் வெட்கக் கேடான சீர்குலைவேற்பட்டு, ஜெர்மனி இழிவான முறையில் சரணாகதியடைந்ததும், நம் துரதிர்ஷ்ட தேசம் துரோகத்திற்குள்ளானதை ஒட்டி மகத்தான ஆத்திரம் அக்னி ஜ்வாலை போல் குபீரென்று கிளம்பியது. கோடிக்கணக்கான ஜெர்மன் பணமும், ஜெர்மனியை ஆட்சி புரிவோரின் வாக்குறுதிகளை மடத்தனமாக நம்பி மோசம் போன லட்சக்கணக்கான ஜெர்மன் இளைஞர்களின் உயிர்த் தியாகமும் அவ்விதம் வியர்த்தமாயின. ஜெர்மனியின் அரசியல் முறையையே வேரோடு பிடுங்கியெறிந்து அழித்தாலன்றி ஜெர்மனியை ரட்சிக்க முடியாதென்பதை, கோடிக்கணக்கான ஜெர்மானியர்கள் சந்தேகமின்றி தெளிவாக உணர்ந்து கொண்டனர். அம்முறையைத் தகர்த்தெறிய, அதைக் காட்டிலும் அரிய சந்தர்ப்பம் அதற்கு முன் ஒருபோதும் கிடைத்ததில்லை. ஒருபுறம் தேசத்திற்கு விரோதமாக பகிரங்கமாகவும், வெட்கமின்றியும் ஒரு பெரும் துரோகமிழைக்கப்பட்டு விட்டது. மற்றொரு புறம் தேசம் சிறிது சிறிதாக பட்டினியால் வாடி வதங்கி மடியும்படி கைவிடப்பட்டது. அவ்விதம் நம்பிக்கை, விசுவாஸம், நன்றி முதலிய உயர்ந்த ஒழுக்க முறைகள் அரசாங்கத்தினாலேயே மிதியுண்டு போயின. அரசாங்கமே தன் பிரஜைகளின் உரிமைகளை வெறும் கேலிக்கூத்தாகச் செய்துவிட்டது, மிகுந்த பக்தி விசுவாஸமுள்ள லட்சக்கணக்கான இதரர்களின் செல்வத்தை எல்லாம் அடியோடு கொள்ளையிட்டது. அப்படியிருக்க அத்தகைய அரசாங்கம், தன் பிரஜைகளிடமிருந்து துவேஷத்தைத் தவிர வேறெதை எதிர்பார்க்க முடியும்? ஜனங்களையும், தேசத்தையும் அழித்தவர்களுக்கு விரோதமாக எழுந்த இந்த துவேஷமானது, ஏதாவதோர் உருவத்தில் பீறிட்டுக் கிளம்புவதைத் தவிர வேறு வழியில்லை.

*2584*ல் *(1924)* நிகழ்ந்த பெரும் வழக்கு விசாரணையில் நான் கூறிய இறுதி வாக்கியத்தை இச்சந்தர்ப்பத்தில் குறிப்பிடுகின்றேன்:

"அச்சமயம் நாங்கள் செய்த காரியத்திற்காக இவ்வரசாங்க நீதிபதிகள் எங்களை மிகவும் நிதானமாகவும், மன அமைதியுடனும் கண்டிக்கலாம். எனினும் மகத்தான சத்திய தேவியும், சிறந்த சட்ட தேவதையுமான சரித்திரமானது, இந்தத் தீர்ப்பைக் கிழித்தெறிந்து விட்டு, எக்குற்றத்திற்காக நாங்கள் தண்டனை அடைகின்றோமோ, அக்குற்றத்திலிருந்து எங்கள் எல்லாரையும் புன்முறுவலுடன் விடுதலை செய்யுமென்பது நிச்சயம்".

இன்று அதிகாரத்திலிருந்து கொண்டு, சட்டம், நீதி எல்லாவற்றையும் காலால் மிதித்து, தங்கள் கர்வம் காரணமாக ஜனங்களையும் துன்பத்திற்குள்ளாக்கி, தங்கள் தேசம்

துர்ப்பாக்கியத்திற்குள்ளான காலத்தில் சமூகத்தின் நன்மையைக் காட்டிலும் தங்களுடைய மமதையையும், படாடோபத்தையும் திருப்தி செய்து கொள்வதுதான் பெரிதென நினைக்கும் பேர்வழிகளைச் சரித்திரமானது தன் நீதிச் சபையில் இழுத்து வந்து விடும்படி கட்டளையிடுமென்பதும் நிச்சயம்.

2583 (1923) நவம்பர் மாதம் 8ந் தேதி சம்பவத்திற்குக் காரணமான நிகழ்ச்சிகளை ஈண்டு நான் குறிப்பிட விரும்பவில்லை. ஏனெனில் அவ்விதம் குறிப்பிடுவதால் எதிர்காலத்தில் எத்தகைய நன்மையும் ஏற்படுமென எனக்குத் தோன்றவில்லை. மற்றும் சமீபத்தில் மூடப்பட்ட பழைய ரணங்களை மீண்டும் கிளறுவதால் எவ்வித நன்மையுமேற்பட முடியாது. அச்சம்பவங்களுக்கு யார் காரணஸ்தர்களோ, அவர்கள் தங்களுடைய ஹிருதயத்தில் என் போன்று தேசப் பற்றுதலும், தங்கள் ஜனங்கள் மீது மிகுந்த அன்பும் உடையவர்களாயிருக்கலாம். ஆனால் அவர்கள் தங்கள் லட்சியத்தை அடைய நான் சென்ற பாதையையே பின்பற்றாது வேறு மார்க்கத்தில் சென்றிருக்கலாம், அல்லது நான் செல்லுவது சரியான பாதையென்பதை அவர்கள் உணர்ந்து கொள்ளத் தவறி இருக்கலாம். அப்படிப்பட்டவர்கள் மீது குற்றம் சாட்டுவது பொருத்தமற்ற காரியம்.

நம் தேசம் பெரும் துரதிர்ஷ்டத்துக்குள்ளாகி எல்லோரும் பாதிக்கப்பட்டு இருக்கையில், உண்மையும் விசுவாஸமுமுள்ள ஜெர்மானியர்கள் அடங்கிய மகத்தான ஐக்கியப் படையுடன் எதிர்காலத்தில் சேரக் கூடியவர்களுக்கு மனத்தாங்கலேற்படும்படியாகவும், அவர்களிடையே ஒற்றுமை குலையும்படியாகவும் நான் எதுவும் கூறக்கூடாது. நம் ஜனங்களுடைய விரோதிகளின் ஏகோபித்த எதிர்ப்பை, அத்தகைய ஐக்கியப் படைதான் சமாளிக்கும்படி இருக்கும். நம்மை முன்னர் பகைவர்களென்று துன்புறுத்தியவர்களே, தங்கள் தேச ஜனங்களுக்காக மரணத்தைத் துச்சமாக மதித்தவர்களைப் பாராட்டிப் பூஜிக்கக் கூடிய ஒரு காலம் வருமென்பதை நான் அறிவேன்.

வீழ்ச்சியடைந்த எங்களுடைய 18 வீரர்களுக்கும் நான் இப்புத்தகத்தின் முதல் பாகத்தைச் சமர்ப்பணம் செய்துள்ளேன். உயிரைத் தியாகம் செய்த அவர்களின் பெருமையை இரண்டாம் பாகம் முடிவுறும் இச்சமயத்திலும், நமது கொள்கைகளைப் பின்பற்றுவோர், அவைகளைப் பாதுகாக்கும் வீரர்கள் முதலியோருடைய ஞாபகத்திற்கு மீண்டும் கொண்டுவர விரும்புகிறேன். தங்கள் நடவடிக்கைகளின் விளைவு என்னவாகும் என்பது தெரிந்திருந்தும்கூட, அவர்கள் நம்மெல்லோருக்காகவும் தங்களுடைய உயிர்களைத் தியாகம் செய்தனர். அவர்களை

ஞாபகப்படுத்திக் கொள்ள நாம் ஒருபோதும் தவறிவிடக் கூடாது. அப்போதுதான், என்ன நேர்ந்தாலும் தங்கள் கடமையைச் செய்தே தீருவதென்ற உறுதி நம்மிடையுள்ள கோழைகளுக்கும் தடுமாற்றவாதிகளுக்கும் ஏற்படும். அந்த 18 வீரர்களும் பூர்ண நம்பிக்கையுடனும் விசுவாஸத்துடனும், உயிரையும் லட்சியம் செய்யாது தங்கள் கடமையை நிறைவேற்றினர். அவ்வீரர்களில் மிகச்சிறந்தவரான ஒருவரின் பெயரை நான் பிரத்தியேகமாகக் குறிப்பிட வேண்டியதவசியம். தம்முடைய எழுத்தினாலும், கொள்கைகளாலும், இறுதியில் சந்தேகமற்ற திட்டமான நடவடிக்கையினாலும் நம் ஜனங்களிடையே மீண்டும் விழிப்பேற்படுவதற்காக அவர் தமது வாழ்க்கையையும் உயிரையும் அர்ப்பணம் செய்தார். அவர்தான் டயட் ரிச் எக்கார்ட் என்ற உத்தமர்.



# குறிப்பு

* என்வர் பாஷா (2541 - 2582) சிறந்த துருக்கி ராஜதந்திரி. துருக்கி யுவர்களின் தலைவர். 2573ல் (1913) நடந்த பால்கன் யுத்தத்தில் தளபதியாக இருந்தவர். சென்ற மகாயுத்தத்தின்போது துருக்கி உள்நாட்டு அரசியல் சம்பந்தப்பட்ட வரையில் அவரே துருக்கியின் ஆட்சி கர்த்தாவாக இருந்து வந்தாரென்று கூறுவது மிகையாகாது. துருக்கியில் என்வர் பாஷாவுக்கும், ஜெர்மனியில் உள்நாட்டு ஊழலுக்குக் காரணஸ்தராக இருந்த கியூனோவுக்கும் எவ்வளவோ வேற்றுமையுண்டு. மறைந்தொழியும் தறுவாயிலிருந்த மார்க்ஸ் கட்சியினரின் தொழிலாளர் சங்கங்களுக்கு கோடிக்கணக்கான தொகை கொடுத்துத் புத்துயிரளித்தவர் கியூனோதான். அத்தகைய 'தேசீய' பிரதம மந்திரியாக விளங்கிய கியூனோவை ஹிட்லர் ஆணித்தரமாகக் கண்டித்திருப்பதற்கு அவரது அரசியல் திறமையின்மையும், விபரீதமான கொள்கையுமே காரணம்.

# முடிவுரை

**2583** (1923) நவம்பர் மாதம் 9ந் தேதி, அதாவது ஜெர்மன் தேசீய அபேதவாதத் தொழிற்கட்சி ஸ்தாபிக்கப்பட்ட 4.1.2 வருஷங்களுக்குப் பின் அக்கட்சி கலைக்கப்பட்டு ஜெர்மன் முழுதும் தடுக்கப்பட்டது. ஆனால் இன்று, 2586 (1926) நவம்பரில் மீண்டும் அது ஜெர்மனி முழுதும் முன்னரைக் காட்டிலும் அதிக பலத்துடனும், கட்டுக்கோப்பான முறையிலும், பூர்ண சுதந்திரத்துடனும் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது. அவ்வியக்கத்திற்கு விரோதமாகப் போடப்பட்ட முட்டுக்கட்டைகள், அதன் தலைவர்கள் மீது சுமத்தப்பட்ட பழிச் சொற்கள், அவதூறுகள் முதலியன எதுவும் அதை ஒடுக்க முடியவில்லை. அதன் கொள்கைகளின் நேர்மை, அதன் நோக்கங்களின் பரிசுத்தம், அதன் அங்கத்தினர்களின் தியாக புத்தி, இவைதான் சகல அடக்குமுறைகளையும் வென்று, மகத்தான பரிசோதனைகளுக்குமிடையே இயக்கத்தின் பலத்தைப் பெருக்கின. இது 'பார்லிமெண்டரி' ஊழல்கள் நிறைந்த காலம். நம் இயக்கமானது தனது போராட்டத்தின் ஆழ்ந்த கருத்தை நன்குணர்ந்து இடைவிடாது அதையனுஷ்டித்து வருமாயின், பின்னர் எப்போதோ எதிர்காலத்திலாவது வெற்றி பெறுமென்பது சர்வ நிச்சயம். அக்கொள்கைகளை அனுசரித்து ஜெர்மனி உருவகப்படுத்தப் பெற்று நிர்வகிக்கப்படுமாயின், இப்புவியில் அது தனக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய அந்தஸ்தை அடைந்தே தீரும்.



இரத்தக் கலப்பு விபரீதம் தாண்டவமாடி வரும் ஒரு சகாப்தத்தில், தங்கள் வர்க்கமானது அதனால் அசுத்தமடையாது பாதுகாக்கும். கடமையில் ஈடுபடும் ஒரு தேச அரசாங்கம், ஒரு காலத்தில் இவ்வுலகத்தையே ஆட்சி புரியும் நிலைமைக்கு வருமென்பதில் சந்தேகமில்லை. தங்களிடமிருந்து கோரப்படும் தியாகத்தின் உயர்விற்குற்றவாறு வெற்றி கிடைக்க ஹேதுவில்லாமல் இருக்கலாமென்ற அவநம்பிக்கை, நம் இயக்க பக்தர்களுக்கேற்படலாம். அவர்கள், அவ்வித அவநம்பிக்கை உண்டாகும்போதெல்லாம் மேலே குறிப்பிட்டுள்ள விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

# மெய்ன் காம்ப்

தேசத்திலுள்ள பெரும்பாலோரின் மனதிலும் ஆண்மையையும் ஆவேசத்தையும் ஊட்டினாலன்றி தேசத்திற்கு வெளியிலுள்ள விரோதிகளையோ, உள் நாட்டிலுள்ள துரோகிகளையோ அடக்குவதென்பது அசாத்தியம். தேசம் சுதந்திரம் பெறுவதற்கு இன்றியமையாத முதற்படி பெரும்பாலோருடைய ஆதரவுதான். அரசியல் சுதந்திரமும், ஜனங்களின் கௌரவமும் நிலை நிறுத்தப்பட்டாலன்றி, கலாசார அபிவிருத்திக்கும் இடமிராமற்போய்விடும்.

நம் பள்ளிக்கூடங்களில் உலக சரித்திர பாடம் கற்றுக்கொடுக்கும் முறை மிகவும் அதிருப்திகரமாக இருக்கிறது. சரித்திர பாடம் கற்றுக் கொடுப்பதன் நோக்கம். சில தேதிகளையும் சம்பவங்களையும் மாணவர்கள் உருப்போட்டு மனப்பாடம் செய்ய வேண்டுமென்பதல்ல. ஒரு தளபதியோ அல்லது வேறொருவரோ பிறந்த தினம், ஒரு மன்னரின் பட்டாபிஷேக நாளை அறிந்து கொள்வதில் மாணவர்களுக்கு என்ன சரித்தையிருக்க முடியும்? அவை அவ்வளவு முக்கியமான விஷயங்களா?

சரித்திரப் பிரசித்மான சம்பங்களுக்கு காரணங்களையும், அச்சம்பவங்களை உருவாக்கிய சத்திகளையும் ஆராய்ந்தறியும்படி செய்துவதான் சரித்திர பாடத்தின் தத்துவம். எனக்கு சரித்திர பாடம் கற்றுக்கொடுத்த ஒரு பண்டிதராலேயே எனது எதிர்கால வாழ்க்கை நிர்ணயிக்கப்பட்டதெனக் கூறலாம். சரித்திர பாடம் கற்றுக் கொடுப்பதன் தத்துவத்தை நன்கறிந்தவர் அவர்.

அடால்பு ஹிட்லர்